# சங்க இலக்கியத்தில் திணை மயக்கம்

அழகப்பா பல்கலைக்கழக முனைவர் (பிஎச்.டி..) பட்டத்திற்காக

அளிக்கப்பெறும் ஆய்வேடு


ஆய்வாளர்

**த. கண்ணன்** எம்.ஏ., எம்.பில்.,

(பதிவு எண் : 877)

நெறியாளர்

முனைவர் **சு. இராசாராம்** எம்.ஏ., (தமிழ்) எம்.ஏ., (மொழியியல்)

எம்.பில்., பி.எட்., பிஎச்.டி.

இணைப் பேராசிரியர்






**தமிழ்த்துறை**

**அழகப்பா பல்கலைக் கழகம்**

(தேசியத் தரமதிப்பீட்டுக்குழுவால் 'ஏ' தகுதி பெற்றது)

காரைக்குடி - 630 003.


**பிப்ரவரி - 2008**

**முனைவர் சு. இராசாராம்,** எம்.ஏ.,(தமிழ்)எம்.ஏ.,(மொழியியல்)
எம்.பில்., பி.எட்., பிஎச்.டி.,

இணைப்பேராசிரியர்,
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி-630 003.

நாள்: 20.02.08

# நெறியாளர் சான்றிதழ்

**"சங்க இலக்கியத்தில் திணைமயக்கம்"** என்னும் தலைப்பில் **திரு.த.கண்ணன்** அவர்கள் முனைவர் (பிஎச்.டி.) பட்டத்திற்காகச் செய்த இவ்வாய்வு, அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ்த்துறையில் அவர் ஆய்வு செய்த காலத்தில் தன்னியலாகச் செய்யப் பெற்றது என்றும், இவ்வாய்விற்காக வேறு எந்தப் பட்டமும் ஆய்வாளருக்கு அளிக்கப் பெறவில்லை என்றும் சான்றளிக்கின்றேன்.

(முனைவர் சு. இராசாராம்)
நெறியாளர்

முனைவர் சு. இராசாராம்
இணைப் பேராசிரியர்
தமிழ்த்துறை
அழகப்பா பல்கலைக்கழகம்
காரைக்குடி ... 003

த. கண்ணன், எம்.ஏ., எம்.பில்.,
முனைவர் பட்ட ஆய்வாளர்,
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி-630 003.

நாள்: 20.02.08

# ஆய்வாளர் உறுதிமொழி

**"சங்க இலக்கியத்தில் திணைமயக்கம்"** என்னும் தலைப்பில் முனைவர் (பிஎச்.டி.) பட்டத்திற்காக எழுதப் பெற்ற இவ்வாய்வு எனது சொந்த முயற்சியில் உருவானது என்றும், இதற்கு முன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் இவ்வாய்வேடு அளிக்கப் பெறவில்லை என்றும் உறுதியளிக்கின்றேன்.

(த.கண்ணன்)
ஆய்வாளர்

உறுதிக் கையொப்பம்
நெறியாளர்
முனைவர் சு. இராசாராம், எம்.ஏ.,(தமிழ்)எம்.ஏ.,(மொழியியல்)
எம்.பில்., பி.எட்., பிஎச்.டி.,
இணைப்பேராசிரியர்,
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி-630 003.

# நன்றியுரை

முனைவர் பட்ட ஆய்வு செய்வதற்கு அனுமதி வழங்கிய அழகப்பா பல்கலைக்கழகத்திற்கும், தமிழ்த்துறைக்கும் நன்றி தெரிவிப்பதில் பெருமையடைகின்றேன்.

ஆய்வுப் பணிகள் செம்மையுற நிகழ்வதற்கு வழிகாட்டி, ஆய்விற்குரிய நூல்களை வழங்கி, ஆக்கமும் ஊக்கமும் அளித்த என் ஆசான் நெறியாளர் **முனைவர் சு.இராசாராம்** அவர்களுக்கு என்றும் என் இதயங்கனிந்த நன்றி உரியதாகும்.

இவ்வாய்வு வெற்றிபெற பல வழிகளில் உதவிய கே.எஸ்.ஆர். கலை மற்றும் அறிவியல் கல்லூரி தாளாளர் **திரு.கே.எஸ்.இரங்கசாமி** அவர்களுக்கும், கல்லூரி முதல்வர் **முனைவர் பி.கண்ணன்** அவர்களுக்கும் என் நெஞ்சார்ந்த நன்றிகளை உரித்தாக்குகிறேன்.

ஆய்வுக் காலங்களில் அறிவுரைகளை வழங்கி, ஆய்வு செம்மையுடன் முடிதற்கு உதவிய **முனைவர் இரா.பாலசுப்பிரமணியன்** அவர்களுக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

ஆய்வில் சிக்கல் நேர்ந்த போதெல்லாம் கருத்துக்களை வழங்கிய **முனைவர் சே.செந்தமிழ்ப்பாவை** அவர்களுக்கு என் நன்றி உரியதாகும்.

ஆய்வுக் காலங்களில் தளராத மன உறுதியுடன் உயரிய நம்பிக்கையுடன் என்னை ஆய்வு செய்யத் தூண்டிய எனது பெற்றோர் **திரு.இரா.தங்கவேல், திருமதி த.அமிர்தம்** அவர்களுக்கும் எனது அன்புச் சகோதரர்கள் **திரு.த.சீனிவாசன்-சீ.லதா, திரு.த.இரவிச்சந்திரன்-ர.கனகலெட்சுமி, திரு.த.ரெகுபாண்டியன்-ரெ.ஆனந்தி, திரு.த.சேதுபதி**

அவர்களுக்கும், மைத்துனர் திரு.சி.கண்ணன், சகோதரி க.சாவித்திரி அவர்களுக்கும் என்றும் என் நன்றி உரியதாகும்.

ஆய்வில் என்னை ஊக்கப்படுத்திய நண்பர்கள் முனைவர் அ.செல்வன், மு.முத்துக்குமரன், முனைவர் ப.சு.செல்வமீனா, திரு.ம.பால்வண்ணன், முனைவர் வை.இராமராசபாண்டியன், திரு.செழியன், திருமதி மேகலா, கோ. பார்த்திபன் அவர்களுக்கும் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

ஆய்வு குறித்து கலந்துரையாடல் செய்து பல நல்ல கருத்துக்களுக்கு உதவியாக அமைந்த முனைவர் க.சொல்லேருழவன், முனைவர் சோ.முத்தமிழ்ச்செல்வன், ஆய்வாளர்கள் இரா.தாமரைச்செல்வி, இராம.தேவணன், இரா.குணசீலன், இ.ஆல்பர்ட் ஆகியோருக்கு எனது நன்றிகள்.

நன்றியுடன்

த. கண்ணன்

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகத். | - | அகத்திணையியல் |
| அகநா. | - | அகநானூறு |
| அறு.இலக். | - | அறுவகை இலக்கணம் |
| இ.ப.த.ம. | - | இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றம் |
| உ.ஆ. | - | உரையாசிரியர் |
| ஐங். | - | ஐங்குறுநூறு |
| ஒழிபி. | - | ஒழிபியல் |
| கலித். | - | கலித்தொகை |
| காடு. | - | காடுகாண் காதை |
| கு.உ.ஆ. | - | குறிப்புரை ஆசிரியர் |
| குறிஞ்சிப். | - | குறிஞ்சிப்பாட்டு |
| குறுந். | - | குறுந்தொகை |
| சிலம்பு. | - | சிலப்பதிகாரம் |
| சுவாமி. | - | சுவாமிநாதம் |
| செய்யுள். | - | செய்யுளியல் |
| த.ப.ஆ. | - | தலைமைப் பதிப்பாசிரியர் |
| திரு.சை.சி.நூ.ப.க. | - | திருநெல்வேலி சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம். |
| தொ. | - | தொகுதி |
| தொல். | - | தொல்காப்பியம் |
| நற். | - | நற்றிணை |
| நம்பி.அகப். | - | நம்பி அகப்பொருள் |

| | | |
|---|---|---|
| நூ. | - | நூற்பா |
| நெடுநல். | - | நெடுநல்வாடை |
| ப. | - | பக்கம் |
| ப.ஆ. | - | பதிப்பாசிரியர் |
| ப.உ.ஆ. | - | பதிப்பு மற்றும் உரையாசிரியர் |
| பக். | - | பக்கங்கள் |
| பட்டினப். | - | பட்டினப்பாலை |
| பத்துப். | - | பத்துப்பாட்டு |
| பதிற். | - | பதிற்றுப்பத்து |
| பரி. | - | பரிபாடல் |
| புறத். | - | புறத்திணையியல் |
| புறநா. | - | புறநானூறு |
| பெரும். | - | பெரும்பாணாற்றுப்படை |
| மதுரைக். | - | மதுரைக்காஞ்சி |
| மரபு. | - | மரபியல் |
| மலைபடு. | - | மலைபடுகடாம் |
| மாறன்.அகப். | - | மாறன் அகப்பொருள் |
| முல்லைப். | - | முல்லைப்பாட்டு |
| மு.வீ. | - | முத்துவீரியம் |
| மேலது. | - | மேலே குறிப்பிட்டது. |
| வ.எண். | - | வரிசை எண் |
| P. | - | Page |

# பொருளடக்கம்

| | | | |
|---|---|---|---|
| | | 14. முல்லைத்திணைப் பகுப்பில் திணைமயங்காப் பாடல்களும் திணைமயக்கப்பாடல்களும்<br>15. உரிப்பொருள் அடிப்படையிலான வகைப்பாடு (குறிஞ்சித்திணைப் பகுப்பு)<br>16. குறிஞ்சித்திணைப் பகுப்பில் திணைமயங்காப் பாடல்களும் திணைமயக்கப்பாடல்களும்<br>17. உரிப்பொருள் அடிப்படையிலான வகைப்பாடு (பாலைத்திணைப் பகுப்பு)<br>18. பாலைத்திணைப் பகுப்பில் திணைமயங்காப் பாடல்களும் திணைமயக்கப்பாடல்களும்<br>19. உரிப்பொருள் அடிப்படையிலான வகைப்பாடு (மருதத்திணைப் பகுப்பு)<br>20. மருதத்திணைப் பகுப்பில் திணைமயங்காப் பாடல்களும் திணைமயக்கப்பாடல்களும்<br>21. உரிப்பொருள் அடிப்படையிலான வகைப்பாடு (நெய்தல் திணைப் பகுப்பு)<br>22. நெய்தல் திணைப் பகுப்பில் திணைமயங்காப் பாடல்களும் திணைமயக்கப்பாடல்களும் | |

# முன்னுரை

தமிழ்மொழி தொன்மையும் தனிப் பெருஞ் சிறப்பும் உடையது. தமிழ் மொழியுள் சங்க இலக்கியம் தமிழ்மொழியின் இலக்கிய வளத்திற்குச் சான்றாகத் திகழ்கிறது. இவ் இலக்கியம், தமிழ் மொழியின் இலக்கியங்கள் யாவற்றுள்ளும் 'திணை இலக்கியம்' எனும் சிறப்பினையுடையது. இத்திணை இலக்கியத்தில் அகம், புறம் எனும் திணைப் பாகுபாடும், முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் எனும் வகைப்பாடும், அவற்றின் வரையறையும் குறிப்பிடத்தக்கனவாக அமைகின்றன.

முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் என்பன திணைக் கூறுகளாகக் கருதப்படுகின்றன. ஒவ்வொரு திணைக்குரிய உரிப்பொருளையும் சிறப்பிக்கும் விதமாக முதற்பொருளும், கருப்பொருளும் வரையறை செய்யப்படுகின்றன. இவ்வரையறை அமைப்பில் முதற்பொருளும் கருப்பொருளும் மாறுபட்டு, பிற திணையின் உரிப்பொருளுடன் வருதல் திணைமயக்கம் எனப்படும். சங்க அகஇலக்கியப் பகுப்பில் திணை மயங்காப் பாடல்களும் திணை மயக்கப் பாடல்களும் காணப்படுகின்றன. இவற்றுள் திணை மயக்கப் பாடல்களைக் கண்டறிந்து ஆராய்வதன் மூலம் திணை இலக்கியப் பாடுநெறியின் தனித்தன்மை உணரப்படும்.

## ஆய்வுத் தலைப்பு

திணைமயக்கத்தை வரையறை செய்து, சங்க அகஇலக்கியப் பாக்களுள் காணப்படும் திணைமயக்கத்தை ஆராயும் இவ்வாய்விற்கு, **“சங்க இலக்கியத்தில் திணைமயக்கம்”** என்பது ஆய்வுத் தலைப்பாகிறது.

## கருதுகோள்

சங்க இலக்கியம் திணை இலக்கிய மரபில் அமைந்த இலக்கியமாகும். இது இயற்றப்பட்ட காலத்திற்கும் தொகுக்கப்பட்ட காலத்திற்கும் இடையே இடைவெளி உடையதாகக் காணப்படுகிறது. சங்க இலக்கியப் பாடல்களுக்குக் குறிக்கப்படும் முல்லை, குறிஞ்சி, பாலை, மருதம், நெய்தல் எனும் குறிப்புக்கள் பாடல் இயற்றிய புலவரால் குறிக்கப்படாது பின் வந்தோரால் குறிக்கப்பட்டன. இவற்றால் சங்க இலக்கியப் பாக்களின் முதல், கரு, உரியைத் திணைமயக்கப் பார்வையில் நோக்க அப்பாடலின் திணைக் குறிப்புகள் தெளிவுபடும். திணைமயக்கப் பாடல்கள் தனியே அடையாளப்படுத்தப்படும். உரியுடன் முதல், கருப்பொருள் இயைபுபடுதலுக்கான காரணங்கள் திணைமயக்கப் பாடல்களுள் எவ்வாறு அமைகின்றன என்பது உணரப்படும். இவை இவ்வாய்வின் கருதுகோளாக அமைகின்றன.

## ஆய்வு முன்னோடிகள்

திணைமயக்கத்தை ஆராயும் தனித்ததொரு ஆய்வாகவும், சங்க இலக்கியத்துள் காணப்படும் திணைமயக்கத்தை முழுமை பெற்ற நிலையில் ஆராயும் சங்க இலக்கிய ஆய்வாகவும் அமையும் இவ்வாய்விற்கு முன்னோடிகளாக நற்றிணை மாநாட்டின் தலைமையுரையில் திணைமயக்கம் குறித்த ஆய்வுச் சிந்தனையினை வெளிப்படுத்திய தெ.பொ.மீனாட்சிசுந்தரனார், நற்றிணை மருதப் பாடல்களில் உள்ள திணைமயக்கத்தை ஆராய்ந்த அ.கு.ஆதித்தர், திணைமயக்கத்தை விளக்கியுரைத்த ப.அருணாச்சலம், ந.சுப்புரெட்டியார்,

ஐங்குறுநூற்றில் காணப்படும் திணைமயக்கத்தைக் குறிப்பிட்டுரைத்த ந.காந்திமதி லட்சுமி, கலித்தொகையில் காணப்படும் திணைமயக்கத்தைப் புலப்படுத்திய ச.பகவதி கோவிந்தன், சங்க அகப்பாடல்களில் காணப்படும் திணைமயக்கத்தை ஆராய்ந்த மா.சோமசுந்தரம், சங்க இலக்கிய முல்லைப் பாடல்களுள் காணப்படும் திணை மயக்கத்தினை ஆராய்ந்த நா.செயராமன், சங்க இலக்கிய மருதப் பாடல்களில் காணப்படும் திணைமயக்கத்தை எடுத்துரைத்த இலா. குளோறியா, திணைமயக்கத்தை வரலாற்று நோக்கில் சுட்டியுரைத்த த.வசந்தாள் என்போர் அமைகின்றனர்.

'சங்க அகப்பாடல்களில் திணைமயக்கம்' எனும் முன்னாய்வு, எட்டுத்தொகையில் அகநூல்களை மட்டும் ஆய்விற்கு எடுத்துக் கொண்டு, ஒரு திணைப்பகுப்பில் அத்திணைக்குரிய உரிப்பொருள் அமையாத பாடல்களை மட்டும் அடையாளப்படுத்துகின்றது. திணைப்பகுப்பிற்கு வேறுபட்டு அமையும் உரிப்பொருள்களே திணைமயக்கம் எனக் குறிக்கின்றது. ஆயின் திணைமயக்கத்துள் எட்டுத்தொகையான பரிபாடலுள் காணப்படும் அகப்பாடல்களும் பத்துப் பாட்டினுள் காணப்படும் அகப்பாடல்களும் ஆராயப்பட வேண்டியனவாகும். திணை மயக்கத்துள் உரிப்பொருள் மயங்காது என்பதால் முதல், கருப்பொருளின் மயக்கமே திணைமயக்கமாகும் எனும் அடித்தளத்தில் சங்க அகப்பாடல்கள் முழுவதையும் எடுத்துக் கொண்டு இவ்வாய்வு ஆராயப்படுவதற்கு மேற்கண்ட ஆய்வுகள் முன் ஆய்வுகளாக அமைகின்றன.

## ஆய்வு எல்லை

எட்டுத்தொகை, பத்துப்பாட்டில் காணப்படும் அகத்திணைப் பாக்கள் ஆய்வு எல்லையாக அமைகின்றன. இப்பாடல்களுள் திணை மயக்கம் எனும் பாடுநெறியில் அமையும் பாடல்கள் விளக்கப்படுகின்றன.

## சான்றாதாரங்கள்

தொல்காப்பியம் முதலான அகப்பொருள் இலக்கணங்களைக் குறிக்கும் இலக்கண நூல்களும், எட்டுத்தொகை, பத்துப்பாட்டு எனும் சங்க இலக்கியப் பகுப்பிலுள்ள அகத்திணைச் செய்யுட்களும் முதன்மைச் சான்றாதாரங்களாக அமைகின்றன.

திணைமயக்கம் குறித்த இலக்கண உரைகள், சங்க இலக்கிய உரைகள், திறனாய்வு நூல்கள், ஆராய்ச்சிக் கட்டுரைகள், ஆய்வேடுகள், இதழ்கள் என்பன துணைமைச் சான்றாதாரங்களாகக் கொள்ளப்படுகின்றன.

## ஆய்வு அணுகுமுறைகள்

திணைமயக்கம் குறித்த வரையறையில் பல்வேறு கருத்துக்கள் காணப்படுகின்றன. எனவே திணை மயக்கத்தை வரையறுப்பதில் வரலாற்றியல் அணுகுமுறை பயன்படுத்தப்படுகிறது. திணைமயக்கம் குறித்து விளக்குமிடத்தும் சங்கப் பாடல்களில் காணப்படும் திணைமயக்கத்தை வெளிக் கொணர்ந்துரைக்குமிடத்தும் விளக்கவியல் அணுகுமுறை ஆளப்படுகிறது. பாடல்களில் உள்ள முதல், கரு, உரியினைப் பிரித்துக் காணுமிடத்து, பகுப்பாய்வு அணுகுமுறை

மேற்கொள்ளப்படுகிறது. திணைமயக்கம் குறித்த வரையறைகள் சங்கப் பாடலுள் காணப்படும் திணைமயக்க அமைப்புடன் ஒப்பிட்டு ஆராயப்படும் அளவில் ஒப்பீட்டு அணுகுமுறை செய்யப்படுகிறது.

## ஆய்வுப் பகுப்பு

இவ்வாய்வு முன்னுரை, முடிவுரை நீங்கலாக நான்கு இயல்களை உடையது. அவையாவன,

1. திணை மயக்கம் - விளக்கமும் வரையறையும்
2. சங்க அகஇலக்கியத் திணைப்பகுப்பும் திணை மயக்கமும்
3. நில மயக்கமும் கருப்பொருள் மயக்கமும்
4. பொழுது மயக்கம்

என்பனவாகும்.

## இயல் விளக்கங்கள்

முன்னுரையில், ஆய்வுத் தலைப்பு, கருதுகோள், ஆய்வு முன்னோடிகள், ஆய்வு எல்லை, சான்றாதாரங்கள், ஆய்வு அணுகுமுறைகள், ஆய்வுப் பகுப்பு, இயல் விளக்கங்கள் என்பன விளக்கப்படுகின்றன.

**‘திணை மயக்கம் - விளக்கமும் வரையறையும்’** என்னும் முதலாவது இயலில் திணை மயக்கத்திற்கான வரையறைகள் வகுத்துரைக்கப்படுகின்றன. திணை மயக்கத்துள் மயங்கும் கூறுகளும், மயங்காத கூறுகளும் ஆராயப்படுகின்றன. மயங்கும் கூறுகளுள் திணை மயக்கமாகக் கருதப்படாத கூறுகள் குறிக்கப்படுகின்றன. திணை

மயக்கமாக மயங்காத திணைக் கூறுகள் வெளிக்கொணரப்படுகின்றன. திணை மயக்கம் குறித்து கருத்து வளர்ச்சியாகக் கருதப்படும் கருத்துக்கள் அடையாளப் படுத்தப்படுகின்றன.

திணைக் கூறுகளுள் எவை எதனுடன் மயங்கும் என்பது குறிக்கப்படுகின்றன. இதனால் நிலையான திணைக்கூறும் அதனுடன் சென்று மயங்கும் திணைக்கூறுகளும் விளக்கப்படுகின்றன. மயங்கும் திணைக் கூறுகள் எவ்வகை உத்தி முறைகளில் மயங்கும் என்பது குறிக்கப்படுகின்றன.

***'சங்க அகஇலக்கியத் திணைப் பகுப்பும் திணை மயக்கமும்'*** என்னும் இரண்டாம் இயலில் அகத்திணை இலக்கியத்திற்கான திணைப் பாடல் மரபும் திணைமயக்கப் பாடுநெறியும் விளக்கப்படுகின்றன. சங்க இலக்கியப் பாக்கள் திணைக் குறியீடுகள் பெற்ற நெறிமுறைகள் குறிக்கப்படுகின்றன. சங்க இலக்கியத்துள் காணப்பெறும் திணை மயங்காப் பாடல்களும் திணைமயக்கப் பாடல்களும் பிரித்துரைக்கப் படுகின்றன. திணைமயக்கப் பாடல்கள் எவ்வாறு திணைக் குறியீடுகளைப் பெற்றுள்ளன என்பது ஆராயப்படுகின்றன. திணைமயக்கப் பாடல்கள் திணைக் குறியீட்டில் தனியே அடையாளப் படுத்துவதற்குரிய குறியீடுகள் எவ்வாறு அமைய வேண்டும் என்பது விளக்கப்படுகிறது. சங்க இலக்கியத் திணைப்பகுப்பில் அத்திணைக்கு உரியவல்லாத பிற திணைக்குரிய உரிப்பொருளுடன் முதல் கருப்பொருட்கள் மயங்குவது விளக்கப்படுகிறது.

*'நில மயக்கமும் கருப்பொருள் மயக்கமும்'* என்னும் மூன்றாம் இயலில் திணைப்பகுப்பில் அத்திணைக்குரிய உரிப்பொருளுடன் பிற திணையின் நிலம் மற்றும் கருப்பொருள்கள் திணைமயக்கமாக இடம்பெறுவது ஆராயப்படுகின்றன. ஓர் உரியினைப் பாடுமிடத்து அதற்கு உரிமையில்லாத பிற நிலம், கருப்பொருள்கள் மயக்கமாக இடம்பெறுவதற்கான காரணிகள் ஆராயப்படுகின்றன.

*'பொழுது மயக்கம்'* என்னும் நான்காம் இயலில் ஒரு திணைப்பகுப்பில் அத்திணைக்குரிய உரிப்பொருளுடன் பிற திணைக்குரிய பொழுதுகள் மயங்குவது ஆராயப்படுகின்றன. பொழுது மயக்கத்திற்கான காரணங்கள் வெளிக்கொணரப்படுகின்றன.

முடிவுரையில் திணை மயக்கத்திற்கான விளக்கமும் வரையறையும் தொகுத்துரைக்கப்படுகின்றன. சங்க இலக்கியப் பாக்களுள் திணை மயங்காப் பாடல்களும் திணை மயக்கப் பாடல்களும் திணை மயக்கத்திற்கான காரணிகளும் கண்டறியப்பட்டுள்ளன.

ஆய்விற்குப் பயன்பட்ட நூல்கள் துணைநூற்பட்டியலாகக் கொடுக்கப்பட்டுள்ளன. இதனைத் தொடர்ந்து ஆய்வில் பெறப்பட்ட முடிவுகளின் வழிப் பெறப்பட்ட வரைபடம், அட்டவணை ஆகியவை பின்னிணைப்பாக இடம்பெற்றுள்ளன.

# இயல் - 1

## திணைமயக்கம் - விளக்கமும் வரையறையும்

அகம், புறம் என்னும் திணை இலக்கிய மரபில் பாடப்பெற்ற இலக்கியங்கள், 'திணை இலக்கியங்கள்' என வழங்கப்பெறும். இவற்றுள் அக இலக்கியப் பாடல் மரபில் முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் என்பன குறிப்பிடத்தக்கன. அகப்பாடல்களுள் சிறந்தமையும் முதல், கரு, உரி என்பனவற்றின் ஒரு வரையறை கருதிய அமைப்பை 'திணை' என்றும் அவற்றுள் ஏற்படும் கலப்புக்களைத் 'திணை மயக்கம்' என்றும் குறிப்பர். திணை இலக்கியப் போக்கில் ஏற்பட்ட திணை மயக்கம் எனும் பாடுநெறி திணைப் பாடல் பாடும் புலவர்களால் ஏற்றுக் கொள்ளப்பெற்றது. தொல்காப்பியம் முதலிய இலக்கண நூல்கள், 'திணைமயக்கம், கடிநிலை இல' என இலக்கணம் கூறலாயின. திணை மயங்குதற்குரிய வரையறைகளும் வகுத்துரைக்கப்பெற்றன. இத்திணை மயக்கம் குறித்து அறிஞர் கூறும் கருத்துக்களையும், இலக்கணிகளின் இலக்கணங்களையும் தொகுத்துரைத்து, திணை மயக்கம் பற்றிய வரையறையையும் திணைக் கூறுகள் மயங்குதற்குரிய இடங்களையும் ஆராய்ந்து விளக்குவது இவ்வியலின் நோக்கமாகும்.

### திணை மயக்கம் - விளக்கம்

'திணை' எனும் சொல் இலக்கிய மரபிலும், இலக்கண வழக்கிலும் ஆளப்பெறுகின்றது. இச்சொல் 'திண்' என்பதன் அடியாகப் பிறக்கிறது. இதனை, " 'மண்திணிந்த நிலனும்' (புறம்.2) 'திணிமணல் அடைகரை'

(குறு.165) போன்ற தொடர்களால் திண், திணி, திணை என உருவாகும் சொல் வடிவை அறியலாம்"[1] என்பர். "திண்மை என்னும் பண்புரிச்சொல் மையீறுகெட்டு உடைமைப் பொருள் தரும் ஐகாரம் பெற்றுத் திணை என நின்றது"[2] என்பர் ச. பாலசுந்தரம். சங்க இலக்கியப் பரப்பில் 'திணை' என்பது நிலம்,[3] திண்ணை,[4] இல்லம்,[5] மேடை,[6] உயர்குடி,[7] ஒழுக்கம்,[8] இனம் (பகுப்பு)[9] என்னும் பொருள்களில் வழங்கப்பெற்றிருப்பதைக் காணமுடிகின்றது. திணை என்பது நிலத்தைக் குறிப்பதாய் அமைந்து பின்பு படிப்படியே கருத்து மாற்றம் பெற்று ஒழுக்கம் எனும் பொருளையும் குறிக்கலாயிற்று எனும் கருத்தும் பெறப்படுகின்றது. இதனை, "முதலில் நிலத்தைச் சுட்டிய திணை என்ற சொல் அடுத்து நிலத்தில் இருந்த மக்களையும் மக்களல்லாத பிற பொருள்களையும் சுட்டியது. அதன் பின்னர் நாகரிக வளர்ச்சியில் மக்கள் கட்டிய வீட்டைக் குறித்தும் பின் மக்களின் குடிப்பிறப்பையும் குலத்தையும் சுட்டலாயிற்று. இறுதியில் உயர்ந்த ஒழுக்கத்தையும் அகப்புற ஒழுகலாற்றையும் உணர்த்தலாயிற்று எனக் கருதலாம்"[10] என்பர். இலக்கண வழக்கில் 'நிலம்', 'ஒழுக்கம்' எனும் இரண்டு பொருளில் கொள்ளப்படுகிறது. இதனை "ஒழுக்கத் திணை என்பாரும் நிலத்தினைத் திணை என்பாரும் என இரு பகுதியர் ஆசிரியர்"[11] என்பர் நக்கீரர். நிலங்களும் ஒழுக்கங்களும் இயைபுபடுத்தப்பட்டதன் காரணமாக, திணை என்ற சொல் நிலத்தையும் ஒழுக்கத்தையும் குறிப்பதாயிற்று. தொல்காப்பியத்துள்ளும் 'திணை' எனும் சொல் நிலத்தையும் ஒழுக்கத்தையும் குறிப்பதைக் காணமுடிகின்றது. இதனை, "நில அமைப்புக்கும் ஒழுக்கத்திற்கும்

இடையே தொடர்பிருந்தமையால் தொல்காப்பியர் 'திணை' என்ற சொல்லை இரண்டற்கும் வழங்கிச் சூத்திரம் செய்துள்ளார்"[12] என்பர். இவற்றால் 'திண்' என்பதன் அடியாகப் பிறந்த 'திணை' என்னும் சொல் நிலம், திண்ணை, இல்லம், மேடை, உயர்குடி, ஒழுக்கம், இனம் (பகுப்பு) என்னும் பொருள்களில் வழங்கப்பெற்றதையும் இலக்கண வழக்கில் நிலம், ஒழுக்கம் என்பனவற்றைக் குறித்தமைவதையும் அறிய முடியும்.

'திணை மயக்கம்' எனும் சொல்லைத் தொல்காப்பியம், "திணை மயக்குறுதலும் கடிநிலை இலவே" (தொல். அகத்.14) என்னும் நூற்பாவில் குறிக்கின்றது. தொல்காப்பியப் பொருளதிகாரம் இலக்கியவியல் அல்லது பாவியல் கூறும் அதிகாரமாகும். இதனை, "எழுத்து, சொல் என்ற இரண்டு அதிகாரங்களும் தமிழ்மொழி பற்றிய கருத்துக்களை விளக்கிக் கூறுகின்றன, 'பொருள்' தமிழ் இலக்கியத்தின் கூறுகளைப் பகுத்துக் கூறுகின்றது"[13] என்று குறிப்பர். இதனால் தொல்காப்பியப் பொருளதிகாரத்துள், குறிக்கப்பெறும் 'திணை' என்னும் சொல் ஓர் இலக்கியக் கலைச்சொல்லாக அமைந்திருப்பது விளங்கும். இதனை, "அறிவு ஒழுக்கங்களால் சிறந்த மக்களைச் சுட்டும் சொற்கள் உயர்திணை என்றும், மக்களல்லாத அனைத்தையும் சுட்டும் சொற்கள் அஃறிணை என்றும் பாகுபடுத்தும் போது திணை என்பது இலக்கணக் கலைச் சொல்லாகிறது. ஆயினும் பொருளதிகாரத்தில் இது பெரிதும் இலக்கியக் கலைச் சொல்லாகவே ஆளப்படுகிறது"[14] என்பர். இச்சொல் முதல், கரு, உரி எனும் முக்கூறுகளையும் உள்ளடக்கிய சொல்லாக அமைகிறது. இதனை, "முதல், கரு, உரிப்பொருள் கொண்டே வருவது திணை"[15]

என்பர் ந.சுப்புரெட்டியார். “முதல், கரு, உரிப்பொருள்கள் ஒன்றிப் பிணைந்த பிணைப்பினையே திணை என்று கூறுவர்”[16] என விளக்குவர் ப. அருணாச்சலம். “திணை என்பது அகப்பொருளில் முதல், கரு, உரி என்ற உட்கூறுகளுக்கும், புறப்பொருளில் துறை என்ற நிகழ்ச்சி உட்கூறுக்கும் கடந்து செல்கிறது”[17] என்பர் இந்திராமனுவேல். “பொருளதிகாரத்துள் திணை என்பது மக்களின் ஒழுகலாற்றையும் அவ்வொழுகலாற்றிற்குரிய பண்பும் தொழிலுமாகிய செயல்களையும் அவற்றிற்கு அடிப்படையான துணைப்பொருள்களையும் ஒருங்கு சுட்டும் இலக்கணக் குறியீடாகும். அஃது இலக்கண முறைமையாற் கூறுமிடத்து முதற்பொருள் கருப்பொருள் உரிப்பொருள் ஆகிய மூன்றிற்கும் உரிமையுடையதொரு பெயராக அமைவதாயிற்று”[18] என்பர் ச.பாலசுந்தரம். “திணை என்பதற்கு உரிப்பொருள் - ஒழுக்கம் என்று மட்டும் முடிவாகக் கொள்ள இடமில்லை. திணை என்ற சொல்லுக்கு முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் என்ற விளக்கமும் உண்டு”[19] என்பர் அ. சீநிவாசன். “முதல், கரு, உரி என மூன்றும் திணையெனப்படும்”[20] என்பர் கா. சுப்பிரமணிய பிள்ளை. “முதல், கரு, உரி யென்னும் மூவகைப் பொருளையும் திணையென்ற சொல்லால் வழங்குவர் ஆசிரியர்”[21] என்பர் க. வெள்ளைவாரணர். “தொல்காப்பியர் ‘திணை’ என்ற சொல்லை அகத்திற்கும் புறத்திற்கும் பொதுவானதாகவும் அகத்தோடு புறத்தைச் சார்த்திக் கூறும் தனது இலக்கணக் கோட்பாட்டைத் தெளிவுபடுத்தவும் அன்பின் ஐந்திணையுள் காணப்படும் முதல், கரு, உரி ஆகிய மூன்றையும் உள்ளடக்கிக் காட்டும் வகையிலும் பயன்படுத்தியுள்ளார்”[22] என்பர் த. வசந்தாள். “திணை என்ற சொல்

நிலம், பொருள், ஒழுக்கம் என்ற மூன்றையும் குறிக்கும் என்பது பெறப்படும். அவ்வகையில் இங்கு முல்லைத் திணை என்று குறிப்பிடும் போது முல்லை நிலம் (முதற்பொருள்), முல்லை மலர் (கருப்பொருள்), முல்லை ஒழுக்கம் (உரிப்பொருள்) என்ற மூன்றையும் குறிக்கும்"[23] என்பர் வி.சசிவல்லி. இவற்றால் 'திணை மயக்கம்' என்பதனுள் குறிக்கப்படும் 'திணை' எனும் சொல் ஓர் இலக்கியக் கலைச் சொல்லாகவும், இலக்கியத்துள் சிறந்தமையும் முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் எனும் கூறுகளை உள்ளடக்கியதொரு சொல்லாகவும் காணப்படுவதை உணரமுடியும்.

'மயக்கம்' என்றால் இரண்டும் கலந்து நிற்றல் என்பதாகும். இதனை, "மயக்கம் என்பதன் பொருள் இரண்டு கலந்து நிற்றல் என்பதே எழுத்ததிகாரத்தில் மெய் மயக்கம் என்பதற்கும் இதுவே பொருள்"[24] என்பர் வ.சு.ப. மாணிக்கனார். "மயக்கம் என்பது பண்டை இலக்கணக் குறியீடு கலத்தல்-சேர்ந்து நிற்றல்-புணர்தல் என்பது அதன் பொருள்"[25] என்பர். இதனால் திணை மயக்கம் என்பது திணைக்குரிய கூறுகளான முதல், கரு, உரி என்பவை பிற திணைக் கூறுகளுடன் கலந்து வருதலைக் குறிப்பது பெறப்படும். இதனை, "திணை மயக்கம் என்பது நடைமுறை சார்ந்த அடிப்படையிலும், கவிதையியல் சார்ந்த அடிப்படையிலும் இடம்பெறுவதாக உள்ளது. இதில் முதல், கரு, உரி என்ற திணைக் கூறுகள் திணைகளில் மயங்கிக் கலந்து வரும் நிலையே பேசப்பட்டுள்ளது"[26] என்று விளக்குவர் பெ. மாதையன். "முதல், கரு, உரி யென்னும் மூன்று கூற்றவாகிய பொருளுந் தமக்குத் தமக்கு உரிய

திணையொடு கூடி இலக்கண முறையானே வாராது பிறவற்றிற்கு உரிய திணையொடு கூடி மயங்கி வருதலும் உரியவாம்”[27] என்பர். இவற்றால் திணை என்பது முதல், கரு, உரி எனும் முப்பொருளைக் குறிக்கும் என்பதும், திணை மயக்கம் என்பது திணையின் கூறுகளான முதல், கரு, உரி என்பவை பிற திணையின் கூறுகளுடன் கலந்து வருதலைக் குறிக்கும் என்பதும் உணரப்படும்.

## இலக்கணத்தில் திணை மயக்கம்

தொல்காப்பியம் காலத்தால் முற்பட்ட பழமையான நூல். தமிழில் கிடைக்கும் முதல்நூல். தமிழ் மொழியின் இலக்கண வரலாற்றில் முதன்மையான நூல். “தொல்காப்பியம் தமிழ் மொழியின் முதல் நூல் மட்டுமன்று திராவிட மொழிகள் அனைத்துக்கும் இதுவே முதல் நூல் ஆகும்”[28] என்பர் ச. அகத்தியலிங்கம். இந்நூல் எழுத்து, சொல், பொருள் என்ற மூன்றதிகாரங்களையும் 27 இயல்களையும் உடையது. அவற்றுள் பொருளதிகாரம் அகத்திணையியலில் திணை மயக்கம் குறித்த இலக்கணத்தைக் காணமுடிகின்றது. தொல்காப்பியம், ‘திணை மயக்கம் குற்றமில்லை திணை மயக்கத்துள் நிலங்கள் ஒருங்கு மயங்குதல் இல்லை’ என்றும் ‘இவ்விலக்கண வரையறைகளைப் புலனெறி வழக்கத்தை நன்கு அறிந்த புலமையுடையோர் எடுத்துரைப்பர்’ என்றும் குறிக்கின்றது. இதனை,

**“திணை மயக்குறுதலும் கடிநிலை இலவே**
**நிலன் ஒருங்கு மயங்குதல் இல்லென மொழிப**
**புலன் நன்குணர்ந்த புலமையோரே”** (தொல்.அகத்.14)

என்னும் நூற்பாவால் அறியமுடியும். திணை மயக்கத்துள் உரிப்பொருள் மயங்குதல் இல்லை; உரிப்பொருள் அல்லாதன மயங்கும் என்ற கருத்தும் தொல்காப்பியத்துள் குறிக்கப்படுகிறது. இதனை,

**"உரிப்பொருள் அல்லன மயங்கவும் பெறுமே"** (தொல்.அகத்.15)

என்னும் நூற்பா உணர்த்தும். நம்பியகப்பொருள், முதல், கரு, உரி எனும் முப்பொருள்கள் தமக்குரிய திணையினை விடுத்துப் பிற திணையுடன் மயங்குதலும் உண்டென்பதைச் சுட்டுகின்றது. இதனை,

**"முத்திறப் பொருளும் தத்தம் திணையொடு**
**மரபின் வாராது மயங்கலும் உரிய"** (நம்பி.அகப்.ஒழிபி.42)

என்னும் ஒழிபியல் நூற்பாவால் உணரமுடிகின்றது. மாறன் அகப்பொருள் உரிப்பொருள் மயங்கினாலும், நால்வகை நிலங்கள் மயங்குதல் இல்லை என்பதை,

**"நலனுடைய யுரிப்பொருள் மயங்கினும் நால்வகை**
**நிலன் மயங்காதென நிகழ்த்தினர் புலவர்"** (மாறன்.அகப்.300)

என்றுரைக்கின்றது. இலக்கண விளக்கம் நம்பியகப் பொருளின் நூற்பாவையே எடுத்துரைக்கின்றது"[29] முத்துவீரியம் தொல்காப்பிய மரபைப் பின்பற்றி,

**"திணை மயக்குறுதலும் கடிநிலையின்றே"** (மு.வீ.807)

என்று குறிக்கின்றது. சுவாமிநாதம், நம்பியகப்பொருளையும் இலக்கண விளக்கத்தையும் பின்பற்றி முதல், கரு, உரி யென்பன பிற திணையில் மயங்கும் எனபதைக் குறிக்கின்றது. இதனை,

"மணம்உறு முப்பொருள்களுந் தந்தந் திணையில் அன்றி

மயங்கலுமாம்........... ........... ..........." (சுவாமி.80)

என்னும் நூற்பா அடிகள் உணர்த்தும். இவற்றால் பெறப்படுவன

1.திணை மயக்கம் குறித்த இலக்கணம், தொல்காப்பியம், நம்பியகப்பொருள், மாறனகப்பொருள், இலக்கண விளக்கம், முத்துவீரியம், சுவாமிநாதம் எனும் இலக்கண நூல்களில் காணப்படுகிறது.

2. திணை மயக்கத்துள் உரிப்பொருள் மயங்காது; நிலம் ஒருங்கு மயங்காது எனத் தொல்காப்பியம் கூற, மாறனகப்பொருள், உரிப்பொருள் மயங்கினும் நிலம் மயங்காதெனக் குறிக்கின்றது.

3. திணை மயக்கத்துள் முதல், கரு, உரி எனும் கூறுகள் மயங்கும் என்பதை, நம்பியகப்பொருள், இலக்கண விளக்கம், சுவாமிநாதம் எனும் இலக்கண நூல்கள் குறிக்கின்றன என்பனவாகும்.

**திணை மயக்கம் - வரையறை**

திணை மயக்கம் என்பதற்கு முதல், கரு, உரி என்னும் முக்கூறுகள் பிற திணையின் கூறுகளுடன் கலந்து வருதல் எனப் பொதுப்படக் கூறினும், திணைக் கூறுகளில் எவ்வெக் கூறுகள் மயங்கும்; எவ்வெக்கூறுகள் மயங்காது; மயங்கிய போதும் மயக்கம் ஆகாத கூறுகள் எவை என்பனவற்றை வரையறை செய்ய வேண்டியுள்ளது.

**மயங்கும் திணைக் கூறுகள்**

தொல்காப்பியம், "உரிப்பொருள் அல்லன மயங்கவும் பெறுமே" (தொல்.அகத்.15) என்பதால், திணைக் கூறுகளில் உரிப்பொருள் தவிர்ந்த முதல், கருப்பொருட்கள் மயங்கும் என்பது பொதுநிலையில் பெறப்படுகின்றது. எனினும் முதற்பொருள் கருப்பொருள் எனும் இவற்றின் மயக்கங்கள் சிறப்பு நிலையில் ஆராயத்தக்கனவாக உள்ளன.

**முதற்பொருள் மயக்கம்**

முதற்பொருள் என்பது நிலம் பொழுது எனும் இரண்டன் இயல்பாகும். எனவே முதற்பொருள் மயக்கம் நிலமயக்கம் எனவும் பொழுது மயக்கம் எனவும் இருவகையில் கொள்ளத்தக்கனவாகிறது.

**நில மயக்கம்**

தொல்காப்பியர், நில மயக்கம் குறித்துக் கூறுமிடத்து, நிலனொருங்கு மயங்குதல் இல் எனக் குறிக்கின்றார். இதனால் நிலங்கள் தம்முள் முழுமையும் மயங்குதல் இல்லை, அவற்றின் பகுதிகளே மயங்கும் என்பது விளங்குகிறது. உலக வழக்கில் நிலங்கள் தனித்துக் காணப்படினும் அவற்றின் பகுதிகள் கலந்து அமைதல் இயல்பு. எனவே இவ்வரையறையானது உலக வழக்கை மையமிட்டு அமைவது புலனாகும்.

உலக வழக்கில் ஒரு நிலத்துள் எல்லா ஒழுக்கமும் நிகழும். இதன் அடிப்படையில் ஒவ்வொரு உரிக்கும் இன்னின் நிலங்கள் உரிய எனும் திணை இலக்கியப் போக்கில், உலக வழக்கைத் தழுவி ஓர் உரி பிற

நிலத்துடன் நிகழ்வதும் பாடப்பெற்றன. இன்ன உரிக்கு இன்னின்ன முதல், கரு, உரிய எனும் முறையில் மாறுபட்டுத் திணை மயக்கம் படைக்கப்பட்டன. இதனால் திணைமயக்கம் என்பது முறை சிறவாமல் பாடும் முறையாகக் கருதப்பட்டது. இதனை, "அகப்பாடல்கள் முறை சிறந்து அமைதலும் முறை சிறவாமல் அமைதலும் உண்டு. முறை சிறவாமை என்பது திணை மயக்கமாகும்"(30) என்பர் அ.சீநிவாசன். இதனால் ஓர் உரியுடன் பிற திணைக்குரிய நிலப்புனைவுகள் திணைமயக்கமாக இடம்பெற்றன என்பது விளங்கும். இவற்றால் நிலங்கள் உலக வழக்கில் ஒன்றைச் சார்ந்து மற்றொன்று அமைந்து மயங்கும் என்பதும், பிற திணையின் உரியுடன் பாடப்பெற்று மயங்கும் என்பதும் பெறப்படும்.

**பொழுது மயக்கம்**

பொழுது முதற்பொருளின் பகுதியாக அமைகின்றது. இதனை,

**"முதல் எனப்படுவது நிலம் பொழுதிரண்டின்**
**இயல்பென மொழிப இயல்புணர்ந்தோரே"** (தொல்.அகத்.4)

என்னும் நூற்பா உணர்த்தும். இப்பொழுதுகளைத் தொல்காப்பியம், கார், கூதிர், பனிஎதிர், வேனில், பின்பனி என்றும், மாலை, யாமம், வைகறை, விடியல், எற்பாடு, நண்பகல் என்றும் குறிப்பிடுகின்றது. இப்பொழுதுகள் முல்லை முதலிய திணைகளுக்கென தனியுரிமை செய்யப்படும். இதனைத் தொல்காப்பியம்,

**"காரும் மாலையும் முல்லை"** (தொல்.அகத்.6)

**"குறிஞ்சி கூதிர் யாமம் என்மனார் புலவர்"** (தொல்.அகத்.7)

**"பனிஎதிர் பருவமும் உரித்தென மொழிப"** (தொல்.அகத்.8)

**"வைகறை விடியல் மருதம்"** (தொல்.அகத்.9)

**"எற்பாடு**

**நெய்தல் ஆதல் மெய்பெறத் தோன்றும்"** (தொல்.அகத்.10)

**"நடுவுநிலைத் திணையே நண்பகல் வேனிலொடு**

**முடிவுநிலை மருங்கின் முன்னிய நெறித்தே"** (தொல்.அகத்.11)

**"பின்பனி தானும் உரித்தென மொழிப"** (தொல்.அகத்.12)

என்று வரையறுத்துரைக்கின்றது. பாலைக்கு வேனில் எனக் கூறப்படுவதால் இளவேனில், முதுவேனில் என்னும் இருபருவங்களும் கொள்ளப்பெறும். இதனை, "இஃது இளவேனில் முதுவேனில் என்னும் இருவகைப் பருவத்தின் கண்ணும் வரும் நண்பகற் பொழுது காலமாம்"[31] என்னும் இளம்பூரணர் உரை உணர்த்தும். மருதத்திற்கும் நெய்தற்கும் பெரும்பொழுது வரையறுத்துக் கூறாத போதும் அறுவகைப் பருவமும் உரியனவாகும். இதனை, "பருவம் வரைந்தோதாமையின் அறுவகைப் பருவமும் கொள்ளப்படும். இது நெய்தற்கும் ஒக்கும்"[32] என்பர் இளம்பூரணர். "தொல்காப்பியர் மருதம், நெய்தல், திணைகளுக்குப் பெரும்பொழுது கூறாதிருப்பதால் ஆறு பெரும்பொழுதுகளும் அவ்விரு திணைகளுக்கும் உரியனவாய்க் கொள்ளப்படுவது மரபாகும்"[33] என்பர் மா.சோமசுந்தரம். இவற்றால் பொழுதுகள் திணைகளுக்கு ஏற்ப வரையறை செய்யப்பெறுவது விளங்கும்.

திணை மயக்கத்துள் பொழுது மயங்கும் என்பதால் பொழுதுகள் தமக்கென வகுக்கப்பட்ட திணையில் அன்றிப் பிற திணையுள் வருவது பொழுது மயக்கம் எனப்படும். இதனை, "ஒரு பொழுதிலே அதற்குரியதல்லாத பிறிதோரொழுக்கம் நிகழின் அது பொழுது மயக்கமாம்"(34) என்பர் கா சுப்பிரமணிய பிள்ளை. பொழுதுகளுக்குரிய திணைகளையும் அப்பொழுதுகள் மயங்குதற்குரிய இடங்களையும் பின்வரும் அட்டவணை விளக்கும்.

| பொழுது | உரிய திணை | மயங்கும் இடம் |
|---|---|---|
| கார் | முல்லை | குறிஞ்சி, பாலை |
| மாலை | முல்லை | குறிஞ்சி, பாலை, மருதம், நெய்தல் |
| கூதிர் | குறிஞ்சி | முல்லை, பாலை |
| யாமம் | குறிஞ்சி | முல்லை, பாலை, மருதம், நெய்தல் |
| பனிஎதிர் | குறிஞ்சி | முல்லை, பாலை |
| வேனில் (இளவேனில்/ முதுவேனில்) | பாலை | முல்லை, குறிஞ்சி |
| நண்பகல் | பாலை | முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் |
| பின்பனி | பாலை | முல்லை, குறிஞ்சி |
| வைகறை/ விடியல் | மருதம் | முல்லை, குறிஞ்சி, பாலை, நெய்தல் |
| எற்பாடு | நெய்தல் | முல்லை, குறிஞ்சி, பாலை, மருதம் |

இவற்றால் திணை மயக்கத்துள் பொழுது மயங்குவதும், அது மயங்குதற்குரிய இடங்களும் விளங்கும்.

**கருப்பொருள் மயக்கம்**

உரிப்பொருள் அல்லன மயங்கும் என்பதால் கருப்பொருள் மயங்கும் என்பதைக் குறிப்பர் தொல்காப்பியர். திணை மயக்கத்துள் கருப்பொருள் மயங்கும் என்பதை, "திணை மயக்கம் ஒரு நிலத்துக்குரிய கருப்பொருள் மற்ற நிலத்தில் வந்து ஒன்றுபடுவது"[35] என்பர் இறையனார் களவியல் உரைகாரர். "நிலமும் காலமுமாகிய முதற்பொருளமைந்த ஐவகைத் திணைகளில் உள்ள கருப்பொருள்கள் பல. அவற்றுள் மரம், செடி, கொடி, விலங்கு பறவையாகியவற்றைப் பற்றிய அரிய செய்திகளைப் புலவர்கள் உணர்ந்து வெளியிடுகின்றனர். இவை இன்ன திணைக்குரியனவென்ற வரையறை இருப்பினும் இவை தம்முள் கலந்து இருத்தலும் உண்டு. அதனைத் திணை மயக்கமென்பர்"[36] என்று விளக்குவர் உ.வே.சாமிநாதய்யர். "ஓர் திணைக்குரிய கருப்பொருள்கள் மற்றொரு திணையிலே சென்று மயங்கினால் (கலந்தால்) அதனை அறிஞர் திணை மயக்கம் என்று கூறுகின்றனர்"[37] என்பர் சி. பாலசுப்பிரமணியன். "பொருளதிகாரத்தில் கருப்பொருள் அடியாக மயங்கும் திணை மயக்கம் கூறப்பட்டுள்ளது"[38] என்பர் ஆ. சிவலிங்கனார். இவற்றால் திணை மயக்கத்துள் கருப்பொருள் மயங்கும் என்பது தெளிவுபடும். தொல்காப்பியர் கருப்பொருளை வகைப்படுத்திக் கூறுகின்றார். இதனை,

> **"தெய்வம் உணாவே மா மரம் புள் பறை**
> **செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ**
> **அவ்வகை பிறவும் கருவென மொழிப"** (தொல்.அகத்.20)

என்னும் நூற்பா உணர்த்தும். இவற்றுள் பூ, புள் எனும் கருப்பொருளைத் தவிர்த்து பிறவெல்லாம் மயங்கும் என்பதையும் அவற்றின் மயக்கம் வந்த நிலத்தின் பயத்த மயக்கமாகாது திணை மயக்கமாகக் கொள்ளப் பெறும் என்பதையும் உணர்த்துவர் தொல்காப்பியர். இதனை,

**"எந்நில மருங்கின் பூவும் புள்ளும்**
**அந்நிலம் பொழுதொடு வாராவாயினும்**
**வந்த நிலத்தின் பயத்த வாகும்"** (தொல்.அகத்.21)

என்னும் நூற்பாவின் வழிப் பெறமுடியும். இவற்றால் தெய்வம், உணா, மா, மரம், பறை, செய்தி, யாழ் எனும் கருப்பொருட்கள் திணை மயக்கமாக மயங்கும் என்பது பெறப்படுகின்றது. இவற்றுள் 'மரம்' எனும் கருப்பொருளும் வந்த நிலத்தின் பயத்தவாகக் கொள்ளப்பட வேண்டும் என்ற கருத்தும் காணப்படுகின்றது. இதனை, "பூ என்றதனான் அதற்கு முதலாகிய மரமும் புல்லும் செடியும் கொடியும் ஆயவற்றுள் ஏற்பனவற்றை வந்த நிலத்தின் பயத்தவாகக் கொள்க"[39] என்பர் ச.பாலசுந்தரம்.

பூ, புள் என்பவை மயங்கினும் திணை மயக்கமாகக் கருதப் படாமைக்கு இவை எளிதில் நிலம் பெயர்ந்து காணப்படுவன (புள்) பெரும்பாலும் பிற நிலத்துடன் தொடர்பு பெற்றிருப்பன (பூ) என்பதாகும். இயற்கையில் இவற்றின் இயல்பு நோக்கியே இவ்வரையறை கொள்ளப்பெற்றது என்பது புலப்படுகிறது. இதனை, "தாமரை மருதத்துக்குரியது; மலையின் சுனையில் காணலும் கூடும். மயில் குறிஞ்சிக்கு உரியது; முல்லைக் காட்டில் வாழவும் கூடும். ஆதலின்

ஆசிரியர் தொல்காப்பியர், ‘எந்நில மருங்கின் பூவும் புள்ளும்......’ என்று கூறிப்போந்தார் இயற்கையை ஒட்டி இயற்றப்படுவதே இலக்கியம்”[40] என்பர் சி. இலக்குவனார். “மருத நிலத்து ஆம்பலைக் குறிஞ்சி நிலத்து ஆம்பலாகச் சொல்லுதல் திணை வழுவாம் பிற எனின் ஆகாது; குறிஞ்சி நிலத்து வண்டு குறிஞ்சி நிலத்தே திரிவன அல்ல; எல்லா நிலத்துஞ் சென்று எல்லாப் பூவும் ஊதுமாகலானும் அமையும் அல்லதூஉம் “எந்நில மருங்கிற் பூவும் புள்ளும்....” (அகத்.21) என்பதாதலானும் அமையும்”[41] என்பர் நக்கீரர். இவற்றால் உலக வழக்கில் பூவும், புள்ளும் பிற நிலத்துடன் காணப்படும் தன்மையன என்பதும் அதன் பொருட்டே ‘வந்த நிலத்தின் பயத்தவாகக்’ கொள்ளப்பட்டன என்பதும் உணரப்படும். அதனையே,

**“ஒரு நிலத்து உறுவன மற்றொன்றிடத்தில்**
**புகுவது உண்டு; அம்முறை புகல்வதும் இயல்பே”**

(அறு. இலக்.67)

என்றுரைக்கின்றது அறுவகை இலக்கணம். இவற்றின் அடிப்படையில் நீர்ப்பூக்களே எளிதில் பிறநிலத்துடன் காணப்படும். நிலத்தின் சார்புப் பகுதிகளிலேயே நிலப்பூக்களின் மயக்கத்தைக் காணமுடியும். தொல்காப்பியர் மரத்தையும், பூவையும் இருவேறு கருப்பொருளாகக் கருதியுள்ளார். பூவின் சார்பாக மரத்தைக் கொள்ளவில்லை. எனவே மரம் பிறநிலத்துடன் காணப்படுதல் மயக்கமாகக் கருதப்படும் என்பது தெளிவுபெறும்.

கருப்பொருட்கள், நிலம் பொழுதுகளுக்கேற்ப வரையறை செய்யப்பெறும் என்பதை, “அந்நிலம் பொழுதொடு வாராவாயினும்”

(தொல்.அகத்.21) என்னும் குறிப்புக் கொண்டு உணர முடிகின்றது. இதனடிப்படையில், இளம்பூரணர் முதலிய உரையாசிரியர்களின் உரைகளிலும் நம்பியப்பொருள் முதலான இலக்கண நூற்களிலும் கருப்பொருட்கள் திணைகளுக்கேற்ப வரையறை செய்யப் பெற்றிருப்பதைக் காணமுடிகின்றது.(42) எனவே இவ்வரையறையுள் மாறுபட்டு பிற திணையுடன் வரும் கருப்பொருட்கள் (பூ, புள், நீங்கலாக) திணை மயக்கமாக மயங்கும் என்பது தெளிவாகும்.

***மயக்கம் ஆகாதன***

திணைக் கூறுகளுள் மயங்கும் சிலவற்றைத் திணை மயக்கம் ஆகா எனக் கொள்ளப்பெறுவதைக் காணமுடிகின்றது.

தொல்காப்பியர் பூ, புள் எனும் கருப்பொருளைக் கூறுமிடத்து, "பூவும் புள்ளும் அந்நிலம் பொழுதொடு வாராவாயினும்" (தொல்.அகத்.21) என்று குறிக்கின்றார். இதனால் பூவும், புள்ளும் ஒவ்வொரு நிலத்திற்கென தனியுரிமை பெறும் என்பதும், அவ்வரையறையுள் மாறுபட்டு பிற நிலம் பொழுதொடு மயங்கும் என்பதும் பெறப்படுகின்றது. ஆயினும், 'வந்த நிலத்தின் பயத்தவாகும்' என்று கூறியிருப்பதால் பூ, புள் எனும் கருப்பொருளின் மயக்கம் திணை மயக்கமாகக் கொள்ளப் பெறமாட்டாதென்பது விளங்கும். இதனை, "யாதானும் ஒரு நிலத்திற்குரிய பூவும் புள்ளும் அந்நிலத்தொடும் பொழுதொடும் வந்தில வாயினும் வந்த நிலத்தின் பயத்தவாகும். வந்தது கொண்டு வாராதது முடித்தல் (மரபு.112) என்பதனால் சிறுபான்மை ஏனையவும் வந்தவழிக் கண்டு கொள்க.

இவ்வாறு வருவன திணை மயக்கம் அன்றென்றவாறு"[43] என்பர் இளம்பூரணர். இவற்றால் பூ, புள் எனும் கருப்பொருட்கள் மயங்கிய போதும் திணை மயக்கம் எனக் கொள்ளப் பெறாது என்பது விளங்கும்.

***திணை மயங்காதன***

திணைக் கூறுகளுள் நிலம் முழுமையும் மயங்காதென்பதை, "நிலனொருங்கு மயங்குதல் இல்" (தொல்.அகத்.14:2) என்றும் உரிப்பொருள் மயங்குதல் இல்லை என்பதை, "உரிப்பொருள் அல்லன மயங்கவும் பெறுமே" (தொல்.அகத்.15) என்றும் குறிப்பர் தொல்காப்பியர், திணை மயக்கத்துள் நிலம் மயங்குதல் இல்லையென்பதை, "நிலன் சேர நிற்றல் இல்லை" என்றும்,[44] உரிப்பொருள் மயங்குதல் இல்லையென்பதை, "உரிப்பொருள் அல்லாத கருப்பொருளும் முதற்பொருளும் மற்றொரு திணையோடு சேர நிற்கவும் பெறும். உம்மை எதிர்மறையாகலான் மயங்காமை பெரும்பான்மை. எனவே 'உய்த்துக் கொண்டுணர்தல் என்னும் தந்திர உத்தியான் எடுத்தோதிய காலமாகிய முதற்பொருளும், பூவும் புள்ளுமாகிய கருப்பொருளும் மயங்கியும் மயங்காமையும் வரும். எனவே உரிப்பொருள் மயங்கி வாராது என்றவாறு"[45]என்றும் விளக்குவர் இளம்பூரணர். "உரிப்பொருள், முதற்பொருளில் நிலம் ஆகியவை மயங்கா பொழுதும் கருப்பொருளும் மயங்கும் என்பது தொல்காப்பியர் கூறும் திணை மயக்கக் கோட்பாடு"[46] என்பர் ப. கொழந்தசாமி. "முதல், கரு, உரி ஆகிய பொருட்கள் ஓர் அகப்பாடலிற் பயின்று வருதல் இயல்பு என்றார் தொல்காப்பியர். முதற்பொருளில் ஒரு கூறாகிய நிலமும் உரிப்பொருளும் மயங்குதல் இல்லை என்பது அவருடைய கருத்து"[47]

என்பர் ஆ. மணி. "திணை மயக்கம்: ஒரு திணையின் நிலமொழிந்த முதற்பொருளும் கருப்பொருளும் மற்றைத்திணைக்குரிய முதற் கருப்பொருள்களுடன் மயங்கி நிற்றலும் உண்டு உரிப்பொருள்கள் மயங்குவதில்லை"[48] என்பர் மோசசு பொன்னையா. இவற்றால் திணை மயக்க வரையறையில் நிலமும், உரிப்பொருளும் மயங்காதனவாகக் கொள்ளப்பெற்றமை விளங்கும். எனினும் நிலங்கள் முழுவதும் மயங்காதென்பது உலகியல் வழக்கில் காணப்படும் நில இயல்பைக் குறிக்கின்றது. நிலன், 'ஒருங்கு' மயங்குதல் இல்லையென்பதால் நிலங்களின் பகுதிகள் மயங்கும் என்பதும் உணரப்படும். ஓர் உரியுடன் பிற நிலப்புனைவுகள் பாடப்பெறும். எனவே புலனெறி வழக்கில் நிலம் திணை மயக்கமாக இடம்பெறும் கூறாகக் கொள்ளப்படும். இவற்றால் திணை மயக்கத்துள் மயங்காத கூறாக உரிப்பொருள் அமைவது விளங்கும். உரிப்பொருள் நிலையான கூறாகி அதனுடன் முதலும் கருவும் மயங்கும். முதலும் கருவும் மயங்குதற்கு உரிப்பொருள் இடம் தந்து அமையும் என்பதும் உரிப்பொருள் எதனுடனும் மயங்காது என்பதும் புலப்படும்.

***திணை மயக்கக் கருத்து வளர்ச்சி***

தொல்காப்பியர் முதலாகக் குறிக்கப்பெற்ற திணை மயக்கம், கருத்து வளர்ச்சி நிலையில் பல்வேறு விளக்கங்களுக்கும் வரையறைகளுக்கும் உட்பட்டதைக் காணமுடிகின்றது. திணை மயக்கத்துள் உரிப்பொருள் மயங்கும்; உரிப்பொருள் அல்லாத கைக்கிளை, பெருந்திணை, கொண்டுதலைக் கழிதல், பிரிந்தவண் இரங்கல், கலந்த பொழுது, காட்சி,

இன்பம், இடும்பை, புணர்வு, பிரிவு என்பன மயங்கும்; நிலனொருங்கு மயங்கும்; கருப்பொருளுள் தெய்வம், யாழ் மயங்காது. அகமும் புறமும் மயங்கும் என்பன திணை மயக்கக் கருத்து வளர்ச்சியாகக் காணப்படுகின்றன. இக்கருத்துக்கள் ஆராயத்தக்கனவாகும்.

*உரிப்பொருள் மயக்கம்*

தொல்காப்பியம் உரிப்பொருள் மயங்காதென்று குறிப்பிடும். ஆனால் மாறன் அகப்பொருள், "உரிப்பொருள் மயங்கினும்" (மாறன். அகப்.300) என்று உரிப்பொருள் மயக்கத்தைக் குறிக்கின்றது. இதனால், உரிப்பொருள் மயங்கும் என்ற கருத்து வளர்ச்சி இலக்கண வழக்கிலும் இடம்பெற்றமை உணரப்படும்.

தொல்காப்பியர் புணர்தல் முதலான உரிப்பொருட்களைக் குறிஞ்சி முதலான திணைகளுக்கு வரையறை செய்தார் எனக் கொள்வர். இதனை, "தேருங்காலை என்றதனாற் குறிஞ்சிக்குப் புணர்ச்சியும், பாலைக்குப் பிரிவும், முல்லைக்கு இருத்தலும், நெய்தற்கு இரங்கலும் மருதத்திற்கு ஊடலும், அவ்வந் நிமித்தங்களும் உரித்தென்று ஆராய்ந்துணர்க"(49) என்பர். "உரிப்பொருள் என்பன புணர்தல், பிரிதல், இருத்தல், இரங்கல் ஊடல் ஆம்........ இவை எல்லாத் திணைகளிலும் நிகழுமென்றாலும் குறிஞ்சிக்குப் புணர்தலும் பாலைக்குப் பிரிவும் முல்லைக்கு இருத்தலும் நெய்தலுக்கு இரங்கலும் மருதத்திற்கு ஊடலும் சிறந்தனவென்று கொள்ளுதல் வேண்டும்"(50) என்பர் சி.இலக்குவனார். இவ்வரையறை இலக்கிய மரபாகப் போற்றப் பெற்றுள்ளது. இதனை, "குறிஞ்சியாகிய நிலத்தில் குறிஞ்சித் திணையின் உரிப்பொருளாகிய புணர்ச்சி நிகழ்வதாகச்

சொல்லுவது இலக்கிய மரபு. இப்படியே ஒவ்வொரு நிலத்திற்கும் உரிய ஒழுக்கங்களை இணைத்துக் கவிதைகளை இயற்றுவர்"[51] என்பர் ந. சுப்புரெட்டியார். இதனால் நிலங்களும் ஒழுக்கங்களும் இயைபுபடுத்தப்பட்டு, வரையறை செய்யப்பெற்று, இலக்கிய மரபாகப் போற்றப்பெற்றன என்பது விளங்கும்.

இவ்வரையறையில் மாறுபட்டு ஓர் உரிப்பொருள் தனக்குரிமையில்லா நிலத்துடன் வருதல் உண்டு. இவ்வமைப்பு உரிப்பொருள் மயக்கம் எனக் கொள்ளப்பட்டது. இதனை, "'மாயோன்மேய' (5) என்பதனுள் ஒரு நிலத்து ஓரொழுக்கம் நிகழுமென நிரனிறுத்துக் கூறிய ஒழுக்கம் அவ்வந் நிலத்திற்கே உரித்தாயொழுகாது தம்முண் மயங்கி வருதலும் நீக்கப்படா"[52] என்றும் "ஓர் உரிப்பொருள் நிற்றற்கு உரிய இடத்து ஓர் உரிப்பொருள் வந்து மயங்குதலும்"[53] என்றும் விளக்கியுரைப்பர் நச்சினார்க்கினியர். "குறிஞ்சி முதலிய அன்பினைந் திணைகளான புணர்தல், பிரிதல், இருத்தல், இரங்கல், ஊடல் என்ற ஐந்தொழுக்கங்களும் தத்தமக்குச் சிறப்புரிமையுடைய முறையே குறிஞ்சி, பாலை, முல்லை, நெய்தல், மருதம், என்னும் நிலங்களில் நிகழ்வதுடன் அவ்வாறு சிறப்புரிமையற்ற பிற நிலங்களில் வந்து கலத்தலும் விலக்கப்படா"[54] என்பர் சோமசுந்தர பாரதியார். "ஓரொழுக்கம் அதற்குரியதல்லாத வேறு நிலத்தின் கண் நிகழ்தலும் நீக்கும் நிலைமை இல்லை. அங்ஙனம் ஒழுக்கம் மயங்குதலன்றி நிலம் ஒன்றோடொன்று மயங்குதல் இல்லை"[55] என்பர் புலவர் குழந்தை. "நிலத்தொடு சார்த்தி முல்லை முதலாகக் கூறப்பட்ட உரிப்பொருளாகிய ஒழுக்கங்கள் அவ்வந்

நிலங்கட்கு உரியவாக நிகழ்தலேயன்றிப் பிற நிலங்களில் மயங்கி நிகழ்வுறுதலும் கடியப்படும் நிலையில்லனவாகும்”[56] என்பர் ச.பாலசுந்தரம். “திணைக்குரிய ஒழுக்கங்கள் மயங்கி நிகழ்தலும் நீக்கப்பட முடியாத ஒன்று”[57] என்பர் ச.வே.சுப்பிரமணியன். “ஐந்திணை யொழுக்கங்கள் தத்தமக்குச் சிறப்புரிமையுடைய நிலத்தினுங் காலத்தினும் நிகழ்வதுடன் பிற நிலங்களிலும் காலங்களிலும் கலந்து நிற்றல் விலக்கப்படாது”[58] என்பர் க. வெள்ளைவாரணர். “ஒவ்வொரு நிலத்திற்கு ஒவ்வோரொழுக்கஞ் சிறப்பினும், ஒரு நிலத்திலேயே ஐவகையொழுக்கமும் நிகழ்தல் கூடும்”[59] என்பர் கா.சுப்பிரமணியபிள்ளை. “இன்ன திணைக்கண் இன்ன ஒழுக்கம் நிகழ வேண்டும் என்னும் மரபில் பிறழ்ந்து பின்னரும் வேறு ஒழுக்கம் நிகழ்ந்ததாகக் கூறுவது திணை மயக்கம் எனப்படும்”[60] எனும் விளக்கமும் காணப்படுகிறது. “ஐந்திணைக்குரிய நிகழ்ச்சிகள் இன்றி இவ்வுலகம் இல்லை. ஆனால் அவை மாறி மாறிக் காணப்பெறும். இவ்வாறு மாறி மாறி வரும் நிகழ்ச்சிகளைக் கூறும் பாடல்கள் உலக வாழ்க்கையை ஒட்டி ஆக்கப்பெற்றன என்று கொள்ள வேண்டும். இதற்கும் தொல்காப்பியர் இலக்கணம் அமைத்திருக்கின்றார். ‘திணை மயக்குறுதலும் கடிநிலை இலவே’ என்பது தொல்காப்பியர் நூற்பா”[61] என்பர் ந.சுப்புரெட்டியார். இவற்றால் திணை மயக்கத்துள் உரிப்பொருள் மயங்கும் எனக் கொள்ளப்பட்ட கருத்து உணரப்படும்.

சங்க இலக்கியத்துள் முதல் கரு ஒரு திணையாகவும், உரிப்பொருள் மற்றொரு திணையாகவும் காணப்படும் பாடல்கள் காணப்படுகின்றன.

இப்பாடல்கள் முதல் கருவிற்குரிய திணைகளாகக் குறிக்கப்பெற்றுள்ளன. இதனை, "(அகம்.164) இது பிரிதற் பகுதியாகிய பாசறைப் புலம்பல் எனினும் நிலம் பற்றி முல்லையாயிற்று"[62] என்றும் "மலிதிரையூர்ந்து தண் மண்கடல் வெளவலின் (கலி.முல்லை.4) என்னும் முல்லைக்கலி, புணர்தற்பொருண்மைத் தாயினும் முல்லைக்குரிய கருப்பொருளான் வருதலின் முல்லையாயிற்று"[63] என்றும் "இஃது இருத்தற் பொருண்மைக்கண் வந்தேனும், முதற்பொருளானும் கருப்பொருளானும் குறிஞ்சியாயிற்று"[64] என்றும் "(ஐங்குறு.361) இது புணர்தற்பொருளாயினும் கருப்பொருளாற் பாலையாயிற்று, 'சிலைவிற் பகழிச் செந்துவராடை' (ஐங்குறு.363) என்னும் பாட்டினுள் புணர்தற் பொருண்மை வந்ததாயினும் 'கொலைவிலெயினர் தங்கை' எனப் பாலைக்குரிய மக்கட்பெயர் கூறுதலிற் பாலையாயிற்று"[65] என்றும், "இது புணர்தற் பொருண்மையேனும் திணை நிலைப் பெயரான் மருதமாயிற்று."[66] "இது புணர்தற் பொருளாயினும் நிலத்தான் நெய்தலாயிற்று"[67] என்றும் "இது பாலைக்குரித்தாகிய பிரிவு நிமித்தமாயினும் நிலத்தான் நெய்தலாயிற்று"[68] என்றும் கூறப்பெறும் உரைப்பகுதிகளால் அறியமுடியும். இவற்றால் சங்கப் பாடல்கள் உரியும் முதல் கருவும் மாறுபட்டு அமைந்திருப்பதையும், அப்பாடல்கள் முதல் கருவிற்குரிய திணைகளாகக் குறிக்கப் பெற்றன என்பதும் விளங்கும்.

உரிப்பொருள் ஒரு திணையாகவும், முதல் கருப்பொருள் ஒரு திணையாகவும் உள்ள பாடல்களுக்கு முதல் கருவால் திணை குறிக்கப்பட்டன. இருத்தல் எனும் உரிப்பொருளும் மருதம் எனும் திணைக்குரிய முதல் கருப்பொருளும் வந்த பாடல் மருதம் எனப்பட்டது;

புணர்தல் எனும் உரிப்பொருளும் நெய்தற்றிணையின் முதல் கருப்பொருளும் வந்த பாடல் நெய்தல் எனப்பட்டது. மருதப் பகுப்பில் முல்லையின் உரியும், நெய்தல் பகுப்பில் குறிஞ்சியின் உரியும் காணப்பட்டன. ஒரு திணைப்பகுப்பில் அதற்குரியவல்லாத பிற உரிப்பொருள் காணப்பட்டது. இதனால் ஒரு திணைப்பகுப்பில் காணப்படும் பிற உரிப்பொருளைக் கொண்டு உரிப்பொருள் மயங்கும் எனும் கருத்து உருப்பெறலாயிற்று என்பது புலப்படும்.

உரிப்பொருள் ஒரு திணையாகவும், முதல் கருப்பொருள் மற்றொரு திணையாகவும் காணப்படும் பாடல்களை, 'உரிப்பொருள் மயங்கிய திணை மயக்கம்' எனக் கொள்ளப் பெறுவதை, 'முதல் கருப்பொருள்கள் பிற திணையின் உரிப்பொருளுடன் மயங்கிய திணை மயக்கப் பாடல்கள்' எனக் கொள்வதற்கும் வாய்ப்புண்டு. இதன் அடிப்படையில் உரி ஒரு திணையாகவும் முதல் கரு ஒரு திணையாகவும் அமைந்த பாடல்களை உரியுடன் முதல் கரு மயங்கிய திணை மயக்கப்பாடல்கள் என்றே கொள்வர் ஔவை. சு. துரைசாமிப்பிள்ளை. இதனை, "சில பாட்டுக்களில் உரிப்பொருட்கென வகுத்த முதற்பொருளும் கருப்பொருளுமின்றி வேறு முதலும் கருவும் வரும். புணர்தலாகிய உரிப்பொருட்குரிய மலையும் நள்ளிரவும் கூதிர் காலமுமாகிய முதற்பொருள் வராமல் நெய்தல் நிலமும் இருள் மாலைப் பொழுதும் ஆகிய முதற்பொருள் வருதலும் உண்டு. அது திணை மயக்கம் எனப்படும்"(69) என்னும் நற்றிணையின் உரைப்பகுதியால் உணரமுடியும். இவற்றால் முதல், கரு, உரி எனத் திணைக் கூறுகள் தம்முள் மயங்கிய பாடலை உரிப்பொருள் மயங்கிய

பாடல் என்றும், முதல், கரு மயங்கிய பாடலென்றும் இருவேறு விதமாகக் கொள்ளப்பெறுவதற்கு வாய்ப்புண்டு என்பது விளங்கும்.

உரிப்பொருள் மயக்கம் எனக் கொண்டால் முதலும் கருவும் அடிப்படையான கூறுகளாகும். முதல், கருப்பொருளின் மயக்கம் எனக் கொண்டால் உரிப்பொருள் அடிப்படையான கூறாகும்.

தொல்காப்பியர் கைக்கிளை முதலாகப் பெருந்திணை இறுதியாகத் திணைகளை ஏழாகவும், முதல் கருப்பொருட்களை ஐந்திணைக்கு உரியதாகவும் கொள்கின்றார். எனவே, ஏழு திணைப் பகுப்பிற்கு ஒழுக்கமே அடிப்படை என்பது பெறப்படுகின்றது. திணையிலக்கியப் புலவனின் நோக்கம் உரிப்பொருளைப் பாடுதலாகுமே யன்றி முதல் கருவைப் பாடுதல் ஆகாது. இதனை, "சங்கப் புலவர்களின் நோக்கம் உரிப்பொருளைப் பாடுதலேயன்றி இயற்கையைப் பாடுதல் அல்ல. மடல் பாடிய மாதங்கீரனார், வெறிபாடிய காமக்கண்ணியார், பாலைபாடிய பெருங்கடுங்கோ என்பனவெல்லாம் புலவர்கள் பாடுபொருளைச் சிறப்பித்துப் பாடி, பெயர் பெற்றதை உணர்த்துகின்றது. இதனை, பாலை பாடிய பெருங்கடுங்கோ எனின் பாலைத் திணையின் உரிப்பொருள் பாடிய புலவர் என்பதுவே கருத்தாம்; பாலையின் முதலையும் கருவையும் பாடியவர் என்பது கருத்தன்று; முதலும் கருவும் உரிப்பொருளுக்குத் துணைப் பொருளேயன்றிப் புலவனுக்குப் பாடற் பொருளன்று. துறைப் பொருளன்று தலைமைப் பொருளன்று, பெருங்கடுங்கோ அகப்புலவரேயன்றி இயற்கைப் புலவர் அல்லர். இவ்வியக்கம் மருதன் இளநாகன் குறிஞ்சிக்கபிலன் என்பவற்றிற்கும் பொருந்தும்"(70) என்பர்.

இதனால் உரிப்பொருளே பாடலுக்கான பொருள் என்பது விளங்கும். உரிப்பொருளுக்குத் துணையாக நிற்பதே முதல் கருப்பொருட்களாகும். இதனை, "திணைமையாவது உரிப்பொருளே பற்றியது. முதலும் கருவுமோ அப்பொருட்குந் துணைமையாம். அத்துணையே ஆதலின் அகத்திணை எழுமைப் பகுப்பு காதலர்களின் கைக்கிளை, புணர்தல், பிரிதல், இருத்தல், இரங்கல், ஊடல், பெருந்திணை என்னும் காமவொழுக்கங்களை அடிப்படையாகக் கொண்டது என்று தெளியத்தகும்"(71) என்பர். "அகப்பாடலுள் முதல் கருவின்றி பாடல் அமையினும் உரிப்பொருளின்றிப் பாடல் அமைவதில்லை. உரியில்லா அகப்பாடல் இல்லை; ஆனால் இயற்கை இல்லாப் பாடல் அமையலாம்"(72) என்பர். "முதல் கருப்பொருள்களைச் சிறிதும் கூறாதே உரிப்பொருளை மட்டும் கூறும் அகப்பாடல்களும் பலவுள. உரிப்பொருள் ஒன்றே நுவலும் இவ்வனைய பாக்கள் பாலைத்திணை குறிஞ்சித்திணையெனச் செவ்விதின் பெயர் பெறுகின்றன. காரணம் திணைமையாவது உரிப்பொருள் பற்றியது"(73) என்பர். இவற்றால், உரிப்பொருளே அடிப்படையான கூறென்பது தெளிவு பெறுகின்றது. எனவே முதல் கரு ஒரு திணையாகவும் உரிப்பொருள் மற்றொரு திணையாகவும் உடைய பாடல்களை உரிப்பொருளுடன் முதல் கரு மயங்கிய திணைமயக்கப்பாடல் எனக் கொள்வதே சிறப்பென்பது பெறப்படும். இதனை, "ஒன்றுடன் ஒன்று சென்று கலப்பது மயக்கம் எனில் நின்று பெற வேண்டிய ஒன்று இருத்தல் வேண்டாவா?...... நிலம் கலக்கும், காலம் கலக்கும், கருப்பொருள் கலக்கும் எனில் எதனுடன் கலக்கும்? புணர்தல் என்ற உரிப்பொருளில் கலக்கும்; இருத்தல் என்ற உரிப்பொருளில் கலக்கும்; ஊடல் என்ற உரிப்பொருளில் கலக்கும்;

இரங்கல் என்ற உரிப்பொருளில் கலக்கும்; பிரிதல் என்ற உரிப்பொருளில் கலக்கும். ஆம்; உரிப்பொருள் எதனுடனும் கலவாது; மயங்காது ஆனால் அதனுடன் முதற்பொருளும் கருப்பொருளும் சென்று கலக்கும். அன்றியும் அவ்விரண்டும் தம்முடன் தாமும் கலக்கும்"(74) என விளக்கியுரைப்பர் க.ப. அறவாணன். இவற்றால் முதல் கருப்பொருள் ஒரு திணையாகவும், உரிப்பொருள் மற்றொரு திணையாகவும் உடைய பாடல்கள் உரிப்பொருளுடன் முதல் கரு மயங்கிய திணை மயக்கமாகும். உரிப்பொருள் அடிப்படையான மயங்காத கூறாகும். இவற்றால் உரியுடன் முதல் கருவேயன்றி உரி மயங்காது என்பது தெளிவாகும்.

**உரியுடன் உரி மயங்குதல்**

ஒரு திணைக்குரிய உரிப்பொருளுடன் மற்றொரு திணையின் உரிப்பொருள் மயங்கும் என்ற கருத்தை, திணை மயக்கம் குறித்த கருத்து வளர்ச்சியாகக் காணமுடிகின்றது. இதனை, "ஒரு நிலத்தின்கண் இரண்டு உரிப்பொருள் மயங்கி வருமென்பதூஉம்"(75) என்றும் "ஓர் உரிப்பொருளோடு ஓர் உரிப்பொருண் மயங்குதலும்"(76) என்றும் கூறும் நச்சினார்க்கினியர், ஐங்குறுநூறு.366 ஆம் பாடலை எடுத்துக்காட்டி, "இஃது இவ்வேறுபாடென்ற செவிலிக்குத் தோழி பூத்தரு புணர்ச்சியால் அறத்தொடுநிற்றல். இது பாலையிற் குறிஞ்சி. இஃது உரிப்பொருளோடு உரிப்பொருண் மயங்கிற்று"(77) என்றுரைப்பதால் பெற முடிகின்றது. இவற்றால் திணைமயக்கத்துள் இரண்டுரிப்பொருள் மயங்கும் என்ற கருத்து காணப்படுவது விளங்கும்.

திணை இலக்கிய மரபில் தனிப்பாடல்கள் எனப்படும் குறும்பாடல்களும், நெடும்பாடல்களும் பாடப்பட்டனவேயன்றி, காப்பியம் போன்று தொடர்நிலைச் செய்யுட்கள் பாடப்பெறவில்லை. தனிப்பாடல் மரபில் ஓர் உரிப்பொருளே பாடலின் பொருளாக அமையும். இதனை, "சங்க பனுவலில் தொகைப்பட்ட 1862 அகச் செய்யுட்கள் நீளத்தில் கூடுதல் குறைதல் கொண்டனவாயினும் எல்லாம் ஒரு காதல் நிகழ்ச்சியையே - ஒரு துறையையே - பொருளாக உடையன; ஒரு பாடற்கு ஓர் உரிப்பொருள் என்ற மரபில் அமைந்தன"[(78)] என்று விளக்குவர் வ.சுப. மாணிக்கனார்.

திணையிலக்கிய மரபிற்கான இலக்கணத்துள் இரண்டுரி மயங்கும் என்பது காப்பிய இலக்கியங்களின் இயல்பால் ஏற்பட்ட கருத்து வளர்ச்சியாக அமையுமேயன்றித் திணை இலக்கிய மரபில் அமைந்த திணை மயக்கத்திற்கான வரையறையாக அமையாது. திணைப்பாடல்களில் இரண்டு உரிப்பொருள் மயங்காது எனும் கருத்து அறிஞர் பெருமக்களால் விளக்கியுரைக்கப் பெற்றிருப்பதைக் காணமுடிகின்றது. இதனை, "உரிப்பொருளாவது புணர்தல், பிரிதல், இருத்தல், ஊடல், இரங்கல் ஆகிய இவ்வைந்தும் இவற்றின் நிமித்தங்களும் ஆகும். இப்பொருளே முதல் கருவென்னும் இரண்டைக் காட்டிலும் சிறந்தது. பிறவெல்லாம் தம்முள் மயங்கினும் உரிப்பொருள் மயங்குதல் தகாதென்பது இலக்கணம்"[(79)] என்பர் உ.வே.சாமிநாதையர். "உரிப்பொருளைப் பாடற்பொருளாக விளக்கும் போது இரண்டு திணைகளுக்குரிய உரிப்பொருள்கள் கலந்து ஒரு பாட்டில் வரமுடியாது.

எனவே இரண்டு உரிப்பொருள்கள் தம்முள் மயங்கி வரும் என்பது பொருந்தாது"[80] என்பர். ந. சுப்புரெட்டியார். "உரிப்பொருள் தம்முள் மயங்குதல் இல்லை; தம்முள் மயங்குவதாகப் பாடல் செய்வதில்லை. குறிஞ்சிப் பாட்டு புணர்ச்சியைக் கூறும்; முல்லைப்பாட்டு இருத்தலை முழங்கும்; மருதப்பாட்டு ஊடலைப் பாடும்; நெய்தற்பாட்டு இரங்கிக் கலங்கும்; பிரிதற்பாட்டுப் பிரிவையும் புலம்பும்; அவற்றுள் மயக்கம் இல்லை"[81] என்பர் க.ப. அறவாணன். இதனால் திணை மயக்கத்துள் இரண்டுரிப்பொருள் மயங்காது என்பது விளங்கும்.

***உரிப்பொருள் அல்லன***

தொல்காப்பியர், "உரிப்பொருள் அல்லன மயங்கவும் பெறுமே" (தொல்.அகத்.15) எனக் கொண்டார். இதனால் உரிப்பொருள் அல்லாதன எவை என்பதைக் குறிக்குமிடத்து அறிஞர்களிடையே கருத்து மாறுபாட்டைக் காணமுடிகின்றது. "உரிப்பொருள் என்று ஓதப்படும் ஐந்திணையும் அல்லாத கைக்கிளையும் பெருந்திணையும் நால்வகை நிலத்தும் மயங்கவும் பெறும் என்றவாறு - உம்மை எச்சவும்மையாதலின் உரிப்பொருளாக எடுத்த பாலையும் நால்வகை நிலத்தும் மயங்கவும் பெறும்"[82] என்பர் நச்சினார்க்கினியர். " 'கொண்டு தலைக் கழிதல்', 'பிரிந்தவணிரங்கல்', 'கலந்த பொழுது', 'காட்சி', முதலியனவும் ஐந்திணை உரிப்பொருள்களைப் போலவே ஒரு நிலத்துக்குந் தனியுரிமையின்றி எல்லா நிலத்தும் வந்து மயங்கவும் பெறும்"[83] என்பர் சோம சுந்தரபாரதியார். "ஆண்டு இன்பம் இடும்பை முதலியவற்றை உரிப்பொருள் என்னாது பொதுவாய் நிற்றல் பொருள் வகை என்றதனான்

அவற்றையே ஈண்டு 'உரிப்பொருளல்லன' என விதந்து அவற்றிற்கு இலக்கணம் கூறினார் என்க. இது மொழிவாம் என்னும் உத்திவகை. அவை பொதுவாக நின்று அகனைந்திணைக்கண் விரவி வருதலின் அங்ஙனம் விராய் வருதலும் மயக்கமே என உணர்த்தியவாறு"[84]என்பர் ச. பாலசுந்தரம். இவற்றால் திணை மயக்கத்துள் உரிப்பொருள் அல்லன மயங்கும் எனக் கருதப்படுபவையாக அமைவன,

1. கைக்கிளை, பெருந்திணை நானிலத்து நிகழும் பாலை
2. கொண்டு தலைக் கழிதல், பிரிந்தவண் இரங்கல்,
   கலந்த பொழுது, காட்சி
3. இன்பம், இடும்பை, புணர்வும், பிரிவும் என்பனவாகும்.

கைக்கிளையும் பெருந்திணையும் திணை மயக்கத்துள் மயங்கும் எனக் கொண்ட கருத்திற்கு நக்கீரர் முன்னோடியாவார், இதனை, "கைக்கிளையிலக்கணமாகச் சொல்லப்பட்டமையின் ஈங்கு அகத்திணையுள் அஃது உரைப்பது திணை மயக்கம் ஆதலின் ......."[85] என்ற இறையனர் களவியல் உரைப்பகுதியால் உணரமுடிகிறது. இக்கருத்து பின் வந்த அறிஞர்களாலும் குறிப்பிடப்படுகிறது. இதனை, "உரிப்பொருளல்லாதனவாகிய கைக்கிளையும் பெருந்திணையும் உரிப்பொருள் எனப்படும் அகனைந்திணைகளுக்கு உரியவாக மேல் ஓதப்பட்ட நிலங்களிலும் காலங்களிலும் மயங்கிவரவும் பெறும்"[86] என்பர் மு. அருணாச்சலம். "அக ஒழுக்கங்களாக வகுத்தோதப் பெற்றவை கைக்கிளை முதலாக ஏழாகும். ஆயினும் உரிப்பொருள் என வகுத்துக் கூறப் பெறுபவை ஐந்தாகும். அவை நடுவணைந்திணைகட்குரியவை

அம்முறையான் கைக்கிளை பெருந்திணைகள் விலக்குறுமன்றே அதனான் அவையும் அடங்க உரிப்பொருள் மயக்குறுதலும் என்னாது திணை மயக்குறுதலும் என்றார் என்க”[87] என்பர் ச. பாலசுந்தரம். இவற்றால் கைக்கிளையும், பெருந்திணையும் திணைமயக்கத்துள் மயங்கும் கூறுகளாகக் கருதப்படுகின்றன என்பது விளங்கும்.

கைக்கிளை, பெருந்திணை என்பன அகத்திணையின் பகுதியாகும். கைக்கிளை, ஐந்திணை, பெருந்திணை என்று எழுதிணைப் பகுப்பில் அடங்கும். இதனை,

**“கைக்கிளை முதலாப் பெருந்திணை இறுவாய்**
**முற்படக் கிளந்த எழுதிணை என்ப”** (தொல்.அகத்.1)

என்பர் தொல்காப்பியர்.

**“மலர்தலை யுலகத்துப் புலவோர் ஆய்ந்த**
**அருந்தமிழ் அகப்பொருள் கைக்கிளை ஐந்திணை**
**பெருந்திணை யெனவெழு பெற்றித் தாகும்”** (நம்பி.அகப்.1)

என்பர் நாற்கவிராசநம்பியார். எனினும் உரிப்பொருளைக் கூறுமிடத்து புணர்தல் முதலிய ஐந்தொழுக்கங்களே சுட்டப்பெறுகின்றன. இதனை,

**“புணர்தல் பிரிதல் இருத்தல் இரங்கல்**
**ஊடல் அவற்றின் நிமித்தம் என்றிவை**
**தேருங்காலைத் திணைக்குரிப் பொருளே”** (தொல்.அகத்.16)

என்னும் நூற்பா உணர்த்தும். திணைக்கு உரிப்பொருள் என்பதால் இவ்வொழுக்கங்கள், ஒவ்வொரு நிலத்திற்கும் தனியுரிமை செய்யப்பெறும்

என்பதும்; இவையே நிலங்களுக்கு உரிய பொருள் என்பதும் வரையறுக்கப்பட்டு உரைக்கப்படுவதைக் காணமுடியும். இங்கு கைக்கிளையும், பெருந்திணையும் குறிக்கப்படாமையால், இவை நிலங்களுக்கென தனியுரிமை செய்யப்பெறாது; எல்லா நிலம் பொழுதொடும் பொதுவாய் வரும் என்பது உணரப்படும். பொதுவாய் அமையும் கைக்கிளையும் பெருந்திணையும் எந்நிலப் பின்புலத்துடன் கூறப்பட்டபோதும் அந்நிலமே அதற்கு முதல் கருவாக அமையும்.

பொதுவாய் வரும் கைக்கிளையும், பெருந்திணையும் திணைமயக்கமாய் அமையாது. இதனை, “கைக்கிளை பெருந் திணைகளுக்கு நிலம் பொழுதுகளில் எதுவுமே தனியுரிமை கூறாததால் விலக்கில்லா நிலம் பொழுதுகளில் அவை வந்து மயங்குமெனச் சுட்டுதல் மிகையாகும்”[88] என்பர் சோமசுந்தர பாரதியார். இவற்றால் கைக்கிளை, பெருந்திணை என்பன திணை மயக்கமாய் வாரா என்பது விளங்கும்.

பாலை உரிப்பொருளுள் குறிக்கப்படுகிறது என்பதாலும் உரி மயங்காது என்பதாலும் பாலையின் பிரிவு திணை மயக்கமாய் அமையாது என்பது விளங்கும்.

தொல்காப்பியர் புணர்தல் முதலிய ஐந்திணையொழுக்கங்களுக்கு நிலம் பொழுதுகளை வரையறுத்து “தேருங்காலைத் திணைக்குரிப் பொருளே” (தொல்.அகத்.14) என்றார். இவ்வாறு நிலம் பொழுதுகளின் வரையறையின்றி வரும் பாடற்கூறுகளைப் பொருள் வகை என்பதனுள் கொள்க என்பார். இதனை,

***"இன்பமும் இடும்பையும் புணர்வும் பிரிவும்***

***ஒழுக்கமும் என்று இவை இழுக்குநெறி இன்றி***

***இதுவாகித் திணைக்கு உரிப்பொருள் எனாது***

***பொதுவாய் நிற்றல் பொருள்வகை என்ப"*** (தொல்.செய்யுள்.206)

என்னும் நூற்பா உணர்த்தும். இதனால் பொதுவாய் நிற்றற்கு உரிய இன்பம், இடும்பை, புணர்வு, பிரிவு, ஒழுக்கம் என்பவை திணை மயக்கமாகக் கருதப்படமாட்டா என்பது தெளிவு பெறும். இவற்றால் திணைக்கென வரையறுக்கப் பெற்றவை தவிர பிறவெல்லாம் பொதுவாய் வரும் என்பதால் கொண்டுதலைக் கழிதல், பிரிந்தவண் இரங்கல், கலந்த பொழுது, காட்சி என்பனவும் பிறவற்றோடு பொதுவாய் வரும் என்பது தெளிவு. **"கொண்டுதலைக் கழிதல் பாலைக் கண்ணும் பிரிந்தவண் இரங்கல் பெருந்திணைக் கண்ணும் வரும்"(89)** என்றும், **"தலைமகனைக் கண்ணுற்றவழி மன நிகழ்ச்சி உளதாங்காலமும், (அதன்) பின்னர்க் குறிப்பறியுந் துணையும் நிகழும் நிகழ்ச்சியும், தலைவியை எதிர்படுதலும் ஓரிடத்து நிகழும் உரிப்பொருள்...... ஓரிடமாவது கைக்கிளை"(90)** என்றும் விளக்குவர் இளம்பூரணர். இதனால் கொண்டுதலைக் கழிதல் பாலையிலும், பிரிந்தவண் இரங்கல் பெருந்திணையிலும், கலந்தபொழுது, காட்சி என்பன கைக்கிளையிலும் வரும் என்பது உணரப்படும். இதனால் கொண்டுதலைக்கழிதல் முதலியன வரையறுக்கப்பட்ட உரிப்பொருளுடன் நோக்கப்படுவது பெறப்படுகின்றது. எனினும், திணை மயக்க வரையறையில் உரிப்பொருளும், கைக்கிளை, பெருந்திணையும் திணை மயக்கமாக மயங்கா என்பதால் கொண்டுதலைக் கழிதல், பிரிந்தவண் இரங்கல், கலந்த பொழுது, காட்சி, இன்பம், இடும்பை, புணர்தல், பிரிவு என்பனவும் திணை மயக்கமாக மயங்கா என்பது விளங்கும்.

## நிலனொருங்கு மயங்கும்

தொல்காப்பியர், "நிலனொருங்கு மயங்குதல் இல்" (தொல்.அகத்.14:2) எனக் குறிப்பர். எனினும் நிலங்கள் மயங்கும் எனும் கருத்து வளர்ச்சியைக் காணமுடிகின்றது. இதனை, "நிலங்கள் ஒரு சேரத் தம்முள் மயங்குதலில்லை எனவே, சில நிலங்களே மயங்குமென்பதும் அச்சில நிலங்களும் முழுதும் மயங்காமல் அவற்றின் ஒவ்வொரு பகுதியே மயங்கும் என்பதும் கொள்ளப்படும். இங்ஙனம் மயங்கும் சில நிலங்கள் முல்லையும் குறிஞ்சியுமென்பதும் அவ்விரண்டனுள்ளும் ஒன்றனை யொன்று அடுத்துள்ள பகுதிகளே தம்முள் மயங்கிப் பாலையாமென்பதும் உய்த்துணரப்படுவதாம்"(91) என்பர் மு. அருணாச்சலம் பிள்ளை. இதனால் நிலங்கள் மயங்கும் என்ற கருத்து குறிக்கப்படுவதை உணரமுடியும்.

பாலை என்பது குறிஞ்சியும் முல்லையும் தம்நிலையில் திரிந்து அதன் இயல்புகள் மாறித் தோன்றும் நிலமாகும். பாலைக்குரிய நிலத்தை, "நடுவுநிலைத் திணையே நண்பகல் வேனிலொடு முடிவுநிலை மருங்கின் முன்னிய நெறித்தே" (தொல்.அகத்.9) எனும் நூற்பாவின் வழி உணர்த்தினர் என்பர். இதனை, "இளவேனில் முதுவேனில் என்னும் இருவகைப் பருவத்தின் கண்ணும் வரும் நண்பகற்பொழுது காலமாம் என்பதூஉம் ஆண்டு இயங்கும் நெறி நிலமாம் என்பதூஉம் உணர்த்தியவாறு"(92) என்பர் இளம்பூரணர். இப்பாலை நிலம் குறிஞ்சியும் முல்லையும் திரிந்த நிலம் என்பதைச் சிலப்பதிகாரம்,

**"வேனலங் கிழவனொடு வெங்கதிர் வேந்தன்**
**தானலந் திருகத் தன்மையிற் குன்றி**

**முல்லையும் குறிஞ்சியும் முறைமையிற் றிரிந்து**

**நல்லியல் பிழந்து நடுங்கு துயர் உறுத்துப்**

**பாலை என்பதோர் படிவம் கொள்ளும்"** (சிலம்பு.காடு.62-66)

என்றுரைக்கின்றது. இதனால் முல்லை குறிஞ்சி திரிந்த நிலமே பாலையாகும் என்பது விளங்கும். எனினும் நிலங்கள் மயங்கும் என்ற கருத்து வளர்ச்சியினை இங்கு உணரமுடிகின்றது. நிலங்கள் மயங்கும் என்பதை, "முல்லை நிலமும் குறிஞ்சி நிலமும் மயங்கும்; இவை இரண்டும் பாலை நிலத்துடன் மயங்கும்; நெய்தல் நிலமும் மருத நிலமும் மயங்கும் இவை தம்முள் மாறி மாறி மயங்கும்"[93] என்பர் க.ப. அறவாணன். நிலங்கள் மயங்கும் எனும் சிந்தனையில் ஆராய்ந்து கூறியுள்ள ஆய்வறிஞர்களையும் காணமுடிகின்றது. "இப்பொழுது திணை மயக்கமென்று பலரால் அறியப்படுவது அகப்பொருள் கூறும் இத் திணைமயக்கமன்று; ஒரு நிலம் மற்றொரு நிலத்துடன் நெருங்கியிருத்தலால் ஒன்றற்குரிய கருப்பொருள்கள் முதலியன மற்றொன்றிற் சென்று பொருந்துதல் என்பதே. ஒரு நாட்டின்கண் நிலங்கள் ஒன்றோடொன்று நெருங்கி அவற்றின் கருப்பொருள் முதலியன மயங்கியிருத்தலை அந்நாட்டிற்கு ஓர் சிறப்பாகக் கொண்டு புலவர்கள் அழகுறப் புனைந்து கூறி வந்திருக்கின்றனர். சங்கச் செய்யுளாகிய பொருநராற்றுப் படையில் 180 முதல் 225 முடியவுள்ள அடிகளில் இத்திணை மயக்கம் கூறப்பட்டிருக்கிறது"[94] என்று ஆராய்ந்து கூறுவர் ந.மு. வேங்கடசாமி நாட்டார். "இச்செய்யுளும் குறிஞ்சி, மருதம், நெய்தல் எனும் மூவகை நிலங்களும் மயங்கக் கூறலின் திணை மயக்கம் கூறிய படியாம்"[95] என்பர் சிந்தாமணியின் உரையாசிரியர். "இப்புராணத்தில்

பாலை தவிர்ந்த ஏனைய நால் நிலங்களின் தொடர்பான வருணனையும், அவற்றின் திணை மயக்கமும் மரபு கருதி பயின்று வந்துள்ளன"[96] என்பர் த.வசந்தாள். இவற்றால் நிலங்களின் மயக்கம் திணை மயக்கம் ஆகும் எனக் கருதப்பட்டு ஆராயப்பட்டுள்ளதை அறியமுடிகின்றது. அகத்திணை அமைப்பில் நிலங்கள் வரையறை செய்யப்பெற்றிருப்பதால் ஒரு பாடலுள் அதற்குரிய நிலச் செய்தியன்றிப் பிற நிலங்களின் செய்திகள் இடம் பெறுமேயானால் அதனை நிலம் மயங்கிய திணை மயக்கம் எனக் கொள்வதில் தவறொன்றும் இல்லை. இந்நில மயக்கம், பிற திணையின் நிலத்துடன் மயங்குதல்; உரியுடன் மயங்குதல் எனும் வரையறையில் கொள்ளத் தகுந்தனவாகும்.

**கருப்பொருளுள் தெய்வம், யாழ் மயங்காது**

தொல்காப்பியர் நிலங்களை வரையறை செய்துரைக்குமிடத்து, அந்நிலங்களுக்கு உரிமையுடைய தெய்வங்களையும் இணைத்துக் கூறுகின்றார். இதனை,

**"மாயோன் மேய காடுறை உலகமும்**
**சேயோன் மேய மைவரை உலகமும்**
**வேந்தன் மேய தீம்புனல் உலகமும்**
**வருணன் மேய பெருமணல் உலகமும்**
**முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் எனச்**
**சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே"** (தொல்.அகத்.5)

என்னும் நூற்பா உணர்த்தும். இதனால் கருப்பொருளில் தெய்வம் மயங்காதெனும் கருத்து உணர்த்தப்படுவதாகக் கொள்வர். இதனை,

"கருப்பொருளாகிய தெய்வத்தை முதற்பொருளோடு கூறியது அவை வந்த நிலத்தின் பயத்த மயங்குமாறு போல மயங்காது இது என்றற்கு"[97] என்பர் நச்சினார்க்கினியர். கருப்பொருளுள் 'யாழ்' என்பதும் திணை மயக்கத்துள் மயங்காதென்பர். இதனை, "யாழின் பகுதி அவ்வந் நிலப்பெயரானே அமைந்து கிடத்தலின் அவை மயங்கி வாரா"[98] என்பர் ச. பாலசுந்தரம். கருப்பொருளுடன் பூ, புள் தவிர்ந்த எல்லாம் திணை மயக்கமாகக் கொள்ளப்படும் என்பதால் திணை மயக்கத்துள் தெய்வம், யாழ் எனும் கருப்பொருளும் மயங்கும். எனவே தெய்வம், யாழ் மயங்காது என்பது கருத்து வளர்ச்சியாக அமைகின்றது.

**அகமும் புறமும் மயங்குதல்**

திணை மயக்கம் குறித்து விளக்கப்படும் நிலையில், அகத்திணையும், புறத்திணையும் கலந்து வரல் என்பதே திணை மயக்கமாகும் என்றுரைக்கப்படுகிறது. இக்கருத்தை, "திணைமயக்கம் அகம் புறம் என்ற திணைகள் ஒன்றுடன் ஒன்று மயங்கி நிற்றல்"[99] என்கிறது கழகத் தமிழ் அகராதி, "அகம் புறமாகிய திணைகள் ஒன்றோடொன்று மயங்கி வருகை[100] என்றுரைக்கின்றது தமிழ் இலக்கியக் கலைச் சொல்லகராதி. இவற்றால் திணைமயக்கத்துள் அகம் புறமாகிய திணைகள் மயங்கும் எனக் கூறப்படும் கருத்து பெறப்படுகிறது.

தொல்காப்பியர் திணையினை அகம் புறம் எனக்கொண்டு அவற்றிற்கு இடையே உள்ள வேறுபாட்டினை வரையறுத்துரைக்கின்றார். இதனை,

**“மக்கள் நுதலிய அகன் ஐந்திணையும்**

**சுட்டி ஒருவர் பெயர் கொளப் பெறாஅர்”** (தொல்.அகத்.57)

**“புறத்திணை மருங்கின் பொருந்தின் அல்லது**

**அகத்திணை மருங்கின் அளவுதல் இலவே”** (தொல்.அகத்.58)

**“அகத்திணை மருங்கின் அரில்தப உணர்ந்தோர்**

**புறத்திணை இலக்கணம் திறப்படக் கிளப்பின்”**தொல்.புறத்.1;1-2)

என்னும் நூற்பாக்கள் உணர்த்தும். இவற்றால் திணையிலக்கியப் பாடல் ஒன்று அகமாக இருக்கும் அல்லது புறமாக இருக்கும். திணை இலக்கியப் பகுப்பில் ஒரு பாடல் அகமாகக் கொள்ளப்படும் அல்லது புறமாகக் கொள்ளப்படும். அகமும் புறமும் என்று கொள்ளப்பெறமாட்டா. இவற்றால் திணைமயக்க வரையறையில் அகம் புறமும் மயங்குதலே திணை மயக்கம் எனக் கொள்ளப்பட்டமை கருத்து வளர்ச்சியாகுமே அன்றித் திணை மயக்கத்திற்கான வரையறையாகா என்பது தெளிவு.

**பாடல் அமைப்பும் முதல்கருவும்**

ஒரு அகப்பாடலுக்கு உரிப்பொருளே உயிர்ப்பொருளாகும். அதனைப் பாடுவதே புலவனின் நோக்கம். அதற்குப் பின்புலமாக அமைவனவே முதற்பொருளும், கருப்பொருளும் ஆகும்.

உரிப்பொருளைப் பாடும் புலவன் திணை மரபு நோக்கிப் பின்புலத்தை அமைப்பான். தான் பாடுதற்கு ஏற்ற உரிப்பொருளுக்குரிய நிலம், பொழுது, கரு எனும் இவற்றைக் கொள்வான். உவமை, உள்ளுறை, இறைச்சி என்பனவாக இடம்பெறும் அமைப்புக்களிலும் முதல் கருப்பொருட்கள் திணைப் பாடல் மரபு நோக்கியே கொள்ளப்பெறும்.

இதனை, "ஒவ்வொரு திணைப் பாடலிலும் அவ்வத் திணை சார்ந்த முதற்பொருளும் கருப்பொருளுமே பின்னணியாகப் பாடப்படவேண்டும். உவமை கூறுவதாயினும் உள்ளுறை, இறைச்சி போன்ற குறிப்புப் பொருள் கூறுவதாயினும் அவ்வந் நிலத்திற்குரிய கருப்பொருள்களாலேயே கூறவேண்டும். அப்பாடல்களில் வரும் மாந்தர்களும் அவ்வந் நிலம் சார்ந்தவர்களாகவே இருத்தல் வேண்டும்"(101) என்பர். உவமை, உள்ளுறை, இறைச்சி முதலியன திணைப்பாடல் மரபு நோக்கி அமைக்கப் பெறுவதால், திணை வகுக்குமிடத்து உள்ளுறை உவமம் ஏனை உவமம் என்பனவும் கருத்தில் கொள்ளப்படுகின்றன. இதனை,

**"உள்ளுறை உவமம் ஏனை உவமம் எனத்**

**தள்ளாது ஆகுந் திணையுணர் வகையே"** (தொல்.அகத்.49)

என்றுரைக்கின்றது தொல்காப்பியம். இதனை, "திணையைக் கண்டுபிடிப்பதற்கு உள்ளுறை உவமம், உவமம் இரண்டும் துணை செய்கின்றன"(102) என்பர் அ.சீநிவாசன். இதனால் முதல் கருப்பொருட்கள் உரிப்பொருள் நிகழும் சூழலாகவும், உவமை உள்ளுறை, இறைச்சி முதலியவற்றிற்குரிய கூறுகளாகவும் கருத்தில் கொள்ளப்பெறும் என்பது விளங்கும். இவற்றால் ஓர் உரிப்பொருளுக்குரிய முதல் கருவின்றி பிற திணைக்குரிய முதல் கருப்பொருட்கள், ஒழுக்கங்கள் நிகழும் சூழலாகவும் உவமை முதலியனவாகவும் அமைந்து திணை மயக்கம் படைக்கப்படுதற்கு வாய்ப்பாகும் என்பதும் விளங்குகிறது.

அகப்பாடல்களில் முதல், கரு, உரிப்பொருட்கள் எனும் கூறுகள் சிறந்தமைவதுடன் புறச் செய்திகளும் காணப்படுகின்றன. இது புதிய மரபில் அமைந்த அமைப்பாகிறது. இதனை, "அகப்பாடல்களில் புறச் செய்திகளை இணைத்தல் புதிய மரபாகும். இம்மரபு சங்க

இலக்கியங்களில் அடியளவு குறைந்த பாடல்களிலும் மிக்கப் பாடல்களிலும் நீண்ட பாடல்களிலும் அமைந்துள்ளன"[103] என்பர் சே.செந்தமிழ்ப்பாவை. இப்புதிய மரபில் புறச் செய்தியின் வழியாக நாட்டின் வளம் சிறப்பு முதலியவற்றை விளக்கும் முறையில் முதல், கருப்பொருட் புனைவுகளும் இடம்பெறுகின்றன. திணை இலக்கியத்துள் முதல், கருவிற்கு வரையறை உடைமையால் புறச்செய்தியின் வழியாக இடம்பெறும் முதல், கருவையும் திணை நோக்கிக் கொள்ளுதல் ஏற்புடையதாகும். எனவே, புறச் செய்தியின் வழியாக இடம்பெறும் திணைக்கூறுகளும் திணைமயக்க ஆய்வில் கருதத்தக்கவையாகின்றன.

**தொகுப்புரை**

'திணை' என்பது 'திண்' என்பதன் அடியாகத் தோன்றிய சொல்லாகிறது. இச்சொல் நிலம், திண்ணை, இல்லம், மேடை, உயர்குடி, ஒழுக்கம், இனம் (பகுப்பு) எனும் பொருளைக் குறித்தமைகின்றது. அஃறிணை, உயர்திணை என்று வகைப்படுத்தும் போது திணை என்பது ஓர் இலக்கணக் கலைச்சொல்லாக அமைகின்றது.

'திணை மயக்கம்' எனும் சொல்லில் 'திணை' என்பது ஓர் இலக்கியக் கலைச் சொல்லாகவும் முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் என்பனவற்றை ஒருங்கே குறிப்பதாகவும் அமைகிறது.

'திணை மயக்கம்' என்பதனுள் 'மயக்கம்' எனும் சொல் இரண்டும் கலந்து நிற்றல் எனும் பொருளில் இடம்பெறுகிறது. எனவே திணை மயக்கம் என்பதற்கு ஒரு திணையின் முதல், கரு, உரி எனும் கூறுகள் மற்றொரு திணைக் கூறுகளுடன் மயங்குதல் என்பது பொருளாகின்றது.

திணையின் கூறுகள் அனைத்தும் மயங்கலாம் என்றால் திணைப்பாடல் மரபும் அதற்கான புலனெறி வழக்கும் சிறப்பற்றதாக ஆகிவிடும். எனவே திணை மயக்கத்துள் முதல், கரு, உரி என்பனவற்றின் மயக்கம் வரையறை செய்யப்பெறுகிறது.

அகத்திணைகள் உரிப்பொருளின் அடிப்படையிலேயே ஏழு திணைகளாகக் கொள்ளப்படுகின்றன. அத்திணைப் பாடல்களின் நோக்கம் உரியினைப்பாடுவதாகின்றது. எனவே திணை மயக்கத்துள் உரிப்பொருள் மயங்குதல் இல்லை எனும் வரையறை செய்யப்படுகின்றது. உரிப்பொருளுடன் முதற்பொருளும் கருப்பொருளும் மயங்கும். உரிப்பொருள் எதனுடனும் மயங்காது என்பது உணர்த்தப்படுகிறது.

திணை மயக்கத்துள் நிலம் ஒருங்கு மயங்குதல் இல்லை என்பதைத் தொல்காப்பியர் குறிப்பர். ஆயின் பிற்கால ஆய்வறிஞர்களும், ஆராய்ச்சியாளர்களும் நிலமயக்கத்தைத் திணை மயக்கம் எனக் கொள்கின்றனர். உலக வழக்கில் நிலங்கள் ஒன்றைச் சார்ந்து மற்றொன்று அமைதல் இயல்பு. நில வளமிக்க நாடுகள் முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் எனும் நிலங்களைப் பெற்றுள்ளனவாகக் கூறப்படும்; ஒரு திணைப்பாடலில் பிற திணைக்குரிய நிலச் செய்திகள் உவமை, புறச்செய்திகள் என்பனவாகக் கூறப்படும். எனவே இவ்வாறு அமையும் நிலச் செய்திகளை நில மயக்கம் எனக் கொள்வதில் தவறில்லை. நிலம் மயங்காது எனில், பிறநிலத்துடன் நிகழும் உரிப்பொருள் நிகழ்வைப் படைக்கும் பாடல்கள் சிக்கலுக்குரியதாகும். உரிப்பொருள் மயங்காதெனக் கொள்ளப்பட்டுள்ளது. எனினும் புலவர்கள் உலக இயல்பின்படி பிற

நிலத்துள் நிகழும் உரியைப் படைக்கின்றனர். இதற்கு முல்லையில் புணர்தல்; நெய்தலில் ஊடல் என்பன சான்றாகும். இப்பாடல்கள் உரிப்பொருள் மயங்காதென்பதால் நிலம் மயங்கிய திணை மயக்கப் பாடல்களாகவே கொள்ள வேண்டியுள்ளது. எனவே திணை மயக்கத்துள் நிலம் மயங்கும் என்பது ஏற்புடைய கருத்தாகின்றது. தொல்காப்பியர் நிலம் ஒருங்கு மயங்குதல் என்பது உலக வழக்கில் காணப்படும் நில இயல்பை விளக்குகின்றது.

திணை மயக்கத்துள் பொழுது மயக்கம் சிறப்பிடம் பெறுகின்றது. பொழுதுகள் மயங்கும் என்ற கருத்து இலக்கணிகளாலும், உரையாசிரியர்களாலும், ஆய்வறிஞர்களாலும் கருத்து வேறுபாடின்றி ஏற்கப்படுகின்றது. பொழுதுகள் ஒவ்வொரு திணைக்கும் வரையறை செய்யப் பெற்றுள்ளன. இவற்றின் அடிப்படையில், கார்காலம் - குறிஞ்சி மற்றும் பாலையிலும்; கூதிர், பனிஎதிர் எனும் காலங்கள் முல்லை மற்றும் பாலையிலும்; இளவேனில், முதுவேனில், பின்பனி என்பன முல்லை மற்றும் குறிஞ்சியிலும்; மாலைப்பொழுது - குறிஞ்சி, பாலை, மருதம், நெய்தலிலும், யாமம் - முல்லை, பாலை, மருதம், நெய்தலிலும், நண்பகல்- முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தலிலும்; வைகறை, விடியல் என்பன முல்லை, குறிஞ்சி, பாலை, நெய்தலிலும், எற்பாடு - முல்லை, குறிஞ்சி, பாலை, மருதத்திலும் மயங்கும் என்பது உணரப்படுகின்றது.

கருப்பொருள்கள் திணை மயக்கமாக மயங்கும் பூவும் புள்ளும் மயங்கிய போதும் அம்மயக்கம் திணை மயக்கம் எனக் கொள்ளப்பெறாது.

தெய்வம், யாழ் எனும் கருப்பொருள்கள் திணை மயக்கத்துள் மயங்காது என்ற கருத்தை உணர்த்துவர். தொல்காப்பியர் பூ, புள், எனும் கருப்பொருளுக்கு மட்டுமே வந்த நிலத்தின் பயத்தவாகும் எனும் வரையறை கூறியுள்ளார். எனவே கருப்பொருளில் தெய்வம், யாழ் என்பனவும் மயங்கும் என்பது உணரப்படுகிறது.

உரிப்பொருளுடன் உரிப்பொருள் மயங்கும், உரிப்பொருள் அல்லாத கைக்கிளை, பெருந்திணை, கொண்டுதலைக் கழிதல், பிரிந்தவண் இரங்கல், கலந்தபொழுது, காட்சி, இன்பம், இடும்பை, புணர்வு, பிரிவு என்பன மயங்கும். நிலனொருங்கு மயங்கும். அகமும் புறமும் மயங்கும் என்பன திணை மயக்கம் குறித்த கருத்து வளர்ச்சியாக அறியப்படுகின்றன.

# சான்றெண் விளக்கம்

1. நா.பாலுசாமி (ப.ஆ.), வாழ்வியற் களஞ்சியம், தொ. பத்து, ப.252.
2. பாவலரேறு ச. பாலசுந்தரம் (உ.ஆ), தொல்காப்பியம் ஆராய்ச்சிக் காண்டிகை உரை, ப.26.
3. புறநா.229:10-12, பெரும்.220,221, மதுரைக்.326.
4. பட்டினப்.263,264, அகநா.167:8-16.
5. பரி.16:6-8.
6. பட்டினப்.142-143.
7. புறநா.24:27-29, 33, 27:1-7, 159:26-28,373:28-30, பதிற்.14:20-22,72:3-7, 85:5-9, குறிஞ்சிப்.205,206, குறுந்.45:5.
8. பதிற்.31:12,13, மலைபடு.401.
9. குறுந்.224:3-5.
10. மா.சோமசுந்தரம், சங்க அகப்பாடல்களில் திணைமயக்கம் (ஆய்வேடு), ப.4.
11. நக்கீரர் (உ.ஆ), களவியல் என்ற இறையனார் அகப்பொருள்,ப.1.
12. மனோன்மணி சண்முகதாஸ், குறுந்தொகை ஒரு நுண்ணாய்வு, ப.56.
13. ச.வே.சுப்பிரமணியன், தா.வே.வீராச்சாமி (ப.ஆ), தமிழ் இலக்கியக் கொள்கை ஓர் அறிமுகம், ப.4.
14. நா.பாலுசாமி (ப.ஆ), வாழ்வியற் களஞ்சியம், தொ. பத்து, ப.252.
15. ந.சுப்புரெட்டியார், அகத்திணைக் கொள்கைகள், ப.6.
16. ப.அருணாச்சலம், தொல்காப்பியர், ப.67.
17. செ.ஜீன்லாறன்ஸ் கு.பகவதி (ப.ஆ), தொல்காப்பிய இலக்கியக் கோட்பாடுகள், ப.48.

18. பாவலரேறு ச. பாலசுந்தரம் (உ.ஆ), தொல்காப்பியம் ஆராய்ச்சிக் காண்டிகை உரை, ப.LV.

19. அ.சீநிவாசன், குறிஞ்சி, ப.2.

20. கா.சுப்பிரமணியபிள்ளை, பழந்தமிழர் நாகரிகம் அல்லது தொல்காப்பியப் பொருளதிகாரக் கருத்து, ப.58.

21. க.வெள்ளைவாரணர், தமிழ் இலக்கிய வரலாறு, தொல்காப்பியம்,ப.82.

22. த.வசந்தாள், தமிழிலக்கியத்தில் அகப்பொருள் மரபுகள் ஒரு வரலாற்றுப் பார்வை, ப.108.

23. வி. சசிவல்லி, முல்லை, ப.9.

24. வ.சுப.மாணிக்கம், தொல்காப்பியக்கடல், ப.62.

25. ச.அகத்தியலிங்கம், சு.பாலசுப்பிரமணியன் (ப.ஆ), இலக்கண ஆய்வுக் கட்டுரைகள், ப.165.

26. அ.அறிவுநம்பி, ம.மதியழகன், ந.ஜெ.சரவணன் (ப.ஆ), சங்க இலக்கியங்களும் கோட்பாடுகளும், ப.142.

27. சேயொளி (ப.ஆ) இலக்கண விளக்கம், ப.26.

28. செ.ஜீன்லாறன்ஸ் கு.பகவதி (ப.ஆ), தொல்காப்பிய இலக்கியக் கோட்பாடுகள், ப.1.

29. இலக்கண விளக்கம் நூ.394.

30. அ.சீநிவாசன், பழசும் புதுசும், பக்.61-62.

31. கோ.இளவழகன் (ப.ஆ), தொல்காப்பியம் பொருளதிகாரம் இளம்பூரணம் I ப.176.

32. மேலது, ப.175.

33. மா.சோமசுந்தரம், சங்க அகப்பாடல்களில் திணைமயக்கம் (ஆய்வேடு), ப.7.

34. கா.சுப்பிரமணியபிள்ளை, பழந்தமிழர் நாகரிகம் அல்லது தொல்காப்பியப் பொருளதிகாரக் கருத்து, ப.46.

35. உ.வே.சாமிநாதய்யர் (உ.ஆ), குறுந்தொகை மூலமும் உரையும், ப.37.

36. நக்கீரர் (உ.ஆ), களவியல் என்ற இறையனார் அகப்பொருள், ப.213.

37. சி.பாலசுப்பிரமணியன், தொல்காப்பியக் கட்டுரைகள், ப.449.

38. ஆ.சிவலிங்கனார் (ப.ஆ), வேற்றுமை மயங்கியல் உரைவளம், ப.VIII.

39. பாவலரேறு ச. பாலசுந்தரம் (உ.ஆ), தொல்காப்பியம் ஆராய்ச்சிக் காண்டிகை உரை, ப.51.

40. சி.இலக்குவனார், தொல்காப்பிய ஆராய்ச்சி, பக்.139,140.

41. நக்கீரர் (உ.ஆ), களவியல் என்ற இறையனார் அகப்பொருள், ப.41.

42. காண்க: பின்னிணைப்பு - கருப்பொருள் வரையறை - அட்டவணை 2 முதல் 9.

43. கோ.இளவழகன் (ப.ஆ) தொல்காப்பியம் பொருளதிகாரம், இளம்பூரணம் I. ப.182.

44. மேலது, ப.177.

45. மேலது, ப.178.

46. ப.கொழந்தசாமி, தமிழ்ப் புதுக்கவிதைகளில் அகப்பொருள் மரபுக் கூறுகள், ப.6.

47. இரா.சந்திரசேகரன், க.சக்கரபாணி, க.இந்திரசித்து, செல்லையா (ப.ஆ), சங்க இலக்கியம் பன்முகப் பார்வை, ப.83.

48. மோசசு. பொன்னையா, தமிழ் இலக்கணத் தெளிவு, ப.88.

49. நச்சினார்க்கினியர் (உ.ஆ), தொல்காப்பியப் பொருளதிகாரம் (அகத்திணையியல், புறத்திணையியல்), ப.37.

50. சி.இலக்குவனார், தொல்காப்பிய ஆராய்ச்சி, ப.139.

51. ந.சுப்புரெட்டியார், தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை, ப.31.

52. நச்சினார்க்கினியர். (உ.ஆ), தொல்காப்பியப் பொருளதிகாரம் (அகத்திணையியல், புறத்திணையியல்), ப.27.

53. மேலது, ப.27.

54. மு.அருணாச்சலம், தொல்காப்பியம் அகத்திணையியல் உரைவளம், ப.156.

55. புலவர் குழந்தை (உ.ஆ), தொல்காப்பியம் பொருளதிகாரம், ப.17.

56. பாவலரேறு ச. பாலசுந்தரம் (உ.ஆ), தொல்காப்பியம் ஆராய்ச்சிக் காண்டிகை உரை, ப.31.

57. ச.வே.சுப்பிரமணியன் (உ.ஆ), தொல்காப்பியம் தெளிவுரை, ப.359.

58. க.வெள்ளைவாரணர், தமிழ் இலக்கிய வரலாறு தொல்காப்பியம், ப.84.

59. கா.சுப்பிரமணியபிள்ளை, பழந்தமிழர் நாகரிகம் அல்லது தொல்காப்பியப் பொருளதிகாரக் கருத்து, ப.46.

60. தீந்தமிழ் இலக்கணம், ப.205.

61. ந.சுப்புரெட்டியார், தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை, பக்.41-42.

62. கோ.இளவழகன் (ப.ஆ), தொல்காப்பியம் பொருளதிகாரம் இளம்பூரணம் I. ப.185.

63. மேலது, ப. 185.

64. மேலது, ப.187.

65. மேலது, ப.188.

66. மேலது, ப.189.

67. மேலது, ப.190.

68. மேலது, ப.190.

69. ஔவை.சு.துரைசாமிப்பிள்ளை (உ.ஆ), நற்றிணை மூலமும் உரையும், பக்.9,10.

70. வ.சுப.மாணிக்கனார், தமிழ்க்காதல், ப.158.

71. மேலது, ப.69.

72. சங்க இலக்கியக் கட்டுரைகள் (தமிழ்ப் பல்கலைக்கழகம்), ப.12.

73. வ.சுப.மாணிக்கனார், தமிழ்க்காதல், ப.35.

74. க.ப.அறவாணன், அற்றைநாட் காதலும் வீரமும், ப.76.

75. நச்சினார்க்கினியர். (உ.ஆ), தொல்காப்பியப் பொருளதிகாரம் (அகத்திணையியல், புறத்திணையியல்), ப.27.

76. மேலது, ப.27.

77. மேலது, ப.28.

78. வ.சுப.மாணிக்கனார், தமிழ்க்காதல், பக்.224,225.

79. உ.வே.சாமிநாதய்யர் (உ.ஆ), குறுந்தொகை மூலமும் உரையும், ப.26.

80. ந.சுப்புரெட்டியார், அகத்திணைக் கொள்கைகள், ப.34.

81. க.ப.அறவாணன், அற்றைநாட் காதலும் வீரமும், ப.100.

82. நச்சினார்க்கினியர். (உ.ஆ), தொல்காப்பியப் பொருளதிகாரம் (அகத்திணையியல், புறத்திணையியல்), ப.34.

83. மு.அருணாச்சலம், தொல்காப்பியம் அகத்திணையியல் உரைவளம், பக்.170,171.

84. பாவலரேறு ச. பாலசுந்தரம் (உ.ஆ), தொல்காப்பியம் ஆராய்ச்சிக் காண்டிகை உரை, ப.44.

85. நக்கீரர் (உ.ஆ), களவியல் என்ற இறையனார் அகப்பொருள், ப.39.

86. மு.அருணாச்சலம், தொல்காப்பியம் அகத்திணையியல் உரைவளம், ப.174.

87. பாவலரேறு ச. பாலசுந்தரம் (உ.ஆ), தொல்காப்பியம் ஆராய்ச்சிக் காண்டிகை உரை, ப.31.

88. மு.அருணாச்சலம், தொல்காப்பியம் அகத்திணையியல் உரைவளம், பக்.171-172.

89. கோ.இளவழகன் (ப.ஆ) தொல்காப்பியம் பொருளதிகாரம், இளம்பூரணம் I. ப.179.

90 மேலது, ப.180.

91. மு.அருணாச்சலம், தொல்காப்பியம் அகத்திணையியல் உரைவளம், ப.163.

92. கோ.இளவழகன் (ப.ஆ) தொல்காப்பியம் பொருளதிகாரம், இளம்பூரணம் I. ப.176.

93. க.ப.அறவாணன், அற்றைநாட் காதலும் வீரமும், ப.99.

94. செந்தமிழ்ச் செல்வி (பிரபவ-ஆவணி), ப. 457.

95. நச்சினார்க்கினியர் (உ.ஆ) சீவகசிந்தாமணி, ப.33.

96. த.வசந்தாள், தமிழிலக்கியத்தில் அகப்பொருள் மரபுகள் ஒரு வரலாற்றுப் பார்வை, பக்.126-127.

97. நச்சினார்க்கினியர். (உ.ஆ), தொல்காப்பியப் பொருளதிகாரம் (அகத்திணையியல், புறத்திணையியல்), பக்.14,15.

98. பாவலரேறு ச. பாலசுந்தரம் (உ.ஆ), தொல்காப்பியம் ஆராய்ச்சிக் காண்டிகை உரை, ப.51.

99. கழகப் புலவர் குழுவினர் (ப.ஆ), கழகத் தமிழகராதி, ப. 540.

100. கதிர்வேற்பிள்ளை (ப.ஆ), தமிழ் இலக்கியக் கலைச் சொல்லகராதி, ப.123.

101. நா.பாலுசாமி, வாழ்வியற் களஞ்சியம் தொகுதி I, (தமிழ்ப் பல்கலைக்கழகம்) ப.38.

102. அ.சீநிவாசன், பழசும் புதுசும், ப.75.

103. சே.செந்தமிழ்ப்பாவை, சங்கப்பாடல்களில் மரபு மாற்றங்கள், ப.106.

# இயல் - 2

## சங்க அக இலக்கியத் திணைப்பகுப்பும் திணைமயக்கமும்

திணை இலக்கியம் எனப்பெறும் சங்க இலக்கியப் பாக்கள் அகம், புறம் எனும் இருதிணைப் பாடல்களாக அமைகின்றன. அவற்றுள் அகத்திணைப் பாக்கள் முல்லை, குறிஞ்சி, பாலை, மருதம், நெய்தல் எனும் ஐந்திணையாகப் பாகுபடுத்தப்படுகின்றன. இத்திணைப் பாகுபாட்டிற்கு பாடலுள் சிறந்தமையும் முதல், கரு, உரி என்பன அடிப்படையாக அமைகின்றன. சங்க அக இலக்கியத் திணைப்பகுப்பில் திணைமயக்கப் பாடல்கள் தனியே அடையாளப்படுத்தப் பெறவில்லை. திணை மயங்கிய பாடலும் திணை மயங்காத பாடலும் முல்லை, குறிஞ்சி, பாலை, நெய்தல் என்றே குறிக்கப் பெற்றுள்ளன. முதல், கருப்பொருளுக்கு முதன்மை தந்த திணைப்பகுப்பால் உரிப்பொருளுடன் பிற திணையின் முதல், கருப்பொருள்கள் மயங்கிய பாடல்கள் பாடுபொருளுக்குரிய திணையாக அன்றிப் பின்புலத்துக்குரிய திணையாக குறிக்கப்பெற்றன. இவற்றால் தமிழ் மொழியின் தனிச்சிறப்பாக விளங்கும் திணை இலக்கியக் கோட்பாடுகளையும் திணைப் பகுப்பு நெறிகளையும் விளக்கி, சங்க இலக்கியத் திணைப்பகுப்பில், அப்பகுப்பிற்கு உரியனவாகாத உரிப்பொருளுடன் அத்திணையின் முதல், கருப்பொருள்கள் மயங்குவதை ஆராய்தல் இவ்வியலின் நோக்கமாகும்.

### திணை இலக்கியக் கோட்பாடுகள்

திணை இலக்கியக் கோட்பாடுகளுள் திணைப்பாடல்கள் அகம்,

புறம் என இரண்டன் பகுப்பில் அமைதல், அகத்திணைக்குரிய பாடல்கள் களவு, கற்பு என்னும் பகுப்பில் பாடப்பெறுதல், முதல், கரு, உரியெனும் இவற்றை வரையறை செய்து புனைதல், நாடகப் பாங்கில் கூற்றுக்களாகப் படைக்கப்படுதல், சுட்டி ஒருவர் பெயர் கூறாது இயற்றுதல் என்பன போற்றத்தக்க கோட்பாடுகளாக அமைகின்றன. இவற்றை விளக்கி, திணை மயக்கப் பாடல்களுக்கான அடையாளக் குறியீடுகள் எவ்வாறு அமைதல் வேண்டும் என்பதைக் குறிப்பிடுதல் இவ்வாய்வின் தெளிவிற்கு உறுதுணையாகும்.

***திணைப்பாடல் மரபு***

முதல், கரு, உரி எனும் இவற்றின் வரையறை என்பது இயற்கை நெறிப் பாடல்களாகத் தோன்றிய இலக்கியம் நாளடைவில் இலக்கியச் சிறப்புக் கருதி மரபு வழிப் பாடல்களாகக் கொள்ளப்பட்டன என்பதையும், நாட்டுப்புறப் பாடல்களாகத் தோன்றிய இலக்கியம் அவற்றுள் காணப்பட்ட சிறப்புக் கருதி ஐந்திணைப் பாடல்களாகக் கொள்ளப்பட்டன என்பதையும் உணர்த்துகின்றது. இதனை, "நிலத்துக்கு நிலம், நாட்டுப்பாடல்களும் வெவ்வேறு வகையாக அமைந்தன. சங்க இலக்கியம் எழுந்த காலத்தில் அந்த நாட்டுப் பாடல்களே புலவர்களின் கைப்பட்டு குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்னும் ஐந்திணைப் பாடல்களாக அமைந்தன"(1) என்று விளக்குவர் மு.வரதராசனார். "அகத்திணைப் படைப்பு இயற்கையிலிருந்து வனப்பொடு வடித்த செயற்கை"(2) என்று குறிப்பர் வ.சுப. மாணிக்கனார். இவற்றால் அகத்திணைப்பாடல் மரபில் போற்றப்படும் முதல், கரு, உரி என்பன இயற்கை நெறிப்பாடல்களிலிருந்து

கொள்ளப்பட்டன என்பதும் மரபு வழிப் பாடல்களுக்கு இயற்கை நெறிப் பாடல்கள் அடித்தளம் தந்தன என்பதும் விளங்கும்.

இயற்கை நெறிப் பாடல்களுள் காணப்பட்ட சிறப்புக் கருதி முதல், கரு, உரி என்பன வரையறுக்கப்பட்டன என்பதும் பெறப்படுகின்றது. முல்லையின் பின்புலத்தில் பாடப்பெற்ற இயற்கை நெறிப் பாடல்களில் தலைவி ஆற்றியிருக்கும் பாடுபொருளும் முல்லைப் பின்புலமும் சிறந்து அமைவதை உணர்ந்தனர். இவ்வாறான சிறப்புக்களை நோக்கி, திணை வரையறைகள் தோன்றலாயின. இவ்வரையறை மரபாகவும் போற்றப்பெற்றது. இதனை, “புணர்தலுக்குக் குறிஞ்சி நிலத்தையும், பிரிவுக்குப் பாலையையும், இருத்தலுக்கு முல்லையையும், ஊடலுக்கு மருதத்தையும், இரங்கலுக்கு நெய்தலையும் திணைக்களமாகப் பகுத்து புலனெறி வழக்கம் செய்வது மரபாயிற்று”(3) என்பர் ஔவை சு.துரைசாமிப்பிள்ளை. இதனால் திணைப்பாடல் மரபில் முதல், கரு, உரி என்பன திணை உணர்வின் வளர்ச்சியாகவும் உலக வழக்கும் நாடக வழக்கும் தழுவிய புலனெறி வழக்காகவும் அமைந்தது விளங்கும். இதனை, “முதல், கரு, உரி என்ற அளவில் உள்ள பிணைப்பு திணை உணர்வு வளர்ந்து வந்த வரலாற்றையே அறிவிக்கிறது”(4) என்றும், “இப்பிணைப்பு ஓர் இலட்சியப் படைப்பு”(5) என்றும் கூறுவர் ப.அருணாச்சலம். இவற்றால் திணைப்பாடல் மரபானது இயற்கை நெறிப் பாடல் மரபிலிருந்து தோன்றியது என்பதும் இயற்கை நெறிப் பாடல்களில் உணரப்பட்ட சிறப்புக் கருதி முதல், கரு, உரி வரையறுக்கப்பட்டன என்பதும் இவ்வரையறை புலனெறி வழக்காகவும் மரபாகவும் போற்றப்பட்டன என்பதும் விளங்கும்.

**அகப்பாடல்களும் திணைக்கூறுகளும்**

அகம், புறம் எனும் பாடுபொருளில், அகப் பொருள் புலவனின் கவித்துவத்திற்கு வாய்ப்பாக அமைகிறது. இதனை, "புலவனுக்கு மதம் எனப்படுவது ஆண், பெண் காதலே - அக்காதல் இலக்கியத்தின் வற்றா ஊற்றிடங்களுள் ஒன்று. கவிதை யெண்ணத்தை உருவாக்கும் சார்புகளுள் ஒன்று"[6] என்பர் சி.எச்.கெர்போர்ட். இவ் அகப்பொருள் இலக்கியம் ஒரு வரம்பிற்கு உட்பட்டது. இதனுள் சொல்லப்படும் பொருளும் அப்பொருளைச் சொல்லும் முறையும் வரம்பிற்குள் அமையும். இதனை, "அகத்திணையில் பொருளுக்கு மட்டும் வரம்பன்று; பொருளைச் சொல்லும் முறைக்கும் வரம்பு உண்டு என்பது கற்கத்தகும். வரம்பிட்ட பாற்பொருளும் வடித்திட்ட இலக்கிய முறையும் இரண்டறக் கலந்த ஒருமைப் பண்பே அகம் எனப்படும்"[7] என்பர். இவ்வரையறை அமைப்பு தனியறிஞன் படைப்பன்று. சான்றோர் பலரின் படைப்பாகும். இதனை, "அகநூற்கண் இன்ன காதற் பகுதி வரலாம், வரலாகாது என்று பொருள் வரம்பு செய்தலும் அப்பொருளை இன்னவாறு பாடுக என்று முன் வரம்பு செய்தலும் சான்றோர் பேரவையாலன்றி இயலா"[8] என்பர். இவ்வரையறை அக இலக்கியத்தின் சிறப்பாகத் திகழ்கிறது. இதனை, "இவ்வகையான காதலை இவ்வகையாகத்தான் பாடுவது என்ற கட்டுப்பாடே அகத்திணையின் சிறப்பு"[9] என்று கூறுவர். இவற்றால் அக இலக்கியப் பாடுநெறியில் முதல், கரு, உரி என்பனவற்றின் வரையறையானது அக இலக்கியத்தின் தனிப்பெரும் சிறப்பாக அமைவது விளங்கும்.

முதல், கரு, உரி எனும் வரையறை திணையிலக்கியத்துள் அகத்திணைக்கே உரியனவாகும். புறத்திணை அமைப்பில்

இவ்வரையறையைக் காண இயலாது. இதனை, "தொல்காப்பியர் அகத்திணை, புறத்திணை என்ற இரண்டின் இலக்கணங்களையும் வகுத்துரைத்தவர். வீரம், கொடை, புகழ் என்பனவெல்லாம் புறத்திணைப் பொருளன. இத்திணைக்கு முதற்பொருள், கருப்பொருள் அவர் கூறவில்லை. புறப்பாடல்களிலும் முதலும் கருவும் ஆகிய அமைப்பு முறை காணவில்லை (தொல்.948). இதனால் அகத்திணை உரிப்பொருளுக்கே, புணர்தல், பிரிதல், இருத்தல், இரங்கல், ஊடல் ஆகிய காதற் பொருளுக்கே முதலும் கருவும் வகுக்கப்பட்டன; பயன்பட்டன; பாடப்பட்டன என்பது தெளிவு"(10) என்பர் வ.சுப.மாணிக்கனார். "அகத்திணைக்குப் போலப் புறத்திணைக்கும் புலனெறி வழக்கம் இன்மையாயின் புறப்பாடல்களின் முதல், கரு, உரி வருணனைகளும், உள்ளுறையும் இறைச்சியும் பெயர் மறைத்துப் பாடுதலும் இல்லாது போயின"(11) என்பர் கு.வெ.பாலசுப்பிரமணியன். இவற்றால் முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் எனும் இவற்றை வரையறைப் படுத்தும் பாடுநெறி அகத்திணைக்கே உரியவென்பதும், சிறப்பாக, முல்லை, குறிஞ்சி, பாலை, மருதம், நெய்தல் எனும் ஐந்திணை அமைப்புக்கே உரியவென்பதும் புலப்படும்.

***மரபு மாற்றமும் திணை மயக்கமும்***

முதல், கரு, உரி எனும் புலனெறி வழக்கில் மரபு மாற்றம் ஏற்பட்டது. ஒரு திணைக்குரிய கூறுகள் பிற திணைப் பாடலுள் பாடப் பெற்றன. பொதுவாக மரபு மாற்றம் என்பது பாடுபொருள், பாடப்படும் முறை, இலக்கிய வகைமை என்றளவில் நிகழும். இதனை, "சமுதாயச்

சூழ்நிலைகளுக்கேற்ப இலக்கியப் படைப்பும் காலந்தோறும் மாறி அமையும் தன்மையுடையது. இத்தகைய மாற்றம் பாடுபொருளிலும் நிகழும்; பாடன் முறையிலும் நிகழும்; இலக்கிய வகைகளிலும் நிகழும்"(12) என்பர். திணை மயக்கம் என்பது பாடப்பெறும் முறையில் நிகழ்ந்த மரபு மாற்றமாகும். இம்மரபு மாற்றம் திணை மயக்கம் எனும் நெறியாகக் கொள்ளப் பெற்றது. இம்மரபு மாற்றத்திற்கும் வரையறை செய்யப் பெற்றது. இதனை, "மரபு பற்றிப் பயிலப்படும் முதலாவது பொருள் நிலமாகும். நிலத்திற்குக் கூட மரபு தேவையா என்று கேட்கத் தோன்றுகிறதல்லவா? ஆம். நிலத்தை நான்காகக் கற்பித்த தமிழ் இலக்கியம் இவை ஒவ்வொன்றிற்கும் வாழ்க்கை முறையையும் கற்பித்துள்ளது. இந்நிலங்களையும் அவற்றில் வாழ்கின்ற உயிர்களாகிய உயர்திணை, அஃறிணைப் பொருள்கள் முதலியவற்றையும் மரபு பற்றியே கூறிக் கொண்டு வந்துளது. ஆனால் இலக்கியத்தில் தலையாய கவிதை தோன்றும் பொழுது சில சந்தர்ப்பங்களில் இக்கட்டுப்பாட்டை மீறியும் வெளிவரலாயின. இதனை நன்கு தெரிந்த தமிழன் தன் மரபை மாற்றிக் கொள்ளத் துணிந்து அங்ஙனமே மாற்றியுங் கொண்டான். மரபு என்பதே சான்றோர் செய்த ஒன்று தானே, அவர்களாகப் பார்த்து அதை மாற்றினால் அதனால் நேரும் இழுக்கு ஒன்றும் இல்லையல்லவா? கவிதை ஆக்கும் கலைஞனைவிடச் சிறந்தோர் யார் இருக்க இயலும் மரபை ஆக்கவும் அழிக்கவும் எனவே நாளா வட்டத்தில் ஒரு திணைப் பொருளை மற்றொரு திணையில் கூறும் இயல்பு தோன்றியவுடன் 'திணை மயக்கம்' என்ற ஒன்றை வகுத்தான். இம்முறையில் இலக்கணமும் உரிப்பொருள் அல்லன மயங்கவும் பெறுமே என்று வரையறை செய்தது"(13) என்று விளக்குவர்

அ.ச.ஞானசம்பந்தன். திணை மயக்கம் பாடப்பெற்றதற்கான காரணமும் புலப்படுகின்றது. திணைமயக்கப் பாடல் இன்றி திணைப்பாடல் மட்டுமே பாடப்பட்டால் ஒரு நிலத்திற்கு ஓர் ஒழுக்கம் உரிய பிறவெல்லாம் நிகழா என்றாகிவிடும். எனவே திணை மயக்கம் பாடப்பெற்றன. இதனை, "குறிஞ்சித் திணைக்களத்தில் குறிஞ்சி ஒழுக்கத்தினையும் நெய்தல் திணைக்களத்தில் நெய்தல் ஒழுக்கத்தையுமே வரையறுத்துப் பாடிவரின் குறிஞ்சி நிலத்தில் பிரிவும், மருத்தில் கூடலும், நெய்தலில் இருத்தலும் பிறவுமாகிய அகப்பொருள் நிகழ்ச்சிகள் தோன்றாதபடி விலக்குதல் பொருட்டே திணைமயக்கம் புகுத்தப்பட்டது"(14) என்று விளக்குவர் ஔவை சு.துரைசாமிப்பிள்ளை. இவற்றால் முதல், கரு, உரி என்பன வரையறை செய்யப்பட்ட புலனெறி வழக்கில் மரபு மாற்றம் நிகழ்ந்தன என்பதும், இம்மாற்றம் 'திணை மயக்கம்' என்னும் புலனெறியாகக் கொள்ளப்பட்டன என்பதும் அம்மயக்கமும் வரையறை செய்யப்பெற்றன என்பதும் விளங்கும்.

***திணைக்கூறுகள் வரையறை***

தொல்காப்பியர் இலக்கிய வகைமையினை அகம், புறம் எனப் பாகுபடுத்துகின்றார். இவற்றுள் அக இலக்கியம் ஏழு திணையாகக் கூறப் பெறுகின்றது. அகத்திணையில், நடுவண் ஐந்திணையாக அமையும் முல்லை, குறிஞ்சி, பாலை, நெய்தல் எனும் திணைகள் முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் எனும் வரையறை உடையனவாகின்றன. கைக்கிளை, பெருந்திணைகள் முதல், கருவின் வரையறையின்றி பொதுநிலையில் பாடப்பெறுவனவாகும்.

முதற்பொருள் என்பது நிலம், பொழுது எனும் இரண்டின் கூறாக அமைகின்றது. கருப்பொருளாவன நிலம், பொழுதினைச் சார்ந்து அந்நிலத்துப் பொருளாக அமைகின்றன. இக்கருப்பொருள்கள் தெய்வம், உணா, மா, மரம், புள், பறை, செய்தி, யாழ் என்பனவாக வகைப்படுத்தப்படுகின்றன. உரிப்பொருள் என்பன பாடற் பொருளாக பாடலின் உயிர்ப் பொருளாக அமைகின்றன. முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் என்பன ஓர் வரையறையுடன் அமைகின்றன.[(15)]

***திணைப்பகுப்பும் சங்க அக நூல்களும்***

அகநானூறு, ஐங்குறுநூறு என்பனவற்றில் திணைப் பகுப்பு ஓர் ஒழுங்கு கருதிய நிலையில் காணப்படுகிறது. இந்நூல்களுடன் ஒப்பிடும் வகையில் கலித்தொகையின் திணைப்பகுப்பும் அமைகின்றது. இவற்றுள் குறுந்தொகை மற்றும் நற்றிணையின் திணைப்பகுப்புகள் வேறுபட்டு அமைகின்றன.

அகநானூறு, ஐங்குறுநூறு, கலித்தொகை என்பனவற்றின் திணைப்பகுப்புகள் பழமையானவை. குறுந்தொகை, நற்றிணை என்பனவற்றின் திணைப்பகுப்புகள் பிற்காலத்தவை. இதனை, “குறுந்தொகை, நற்றிணை என்னும் நூல்களைப் பொறுத்தளவில் திணை பற்றிய குறிப்புகள் எதுவும் இல்லாமலேயே அவற்றின் மூலச் சுவடிகள் உள்ளன. இந்நூல்களைத் தற்காலத்தில் பதிப்பித்த பதிப்பாசிரியப் பெருமக்களே இந்நூல்களிலுள்ள பாடல்களுக்குத் திணை பற்றிய குறிப்புகளைக் கொடுத்துப் பதிப்பித்துள்ளனர்”[(16)]என்பர் அ.பாண்டுரங்கன்.

“நற்றிணையில் காணப்படும் திணைக்குறிப்பு அந்நூலை முதன்முதலாகப் பதிப்பித்த பின்னத்தூர் நாராயணசாமி ஐயரின் புதுச்சேர்க்கை ஆகும். எனவே அதனைப் புலப்படுத்தும் வண்ணம் பகர வளைவுக்குள் அமைத்துள்ளார். குறுந்தொகையைக் கூற்று வகையில் உ.வே.சாமிநாதையர் பதிப்பித்திருப்பதும் ஈண்டு நினைவு கூரத்தக்கது. எனவே, ஐங்குறுநூறு, கலித்தொகை, அகநானூறு ஆகியவற்றில் காணப்படும் திணைக்குறிப்பு பழமையானது என்பதும் நற்றிணை குறுந்தொகை ஆகிய இரண்டின் திணைக்குறிப்பு பதிப்பாசிரியர்களால் அண்மைக்காலத்தில் (20ம் நூற்றாண்டு) மேற்கொள்ளப்பட்டது என்பதும் தெளிவு”(17) என்பர் த.வசந்தாள். பிற்காலத்தவர்களால் திணைக்குறிப்புகள் வகுக்கப்பெற்ற போதும் அவற்றுள் வேறுபாடுகளும் காணப்படுகின்றன. குறுந்தொகையில் காணப்படும் திணைக்குறிப்பு வேறுபாடுகளைக் குறிக்குமிடத்து, “குறுந்தொகைக்குத் திணை வகுத்ததில் முன்னோடியான தி.சௌ.அரங்கனாரைப் பின்பற்றித் திணை வகுக்கும் மர்ரே எஸ். இராசம் 9 இடங்களிலும், சாமி சிதம்பரனார் 5 இடங்களிலும் திணை வேறுபடுகின்றனர். மர்ரே எஸ்.இராசம் அவர்களைப் பின்பற்றும் புலியூர்க்கேசிகன் ஓர் இடத்திலும், மு.சண்முகம் பிள்ளை 4 இடங்களிலும் வேறுபடுகின்றனர்”(18) என்பர் ஆ.மணி. இவ்வாறே நற்றிணையின் திணைக்குறிப்பும் பல்வேறு பதிப்புக்களால் வேறுபட்டு அமைவதைக் காணமுடிகின்றது. இவற்றால் அகநானூறு, ஐங்குறுநூறு, கலித்தொகை எனும் சங்க நூல்களின் திணைப்பகுப்பு பழமையானது என்பதும், நற்றிணை, குறுந்தொகை எனும் சங்கத் தொகைகளின் திணைப்பகுப்பு பிற்காலத்தது என்பதும் பிற்காலப் பதிப்புகளில் நற்றிணை மற்றும்

குறுந்தொகையின் திணைக்குறிப்புக்கள் வேறுபட்டு அமைகின்றன என்பதும் விளங்கும்.

### *சங்க அக இலக்கியத் திணைப்பகுப்பு நெறி*

ஐந்திணைப் பாடலினுள் வரையறையுடைய முதல், கரு, உரி எனும் கூறுகள் காணப்படும். இவை முதல், கருவின்றி அமைந்த போதும் உரிப்பொருள் இன்றி அமைவதில்லை. சங்க அக இலக்கியத் திணைப்பகுப்பானது இம் முப்பொருளையும் அடிப்படையாகக் கொண்டமைகிறது.

பாடலுள் இடம்பெறும் இக்கூறுகள் ஒரே திணைக்குரியனவாக அமைந்தவிடத்து அப்பாடலின் திணைப் பகுப்பு எளிதாகிறது. திணைமயக்கப் பாடல்களில் உரிப்பொருள் ஒரு திணையாகவும், முதல் கருப்பொருட்கள் வேறொரு திணையாகவும் இடம்பெறும். திணைமயக்கப் பாடலின் திணைப்பகுப்பில் மேற்கொள்ள வேண்டிய நெறியினைத் தொல்காப்பியம்,

> ***"முதல் கரு உரிப்பொருள் என்ற மூன்றே***
> ***நுவலுங்காலை முறை சிறந்தனவே***
> ***பாடலுள் பயின்றவை நாடும் காலை"*** (தொல்.அகத்.3)

என்றுரைக்கின்றது. முதலில் முதற்பொருளைக் கொண்டும், பிறகு கருப்பொருளைக் கொண்டும் இறுதியில் உரிப்பொருளைக் கொண்டும் திணைப்பகுப்பு செய்ய வேண்டும் என்பர் இளம்பூரணர். இதனை, "யாதானும் ஒரு செய்யுட்கண் முதற்பொருளும் கருப்பொருளும்

உரிப்பொருளும் வரின் முதற்பொருளான் திணையாகும் என்பதூஉம், முதற்பொருள் ஒழிய ஏனைய இரண்டும் வரின் கருப்பொருளான் திணையாகும் எனபதூஉம். உரிப்பொருள் தானே வரின் அதனான் திணையாகும் என்பதூஉம் ஆம்"[19] என்னும் உரைப்பகுதி உணர்த்தும். இத்திணைப்பகுப்பு நெறியை, "ஒரு பாட்டில் குறிஞ்சி நிலமும் அதற்குரிய காலமும் கருப்பொருளும் உரிப்பொருளும் வரின் அதனைக் குறிஞ்சிப்பாட்டு என்பது பொதுவிலக்கணம். ஒரு பாட்டில் குறிஞ்சிக்குரிய முதற்பொருளும், முல்லைக்குரிய கருப்பொருளும், மருதத்திற்குரிய உரிப்பொருளும் காணப்படின் முதற்பொருளைக் கொண்டு அதனைக் குறிஞ்சிப் பாட்டு என்பர். ஒரு பாட்டில் முதற்பொருட் கூறாகிய நிலமோ காலமோ குறிக்கப்படாமல் கருப்பொருளும், உரிப்பொருளும் குறிக்கப்படின் கருப்பொருள் எத்திணைக்குரியது எனக்கண்டு மருதத்துக்குரியதாயின் மருதம் என்றும் கொள்வர். முதலும் கருவும் இன்றி உரிப்பொருள் மாத்திரம் காணப்படின் அது கொண்டு பெயர் கூறுவர்"[20] என்பர் ஔவை சு. துரைசாமிப்பிள்ளை. இத்திணைப்பகுப்பு நெறியினையே சங்க அக இலக்கியப் பகுப்பில் காணமுடிகின்றது. இதனை, "பாடல்கள் திணை மயக்கமாக அமையும் போது உரையாசிரியர்கள் பெரும்பாலும் அப்பாடல்களுக்கு முதற்பொருள், கருப்பொருள் அடிப்படைகளில் தான் திணை வகுத்துச் சென்றனர்"[21] என்பர் அ.பாண்டுரங்கன். "சங்கப் பாடல்களுக்குப் பெரிதும் முதல் கருப்பொருட்களை அடியொற்றியே திணைக்குறிப்புத் தரப்பெற்றுள்ளது. மருதப் புலத்தை வடிக்கும் பாடல்கள் எத்திணை உணர்வினை வெளியிட்டாலும் மருதப் பாடல்களாகவே கொள்ளப்பெற்றன"[22] என்பர்

இலா.குளோறியா. இதனால் சங்க அகஇலக்கியத்தின் திணைப்பகுப்பில், முதலில் முதற்பொருளுக்கும் அடுத்து கருப்பொருளுக்கும் இறுதியில் உரிப்பொருளுக்கும் முதன்மை வழங்கப்பட்டுள்ளமை விளங்கும்.

***பாடலின் தலைப்பாகத் திணைக்குறிப்புக்கள்***

ஐங்குறுநூறு, திணைக்கு, நூறு பாடல்களாகப் பாடப்பெற்ற போதும் ஒவ்வொரு பத்துப் பாடல்களுக்கும் தனித்தனியே தலைப்புக்கள் இருப்பதைக் காண முடிகின்றது. குறிப்பாக செலவுப்பத்து, இளவேனில் பத்து என்றெல்லாம் குறிக்கப்படுகின்றன. இவை அப்பாடல்களுக்கான தலைப்பாக அமைவது உணரப்படும். குறுந்தொகையின் பாடல்களுக்கு உ.வே.சாமிநாதய்யர் கூற்று முறையாலும், இரா.இராகவையங்கார் புலவர் பெயராலும், சாமி சிதம்பரனார் நறுந்தொடர்களாலும் தலைப்பிட்டுள்ளனர். இவற்றை நோக்க, பாடல்களின் மேல் குறிக்கப்படும் முல்லை, குறிஞ்சி எனும் குறிப்புக்கள் திணைப்பகுப்பு என்பதை விட, அப்பாடலுக்கான தலைப்பாக அமைவது உணரப்படுகிறது. பாடல்களுக்குத் திணைப் பெயர்கள் தலைப்பாகக் கொடுக்கப்பட்டுள்ளன என்பதை உ.வே.சாமிநாதய்யர் குறிப்பர். இதனை, "ஒவ்வொரு செய்யுளும் இன்னாருடைய கூற்று என்பதைத் தலைப்பில் அமைத்திருக்கின்றேன். திணைப் பெயரைத் தலைப்பிடுதல் அகநானூற்றினுள் கண்டதாயினும் பொருளில் கருத்துச் செல்வதற்கு இம்முறை தக்கதென்று தோற்றியது"(23) எனும் ஆராய்ச்சிக் குறிப்பு உணர்த்தும். இவற்றால் திணைக்குறிப்புக்கள் திணைப்பகுப்பாக அன்றி பாடலுக்கான தலைப்பாக அமைந்திருப்பதைக் காணமுடிகின்றது. பாடல்களுக்குக் குறிக்கப்பெறும் முல்லை முதலிய

குறியீடுகள் பாடலை அடையாளப்படுத்தும் தலைப்பு என்ற காரணத்தினால் திணைமயங்காப் பாடலும், திணைமயக்கப் பாடலும் தனிக் குறியீடுகளைப் பெறவில்லை என்பதும் விளங்கும்.

***திணைப் பகுப்பாக அமையும் குறியீடுகள்***

சங்க அகஇலக்கியத் திணைப்பகுப்பு முதல், கருவிற்கு முதன்மை தந்துள்ளது. எனவே உரியுடன் முதல், கரு மயங்கிய திணை மயக்கப் பாடல்கள் முதல் கருவிற்குரிய திணையாகக் குறிக்கப்பட்டுள்ளன. ஒரு திணைப் பகுப்பில் அத்திணையின் முதல், கரு பிற திணையின் உரியுடன் மயங்கிய திணை மயக்கங்கள் முல்லை, குறிஞ்சி, பாலை, மருதம், நெய்தல் என்றே கொள்ளப்பெற்றன. முல்லையின் முதல் கருப்பொருள்கள் மருதத்திணையின் உரியுடன் மயங்கிய போதும் முல்லை என்றே குறிக்கப்படுகின்றன.

பிற திணையின் உரிப்பொருள் முல்லையின் முதல், கருவுடன் காணப்படும் பாடலை முல்லை எனக் கொள்ளப்பட்ட திணைப்பகுப்பால் பிற்காலத்தவர் முல்லையுள் உரிப்பொருள் மயங்கியதாகக் கொண்டனர். உரிப்பொருள் திணைமயக்கமாக மயங்காது. எனவே உரியுடன் முதலும் கருவும் மயங்கியதாகக் கொள்ள வேண்டும். அன்றி திணைப்பகுப்பால் உரிப்பொருள் மயங்கியது எனல் பொருந்தாது. எனவே உரிப்பொருளுடன் முதல், கரு மயங்கிய பாடல்களைக் குறிஞ்சியுள் முல்லை, பாலையுள் முல்லை, மருதத்துள் முல்லை, நெய்தலுள்முல்லை என அடையாளப்படுத்தி ஆராய்தல் நலமாகும். முல்லைத் திணைப்பகுப்பில் இருத்தல் எனும் உரிப்பொருளுடன் பிறதிணையின் முதல்,

கருப்பொருள்கள் மயங்குமேயானால் இத்திணை மயக்கத்தை முல்லையுள் குறிஞ்சி, முல்லையுள் பாலை, முல்லையுள் மருதம், முல்லையுள் நெய்தல் எனக்குறிப்பிடுதல் வேண்டும்.

'முல்லையுட் பாலை' என்றால் முல்லையின் உரியுடன் பாலையின் முதல், கரு மயங்கிய திணை மயக்கம் என்றாகும். பாலையுள் முல்லை என்றால் பாலையின் உரிப்பொருளுடன் முல்லையின் முதல், கரு மயங்கிய திணை மயக்கம் என்றாகும். இவ்வாறு குறியிட்டுப் பகுத்து உரைப்பதன் மூலம் ஒரு திணையின் உரிப்பொருள் எந்தத் திணைப்பகுப்பில் காணப்படுகின்றது என்பதும் ஒரு திணையின் உரிப்பொருளுடன் எந்தத் திணையின் முதல், கருப்பொருள்கள் மயங்கியுள்ளன என்பதும் புலப்படும்.

திணைமயங்காப் பாடல்கள் உரி மட்டும், உரியுடன் கருவும், உரியுடன் முதல், கருவும் என மூன்று வகைப்பாட்டில் அமையும். இத்திணைமயங்காப் பாடல்கள் ஒரு திணைக் கூறுகளை உடையன எனவே முல்லை, குறிஞ்சி, பாலை, மருதம், நெய்தல் எனக் குறியிட்டு வழங்குதல் சிறப்பாகும்.

கைக்கிளை, பெருந்திணை எனும் திணைகள் எத்திணைக்குரிய முதல், கருவுடன் காணப்பட்ட போதும், இவற்றை கைக்கிளை, பெருந்திணை என்றே வழங்க வேண்டும். இவற்றுக்கு முதல், கரு பொது என்பதால் கைக்கிளை, பெருந்திணையுள் முதல், கருப்பொருள்கள் மயங்கியதாகக் கொள்ளவியலாது.

## உரிப்பொருள் விளக்கமும் இயைபும்

முதல், கரு, உரி என வழங்கப்படுதற்கும் காரணம் உண்டு. இதனை, "புறத்தே உள்ள பொருள்கள் வாழ்க்கையை அவ்வளவாக மாற்றியமைப்பதில்லை என்பதையும் அகத்து உணர்ச்சிகளே பெரிதும் மாற்றியமைப்பன என்பதையும் தமிழ் முன்னோர் தெளிந்திருந்தனர். அதனால் நிலம், பொழுது என்பவற்றை முதற்பொருள் என்றும், தெய்வம், உணவு, விலங்கு, பறவை, மரம் முதலியவற்றைக் கருப்பொருள் என்றும் கூறி, புணர்தல், பிரிதல் முதலிய உணர்ச்சிக்கு உரியவற்றையே உரிப்பொருள் (இலக்கியத்துக்கு உரிய பொருள்) என்று சிறப்பித்தனர்"(24) என்பர் மு.வரதராசனர். இதனால் உரிப்பொருள் என்பது இலக்கியத்துக்குரிய பாடுபொருளாவது புலப்படும். தொல்காப்பியர் உரிப்பொருளை விளக்குமிடத்து,

> **"புணர்தல் பிரிதல் இருத்தல் இரங்கல்**
> **ஊடல் அவற்றின் நிமித்தம் என்றிவை**
> **தேருங் காலைத் திணைக்குரிப் பொருளே"** (தொல்.அகத்.16)

என்றுரைக்கின்றார். 'தேருங்காலைத் திணைக்குரிப் பொருளே' என்பதால் இவ்வுரிப்பொருள்கள் நிலம், பொழுதிற்கேற்ப கொள்ளப்பெறும் என்பது விளங்கும். இதனை, பொதுவாய் வருவனவற்றைப் 'பொருள் வகை' என்பதைக் குறிக்குமிடத்து,

> **"இதுவாகித் திணைக்கு உரிப்பொருள் எனாது**
> **பொதுவாய் நிற்றல் பொருள் வகை என்ப"** (தொல்.செய்யுள்.206:3-4)

என்று குறிப்பதன் மூலமும் விளங்கமுடியும். இதனால் உரிப்பொருள்

என்பவை இதுவாகித் திணைக்கு உரிய பொருளாகக் கொள்ளப்படும் என்பது விளங்கும். இவற்றின் அடிப்படையில் மாயோன் மேய காடுறை உலகம், கார், மாலை எனும் முதற்பொருளுக்கும் இவற்றின் கருப்பொருளுக்கும் இருத்தல் எனும் உரிப்பொருளும்; சேயோன் மேய மைவரை உலகம், கூதிர், யாமம், பனிஎதிர் பருவம், இவற்றின் கருப்பொருள் என்பனவற்றிற்குப் புணர்தலும்; வேந்தன் மேய தீம்புனல் உலகம், வைகறை, விடியல் (அறுவகைப் பெரும்பொழுது) எனும் இவற்றிற்கு ஊடலும்; வருணன் மேய பெருமணல் உலகம், எற்பாடு (அறுவகைப் பெரும்பொழுது) என்பனவற்றிற்கு இரங்கலும்; நடுவுநிலைத்திணை, நண்பகல், வேனில், பின்பனி எனும் இவற்றிற்குப் பிரிதலும் உரியவாகக் கொள்ளப்பெறும் என்பதை உணர முடிகின்றது. உரிப்பொருளுக்கேற்ப முதல் கருப்பொருள்கள் வரையறை செய்யப்பெறும். இவ்வரையறை அமைப்பை, "பிரிவு மாலைக்கு உரித்தாமாறு மேற்சொல்லப்பட்டது. ஏனைய மொழிந்த பொருளோ டொன்றவைத்தல் (மரபு 112) என்னும். தந்திர உத்தியான் புணர்தல் என்பது குறிஞ்சிக்கும், இருத்தல் என்பது முல்லைக்கும், இரங்கல் என்பது நெய்தற்கும், ஊடல் என்பது மருதத்திற்கும் பெரும்பான்மையும் உரியவாகவும்"[25] என்று குறிப்பர். "தேருங்காலை என்றதனாற் குறிஞ்சிக்குப் புணர்ச்சியும் பாலைக்குப் பிரிவும், முல்லைக்கு இருத்தலும், நெய்தற்கு இரங்கலும், மருதத்திற்கு ஊடலும், அவ்வந் நிமித்தங்களும் உரித்தென்று ஆராய்ந்துணர்க"[26] என்பர் நச்சினார்க்கினியர். "புணர்தலுக்குக் குறிஞ்சி நிலத்தையும் பிரிவுக்குப் பாலையையும் இருத்தலுக்கு முல்லையையும் ஊடலுக்கு மருதத்தையும் இரங்கலுக்கு

நெய்தலையும் திணைக்களமாகப் பகுத்துப் புலனெறி வழக்கம் செய்வது மரபாயிற்று"[27] என்பர் ஒளவை சு.துரைசாமிப்பிள்ளை. "காதல் உணர்வின் பல நிலைகளைக் குறிப்பிட்ட நிலப்பகுதிகளுக்கும் பருவங்களுக்கும் நேரங்களுக்கும் வகுத்தனர் இம்மரபும் பண்டைத் தமிழிலக்கியத்தில் காணப்படுகிறது"[28] என்பர் மு.வரதராசனார். "ஒத்த காதலொழுக்கத்தின் ஐந்து பகுதியும் முறையே ஐந்து நிலத்தினுஞ் சிறப்பனவென்று கோடல் காரணமாகவே நிலத்திற்கும் காதலொழுக்கத்திற்கும் தொடர்பு ஏற்பட்டது"[29] என்பர் கா.சுப்பிரமணிய பிள்ளை. இவற்றால் புணர்தல் முதலிய உரிப்பொருட்கள் குறிஞ்சி முதலிய நிலங்களுக்கும், கூதிர் முதலிய பருவங்களுக்கும் அவற்றின் கருப்பொருள்களுக்கும் தனியுரிமை செய்யப்பெற்று பாகுபடுத்தப் பட்டுள்ளதை அறியமுடியும்.

## இருத்தல் - விளக்கமும் இயைபும்

'இருத்தல்' எனும் உரிப்பொருள் முல்லைத் திணைக்கு உரியதாகக் கொள்ளப்படுகிறது. இருத்தல் என்பதை விளக்குமிடத்து, "இருத்தலாவது தலைமகன் வருந்துணையும் ஆற்றியிருத்தல்"[30] என்பர் இளம்பூரணர். "முல்லைத் திணையின் உரிப்பொருள் இருத்தல்; அதாவது தலைவனது பிரிவுக் காலத்தில் ஆற்றியிருப்பது; தலைவன் குறித்துச் சென்ற பருவ வரவுகண்டு தலைவி வருந்துதல்; வருந்துபவளைத் தோழி ஆற்றுவித்தல்; வினைமுடிவில் தலைவன் தேர்ப்பாகனுக்கு உரைத்தல் போன்ற நிகழ்ச்சிகள்"[31] என்பர் ந.சுப்புரெட்டியார். இவற்றால் இருத்தல்

என்பதற்குத் தலைவனின் வருகைக்காகத் தலைவி ஆற்றியிருப்பது என்ற பொருள் பெறப்படுகின்றது.

தலைவன் வேனிற் காலத்தில் பிரிந்து செல்வான். கார்காலத்தின் தொடக்கத்தே வருவான். எனவே கார்கால வரவில், தலைவி ஆற்றியிருக்கும் நிலை இருத்தல் எனப்படுகிறது. தலைவன் பிரிந்து சென்ற அண்மைக்காலத்தில் தலைவி தலைவன் சென்ற வழியின் கொடுமையை நினைந்து வருந்துதல், காலம் நீட்டிப்பாரோ என எண்ணுதல், வினை முற்றுப் பெறாதவாறு மா, புள் முதலியவற்றின் செயல்பாடுகள் அமைந்துவிடுமோ என ஏங்குதல், அத்தலைவிக்குத் தோழி கூறுதல் என்பன நிகழும். எனினும் பருவம் வரும்வரை பிரிவைப் பொறுத்திருத்தல் தலைவிக்கான கடமையாகும். எனவே, இவை பிரிவு தொடர்பான பாலையாகக் கொள்ளப்பெறுமேயன்றி முல்லையாகக் கருதப்படமாட்டாது. இதனை, "பருவம் வருவதற்கு முன்னர்க் கூறுவன முல்லை சான்ற கற்பின்மையிற் பாலையாம்"(32) என்பர் நச்சினார்க்கினியர். எனவே, தலைவனைப் பிரிந்த தலைவி பருவ வரவில் கூறுதலே முல்லை எனப்படும் இருத்தலாகும் என்பது புலப்படுகின்றது.

இருத்தல் என்பதற்குத் தலைவனும் தலைவியும் இல்லத்திருத்தல் என்ற விளக்கமும் காணப்படுகிறது. இதனை, "நோக்குங்கால் இல்லிருத்தல் முல்லை"(33) என்கிறது பழம்பாடல். இதனை, "முல்லை ஒழுக்கமான இருத்தல் கார்காலத்தில் தலைவனும் தலைவியும் இல்லத்தில் இருந்து ஒருவர் மற்றொருவர் உணர்வுகளை மதித்து மகிழ்ந்து வாழும் அகவொழுக்கமாகும்"(34) என்பர் அ.சீநீவாசன். "இருத்தல் என்றால்

தலைவன் பிரிந்த நிலையில் தலைவி அவன் வருந்துணையும் ஆற்றியிருத்தல் என்று கொள்வதினும் தலைவனுடன் தலைவி ஒத்திருந்து இல்லறம் நடத்தல் என்ற பொருள் சிறப்புடையது"(35) என்பர் மு.தங்கராசு. இவற்றால் இருத்தல் என்பதற்கு இருவிதமான பொருள்கள் கூறப்படுதலைக் காணமுடியும். அவையாவன 1) பருவ வரவில் தலைவன் வருந்துணையும் தலைவி ஆற்றியிருத்தல் 2) தலைவனும் தலைவியும் இல்லத்து இருந்து இல்லறம் நடத்தல் என்பனவாகும்.

சங்க இலக்கியத்துள் காணப்படும் முல்லைப் பாக்களை நோக்கும் போது அவை பருவ வரவில் நிகழ்வதாகவும், தலைவன் வந்த நிலையில் நிகழ்வதாகவும், இல்லற நிகழ்வைக் கூறுவதாகவும் பிற திணைக்குரியதை உரைப்பனவாகவும் அமைகின்றன. இதனை, "சங்க இலக்கியத்தில் பொருந்திய முல்லைப் பாடல்கள் பெரிதும் நான்கு நிலைகளில் அமைகின்றன. 1) பருவ வரவில் தலைவன் வரவைச் சுட்டி அமைவன, 2) வந்த தலைவனைச் சுட்டி அமைவன, 3) தலைவன் தலைவி நிகழ்த்தும் இல்லறச் சிறப்புரைப்பன, 4) பிற திணைப் பொருளைப் பேசும் திணைமயக்க நிலையின"(36) என்பர் இலா.குளோறியா. இவற்றால் பருவ வரவில் கூறலும், வந்த நிலையில் அமைதலும், தலைவன் தலைவியரின் இல்லறச் சிறப்புக் கூறலும் முல்லையின் பாடுபொருளாகும் என்பது உணரப்படுகின்றது.

இல்லறத்தில் தலைவனும் தலைவியும் இனிதிருப்பது முல்லையெனக் கொள்ளப்பெறுவதால் திருமண நிகழ்வில் தலைவன், தலைவி, தோழி என்போர் நிகழ்த்துவனவாக அமையும் கூற்றுக்களும்

இல்லற நிகழ்வின் அடிப்படையில் முல்லை என்றே கொள்ளப்பெறும். திருமண நிகழ்விற்கு முந்தைய நிகழ்வுகள் குறிஞ்சியாக அமையும்.

தலைவனும் தலைவியும் இல்லத்துள் இருந்த போதும் தலைவி, தலைவனின் பரத்தமை ஒழுக்கத்தால் ஊடல் கொண்டிருப்பின், அந்நிகழ்வு மருதமாகக் கருதப்படும். இங்கு உடனிருந்த போதும், இனிதிருக்காது; ஊடல் கொண்டிருப்பது காணப்பெறுகிறது.

இருத்தல் எனும் உரிப்பொருளுக்குக் காடுறை உலகம், கார், மாலை என்பன இயைபுபடுத்தப்படுகின்றன. முல்லைத்திணைக்குரிய கார்காலம் பாலை நிலமாய்க் காணப்படும் குறிஞ்சி, முல்லை நிலங்களின் திரிபுகளைக் குறிஞ்சி மற்றும் முல்லை நிலங்களாக்கும்; முல்லை நிலத்து மலரான முல்லை மலர்வதற்கும் அந்நிலத்து ஆனிரை வருதற்கும் கார்காலத்து மாலைக்காலம் துணையாகிறது. கார்கால வரவும், ஆனிரைகள் மாலையில் மன்றிற்கு வருதலும்; முல்லை மலர்தலும் பருவ வரவில் ஆற்றியிருக்கும் தலைவியைத் துயரப்படுத்துதற்குரிய ஏதுக்களாகின்றன. ஆற்றியிருக்கும் தலைவியின் துயர மிகுதியைப் புலப்படுத்தற்கு முல்லை நிலம், கார்காலம், மாலைப் பொழுது என்பன துணையாகின்றன. இதனை, "வேனிற் காலத்து வெப்பம் உழந்து மானும் புதலும் கொடியும் கவினழிந்து கிடந்தன புயல்கள் முழங்கக் கவின்பெறும். ஆதலின் அதற்கு அது சிறந்த தாம் மாலைப் பொழுது இந்நிலத்திற்கு இன்றியமையாத முல்லை மலரும் காலமாதலானும் அந்நிலத்துக் கருப்பொருளாகிய ஆனிரை வருங்காலமாதலானும் ஆண்டுத் தனியிருப்பார்க்கு இவை கண்டுழி வருத்தம் மிகுதலின் அதுவும் சிறந்ததாயிற்று"(37) என்பர் இளம்பூரணர்.

இக்கார்காலத்து மாலைப் பொழுதின் இயல்பு தலைவனுக்கும் தலைவிக்கும் காமக்குறிப்பைச் சிறக்கச் செய்யும் என்பர் நச்சினார்க்கினியர். இதனை, “வருகின்ற தலைவற்கும் இருந்த தலைவிக்கும் காமக்குறிப்புச் சிறத்தலின் அக்காலத்து மாலைப்பொழுதும் E ¬ j R ô « t ß ”(38) எனும் உரைப்பகுதி உணர்த்தும். இவற்றால் ஆற்றியிருத்தல் எனும் உரிப்பொருளை முல்லை நிலமும் கார்காலத்து மாலைப் பொழுதும் சிறப்பிக்கின்ற காரணமாக அவ்வுரிப் பொருளுடன் இயைபுபடுத்தப்பட்டன என்பதை அறியமுடியும்.

**புணர்தல் - விளக்கமும் இயைபும்**

தலைவன் தலைவியரிடையே நிகழும் புணர்ச்சியொழுக்கம் குறிஞ்சித் திணைக்கு உரித்தாகக் கொள்ளப்படுகிறது. புணர்தல் களவு, கற்பு எனும் இரண்டிடத்தும் நிகழ்வன. களவுக்காலப் புணர்தல் குறிஞ்சியாகவும் கற்புக்காலப் புணர்தல் முல்லையாகவும் கொள்ளப்பெறும். புணர்தல் எனும் உரிப்பொருளை விளக்குமிடத்து, “புணர்தலே கொல்லோ குறிஞ்சி எனின் புணர்தலே அன்று பிரிவச்சமும் வன்புறையும் தலைமகன் நீங்கினவும் பாங்கற்கு உரைத்தனவும் பாங்கன் கழறினவும். தலைமகன் எதிர்மறுத்தனவும் பாங்கன் எதிர்த்தனவும், தலைமகளைக் கண்டனவும் ஆற்றானாயினவும், தலைமகன் சென்றனவும், தலைமகன் தலைப் பெய்தனவும் இத்தொடக்கத்தன வெல்லாம்; தலைமகட்கும் தோழிக்கும் இவ்வகையானே நோக்கி விகற்பிக்க; இறப்பவும் பலவாம். அவையெல்லாம் புணர்தலும் புணர்தல் நிமித்தமுமாய் அடங்கும்”(39) என்பர் நக்கீரர். “இத்திணையின் உரிப்பொருள் புணர்தல் என்பதாகும்.

தலைவன், தலைவி இருவரின் காதல் நிகழ்வுகளைக் கொண்டு மலைப் பின்னணியில் பாடப்பெறும் பாடல்கள் இத்திணையைச் சார்ந்தவை. இயற்கைப் புணர்ச்சி, பூத்தருப்புணர்ச்சி, புனல்தரு புணர்ச்சி, இடந்தலைப்பாடு, பாங்கற் கூட்டம், பாங்கியர் கூட்டம், குறியிடங்கள், வரைவுகடாதல், அறத்தொடு நிற்றல், இற்செறிப்பு, நொதுமலர் வரைவு, குறைகூறல், இயற்பழித்தல், இயற்படமொழிதல் ஆகிய நிகழ்வுகள் களவின் நிகழ்வுகளாகக் கொள்ளப்பெறும். இவைகளைப் பாடுபொருளாகக் கொண்டுள்ள பாடல்கள் குறிஞ்சித் திணைப்பாடல்கள் என கொள்ளப் படும்"[40]என்பர் மா.சோமசுந்தரம். இவற்றால் தலைவன் தலைவியரிடையே ஆன களவு வாழ்வே புணர்தலும் புணர்தல் நிமித்தமுமாய்ப் பாடப்பெறும் என்பதை உணரமுடியும்.

குறிஞ்சியின் உரிப்பொருளான களவுக்காலப் புணர்தல் நிகழ்வதற்குத் தனியிடம் வேண்டும். அவற்றைத் தருவனவாகவே குறிஞ்சியின் முதலும் கருவும் அமைகின்றன. இதனை, "குறிஞ்சிக்குப் பெரும்பான்மையும் களவிற் புணர்ச்சி பொருளாதலின் அப்புணர்ச்சிக்குத் தனியிடம் வேண்டுமன்றே, அது கூதிர்க்காலத்துப் பகலும் இரவும் நுண்துளி சிதறி இயங்குவார் இலராம் ஆகலின் ஆண்டுத் தனிப்படல் எளிதாகலின் அதற்கு அது சிறந்தது. நடுநாள் யாமமும் அவ்வாறாகலின் அதுவும் சிறந்தது"[41] என்பர் இளம்பூரணர். இக்கருத்தை, "குறிஞ்சி நிலம் இயற்கை யழகு வாய்ந்தது; தனிமை நிரம்பியது. ஆதலின் களவு ஒழுக்கத்திற்கு ஏற்ற இடமான இதனைக் கொண்டு கூடலும் கூடல் நிமித்தமும் இந்நிலத்துக்குரியவை எனப் புலவர் புலனெறி வழக்கம்

செய்தனர்"[42] என்பர் மா.இராசமாணிக்கனார். "குறிஞ்சியாவது புணரற் பொருட்டு அஃது இயற்கைப் புணர்ச்சி முதலியனவாம். இயற்கைப் புணர்ச்சி நிகழ்ந்தபின் களவு நீட்டிப்பக் கருதுந் தலைவற்குக் களவினைச் சிறப்பிக்குங்கால் தலைவி அரியளாக வேண்டுமாகவே அவ்வருமையை ஆக்குவது ஐப்பசியுங் கார்த்திகையுமாகிய கூதிரும் அதன் இடையாமமும்..."[43] என்பர் நச்சினார்க்கினியர். இவற்றால் புணர்தல் என்பது களவுப் புணர்ச்சியைக் குறிக்கும் என்பதும் திருமணம் வரையிலான நிகழ்வுகள் அதன் நிமித்தமாக அமையும் என்பதும் புணர்ச்சிக்குரிய தனிமையிடமாகவும் புணர்ச்சியின் அருமைப்பாட்டை உணர்த்தும் சூழலாகவும் மலையும் மலை சார்ந்த நிலமும், கூதிர், யாமம் என்பனவும் இயைபுபடக் கொள்ளப்பட்டன என்பதும் விளங்கும்.

**பிரிதல் - விளக்கமும் இயைபும்**

பிரிதல் எனும் உரிப்பொருள் பாலைத்திணைக்குரியதாகும். அன்பின் மிகுதியைப் புலப்படுத்துதற்குப் பாலைத்திணையே பெருவாய்ப்பாக அமைகிறது. எனவே சங்கப் புலவர்கள் பாலைத்திணைப் பாடலை மிகுதியும் பாடினர். இதனை, "பாலைக் கொடுநெறி அன்பின் நெறியைப் பெருக்குதலின் பெருகிய அன்பினைப் புலப்படுத்தலின் சங்கச் சான்றோர் பாலைத்திணையைப் பாடல்சால் திணையாக மதித்துப் பாடினர்"[44] என்பர் வ.சுப.மாணிக்கனார். இப்பாலைக்குரிய உரிப்பொருளான பிரிவு, களவு மற்றும் கற்பு வாழ்வில் இடம்பெறுகின்றது. களவில் தலைவியை உடன்கொண்டு செல்லும் உடன்போக்கும், கற்பில் பொருள்வயிற் பிரிதல் முதலிய பிரிவும் (பரத்தையர் பிரிவு நீங்கலாக)

கொள்ளப்படும். உடன்போக்கு, திருமண நிகழ்விற்கு முன் நிகழ்வதாலும் தலைவன், தலைவி உடன் சென்ற போதும், அச்சவுணர்வின் காரணமாகச் செல்வதாலும் உடன்போக்கில் செல்லும் தலைவன் தலைவியைப் பாதுகாப்புடன் இல்லத்திற்குக் கொண்டு செல்ல வேண்டும் என்பதைப் பெரிதும் எண்ணுவதாலும் உடன்போக்கு பாலைக்குரிய பாடுபொருளாகக் கொள்ளப் பெறுகிறது.

தலைவன், தலைவியரின் பிரிவே பாலை எனப்படும். உடன்போக்கில் தலைவன், தலைவியர் பிரியாது செல்கின்றனர். எனினும் அவர்களின் உடனிருப்பு இன்பம் கருதிய இருப்பாக அமையவில்லை. எனவே தொல்காப்பியரும் உடன்போக்கை புணர்தலில் இருந்து வேறுபடுத்தி 'கொண்டுதலைக்கழிதல்' எனக் கொண்டார். இதனை, "கொண்டுதலைக்கழிதலாவது, உடன்கொண்டு பெயர்தல். அது, நிலம் பெயர்தலின் புணர்தலின் அடங்காமையானும் உடன்கொண்டு பெயர்தலின் பிரிதலின் அடங்காமையானும் வேறு ஓதப்பட்டது"(45) என்பர். இது பாலைக்குரியது என்பதை, "கொண்டுதலைக்கழிதல் பாலைக்கண்ணும் பிரிந்தவண் இரங்கல் பெருந்திணைக்கண்ணும் வரும் என்று கொள்க"(46) என்பர். இவற்றால் உடன்போக்கு பாலையின் பாடுபொருளாகும் என்பது விளங்கும். இவ்விரு பிரிவும் பாலை நிலத்தின் வழியே செல்வதாகச் செய்யுள் செய்யப்பெறும். இதனை, "பொருள் தேடச் செல்லும் தலைவன் பாலை நிலத்தின் வழியாகச் செல்வதாகவும் தலைவன் தலைவியோடு பாலை நிலத்தின் வழியே தன்னூர் சென்று மணம் புரிவதாகவும் செய்யுள் செய்தல் புலனெறி வழக்கம்"(47)என்பர்.

பாலைக்குரிய பிரிவினைப் பாடுமிடத்து வேனிற் காலமும் நண்பகற் பொழுதும் அப்பொழுதிற்குரிய பாலை நிலமும் இயைபுபடுத்தப் படுகின்றன. இத்திணை இயைபு தலைவனைப் பிரிந்து துயரப்படும் தலைவியின் வருத்தத்தைச் சிறப்பித்துக் கூறுதற்கு ஏற்றதாக அமைக்கப்படுகிறது. இதனை, "பாலைப் பொருளாவது பிரிவு; அப்பிரிவின் கண் தலைமகற்கு வருத்தமுறுமென்று தலைமகள் கவலுங்கால் நிழலும் நீரும் இல்லாத வழி ஏகினார் எனவும், கவலுமாகலின் அதற்கு அது சிறந்தது"(48) என்பர் இளம்பூரணர். இதனால் பிரிவு என்பது களவில் உடன்போக்காகவும் கற்பில் பொருள் முதலிய காரணங் கருதிய பிரிவாகவும் அமைகிறது என்பதும், பிரிதல் எனும் உரிப்பொருளுக்கான முதல் கருப்பொருள் இயைபு பிரிவுத்துயரால் வருந்தும் தலைவியின் துயரை மிகுதிப்படுத்தி உரைத்தற்கேற்பவும் பிரிந்து செல்லும் இடச் சூழலாகவும் கொள்ளப்படுகிறது என்பதும் விளங்கும்.

**ஊடல் - விளக்கமும் இயைபும்**

தலைவன் மேற்கொண்ட பரத்தமை ஒழுக்கத்தால் தலைவிக்குத் தோன்றும் சிறு பிணக்கு 'ஊடல்' எனப்படுகிறது. இதனை "ஊடல் என்பது தலைவன் தலைவியரிடையே நேரிடும் சிறு பிணக்கு"(49) என்று விளக்குவர் ந.சுப்புரெட்டியார்.

ஊடல் என்னும் உரிப்பொருளைப் பாடுதற்கு மருதநிலமும், வைகறை விடியற் காலங்களும், அறுவகைப் பெரும்பொழுதுகளும் பின்புலமாகக் கொள்ளப்படுகின்றன.

பரத்தமை யொழுக்கம் மேற்கொள்பவர் செல்வந்தராய் இருப்பர். எனவே வளமிக்க மருத நிலத்திற்குரியவனே இவ்வொழுக்கத்தை மேற்கொண்டதாகக் கூறுதல் சிறக்கும். பரத்தமை யொழுக்கம், இரவில் நடைபெறும். இவ்வொழுக்கம் மேற்கொண்ட ஆண்மகன், யாரும் அறியாதவாறு வைகறை, விடியலில் தன் இல்லம் புகுவான். எனவே வைகறையும் விடியலும் இதற்குச் சிறந்ததெனக் கொள்ளப்படுகிறது. இவ்வாறு மருத ஒழுக்கம் அதற்குரிய முதல், கருவுடன் இயைபுபடுதலை, "தலைவன் தலைவியைப் பிரிந்து சென்று இரவெல்லாம் பரத்தையருடைய ஆடலையும் பாடலையும் கண்டும் கேட்டும் பொழுதுபோக்கி வைகறையில் மனைக்கு மீள்வான். அது பொறாத தலைவி ஊடுவாள். இவன் ஊடல் தணிப்பான் - மருதநிலத் தலைவன் செல்வத்திற் சிறந்தவனாதலால் அவனுக்கிவ்வொழுக்கம் கூறப்பெற்றது"[50] என்பர். "மருதத்திற்கு நிலன் பழனஞ் சார்ந்த இடமாதலின் ஆண்டு உறைவோர் மேன்மக்களாதலின் அவர் பரத்தையிற் பிரிவுழி அம் மனையகத்து உறைந்தமை பிறர் அறியாமல் மறைத்தல் வேண்டி வைகறைக்கண் தம் மனையகத்துப் பெயரும் வழி ஆண்டு மனைவி ஊடலுற்றுச் சார்கிலளாமாதலால் அவை (வைகறையும் விடியலும்) அந்நிலத்திற்குச் சிறந்தன"[51] என்பர் இளம்பூரணர். தலைவி ஊடல் கொள்வதற்கும், வாயில் நேர்தலுக்கும் உரிய பொழுதுகளாக வைகறையும் விடியலும் அமைகின்றன என்பதை, "விடியற் காலஞ்சிறு வரைத்தாதலின் இதனாற் பெறும். பயன் இன்றென முனிந்து வாயிலடைத்து ஊடனீட்டிப்பவே அவ்வைகறை வழித் தோன்றிய விடியற் கண்ணும் அவள் மெய்வேறுபாடு விளங்கக் கண்டு வாயில் புகுத்தல் பயத்தலின்

விடியல் கூறினார்"[52] என்பர் நச்சினார்க்கினியர். இவற்றால், மருதத்திணையின் தலைவன் மனமகிழ்ந்த செயல்களைச் செய்வதற்கு அவன் செல்வச் செழிப்பு மிக்கவனாகக் காட்டப்படுதலுக்கு மருத நிலப் புனைவும், பரத்தமை ஒழுக்கத்தை மறைத்து இல்லிற்குத் திரும்புதற்கும் தலைவனிடம் ஊடல் கொண்டு அவ்வூடல் தணிதற்கும் வைகறையும் விடியலும் இயைபுபடுத்தப்படுகின்றன என்பது விளங்கும்.

மருதத்திணைக்குரிய உரிப்பொருள் நிகழ்வுகள் பலவாக அமைகின்றன. இவற்றை, "தலைவன் பரத்தையிடம் சென்று மீளல், வாயில் வேண்டல், பாணன், தூதுவர் வாயில் நேர்தல், தலைவி, தோழி வாயில் மறுத்தல், குறைகூறல், இயற்பழித்தல், இயற்படமொழிதல், இடித்துரைத்தல் போன்றவை மருதத்திணைக்குரிய உரிப்பொருள் நிகழ்வுகளாகக் கொள்ளப்பெறும்"[53] என்று குறிப்பர். இதனால் இத்திணையின் நிகழ்வுகள் கற்பிற்கே உரியனவாக அமைவது பெறப்படும்.

**இரங்கல் - விளக்கமும் இயைபும்**

நெய்தல் திணைக்குரிய பாடுபொருளாகக் கொள்ளப்பெறும் உரிப்பொருள் இரங்கல் ஆகும். தலைவனின் வருகைக்காகத் தலைவி காத்திருத்தல் முல்லை. ஆற்றியிருக்கும் தலைவி ஆற்றாதிரங்கல் நெய்தல் எனப்படும். இதனை, "இருத்தலாவது தலைமகன் வருந்துணையும் ஆற்றியிருத்தல். இரங்கலாவது ஆற்றாமை"[54] என்பர் இளம்பூரணர். இதனால் ஆற்றியிருக்கும் தலைவி ஆற்றியிராது இரங்கிக் கூறுதல் இரங்கலாகும் என்பது பெறப்படுகின்றது.

தலைவி ஆற்றியிருப்பதையும் ஆற்றாதிரங்கலையும் கண்டறிவதற்கு இரண்டு கூறுகள் கூறப்படுகின்றன. அவையாவன 1)நம்பிக்கை, 2) கண்ணீர் சிந்தல் என்பனவாகும். இவற்றுள் கண்ணீர் சிந்தாது நம்பிக்கையோடு இருத்தல் முல்லை. நம்பிக்கையின்றிக் கண்ணீர் சிந்தல் நெய்தல். இதனை, "பொருளீட்டச் சென்ற தலைவன் வருகைக்காக நம்பிக்கையோடு காத்திருத்தல், இருத்தல்; தலைவி நம்பிக்கையிழந்து கண்ணீர் சிந்திக் கையற்றுக் கலங்குதல் இரங்கல்"[55] என்பர் அ.பாண்டுரங்கன். தலைவி ஆற்றியிருத்தலில் கொண்டுள்ள நம்பிக்கை என்பது தலைவன் திரும்பி வருவான் என்ற நம்பிக்கையாகும். நெய்தலிலுள்ள நம்பிக்கையின்மை என்பது அவன் உயிருக்குத் தீங்கு நேர்ந்திருக்கும். எனவே, திரும்பி வாரான் என்பதாகும். இதனால் திரும்பி வாரான் என்று நம்பிக்கையின்றிக் கூறுதலே நெய்தல் திணையின் பாடுபொருளாகும் என்பது விளங்கும். இதனை, "தலைவன் திரும்பி வருவான் என்ற நம்பிக்கை இல்லாமல் வருந்துவதே நெய்தலின் பாற்படும்"[56] என்பர். ஆற்றியிருக்கும் தலைவி துயரம் மிகுதியால் கண்ணீர் சிந்தியவிடத்தும் நம்பிக்கையிருப்பின் முல்லையின்பாற்படும், நம்பிக்கையின்றியமையின் நெய்தலின்பாற்படும். எனவே முல்லை மற்றும் நெய்தல் உரிப்பொருளை தலைவி கொண்டுள்ள நம்பிக்கை வகைப்படுத்துவது விளங்கும். ஆற்றியிருக்கும் தலைவியே ஆற்றாது நம்பிக்கையின்றி, கண்ணீர் சிந்திக் கலங்குவாள். இருத்தல் முல்லை சான்ற கற்பாகும். எனவே, இரங்கல் கற்பிற்குரியதென்பதும், முல்லையுடன் தொடர்புடையது என்பதும் தலைவன் வரும் வரைக்கே நிகழ்தற்குரியது என்பதும் பெறப்படும்.

நெய்தல் திணையின் தலைவி நம்பிக்கையினை இழந்துவிடும் காரணத்தால் அவள் பிறர் கேட்டறியும் வண்ணம், புலம்புவதற்குரிய செயலை மேற்கொள்வாள். அவளின் செயல்பாடுகள் கண்டாரால் அறியப்படுமளவிற்கு அமையும். இவ்வாறு வாய்விட்டுப் புலம்புதல் களவிற்குரிய செயலாக அமையவியலாது. எனவே இரங்கல் என்பது கற்பிற்கே உரிய பாடுபொருளாகக் கொள்ளப்பெறும் என்பதைத் தலைவியின் புலம்பலும் உறுதிப்படுத்துகிறது.

இரங்கலைப் பாடுமிடத்து நெய்தற் பரப்பும் எற்பாடு பொழுதும் பின்புலமாகக் கொள்ளப்பெறும். இரங்கல் உணர்வை நெய்தலின் முதல், கரு மிகுதிப்படுத்தும். இதனை, "கடலுங் கானலுங் கழியுங் காண்டொறும் இரங்கலும்"(57) என்பர் நச்சினார்க்கினியர். இரங்குவார்க்கு இரவுப் பொழுது நீண்டு துயரம் செய்யும். எனவே ஆற்றாது இரங்கும் தலைவி இனி மாலையும் அதனைத் தொடர்ந்து இரவும் வருமே என இரங்குதற்கு எற்பாடு சிறந்த பொழுதாகிறது. இதனை, "தனிமையுற்று இரங்குவார்க்குப் பகற் பொழுதினும் இராப்பொழுது மிகுமாதலின் அப்பொழுது வருதற்கேதுவாகிய எற்பாடு கண்டார். இனி வருவது மாலையென வருத்தமுறுதலின் அதற்கு அது சிறந்தது"(58) என்பர் இளம்பூரணர். இவற்றால் இரங்கல் உணர்வைச் சிறப்புடன் பாடுதற்கேற்பவே நெய்தற் பரப்பும் எற்பாடும் கொள்ளப்பட்டன என்பது விளங்கும்.

***சங்க இலக்கியத்துள் திணை மயக்கம்***

ஓர் இயற்கைச் சூழ்நிலையில் அதற்கென வரையறுக்கப்பட்ட உரிப்பொருளன்றி வேறு உரிப்பொருள் பாடப்பெறுதல் உண்டு. இயற்கைச்

சூழ்நிலையும் உரிப்பொருளும் மாறுபட்டு அமையும் பாடல் திணை மயக்கப் பாடலாகும். இதனை, "ஒரு சில சமயங்களில் திணைக்களமாகிய இயற்கைக் காட்சி ஒரு திணையாகவும், அகவொழுக்கம் ஒரு திணையாகவும் மாறிப் பாடுவதுண்டு. அதனைத் திணைமயக்கம்"(59) என்று குறிப்பர்.

சங்க இலக்கியத் திணைப் பகுப்பில் திணைமயக்கம் காணப்படுகிறது. திணை வகுத்தோர் திணை மயக்கத்தைத் தனியே குறித்துக் காட்டவில்லை. எனவே திணை மயக்கம் குறித்த ஆய்வு திணையை மறுபரிசீலனை செய்ய உதவும். திணை ஆய்வில் இவ்வாய்வு தேவை என்பதை, "முல்லைப் பாடல்களாகத் தொகுக்கப்பட்டுள்ள பாடல்களில் பல முல்லைக்குரிய இயல்பின்றியுள. வேறு திணைக்குரிய பாடல்கள் பல முல்லை இயல்பைப் பெற்றுள்ளன. எனவே திணையைப் பற்றிய மறுபரிசீலனை தேவைப்படுகிறது"(60) என்று குறிப்பர் நா.செயராமன்.

ஒரு திணைக்குரிய பாடல்கள் திணைமயக்கத்தால் வேறு திணையில் காணப்படுகிறது. இதனால் திணைமயக்கம் குறித்த ஆய்வின் வழி ஒரு திணையினை நன்கு அறிவதற்கு பல விளக்கங்கள் கிடைக்கும். இதனை, "குறிஞ்சித் திணை எனப் பதிப்பிக்கப்பட்ட பாடல்களில் திணைமயக்கம் மிகுதியாக உள்ளது. 39 குறிஞ்சித் திணைப் பாடல்களில் (குறுந்தொகை 17, நற்றிணை 17, அகநானூறு 5) நெய்தல் பின்புலத்தில் குறிஞ்சியின் உரிப்பொருள் மயங்கியுள்ளது. முல்லையும் குறிஞ்சியும் மயங்கிக் காணப்படுகின்றன. இவை அனைத்தும் திணைக் கோட்பாடு எவ்வளவு

சிக்கலானது என்பதனை எமக்குத் தெளிவுபடுத்துகின்றன. குறிஞ்சித்திணைப் பாக்கள் முழுவதையும் ஒன்றாகத் தொகுத்து நுண்ணாய்வு செய்யும் போது மேலும் பல விளக்கங்கள் கிடைக்கலாம்"(61) என்பர். முதற்பொருளுக்கும் கருப்பொருளுக்கும் முதன்மை தந்து திணைகள் பாகுபடுத்தப்பட்டுள்ளன. எனவே திணைமயக்க ஆய்வு உரிப்பொருளின் வழி திணையினை உணர்வதற்கு வழியாக அமையும். இதனை, "சங்கப் பாடல்களுக்குப் பெரிதும் முதல், கருப்பொருள்களை அடியொற்றியே திணைக்குறிப்புத் தரப்பெற்றுள்ளது. மருதப் புலத்தை வடிக்கும் பாடல்கள் எத்திணை உணர்வினை வெளியிட்டாலும், மருதப் பாடல்களாகவே கொள்ளப்பெற்றன. ஆயின் மருத உரிப்பொருள் பிற புலங்களில் சென்று மயங்கிய நிலையில் அமைந்த பாடல்கள் வேறு திணைக்குரியனவாக அமைவுற்றன. இதனால் திணைமயக்கம் பற்றிக் குறிப்பிடும் போது இவ்விரு நிலைகளும் வேறுபடுத்தப் பெறவேண்டும்"(62) என்பர். இவற்றால் அப்பாடல்கள் திணை மயக்கமாக அமைந்த நிலையிலும் திணைப்பகுப்பு முதல், கருவிற்கு முதன்மை தந்திருப்பதும், சங்க இலக்கியத்துள் காணப்பெறும் அகப்பாடல்களை ஒருங்கே வைத்து ஒரு முழுமையான நோக்கில் திணைமயக்கம் ஆராயப்பட வேண்டும் என்பது விளங்கும்.

***முல்லைத்திணைப் பகுப்பும் திணைமயக்கமும்***

சங்க இலக்கியத்துள் முல்லை எனும் திணைப் பகுப்பில் 234 பாடல்கள் காணப்படுகின்றன.(63) இப்பாடல்கள் குறுந்தொகையில் 45, நற்றிணையில்30, அகநானூற்றில் 40, ஐங்குறுநூற்றில் 100, கலித்தொகையில்

17, பத்துப்பாட்டில் முல்லைப்பாட்டு நெடுநல்வாடை எனும் இரண்டு என அமைகின்றன. இப்பாடல்களுள் 143 பாடல்கள் திணைமயங்காப் பாடல்களாகக் காணப்படுகின்றன. திணைமயங்காப் பாடல்களுள் 136 பாடல்கள் முல்லைத் திணைக்குரியனவாகவும், 7 பாடல்கள் பிற திணைக்குரிய திணைமயங்காப் பாடல்களாகவும் காணப்படுகின்றன. பிறதிணைக்குரிய திணைமயங்காப் பாடல்கள் மருதம் 2, பாலை 2, கைக்கிளை 3 என அமைகின்றன.(64)

முல்லைத்திணைப் பகுப்பில் 91 பாடல்கள் திணைமயக்கப் பாடல்களாகக் காணப்படுகின்றன. இவற்றுள் பிறதிணையின் உரிப்பொருளுடன் முல்லையின் முதற்பொருள் கருப்பொருள் மயங்கிய பாடல்கள் 33 ஆகும். முல்லைத்திணைக்குரிய இருத்தல் எனும் உரிப்பொருளுடன் பிற திணையின் முதற்பொருளும் கருப்பொருளும் மயங்கிய பாடல்கள் 58 ஆகும்."(65)

***குறிஞ்சியுள் முல்லை***

முல்லை எனும் திணைப்பகுப்பில் குறிஞ்சியுரியுள் முல்லையின் முதல், கரு மயங்கிய திணை மயக்கப் பாடல்கள் காணப்படுகின்றன.

முல்லைத் திணைப் பகுப்பில் 40 பாடல்கள் பிற திணைக்குரிய உரிப்பொருளுடன் காணப்படுகின்றன. இவற்றுள் பிறதிணைக்கே உரித்தாக வேண்டிய 7 பாடல்கள் திணை மயங்காப் பாடல்களாக உள்ளன.(66) இவை மருதம், பாலை, கைக்கிளை எனும் திணைகளுக்குரிய திணை மயங்காப்பாடல்களாகத் திகழ்கின்றன. இப்பாடல் தவிர எஞ்சிய 33

பாடல்களில் பிறதிணையின் உரிப்பொருளுடன் முல்லையின் முதல்கரு மயங்குவதை அறிய முடிகின்றது. இவற்றுள் களவுக்கால நிகழ்வுகளைப் பாடுபொருளாக உடைய குறிஞ்சித்திணையின் உரிப்பொருளுடன் முல்லையின் முதல்கரு மயங்கிய பாடல்கள் 17 காணப்படுகின்றன.[67] இத்திணை மயக்கப் பாடல்களுள் காணப்படும் முல்லையின் முதல் கருப்பொருள்களைக் கொண்டு முல்லையெனும் திணைப்பெயரைத் தலைப்பிட்டுள்ளனர். ஆயின் இவை குறிஞ்சியுள் முல்லை மயங்கிய திணை மயக்கப் பாடல்களாகும். நல்லுருத்திரனாரின் முல்லைக்கலியில் காணப்படும் குறிஞ்சியுள் முல்லை மயங்கிய திணை மயக்கத்தை அறிஞர் பெருமக்கள் குறித்துள்ளனர். "பிறர் போல் முல்லைத் திணையில் கற்புத் துறைகளை உருத்திரனார் அமைக்கவில்லை என்று அறிக"[68]என்பர் வ.சு.ப. மாணிக்கனார். "கலித்தொகையில் முல்லைத் திணைப் பாடல்களாகவுள்ள பதினேழு பாடல்களில் ஒன்று தானும் முல்லை உரிப்பொருளைப் பேசவில்லை. ஆயின் முதற்பொருளும் கருப்பொருளும் முல்லைக்குரியனவே"[69] என்பர் ப. அருணாச்சலம். "முல்லைக்கலிப் பாடல்கள் அத்திணைக்குரிய முதற்பொருள் கருப்பொருள் ஆகியவற்றைக் கொண்டுள்ளதேனும் முல்லைத் திணைக்குரிய 'இருத்தல்' எனும் உரிப் பொருளைப் பாடாது குறிஞ்சித் திணைக்குரிய புணர்தலைப் பாடியுள்ளன"[70] என்பர் வி.சசிவல்லி. "முல்லைக்கலியில் தலைவி கற்பாற்றியிருத்தல் தலைவன் பாசறையிருப்பு தலைவன் மீளல் ஆகிய பாடுபொருள்கள் காணப்படவில்லை. மாறாக, களவு வாழ்க்கையே முல்லைக்கலியில் சித்தரிக்கப்பட்டுள்ளது"[71] என்பர் நா. செயராமன். இவற்றால் முல்லைக் கலியில் காணப்பெறும் குறிஞ்சியுள் முல்லை

மயங்கிய திணை மயக்கமும், அப்பாடல்கள் முல்லை எனும் திணைப்பகுப்பாகக் கொள்ளப்பட்டிருப்பதும் புலப்படும்.

குறிஞ்சியின் பாடுபொருளை, முல்லை நில மக்களின் வாழ்வியலைக் கொண்டு பாடியதன் காரணமாக இத்திணைமயக்கம் உருவானது உணரப்படுகின்றது. இம்முறையில் திணைமயக்கமாகப் பாடியதன் காரணமாகவே நல்லுருத்திரனாரின் முல்லைக்கலி சிறப்புப்பெற்றுள்ளது. இதனை "உருத்திரனார் இத்திணைக்குரிய இருத்தல் என்ற உரிப்பொருள் பாடாது குறிஞ்சித் திணைக்குரிய புணர்தலைப் பாடி இலக்கிய வெற்றி கண்டார். உரிப்பொருள் மாற்றத்தாலும் ஆயர் தம் அன்றாட ஒழுகலாறுகளை அமைத்துக் கொண்டதாலும் முல்லைக்கலி முத்தெனப் புத்தொளி பெற்றுத் திகழ்வதாயிற்று"(72) என்றுரைப்பர் ந.சுப்புரெட்டியார். முல்லைநில மக்களின் குறிஞ்சியொழுக்கம் குறிஞ்சியுள் முல்லை மயங்கிய திணைமயக்கமாகப் படைக்கப்படும் நிலையில், முல்லையின் முதல் கருப்பொருள்கள் குறிஞ்சியின் உரிப்பொருளுடன் ஐந்து நிலைகளில் பொருந்தி வருகின்றன. அவையாவன,

1.முல்லைப் பின்புலம் குறிஞ்சியின் பாடுபொருளுக்கு அமைக்கப்படும் நிலையில், குறிஞ்சியின் களவு தோன்றிய இடமாக முல்லைத் திணையின் முதல், கருப்பொருள்கள் குறிக்கப்படுகின்றன. 'ஆயமகளிரை வரைந்து கொள்ளும் முறையைத் தலைவனுக்கும், எனது களவைப் பெற்றோருக்கும் கூறி, எனது நோயினையும் தலைவனது நோயினையும் போக்குவாய்' என்று கூறி அறத்தொடு நிற்கும் தலைவியின் கூற்று குறிஞ்சிப் பாடுபொருளாகும். இதனுள்

குறிஞ்சித்திணைக்குரிய களவு தோன்றிய இடமாக முல்லை குறிக்கப்படுகிறது. இதனை,

**"புல்லினத்து ஆயர் மகளிரோடு எல்லாம்**

**ஒருங்கு விளையாட, அவ்வழி வந்த**

**குருந்தம்பூங் கண்ணிப் பொதுவன், மற்று என்னை,**

**'முற்று இழை ஏஎர் மடநல்லாய்! நீ ஆடும்**

***சிற்றில் புனைகோ, சிறிது'? என்றான்........"*** (கலித். 111: 5-9)

என்னும் அடிகள் வழி உணரமுடியும். இதனுள் முல்லை நிலத்து ஆய மகளிருடன் தலைவி விளையாடச் செல்கிறாள். அவளைக் கண்ட முல்லை நிலத் தலைவன் காதல் கொள்கிறான். தலைவியை, 'சிற்றில் புனைந்து விளையாட வருக' என அழைக்கின்றான் என்பது குறிக்கப்படுகிறது. இதனால் தலைவன், தலைவியரின் களவு வாழ்வான குறிஞ்சியின் பாடுபொருளில் களவு தோன்றிய இடமாக முல்லையின் முதல், கரு குறிக்கப்படுவது விளங்கும்.

'பிறர் வரைவு மறுத்து தலைவன் வரையுமாறு கூறு' என்று தலைவி கூறுவது குறிஞ்சித் திணைக்குரிய பாடுபொருளாகும். இதனுள்

**"தருமணல் தாழப்பெய்து, இல் பூவல் ஊட்டி,**

**எருமைப் பெடையோடு, எமர் ஈங்கு அயரும்**

**பெருமணம் எல்லாம் தனித்தே ஒழிய**

**வரிமணல் முன் துறைச் சிற்றில் புனைந்த**

**திருநுதல் ஆயத்தார் தம்முள் புணர்ந்த**

**ஒருமணம் தான் அறியும்.............."** (கலித். 114: 12-17)

என்று முல்லைத்திணையின் முதல் கரு குறிக்கப்படுகின்றது. இதனுள், திருமண நிகழ்வால் வீட்டை அழகுபடுத்துவதும், புதுமணல் பரப்பி, செம்மண்பூசி, பெண் எருமையின் கொம்பை வீட்டில் நட்டு வழிபடுவதும் முல்லைநில வாழ்க்கையாகக் குறிக்கப்படுகிறது. இதனை, "பெண் எருமையின் கொம்பை வீட்டினுள் நட்டு வைத்து அதனைத் தெய்வமாகப் பாவித்து வழிபட்டமை அறியப் பெறுகின்றது. இது ஆயர்தம் குலவழக்கம்"[(73)] என்பர் அ.விசுவநாதன். இதனால் தலைவி தலைவனுடன் களவில் புணர்ந்து மணந்து கொண்ட நிலச் சூழல் முல்லையாகக் குறிக்கப்பெறுவது உணரப்படும். 'நமர் நின்னை அவற்கே கொடுக்கச் சூழ்ந்தார்,' எனும் தோழியின் கூற்றில்,

> ***"புல்லினத்து ஆயர்மகன் சூடி வந்தது ஓர்***
> ***முல்லை ஒரு காழும் கண்ணியும், மெல்லியால்!***
> ***கூந்தலுள் பெய்து முடித்தேன் மன்............"*** (கலித் 115: 4-6)

என்றும் களவு நிகழ்ந்த இடம் முல்லையாகக் குறிக்கப்படுகிறது.இதனுள் களவுத்தலைவன் முல்லை நிலத்து ஆயர்மகனாகவும் தலைவி முல்லை நிலத்தவளாகவும் குறிக்கப்படுகின்றனர். தலைவன் முல்லைத் தொடையினையும் அதனாற் செய்த கண்ணியையும் அணிந்து வருவதும் அவற்றைத் தலைவி தன் கூந்தலில் அணிந்து களவு வாழ்க்கை நடத்துவதும் குறிக்கப்படுகின்றன. இவற்றால் குறிஞ்சித்திணையின் பாடுபொருளான களவை முல்லைநிலச் சூழல் குறிஞ்சியின் களவு தோன்றிய இடமாக அமைந்து சிறக்கச் செய்வது பெறப்படுகின்றது.

2.குறிஞ்சியின் பாடுபொருளைச் சிறப்பிக்கும் குறியிடங்கள், குறிஞ்சியுள் முல்லை மயங்கிய திணைமயக்கப் பாடலில் முல்லை நிலத்துக் குறியிடங்களாகக் குறிக்கப்படுகின்றன. இதனை,

**"ஆம்பற் குழலால் பயிர்பயிர் - எம் படப்பைக்**

**காஞ்சிக் கீழ் செய்தேம் குறி"** (கலித். 108: 62-63)

**" .............. .............. எமர் காண்பர்; நாளையும்**

**கன்றொடு சேறும், புலத்து"** (கலித். 110: 22-23)

**"கலத்தொடுயாம் செல்வுழி நாடி புலத்தும்**

**வருவையால் - நாண் இலி! நீ"** (கலித். 116: 16-17)

என்னும் பாடல் அடிகளில் காணமுடியும். இதனுள், முல்லைநிலத்துள் கன்றுகளை மேய்க்கச் செல்லும் இடங்களும், உணவுக் கலங்களைக் கொண்டு செல்லும் இடங்களும் பிறர் அறியாவாறு முல்லை நிலத்துக்குரிய ஆம்பற் குழலை ஊதிவரும் தலைவனுக்கு முல்லை நிலத்துக் காஞ்சி மரங்கள் உள்ள இடங்களும் குறிஞ்சித்திணையின் களவு வாழ்வைச் சிறப்பிக்கும் குறியிடங்களாக அமைக்கப்பெற்றிருப்பது புலப்படும். இவற்றால் குறிஞ்சியுள் முல்லை மயங்கிய திணை மயக்கத்துள் முல்லைத் திணையின் முதல், கருப்பொருள்கள் களவு வாழ்விற்குரிய குறியிடங்களாகக் குறிக்கப்படுவது விளங்கும்.

3.முல்லை நில மக்களின் களவு வாழ்வைக் கற்பாக்கும் அரிய நிகழ்வாக ஏறுதழுவல் அமைகிறது. இவ்வேறுதழுவல் குறிஞ்சியின் பாடுபொருளான களவைப் பாடுதற்குச் சிறந்தமைவதைக் குறிஞ்சியுள் முல்லை மயங்கிய திணை மயக்கப் பாடலில் காண முடிகின்றது.

தலைவன் தம்மை ஏறுதழுவிப் பெற வேண்டும் என்பதைக் குரவைக் கூத்தின் வழி எடுத்துரைக்கும் தோழியின் கூற்றை,

**"நளிவாய் மருப்பு அஞ்சும் நெஞ்சினார் தோய்தற்கு**

**எளியவோ ஆயமகள் தோள்?"** (கலித். 103: 69-70)

என்னும் அடிகள் உணர்த்துகின்றன. இங்கு குறிஞ்சியின் பாடுபொருளை முல்லையின் ஏறுதழுவல் சிறப்பிப்பது பெறப்படுகின்றது. தலைவன், தலைவியை வரைந்து கொள்ளவேண்டுமென எடுத்துரைக்கும் குறிஞ்சித்திணைப் பாடுபொருளைப் பாடுதற்கு முல்லைத்திணைக்குரிய முதல், கருப்பொருளால் அமையும் ஏறுதழுவல் நிகழ்ச்சி சிறப்பாக அமைவது புலப்படுகின்றது. இதனை,

**"கொல் ஏற்றுக் கோடு அஞ்சுவானை மறுமையும்**

**புல்லாளே, ஆயமகள்.**

**அஞ்சார் கொலைஏறு கொள்பவர் அல்லதை,**

**நெஞ்சிலார் தோய்தற்கு அரிய - உயிர்துறந்து**

**நைவாரா ஆயமகள் தோள்"** (கலித். 103: 63-67)

என்னும் அடிகள் உறுதிப்படுத்தும்.

களவுக்காலத்தில் தலைவற்கு ஏதம் நேருமோ என்று தலைவி வருந்துவதாகவும், அவளைத் தோழி தேற்றுவதாகவும் படைக்கப்படும் குறிஞ்சியின் கூற்றையும் ஏறுதழுவல் சிறப்பிக்கின்றது. களவுக்காலத்தில் தலைவனுக்கு ஏதம் நேரும் எனத் தலைவி வருந்துவதற்கு முல்லை நிலத்து ஏறுதழுவலில் ஏறுகள் ஆடவர்களைக் குத்திச் சிதைப்பது காரணமாகப் படைக்கப்படுகின்றது. இதனை,

**“மேற்பாட்டு உலண்டின் நிறன்ஒக்கும் புன்குருக்கண்**

**நோக்கு அஞ்சான் பாய்ந்த பொதுவனைச் சாக்குத்தி,**

**கோட்டிடைக் கொண்டு குலைப்பதன் தோற்றம் காண்”**

(கலித். 101:15-17)

என்று தோழி எடுத்துரைக்கும் அடிகளின் வழி உணர முடிகின்றது. தலைவற்கு ஏதம் நேரும் என அச்சம்கொண்ட தலைவியைத் தேற்றுவதற்கு முல்லைநிலத்துள் ஊதப்படும் குழல் ஓசை நன்நிமித்தமாகக் கூறப்படுகின்றது. இதனை,

**“அணிமாலைக் கேள்வற் தரூஉமார் ஆயர்**

**மணிமாலை ஊதுங்குழல்.”** (கலித்.101. 34-35)

என்னும் அடிகள் உணர்த்தும். தலைவன் ஏறுதழுவி வெற்றி பெற்று வரைந்து கொள்வான் எனத் தோழி கூறுவது,

**“தாளாண்மை கூறும் பொதுவன் நமக்கு, ஒருநாள்,**

**கேளாளன் ஆகாமை இல்லை; அவற்கண்டு**

**வேளாண்மை செய்தன கண்”** (கலித். 101: 44-46)

என்னும் அடிகளால் உணரப்படும். ‘தமர் கொடை நேர்ந்தார்’ என்று கூறும் தோழியின் கூற்றில் தலைவன் ஏறுதழுவிய செய்தியும் அதனால் தமர் கொடை நேர்ந்த செய்தியும் குறிக்கப்படுகின்றன.

**“நேரிழாய்! கேள் அரிதாக நிறுத்த கொலை ஏற்றுக்**

**காரிகதன் அஞ்சான் பாய்ந்த பொதுவற்கே,**

**ஆர்வுற்று, எமர், கொடை நேர்ந்தார்............”** (கலித். 104: 73-75)

இங்கு முல்லையின் ஏறுதழுவல் குறிஞ்சியின் பாடுபொருளில் மயங்குவது

விளங்கும். ஏறுதழுவும் தலைவன் அணிந்திருந்த மாலை தலைவியின் கூந்தலில் விழ, அதனைக் கண்ட ஆயர் அத்தலைவனுக்குக் கொடை நேர்ந்ததைக் காணமுடிகிறது. இதனை,

**"மண்ணிமாசு அற்றநின் கூழையுள் ஏற அவன்,**

**கண்ணி தந்திட்டது எனக் கேட்டு, 'திண்ணிதா,**

**தெய்வமால், காட்டிற்று இவட்கு என நின்னை அப்**

**பொய்இல் பொதுவற்கு அடை சூழ்ந்தார்.........."**(கலித்.107: 30-33)

என்பது உணர்த்தும். ஏறுதழுவும் தலைவனைக் கண்ட தலைவி காதல் கொண்டதையும் காணமுடிகின்றது. இதனை,

**"ஒன்றிப் புகர் இனத்து ஆயமகற்கு - ஒள்ளிழாய்!**

**இன்று எவன், என்னை எமர் கொடுப்பது - அன்று, அவன்**

**மிக்குத் தன்மேல் சென்ற செங்காரிக் கோட்டிடைப்**

**புக்கக் கால் புக்கது என்நெஞ்சு?"** (கலித். 105: 66-69)

என்பது விளக்கும். தலைவியைக் காதல் கொண்ட தலைவன் ஏறுதழுவி வெற்றியடைந்ததைக் கண்ட சுற்றத்தார் கூறும் கூற்றையும் ஏறுதழுவல் சிறப்பிக்கின்றது. இதனை,

**"எருத்தோடு இமிலிடைத் தோன்றினன்; தோன்றி,**

**வருந்தினான் மன்ற அவ் ஏறு."** (கலித். 102: 26-27)

என்பர். ஏறுதழுவலைக் கண்ட ஆய்ச்சியர், குரவையாடுவதாக அமையும் கூற்றில் ஏறுதழுவல் குறிக்கப்படுகின்றது. இதனை,

**" 'கொல்ஏறு கொண்டான் இவள் கேள்வன்' என்று - ஊரார்**

**சொல்லும் சொல் கேளா, அளை மாறி யாம் வரும்**

**செல்வம் எம் கேள்வன் தருமோ?எம் கேளே!"**(கலித்.106:43-45)

என்பது சுட்டும். இவ்வாறு களவுக்கால நிகழ்வாக அமையும் குறிஞ்சியின் பாடுபொருளில் முல்லை நிலத்தின் ஏறுதழுவல் திணை மயக்கமாக இடம் பெற்றுள்ளமை தெளிவாகும்.

4.தலைவனை வரைவு கடாவும் கூற்றில் தலைவியை முல்லைநிலத்தவளாகப் படைத்து குறிஞ்சியுள் முல்லை மயங்கும் பாடலைப் படைக்கிறார் நன்பலூர்ச் சிறுமேதாவியார், இதனை

**"மாவண் தோன்றல்! வந்தனை சென்மோ**

**காடு உறை இடையன் யாடுதலைப் பெயர்க்கும்**

**மடிவிடு வீளை வெரீஇ, குறுமுயல்**

**மன்ற இரும்புதல் ஒளிக்கும்**

**புன்புல வைப்பின் எம் சிறுநல் ஊரே"** (அகநா. 394: 12-16)

என்னும் அடிகள் உணர்த்தும். இதனுள் முல்லைநிலத்து இடையன் ஆட்டு மந்தையை ஒரு சேரக் கூட்டுதற்குச் சீழ்க்கை ஒலி அடிப்பதும், அச்சீழ்க்கை ஒலிக்கு அந்நிலத்துவாழ் முயல் புதரில் மறைவதுமாகிய முல்லைநிலப் புனைவுகள் தலைவியின் ஊர்ப் புனைவாகக் குறிக்கப்படுகிறது.

பட்டபின்றை வரையாது சென்று வினைமுற்றி மீளும் தலைமகன் தேர்ப்பாகற்குக் கூறும் கூற்று களவுக்காலக் கூற்றாகும். இக்களவுக்காலக் கூற்றில் தலைவி ஆற்றியிருக்கும் அவள் தந்தையின் ஊரைத் தலைவன்

தேர்ப்பாகற்கு உரைக்கின்றான். இந்நிலையில் முல்லைநிலத்து ஊர்ப்புனைவு குறிஞ்சியின் பாடுபொருளில் திணைமயக்கமாக இடம்பெறுவதைக் காணமுடிகின்றது. இதனை,

**"கவலை கெண்டிய கல்வாய்ச் சிறுகுழி**
**கொன்றை ஒள்வீ தாஅய், செல்வர்**
**பொன்பெய் பேழை மூய் திறந்தன்ன**
**கார் எதிர் புறவினதுவே- உயர்ந்தோர்க்கு**
**நீரொடு சொரிந்த மிச்சில் யாவர்க்கும்**
**வரைகோள் அறியாச் சொன்றி,**
**நிரைகோற் குறுந்தொடி தந்தை ஊரே"** (குறுந். 233)

என்னும் பாடல் உணர்த்தும். இதனுள் முல்லை நிலப்புனைகள் கார்கால இயல்புடன் குறிக்கப்படுகின்றன. கவலைக் கிழங்கை அகழ்ந்து எடுத்த பள்ளத்தில் கொன்றைப் பூக்கள் நிரம்பிக் கிடக்கும் முல்லை நிலப் புனைவுகள் களவுக்காலத் தலைவனின் கூற்றில் திணைமயக்கமாக இடம்பெறுவதைக் காணமுடியும். இதனால் முல்லைப் புனைவு தலைவியின் ஊர்ப் புனைவாகக் குறிக்கப்பட்டு, குறிஞ்சியின் பாடுபொருளுடன் மயங்கும் என்பது பெறப்படும்.

5.முல்லைத் திணைக்குரிய மாலைப்பொழுது குறிஞ்சியுரியுள் திணைமயக்கமாகப் படைக்கப்படுவது காணப்படுகிறது. இத்திணை மயக்கத்துள் மாலைப்பொழுது களவு காலத்தில் தலைவியைக் கண்ட தலைவனின் அறிவை மயங்கச் செய்யும் பொழுதாக அமைகிறது. இதனை,

**“முல்லை இவை ஆயின் - முற்றிய கூழையாய்!**

**எல்லிற்று, போழ்து ஆயின் - ஈதோளிக் கண்டேனால்;**

**‘செல்’ என்று நின்னை விடுவேன், யான்; மற்று எனக்கு**

**மெல்லியது, ஓராது அறிவு”** (கலித். 117: 11-14)

என்னும் அடிகளின் வழிக் காணமுடிகின்றது. இதனுள் பொழுது இருள் சூழ்ந்த மாலைக்காலமாக உள்ளதால் தலைவன் தலைவியைச் ‘செல்’ என விடமுடியாது, அறிவு மயங்கிப் பேசுகிறான் என்பது பெறப்படுகின்றது. இதனால் களவுக்காலத்தில் தலைவனின் காதல் மயக்கத்திற்கு ஏற்றவாறு முல்லைத்திணையின் மாலைப்பொழுது திணைமயக்கமாகப் படைக்கப்பெறுவது விளங்கும்.

வரைவிடை ஆற்றாள் எனக் கவன்றுரைக்கும் தோழிக்குக் கிழத்தி உரைக்கும் கூற்று களவுக்காலக் கூற்றாகும். இக்களவுக் காலக் கூற்றில் தலைவி மாலைப் பொழுதில் துயரமடைவது குறிக்கப்படுகின்றது. இதனை,

**“மாலை மறையும் அவர் மணிநெடுங்குன்றே”** (குறுந்.240: 7)

என்னும் அடி உணர்த்தும். இப்பாடல் மாலை எனும் பொழுதினை அடிப்படையாகக் கொண்டு முல்லை எனக் குறிக்கப்பட்டுள்ளது. ஆயின் களவில் ஆற்றியிருக்கும் குறிஞ்சித்திணைக்குரிய தலைவியின் கூற்றை முல்லைத் திணையின் மாலைப் பொழுது சிறப்பித்து, குறிஞ்சியின் பாடுபொருளுடன் மயங்குவது பெறப்படும்.

இவற்றால் குறிஞ்சியின் பாடுபொருளில் முல்லையின் முதல், கரு மயங்குமிடத்து முல்லையில் முதல், கருப்பொருள்கள் களவுதோன்றிய இடமாகவும்; குறியிடமாகவும்; களவைச் சிறப்பிக்கும் ஏறுதழுவுதல் நிகழும்

இடமாகவும்; தலைமக்களின் நிலமாகவும் அமைவதுடன், முல்லைத்திணையின் மாலைப்பொழுது தலைவனின் அறிவை மயங்கச் செய்யும் பொழுதாகவும் களவில் ஆற்றியிருக்கும் தலைவியின் துயரை மிகுதிப்படுத்தும் பொழுதாகவும் அமைந்து திணைமயக்கமாக இடம்பெறுவது உணரப்படும்.

**பாலையுள் முல்லை**

பாலைத்திணைக்குரிய உரிப்பொருளுடன் முல்லைத்திணையின் முதல், கருப்பொருள் மயங்குதல் பாலையுள் முல்லை எனப்படும். முல்லைத்திணைப் பகுப்பில் பாலையுரிப் பொருளுடன் முல்லைத் திணையின் முதல், கரு மயங்கிய பாடல்கள் காணப்படுகின்றன. முல்லைப் பகுப்பில் காணப்படும் பாலையுரியினைக் குறிக்குமிடத்து "தலைவனைச் செலவழுங்குவித்தது (ஐங்.423, 424) தலைவன் பிரியாமை(ஐங்.426, 427, 428, 430) ஆகிய பாடல்கள் முல்லை ஐங்குறுநூற்றுள் இடம் பெற்றுள்ளன"(74) என்பர் நா. செயராமன். முல்லைத் திணைப் பகுப்பில் பாலையின் உரிப்பொருளுடன் முல்லையின் முதல், கருப்பொருட்கள் மயங்கிய திணைமயக்கப் பாடல்கள் 16 காணப்படுகின்றன.(75) இவற்றுள் பாலையின் உரிப்பொருளை முல்லையின் முதல், கருப்பொருள் சிறக்கச் செய்வதை அறியமுடிகின்றது.

பாலையுள் முல்லை மயங்கும் நிலையில் முல்லைத் திணைக்குரிய கார்காலம் பாலைத்திணைக்குரிய பிரிவினை மேற்கொண்ட காலமாகக் குறிக்கப்படுகிறது. தலைவன் கார்காலத்தில் பிரிய எண்ணியதாகவும்,

அந்நிலையில் தலைவி துயரமடைவதாகவும் குறிக்கப்பட்டு பாலையுள் முல்லை மயங்கி அமையும் தோழியின் கூற்றை,

**"மாமழை இடியூஉத் தளி சொரிந் தன்றே;**

**வாள்நுதல் பசப்பச் செலவு அயர்ந்தனையே;**

**யாமே நிற்றுறந்து அமையலம்;**

**ஆய்மலர் உண்கணும் நீர் நிறைந்தனவே"** (ஐங். 423)

என்று பாடுகின்றார் பேயனார். இதனுள் மாமழை என்பது கார்காலத்தைக் குறிக்கும். இதனை, "மாமழையாவது கார்மேகம்"(76) என்று குறிப்பர். இதனுள் கார்காலத்தைக் காரணம் காட்டித் தலைவனைச் செலவழுங்குவிக்கும் தோழியின் முயற்சியைக் காணமுடிகின்றது. இதனை, "பிரிந்தவர் மீண்டும் கூடும் காலமேயன்றிப் பிரியும் காலமன்று என்றும், அங்ஙனம் பிரியின் தலைவி ஆற்றியிராள் என்றும் உணர்த்தினாளாம்"(77) என்பர். இவற்றால் தலைவனைச் செலவழுங்குவிக்கும் பாலைத்திணைக்குரிய பாடுபொருளில் முல்லைத்திணையின் கார்காலம் மயங்குவது உணரப்படும். இதனை, "கார்ப்பருவத்தே பிரியக் கருதிய தலைமகற்குத் தோழி தலைமகளது ஆற்றாமை கூறிச் செலவழுங்குவித்தது எனும் இப்பாடலின் துறைக்குறிப்பும் உறுதிப்படுத்தும். இத்திணைமயக்க நெறியில் கார்காலம் தலைவன் பிரியும் காலமாகக் குறிக்கப்படுவது புதுமையானதாகும். இதனை, "பிரிந்து சென்ற தலைவன் மீளும் காலமாகப் புலனெறி வழக்கம் செய்வது மரபாக இருக்க, இச்செய்யுளில் தலைவன் பிரியும் காலமாகக் கார்காலம் சுட்டப்படுவது புதுமையாகும்"(78) என்பர். இப்பாடலுள் உரிப்பொருள் பாலைத்

திணைக்குரியதாகவும், முதற்பொருள் முல்லைத் திணைக்குரியதாகவும் காணப்படுவதால், "இப்பாட்டு முதற் பொருளால் முல்லை"[79] என்பர் உ.வே.சாமிநாதய்யர். இப்பாடல் முதற்பொருள் கொண்டு முல்லை எனப் பாகுபடுத்தப்பட்டுள்ளது. இதனை, "இது கார்ப்பருவத்தே கூறுதலின் முல்லையாயிற்று"[80] என்று கூறும் பழையவுரை உணர்த்தும். இத்திணைப் பகுப்பால் முல்லை எனக் குறிக்கப்படும் திணையில் பாலையின் உரிப்பொருள் மயங்குவதாகவும் தோன்றலாகிறது. எனவே, இப்பாடலை முல்லைக்கண் பாலை எனக் கொண்டனர். இதனை, "பாலைத் திணையின் உரிப்பொருளாகிய பிரிவினை முல்லைக்குரிய கார் காலத்திற்குரித்தாக்கியமையின் இது முல்லைக்கண் பாலை வந்து மயங்கிய திணைமயக்கம் என்க. 'திணை மயக்குறுதலும் கடிநிலை இலவே' என்ற விதி கொள்க"[81] என்பர். உரிப்பொருள் மயங்குதல் இல்லை என்பதால் இப்பாடல் பாலையின் உரிப்பொருளுடன் முல்லையின் முதற்பொருள் மயங்கியதாகக் கொள்வது சிறப்பாகின்றது.

கார்காலம் போர் செய்வதற்கு இயலாக் காலமாகும். எனவே கார்காலத்தில் போர் நிறுத்தப்படும். இதனை, "ஆவணி தொடங்கிப் பெய்யும் ஓயாப் பெருமழைக் காலத்தில் போரிட இயலாது. யானை, குதிரை, தேர், காலாள் என்ற நாற்படையும் வலியொடு இயங்கமாட்டா. இயற்கையொடு முரணிப் படைகளைப் போருக்கு ஏவுவதில்லை. ஆதலின் இருதிற மன்னர்களும் காரின் தொடக்கத்துப் போரை நிறுத்தி விடுவது முறையும் ஆயிற்று"[82] என்பர் வ.சுப.மாணிக்கனார். இதனால் பகைவயிற் பிரிய எண்ணிய தலைவன் கார்காலத்தில் மன்னர் போரை

நிறுத்தி விடுவதன் காரணமாகச் செலவழுங்குவதைக் காண முடிகின்றது. இந்நிலையில் பாலை உரியுடன் முல்லையின் முதல் பொருள் மயங்குவது பெறப்படும். இவ்வாறு பாலையுள் முல்லையின் கார்காலம் மயங்கும் திணை மயக்கத்தைப் பேயனார்,

**"பேர் அமர் மலர்க்கண் மடந்தை! நீயே**
**கார் எதிர்பொழுது என விடல் ஒல்லாயே;**
**போருடை வேந்தன், 'பாசறை**
**வாரான் அவன்' எனச்செலவு அழுங்கினனே"** (ஐங். 427)

என்றும்,

**"தேர் செலவு அழுங்க, திருவிற்கோலி,**
**ஆர் கலி எழிலி சோர் தொடங்கின்றே;**
**வேந்து விடு விழுத் தொழில் ஒழிய,**
**யான் தொடங்கினனால் நிற்புறந்தரவே"** (ஐங். 428)

என்றும் பாடியுள்ளார். இதனுள் 'கார் எதிர்பொழுது' என்றும், 'ஆர்கலி எழிலிசோர் தொடங்கின்றே' என்றும், கார்காலம் குறிக்கப்படுகின்றது. இவற்றால் பாலையின் செலவழுங்குவித்தல், செலவழுங்குதல் எனும் துறைக்குரிய பாடுபொருளை முல்லைத் திணையின் கார்காலம் சிறக்கச் செய்வது பெறப்படும்.

வினைமுற்றி மீண்டுவருதற்குரிய காலமாகப் புலனெறி வழக்கம் செய்யப்பட்ட கார்காலத்துள் தலைவன் வினைமேற்செல்வதும், அந்நிலையில் தலைவனின் பிரிவை எண்ணி வருந்தும் தலைவிக்குத் தோழி, 'அவர் பிரிந்து சென்ற காலம் கார்காலம் ஆனதால் குறிஞ்சியும்

முல்லையும் திரிந்த பாலைநிலம் தற்போது இனிய தன்மையுடன் காணப்படும். எனவே வருந்தாதே', எனப் பிரிவாற்றுவிப்பதும் காணப்படுகின்றது. இவ்வாறான பாடுநெறியில் முல்லையின் முதல், கருப்பொருள்கள் பாலையின் உரிப்பொருளுடன் மயங்குவது புலப்படுகின்றது. இத்திணை மயக்கத்தை,

**"நன்றே, காதலர் சென்ற ஆறே!**

**நீர்ப்பட எழிலி வீசும்**

**கார்ப் பெயற்கு எதிரிய கானமும் உடைத்தே"** (ஐங்.433)

என்னும் பாடல் உணர்த்தும், இதனுள் தலைவன் பிரிந்து சென்ற நிலையில் தோழி கூறுவதான பாலைப் பாடுபொருளுடன் கார்காலம் மயங்குவது விளங்கும். இத்திணைமயக்கத்தை, "வேனிற் காலம் கழிந்தது கார்ப்பருவத் தோற்றத்திலே பிரிந்தாராகலான் அச்சுரம் நன்று எனத் தோழி சொல்லி ஆற்றுவித்தது" எனும் இப்பாடலின் துறைக்குறிப்பும் உறுதிப்படுத்தும். இவ்வாறான திணைமயக்க நெறியில் முல்லையின் முதல், கருப்பொருட்கள் பாலையுள் முல்லை மயங்கும் பாடல்களுள் காண முடிகின்றது.

தலைவன் செல்லும் வழியில் முல்லை நிலத்துக் கொன்றை, பிடவம், குருந்து, முல்லை, தோன்றி, தளவம் என்பன கார்கால வரவால் பூத்துக் காணப்படும் என்பதைத் தோழி திணைமயக்கமாகக் குறிக்கப்படுகின்றாள். இதனை,

**"சுடு பொன் அன்ன கொன்றை சூடி,**

**கடி புகுவனர் போல் மள்ளரும் உடைத்தே"** (ஐங்.432: 2-3)

என்றும்,

**"நிலன் அணி நெய்தல் மலர,**

**பொலன்அணி கொன்றையும் பிடவமும் உடைத்தே"**(ஐங்.435: 2-3)

என்றும்,

**"நன்பொன் அன்ன சுடர்இணர்க்**

**கொன்றையொடு மலர்ந்த குருந்துமார் உடைத்தே"**(ஐங்.436: 2-3)

என்றும்,

**"ஆலித் தண் மழை தலைஇய,**

**வாலிய மலர்ந்த முல்லையும் உடைத்தே."** (ஐங்.437: 2-3)

என்றும்,

**"பைம் புதல் பல்பூமலர**

**இன்புறத் தகுந பண்புமார் உடைத்தே."** (ஐங்.438: 2-3)

என்றும்,

**"தண்பெயல் அளித்த பொழுதின்**

**ஒண் சுடர்த் தோன்றியும் தளவமும் உடைத்தே"** (ஐங்.440: 2-3)

என்றும் இடம் பெறும் அடிகள் உணர்த்தும்.

இத்திணைமயக்க நெறியில் கார்கால மழையால் முல்லைநிலம் குளிர்ந்து காணப்பட முல்லைநிலத்துக் கருப்பொருளான மான் பிணை துள்ளி விளையாடும் என்பதை,

**"மறியுடை மான்பிணை உகள,**

**தண்பெயல் பொழிந்த இன்பமும் உடைத்தே"** (ஐங்.434: 2-3)

என்றும், குருந்த மலரின் கண்ணியைத் தலையில் சூடிய இடையர்கள், வாழும் முல்லைநிலப் பகுதிகள் காணப்படும் என்பதை,

**"குருந்தங் கண்ணிக் கோவலர்**

**பெருந்தண் நிலைய பாக்கமும் உடைத்தே"** (ஐங்.439: 2-3)

என்றும் குறிக்கின்றனர். இதனால் பாலையின் உரிப்பொருளுடன் முல்லையின் முதல், கருப்பொருள் மயங்குவது பெறப்படும்.

முல்லை நில மக்களின் பாலையொழுக்கம் பாடப்பெறும் போது பாலையுள் முல்லை மயங்குவதை அறியமுடிகின்றது. முல்லை நிலத் தலைவியைப் பிரிந்து செல்ல நினைத்த தலைவனைத் தோழி செலவழுங்குமிடத்து,

**"புறவு அணி நாடன் காதல் மடமகள்**

**ஒள்நுதல் பசப்ப நீ செலின், தெண்நீர்ப்**

**போது அவிழ் தாமரை அன்ன நின்**

**காதல் அம் புதல்வன் அழும், முலைக்கே"** (ஐங். 424)

என்று கூறுவதாகத் திணைமயக்கம் படைக்கிறார் பேயனார். இதனுள் தோழி தலைவனைச் செலவழுங்குவிக்கும் பாலைத்திணைக்குரிய பாடுபொருளில், 'புறஅணிநாடன் காதல் மடமகள்' என்று முல்லைத்திணையின் முதல் கருப்பொருள் திணைமயக்கமாகக் குறிக்கப்படுவது விளங்கும்.

முல்லை நில மக்களைக் கொண்டு 'தலைமகனைச் செலவுடன்பட்டது' என்னும் பாலைத் துறையில் அமையும் பாடலைத் திணை மயக்கமாகப் படைக்கிறார் கச்சிப் பேட்டு இளந்தச்சனார். இதனை,

**"கொல்லைக் கோவலர் குறும்புனம் சேர்த்த**

**குறுங்காற் குரவின் குவி இணர் வான்பூ**

ஆடுடை இடைமகன் சூடப்பூக்கும்
அகலுள் ஆங்கண் சீறூரேமே;
அதுவே சாலும் காமம்; அன்றியும்,
எம்விட்டு அகறிர் ஆயின், கொன் ஒன்று
கூறுவல் - வாழியர், ஐய! வேறுபட்டு
இரீஇய காலை இரியின்,
பெரிய அல்லவோ, பெரியவர் நிலையே? (நற். 266)

என்னும் பாடல் உணர்த்தும். இதனுள் தலைவன் பிரிந்து சென்றளவில் தலைவி ஆற்றியிருக்கும் முல்லைநிலம் குறிக்கப்பட்டு, கொல்லைக் கோவலர், குறும்புனம், ஆடுடை இடைமகன் குரவு என்னும் முல்லையின் முதல், கருப்பொருள்கள் மயங்குகின்றன. இதனால் முல்லைநில மக்களின் பாலையொழுக்கம் பாலையுள் முல்லை மயங்கிய திணைமயக்கப் பாடலாகப் பாடப்பெறும் என்பது பெறப்படும்.

முல்லைத் திணைப்பகுப்பில் பாலைத் திணையின் பாடுபொருளுடன் முல்லை மற்றும் குறிஞ்சித் திணைக்குரிய முதல், கருப்பொருள்கள் மயங்குவதை இரண்டு பாடலுள் காணமுடிகின்றது.

'யான் இது காரணத்தால் பிரியேன்' என்று தலைவன் கூறும் பாலைப் பாடுபொருளில் முல்லையும் குறிஞ்சியும் மயங்குவதை ஐங்குறுநூறு,

"நெடும்பொறை மிசைய குறுங்காற் கொன்றை
அடர்பொன் என்னச் சுடர் இதழ் பகரும்
கான்கெழு நாடன் மகளே!
அழுதல் ஆன்றிசின்; அழுங்குவல் செலவே." (ஐங். 430)

என்றுரைக்கின்றது. இதனுள், 'அழுங்குவல் செலவே' எனத் தலைவன் கூறும் பாலைப் பாடுபொருளில் 'நெடும்பொறை' எனும் குறிஞ்சி நிலமும், 'கான்' எனும் முல்லை நிலமும், கொன்றை மலரும், கார்காலமும் மயங்குவது அறியப்படும்.

வேனிற்காலம் கழிந்து கார்காலத்தே தலைவர் பிரிந்தார் எனக் கூறும் தோழியின் கூற்றில் முல்லை மற்றும் குறிஞ்சித்திணையின் முதல் கரு மயங்குவதை உணரமுடிகின்றது. இதனை,

**"நன்றே, காதலர் சென்ற ஆறே!**
**அணிநிற இரும்பொறை மீமிசை**
**மணிநிற உருவின தோகையும் உடைத்தே."** (ஐங்.431)

என்னும் பாடல் உணர்த்தும். இதனுள் தலைவன் கார்காலத்தே பிரிந்து சென்றதால் குறிஞ்சி திரிந்த பாலை நிலம் தற்பொழுது, இனியதான குறிஞ்சி நிலமாக மாறியிருப்பதை, அணிநிற இரும்பொறை என்பது நன்குணர்த்தும். குறிஞ்சி நிலத்தின் இத்தோற்றத்திற்கு முல்லைத் திணைக்குரிய கார்காலத்தின் வரவு காரணமாக அமைகிறது. இதனை, "கோடையில் தன் மேலிருந்த மரம் செடி கொடிகளனைத்தும் வாடி நிறமிழந்து இன்னாக் காட்சி வழங்கிய மலை, இப்பொழுது கார்கால மழையால் கவின் பெற்று நின்றது என்பாள், 'அணிநிற இரும்பொறை' என்று மலையைச் சிறப்பித்தனள்"[83] என்பர். இதனால் பாலையின் பாடுபொருளில் முல்லை மற்றும் குறிஞ்சித் திணையின் முதல், கருப்பொருள் மயங்குவது புலப்படும்.

இவற்றால் பாலையுள் முல்லை மயங்கும் பாடல்களில் முல்லையின் கூறாகிய கார்காலம் தலைவனைச் செலவழுங்குவித்தற்கும் தலைவன்

செலவழுங்குதற்கும் தலைவன் பிரிந்தவிடத்து தலைவன் சென்ற வழி குறித்து வருந்தும் தலைவியைத் தோழி ஆற்றுவித்தற்கும் ஏற்ப இயைபுபடுத்தப்படுவதும் முல்லை நில மக்களின் பாலை ஒழுக்கமாகக் குறிக்கப்பட்டு, இயைபு படுவதும் காணப்படுகிறது.

### குறிஞ்சித்திணைப் பகுப்பும் திணைமயக்கமும்

சங்க இலக்கியத்துள் குறிஞ்சி எனும் திணைக் குறியீட்டைக் கொண்ட பாடல்கள் 488 காணப்படுகின்றன.[(84)] இவற்றுள் 372 பாடல்கள் திணை மயங்காப் பாடல்களாக உள்ளன. 366 பாடல்கள் குறிஞ்சித்திணைக்குரிய திணைமயங்காப் பாடல்களாகவும்,[(85)] 6 பாடல்கள் பிறதிணைக்குரிய திணைமயங்காப் பாடல்களாகவும் காணப்படுகின்றன. இந்த ஆறு பாடல்கள் முல்லை 1, பாலை 1, கைக்கிளை 3, பெருந்திணை1 எனும் வகைப்பாட்டில் கொள்ளத்தக்கனவாக அமைந்துள்ளன."[(86)]

குறிஞ்சித் திணைப் பகுப்பில் காணப்படும் திணைமயக்கப் பாடல்கள் 116 ஆகும். இவற்றுள் குறிஞ்சித் திணைக்குரிய பாடுபொருளுடன் பிற திணையின் முதல் கருப்பொருள் மயங்கிய பாடல்கள் 90 ஆக அமைகின்றன.[(87)] பிறதிணையின் உரிப்பொருளுடன் குறிஞ்சித் திணையின் முதல் கருப்பொருள் மயங்கிய திணைமயக்கப் பாடல்களாக 26 பாடல்கள் அறியப்படுகின்றன.[(88)]

### முல்லையுள் குறிஞ்சி

குறிஞ்சி எனும் திணைப் பகுப்பில் உள்ள பாடல்களில் முல்லைத் திணையின் பாடுபொருளில் குறிஞ்சித் திணையின் முதல், கரு மயங்கிய

திணை மயக்கப் பாடல்கள் காணப்படுகின்றன. ஐங்குறு நூற்றுக் குறிஞ்சித் திணைப் பாடல்களில் காணப்படும் இத் திணை மயக்கத்தை, "குறிஞ்சி ஐங்குறுநூற்றுப் பாடல்களில் 5 பாடல்கள் பிற திணையில் மயங்கி வரக் காண்கிறோம்"[89] என்பர் ந.காந்திமதி லட்சுமி. இவ்வாறு அமையும் திணைமயக்கம் குறுந்தொகை, நற்றிணை எனும் சங்கப் பகுப்பிலும் காணப்படுகின்றது. எனவே சங்க இலக்கியக் குறிஞ்சித் திணைப்பகுப்பில் முல்லையின் பாடுபொருளுடன் குறிஞ்சியின் முதல் கருப்பொருள் மயங்கிய திணை மயக்கப் பாடல்கள் 11 ஆகக் காணப்படுகின்றன.[90] இப்பாடல்கள் முல்லையின் பாடுபொருளைக் குறிஞ்சியின் முதல், கருப்பொருட்கள் சிறப்பிக்கும் தன்மையில் அமைந்திருப்பதைக் காண முடிகின்றது.

கூதிர் காலம் குறிஞ்சித் திணையின் உரிப்பொருளையும் குறிஞ்சி நிலத்தையும் சிறப்பிக்கும் பொழுதாகப் புலனெறி வழக்கம் செய்யப்படும். முல்லையுள் குறிஞ்சி மயங்கிய பாடலில் கார் கால வரவில் ஆற்றியிருக்கும் தலைவியின் துயர், தலைவன் வராமையால் கூதிர் காலம் வரை நீட்டிப்பதாக அமைக்கப்படுகிறது. கார் காலம் கடந்து கூதிர் காலத்தும் ஆற்றியிருக்கும் தலைவியின் துயர நிலையைப் பாடுமிடத்துக் கூதிர் கால இயல்பைக் குறிஞ்சி நிலப் புனைவுடன் அமைத்து முல்லையுள் குறிஞ்சி மயங்கிய திணை மயக்கப் பாடலைப் படைத்துள்ளனர். இத்திணை மயக்கத்தை,

**"வார் உறுவணர் கதுப்பு உளரி, புறஞ் சேர்பு,**

**'அழாஅல்' என்று நம் அழுத கண் துடைப்பார்;**

**யார் ஆகுவர் கொல்? - தோழி! - சாரல்**

**பெரும்புனக் குறவன் சிறுதினை மறுகால்**

**கொழுங்கொடி அவரை பூக்கும்**

**அரும்பனி அற்சிரம் வாரா தோரே.”** (குறுந்.82)

என்று இயற்றுவர் கடுவன் மள்ளனார். இதனுள், ‘நம் அழுதகண் துடைப்பார் யார் ஆகுவர். கொல் . . . அரும்பனி அற்சிரம் வாராதோரே’ என்பதால் தலைவி கார்காலம் கடந்துவிட்ட நிலையிலும் தலைவனின் வரவை நோக்கி ஆற்றியிருக்கும் முல்லைப்பாடுபொருள் புலப்படுகின்றது. தலைவி ஆற்றியிருக்கும் சூழல் கார்காலம் கடந்து கூதிர் காலம் வந்துவிட்டதாக அமைகின்றது.

முல்லை நிலத்துள் ஆற்றியிருக்கும் தலைவியின் துயர் கார் காலத்தே முற்றுப் பெறாது குறிஞ்சிக்குரிய கூதிர் காலம் வரைச் செல்வதாகப் படைக்கப்படும் போது, முல்லையுள் குறிஞ்சியின் கூதிர் மயங்குவதை,

**“சிறைபனி உடைந்த சேயரி மழைக்கண்**

**பொறை அரு நோயொடு புலம்பு அலைக்கலங்கி,**

**பிறரும் கேட்குநர் உளர் கொல்?- உறை சிறந்து,**

**ஊதை தூற்றும் கூதிர் யாமத்து,**

**ஆன் நுளம்பு உலம்புதொறு உளம்பும்**

**நாநவில் கொடுமணி நல்கூர் குரலே”** (குறுந்.86)

என்று படைக்கிறார் வெண்கொற்றனார். இதனுள், முல்லைத்திணையின் பாடுபொருளை, ‘பிறரும் கேட்குநர் உளர்கொல்’ என்பது புலப்படுகின்றது.

ஆற்றியிருக்கும் தலைவியின் துயரைக் கார்காலமும், மாலைப்பொழுதும் மிகுதிப்படுத்தும். ஆனால் முல்லையுள் குறிஞ்சி மயங்கும் திணைமயக்கப் பாடலாக அமையும். இப்பாடலுள் தலைவி ஆற்றியிருக்கும் நிலம் முல்லை என்பது 'ஆன் நுளம்பு உலம்புதொறு உளம்பும் நாநவில் கொடுமணி நல்கூர் குரலே' என்ற கருப்பொருட் செய்தியால் அறியப்படுகின்றது. எனினும், இவள் ஆற்றியிருக்கும் காலம் குறிஞ்சித்திணைக்குரிய கூதிர் காலத்து யாமம் என்பதை 'ஊதை தூற்றும் கூதிர் யாமத்து' என்பதால் பெறமுடிகிறது. இவ்வாறான திணை மயக்கத்தை மதுரை மருதன் இளநாகனார்,

**"நெருப்பின் அன்ன செந்தலைஅன்றில்**
**இறவின்அன்ன கொடுவாய்ப் பெடையொடு,**
**தடவின் ஓங்கு சினைக் கட்சியில் பிரிந்தோர்**
**கையற நரலும் நள்ளென் யாமத்துப்**
**பெருந்தண் வாடையும் வாரார்;**
**இஃதோ - தோழி!-நம்காதலர் வரவே?" (குறுந்.160)**

என்று குறிக்கின்றார். இதனுள் முல்லைப் பாடுபொருளில் குறிஞ்சியின் கூதிர், யாமம் எனும் பொழுதுகள் மயங்கிய திணை மயக்கம் அறியப்படுகிறது. ஆயின் திணை வகுத்தோர், குறிஞ்சியின் பொழுதைக் கொண்டு குறிஞ்சித் திணை என்று கொண்டனர். குறிஞ்சி எனக் கொண்டதற்கேற்ப பாடலுக்குத் துறைக் குறிப்பும் வரைந்தனர். இதனை "பாடல் பருவ வரவின்கண் தலைவன் வரவைக் காணாத தலைவி தோழியிடம் கூறுவதாக உளது. ஆயின் "யாமம்" என்ற சிறுபொழுது வந்ததால் குறிஞ்சி எனக் கொண்டு இப்பாடலைக் களவுக்குரியதாக்கி

“வரைவு நீட்டிப்ப ஆற்றாளாகிய தலைமகளை நோக்கித் தோழி வரைவர் என ஆற்றுவிப்புழி தலைமகள் கூறியது என்று துறை கூறியுள்ளார்”[91] என விளக்குவர் நா.செயராமன். இவற்றால் இப்பாடல் கற்பில் தலைவி ஆற்றியிருக்கும் முல்லைப் பாடுபொருளை உடையது என்பதும், இம்முல்லைப் பாடுபொருளில், கார்காலம் கடந்து கூதிர்காலத்து யாமப்பொழுதில் தலைவி ஆற்றியிருப்பதால், கூதிர்காலமும் யாமமும் திணைமயக்கமாக இடம்பெறுகிறது என்பதும் திணைப்பகுப்பால் குறிஞ்சி எனக் குறிக்கப்பட்டுள்ளது என்பதும் புலப்படும். தலைவி ஆற்றியிருக்கும் முல்லைப் பாடுபொருளில் உழுந்து முதுகாய் விடும் கூதிர்காலத்தினை மயக்கமாகப் படைக்கின்றார் அள்ளூர் நன்முல்லையார். இதனை,

**“பூழ்க்கால் அன்ன செங்கால் உழுந்தின்**
**ஊழ்ப்படு முதுகாய் உழையினம் கவரும்**
**அரும்பனி அற்சிரம் தீர்க்கும்**
**மருந்து பிறிது இல்லை; அவர் மணந்த மார்பே”** (குறுந்.68)

என்னும் பாடல் உணர்த்தும். இதனுள் ஆற்றியிருக்கும் தலைவியின் கூற்றை ‘மருந்து பிறிது இல்லை’ என்பதால் காணமுடிகின்றது. இதனை, “புலத்தின்கண் வித்திய உழுந்து பூத்தற்கு முன்னர் வருமென்று தெளிவித்துப் போயவர் அது முதுகாய் விட்டு உழையினங்கவரும் போதும் வந்திலர் என்பது கருதிக் கூறினாள்”[92] என்று விளக்குவர். இதனுள் கூதிர்காலமும் யாமமும் திணை மயக்கமாக இடம்பெறுவது தெளிவாகும்.

முல்லைத் திணையினைச் சிறப்பிக்கும் பொழுதாக, கார் காலம் அமைகிறது. கார் கால மழை மேகங்கள் குறிஞ்சி நிலமான மலைகளில் தவழ்ந்து மழை பெய்வது இயல்பு. இதனால் முல்லையினைப் பாடுமிடத்து மழை மேகம் குறிஞ்சி நிலத்துடன் தொடர்பு படுத்தப்பட்டுக் கூறப்படுவதைக் காண முடிகிறது. இத்திணை மயக்கத்தைப் பெருங்குன்றூர்க்கிழார்,

**"விருந்து எவன் செய்கோ — தோழி! - சாரல்**
**அரும்பு அற மலர்ந்த கருங்கால் வேங்கைச்**
**சுரும்பு இமிர் அடுக்கம் புலம்பக் களிறு அட்டு**
**உரும்பு இல் உள்ளத்து அரிமா வழங்கும்**
**பெருங்கல் நாடன் வரவு அறிந்து, விரும்பி,**
**மாக்கடல் முகந்து, மணி நிறத்து அருவித்**
**தாழ்நீர் நனந்தலை அழுந்து படப் பாஅய்,**
**மலை இமைப்பதுபோல் மின்னி,**
**சிலை வல் ஏற்றொடு செறிந்த இம் மழைக்கே?" (நற்.112)**

என்று பாடுகின்றார். இதனுள் தலைவன் வருவதாகக் குறித்த பருவவரவில் தலைவி ஆற்றாது துயரமடைய அவளைத் தோழி ஆற்றுவிப்பது உணரப்படுகின்றது. இப்பாடுபொருளை, "இது பருவ வரவின்கண் ஆற்றாளாய தலைவியைத் தோழி வற்புறுத்தியது" எனும் துறைக்குறிப்பும், "பகுத்தறிவில்லாத முகிலும் அவன் வருவதறிந்து விரும்பி வருதலைக் கண்டு வைத்தும் எல்லாவறிவுமுடைய நீ அவன் வருகையையறியாது புலம்புகின்றனையே வென்று இரங்கியவாறாயிற்று"[93] எனும்

உரைப்பகுதியும் உறுதிப்படுத்தும். இப்பாடு பொருளுள் தலைவன் குறிஞ்சி நிலத்தவன் என்பது "பெருங்கல் நாடன்" என்பதாலும் கார்கால மழை குறிஞ்சி நிலத்துள் பெய்வதென்பது "மலை இமைப்பதுபோல் மின்னி சிலைவில் ஏற்றொடு செறிந்த இம்மழைக்கே" என்பதாலும் குறிக்கப்படுகின்றது. இதனால் இப்பாடல் முல்லையுள் குறிஞ்சி மயங்கிய திணைமயக்கப் பாடல் என்பதும் குறிஞ்சியின் கூறுகளால் குறிஞ்சி எனக் குறிக்கப்பட்டுள்ளது என்பதும் விளங்கும்.

பிரிவுத்துயரில் வாடும் தலைவி தன்னைத் துயரப்படுத்தும் மழையை நோக்கிக் கூறும் கூற்றில்,

**"நெடுவரை மருங்கின் பாம்புபட இடிக்கும்"**
**கடுவிசை உருமின் கழறு குரல் அளைஇக்**
**காலொடு வந்த கமஞ் சூல் மாமழை!**
**ஆர் அளி இலையோ நீயே? பேர் இசை**
**இமயமும் துளக்கும் பண்பினை;**
**துணைஇலர், அளியர், பெண்டிர்; இஃது எவனே?"** (குறுந்.158)

என்று கார்கால மழையுடன் குறிஞ்சி நிலம் தொடர்பு படுத்தப்படுகிறது. இத்திணை மயக்கப் பாடல் "நெடுவரை" எனும் குறிப்பால் குறிஞ்சி எனக் குறிக்கப்பட்டது. ஆனால், 'காலொடு வந்த கமஞ்சூல் மாமழை' என்பதால் கார்கால வரவும், 'துணைஇலர் அளியர் பெண்டிர் இஃது எவனே' என்பதால் கார்கால வரவில் ஆற்றியிருக்கும் தலைவி துயர்படுவதும் அறியப்படுகின்றது. எனவே இப்பாடல் முல்லையின் பாடுபொருளுடன் கார்கால மழை பெய்யுமிடமாகக் குறிஞ்சி குறிக்கப்பட்டு, திணைமயக்கமாக

இடம்பெறுகின்றது என்பது விளங்கும். இதனை, "தனியே உள்ள தன்னைத் துன்புறுத்தும் தன்மையைப் பேசுகிறாள். இப்பாடல் முல்லைக்குரியது – எனினும் மேகத்தை வருணிக்கும்போது "நெடுவரை மருங்கில்" என்ற தொடர் வந்து விட்டதால் குறிஞ்சி எனச் சேர்த்துள்ளனர்"(94) என்பர். இதனால் முல்லைப் பாடல்களில் கார் கால மழை மேகம் குறிஞ்சி நிலத்துடன் தொடர்பு படுத்தப்படும்போது முல்லையுள் குறிஞ்சி மயங்கும் என்பது உணரப்படும்.

குறிஞ்சி நில மக்களின் முல்லையொழுக்கம் படைக்கப்படுமிடத்து முல்லையுள் குறிஞ்சி மயங்குவது அறியப்படுகின்றது. தலைவன் தலைவியை உடன்போக்கில் கொண்டு சென்று தன்னூரில் திருமணம் செய்து கொண்டு திரும்பினான். அத்தலைவன், தான் தலைவியை மணந்து கொண்ட செய்தியைத் தலைவியின் உறவினரிடம் தெரிவிக்குமாறு தோழியை வேண்டிய போது தோழி கூறுவதாக அமையும் பாடல் கற்பு வாழ்க்கைக்குரியதான முல்லைத் திணையின்பாற்படும். இம்முல்லையின் பாடுபொருளில் தலைவனைக் குறிஞ்சி நிலத்தவனாகப் படைத்து முல்லையுள் குறிஞ்சி மயங்கச் செய்வர். இதனை,

***"கரு விரல் மந்திக் கல்லா வன்பார்ப்பு***
***இரு வெதிர் ஈர்ங் கழை ஏறி, சிறுகோல்***
***மதிபுடைப்பது போல் தோன்றும் நாட!***
***வரைந்தனை நீ எனக் கேட்டு யான்***
***உரைத்தனென் அல்லெனோ-அஃது என் யாய்க்கே?"*** (ஐங்.280)

என்னும் பாடல் உணர்த்தும். இதனுள், 'வரைந்தனை நீ எனக் கேட்டு'

என்பதால் கற்பிற்குரிய பாடல் என்பதும் இதனுள் குறிஞ்சி நிலத்துக் குரங்கு கழையில் ஏறி விளையாடும் குறிஞ்சிப் புனைவு திணைமயக்கமாக இடம்பெறுகிறது என்பதும் தெளிவு.

மணமனையுள் புக்க தோழி தலைவியின் கவின் கண்டுரைக்கும் முல்லைப் பாடுபொருளைப் படைக்குமிடத்து, தலைமகனைக் குறிஞ்சி நிலத்தவனாகக் குறிக்கிறார் புதுக்கயத்து வண்ணக்கன் கம்பூர்கிழானார். இதனை,

**"தீயும் வளியும் விசும்பு பயந்தாங்கு,**
**நோயும் இன்பமும் ஆகின்று மாதோ;**
............ ............ ............... ...........
***சிலம்புடன் கமழும் சாரல்***
**இலங்கு மலை நாடன் மலர்ந்த மார்பே!"** (நற்.294: 1-2, 8-9)

என்னும் பாடல் அடிகள் உணர்த்தும். இதனுள் முல்லைத் திணைக்குரிய பாடுபொருளினுள், 'சிலம்புடன் கமழும் சாரல் இயங்கு மலை நாடன்', என்று குறிஞ்சித் திணையின் முதற் பொருளாகிய நிலம் மயங்குவது அறியப்படும்.

பின்முறை ஆக்கிய பெரும்பொருள் வதுவை முடித்தவளை இல்லத்துக் கொண்டு புகுந்துழி, தலைமகள் உவந்து சொல்லியதாகப் பாடப்பெறும் பாடுபொருள் கற்பு வாழ்க்கையினைச் சார்ந்ததாகும். எனவே இப்பாடுபொருள் முல்லைத் திணைக்குரியதாகும். இவ்வாறான முல்லைப்பாடுபொருளில் தலைவனின் குறிஞ்சி நிலப்புனைவு திணைமயக்கமாகப் படைக்கப்பெறுவதைக் காணமுடிகின்றது. இதனை,

**“மயில்கள் ஆல, பெருந்தேன் இமிர,**
**தண் மழை தழீஇய மா மலைநாட!**
**நின்னினும் சிறந்தனள், எமக்கே-நீ நயந்து**
**நல்மனை அருங்கடி அயர,**
**எம் நலம் சிறப்ப, யாம் இனிப்பெற்றோளே”** (ஐங்.292)

என்னும் பாடல் உணர்த்தும். இதனுள் குறிஞ்சி நிலத்துள் மயில்கள் ஆடுதல், தேனீக்கள் ஆரவாரித்தல், மழை முகில்கள் முகட்டைத் தழுவிச் செல்லுதல் எனும் குறிஞ்சி நிலப் புனைவுகள் திணைமயக்கமாக இடம் பெறுகின்றன. இவற்றால் குறிஞ்சி நில மக்களின் முல்லையொழுக்கம் முல்லையுள் குறிஞ்சி மயங்கிய திணை மயக்கமாகப் பாடப் பெறும் என்பது அறியப்படும்.

வினை முற்றுப்பெறாது பாசறையிருப்பில் தலைவன் புலம்பிக் கூறுவதான முல்லைப் பாடுபொருளில் கார் காலம் கடந்து வந்த கூதிர் காலமும் பாசறையிருப்பின் அருகில் உள்ள குறிஞ்சி நிலமும் திணைமயக்கமாகக் குறிக்கப்படுவதைக் காணமுடிகிறது. இதனை,

**“குன்றக் குறவனொடு குறுநொடி பயிற்றும்**
**துணை நன்கு உடையள், மடந்தை; யாமே**
**வெம்பகை அருமுனைத் தண்பெயல் பொழிந்தென,**
**நீர் இரங்கு அரைநாள் மயங்கி, கூதிரொடு**
**வேறு புல வாடை அலைப்ப,**
**துணை இலேம், தமியேம், பாசறையேமே”** (நற்.341: 5-10)

என்னும் பாடல் அடிகளில் காணமுடிகின்றது. இதனுள் கார்காலம் கடந்து விட்ட நிலையில் தலைவன் கூறும் முல்லைப் பாடுபொருள்

‘துணைஇலேம் தமியேம் பாசறையேமே’ என்பதால் பெறப்படுகின்றது. இப்பாடுபொருளுள் ‘குன்றக் குறவனொடு’ என்றும், ‘கூதிரொடு வேறுபுல வாடை அலைப்ப’ என்றும் குறிஞ்சியின் முதல், கருப்பொருள்கள் மயங்குவதும் விளங்கும்.

***பாலையுள் குறிஞ்சி***

குறிஞ்சி எனும் திணைப் பகுப்பில் பாலைத்திணையின் உரிப்பொருளுடன் குறிஞ்சியின் முதல் கரு மயங்கிய திணை மயக்கம் அறியப்படுகின்றது. இத்திணைமயக்கம் குறுந்தொகை, நற்றிணை ஐங்குறுநூறு எனும் தொகைகளில் பாடல்களில் மட்டுமே காணப்படுகின்றது. குறிஞ்சித்திணைப் பகுப்பில் பாலைத்திணையின் உரிப்பொருளுடன் குறிஞ்சியின் முதல், கரு மயங்கிய நிலையில் ஐந்து பாடல்கள் காணப்படுகின்றன.[95] இவற்றுள் குறிஞ்சியின் முதல், கருப்பொருட்கள் பாலையின் பாடுபொருளைச் சிறப்பிக்கும் அளவில் அமைவது குறிக்கத்தக்கதாகிறது.

பாலையுள் குறிஞ்சி மயங்குமிடத்து குறிஞ்சி நிலம் தலைவன் பிரிந்து செல்லக் கருதிய நிலப் பகுதியாகக் குறிக்கப்படுவதைக் காண முடிகிறது. இதனை,

“***காந்தள் வேலி ஓங்குமலை நல் நாட்டுச்***

***செல்ப என்பவோ, கல்வரை மார்பர்***” (குறுந்.76: 1-2)

என்னும் அடிகளின் வழி உணர முடிகின்றது. இதனால் பிரிந்து செல்லக் கருதிய நிலமாகக் குறிஞ்சி நிலம் குறிக்கப்பட்டுப் பாலையுள் குறிஞ்சி மயங்குவதைக் காணமுடிகிறது.

தலைவனின் பிரிவைத் தலைவியிடம் கூறும் தோழியின் கூற்றில் குறிஞ்சித் திணைக்குரிய யாமப் பொழுது தலைவன் பிரிந்தால் தலைவியைத் துயரப்படுத்தும் பொழுதாகக் குறிக்கப்படுகிறது. இதனை,

**"படுமழை உருமின் உரற்று குரல்**

**நடுநாள் யாமத்தும் தமியம் கேட்டே" (நற்.129: 8-9)**

என்னும் பாடல் அடிகள் உணர்த்தும். பிரிதற்கு இயலாப் பருவம் எனவே தலைவர் பிரியார் எனக் கூறும் தோழியின் கூற்றில் பிரிதற்கு இயலாப் பருவமாகக் குறிஞ்சித் திணைக்குரிய கூதிர் காலம் கூறப்படுகிறது. இக் கூதிர் கால இயல்பு குறிஞ்சிநிலப் புனைவுடனும் அமைக்கப்பட்டு, பாலையுள் குறிஞ்சி மயங்குகின்றது. இதனை,

**"நிலம் நீர் ஆர, குன்றம் குழைப்ப,**
**அகல் வாய்ப் பைஞ்சுனைப் பயிர் கால்யாப்ப,**
**குறவர் கொன்ற குறைக் கொடி நறைப்பவர்**
**நறுங்காழ் ஆரம் சுற்றுவன அகைப்ப,**
**பெரும் பெயல் பொழிந்த தொழில எழிலி**
**தெற்கு ஏர்பு இரங்கும் அற்சிரக் காலையும்,**
**அரிதே, காதலர்ப் பிரிதல் – இன்று செல்**
**இளையர்த் தரூஉம் வாடையொடு**
**மயங்கு இதழ் மழைக்கண் பயந்த, தூதே" (நற்.5)**

என்பது உணர்த்தும். இதனுள் தலைவனின் பிரிவை எண்ணி வருந்தும் தலைவியைத் தோழி, நீ சிந்திய கண்ணீர் தலைவர் பிரிந்து செல்லாதவாறு தடுக்கும் தூதாக அமைந்துவிட்டன. எனவே அவர் பிரியார் எனக் கூறும்

பாலைப்பாடுபொருளை உணரமுடிகின்றது. இப்பாலைப் பாடுபொருளினுள் குறிஞ்சி நிலத்தைக் குளிரச் செய்த கார்கால மழைமேகம் தெற்கு நோக்கிச் சென்றுவிட்டதனால் வந்துவிட்ட கூதிர் காலமும், குன்றம், பைஞ்சுனை, குறவர் நறுங்காழ் ஆரம் என்னும் குறிஞ்சித் திணையின் முதல், கருப்பொருட்களும் திணை மயக்கமாய் இடம்பெறுவதைக் காணமுடிகின்றது. இப்பாடல்கள் பாலைப் பாடுபொருளுடன் குறிஞ்சியின் பொழுது மயங்கிய திணை மயக்கமாக அமைந்த போது குறிஞ்சி எனக் கொண்டுள்ளனர்.

தலைவியை உடன்போக்கில் அழைத்துச் செல்ல வந்த தலைவன் யாமப் பொழுதில் வந்ததாகக் குறிப்பிட்டு பாலையுள் குறிஞ்சியினை மயங்கச் செய்கிறார் கபிலர். இதனை, "உடன்போக்கு நேர்வித்த பின்பு தலைமகன் உடன் கொண்டு போவான் இடையாமத்து வந்துழி, தலைமகட்குத் தோழி சொல்லியது" எனும் துறைக்குறிப்பும் உறுதிப்படுத்தும். இத்திணைமயக்கத்தை ஐங்குறுநூற்றுப் பாடலில் காணமுடிகிறது.

> ***"கையற வீழ்ந்த மைஇல் வானமொடு***
> ***அரிது காதலர்ப் பொழுதே; அதனால்,***
> ***தெரி இழை தெளிர்ப்ப முயங்கி,***
> ***பிரியலம் என்கமோ? எழுகமோ? – தெய்யோ!"*** **(ஐங்.235)**

இதனுள் பாலையுள் குறிஞ்சியின் யாமப் பொழுது மயங்குவது அறியப்படும். கையற வீழ்ந்த மைஇல் வானம் என்பதால் யாமப் பொழுது குறிக்கப்படுகின்றது. பிரிவை உணர்த்திய தோழிக்குத் தலைவி கூறும்

பாலைத் திணையின் கூற்றில் குறிஞ்சியின் கூதிர் காலம் தலைவன் பிரியின் தலைவியை வருத்தும் பொழுதாகக் குறிக்கப்படுகிறது. இதனை,

**"தண்வரல் வாடை தூக்கும்**

**கடும் பனி அற்சிரம் நடுங்கு அஞர் உறவே"** (குறுந்.76: 5-6)

என்னும் அடிகள் உணர்த்தும். இவற்றால் பாலையுள் குறிஞ்சித் திணையின் பொழுதுகள் மயங்குமிடத்து, தலைவன் பிரிந்தால் தலைவியைத் துயரப்படுத்தும் பொழுதாகவும், தலைவன் பிரிதற்கு இயலாப் பொழுதாகவும், உடன் போக்கில் கொண்டு செல்வதற்காக தலைவன் வரும் பொழுதாகவும் குறிக்கப்படுவதைக் காண முடிகின்றது.

பாலைப் பாடுபொருளைப் படைக்குமிடத்து குறிஞ்சியின் முதல் கருவை உவமையின் வழி மயங்கச் செய்வதைக் கபிலரின் பாடலில் காண முடிகின்றது. இதனை,

**"என்றும் என்தோள் பிரிவு அறியலரே;**

**தாமரைத் தண்தாது ஊதி, மீமிசைச்**

**சாந்தில் தொடுத்த தீம் தேன் போல,**

**புரைய மன்ற புரையோர் கேண்மை;"** (நற்.1: 2-5)

என்னும் அடிகள் உணர்த்தும். இதனுள் பிரிவை உணர்த்திய தோழிக்குத் தலைவி கூறும் பாலை பாடுபொருளில் 'சாந்தின் தொடுத்த தீம்தேன்' என்று குறிஞ்சிப் புனைவு திணைமயக்கமாக இடம்பெறுவது விளங்கும். இதனால் பாலையின் பாடுபொருளுடன் குறிஞ்சியின் கூறுகள் உவமையின் வழி மயங்குவது விளங்கும்.

**மருதத்துள் குறிஞ்சி**

குறிஞ்சித் திணைப் பகுப்பில் மருதத்திணையின் பாடுபொருளுடன் குறிஞ்சியின் முதல், கரு மயங்கிய திணை மயக்கப் பாடல்கள் காணப்படுகின்றன. இவை மருதத்துள் குறிஞ்சி எனக் குறிக்கப்படுகின்றன. குறிஞ்சித் திணைப்பகுப்பில் காணப்படும் இத்திணைமயக்கப் பாடல்கள் 9 ஆகும்.[96] இவற்றுள் குறிஞ்சியின் முதல், கருப்பொருட்கள் மருதப் பாடுபொருளைச் சிறக்கச் செய்யும் வகையில் இடம்பெறுவதைக் காணமுடிகின்றது.

தலைவி, 'தலைவன் என்னை மறந்தான் பெறுதற்கரிய புதல்வனோடு என்னையும் நீத்துச் சென்றான்' எனக் கூறுவதாக அமையும் மருதத் திணைக்குரிய பாடுபொருளுடன், தலைவனைக் குறிஞ்சி நிலத்தவனாகப் படைத்து மருதத்துள் குறிஞ்சியினை மயங்கச் செய்கிறார் கபிலர். இதனை

**"புலிகொல் பெண்பால் பூவரிக் குருளை**
**வளைவெண் மருப்பின் கேழல் புரக்கும்**
**குன்றுகெழு நாடன் மறந்தனன்**
**பொன் போல் புதல்வனோடு என் நீத்தோனே" (ஐங்.265)**

என்னும் பாடல் விளக்கும். இதனுள் தலைவி ஊடல் கொண்டு, கூற்று நிகழ்த்தும் பாடற்பொருள் 'மறந்தனன் பொன்போல் புதல்வனோடு என் நீத்தோனே' என்பதால் பெறப்படும். இம்மருதப் பாடுபொருளில் குன்று, புலி, குருளை, கேழல் என்னும் குறிஞ்சியின் முதல், கருப்பொருள் மயங்குவதும் உணரப்படும். இப்பாடலுள் இடம் பெறும் திணை மயக்கத்தைக் குறிக்குமிடத்து, "இது கருப்பொருளாலும் முதற்

பொருளாலும் குறிஞ்சி ஆயின் புணர்ச்சி நிகழ வேண்டிய இடத்து ஊடல் நிகழ்ந்தது. ஆகவே இது குறிஞ்சிக்கண் மருதம் ஆகும்"[97] என்பர் ந.சுப்புரெட்டியார். மருதத்திணைப் பாடல்களில் மருதப் பாடுபொருளை மருதத்திணையின் முதல், கருப்பொருளால் அமையும் உள்ளுறை சிறப்பிக்கும். இப்பாடல் மருதத்துள் குறிஞ்சி எனும் திணைமயக்கமாக அமைந்த போதும் குறிஞ்சியின் முதல், கருப்பொருட்கள் மருதப் பாடுபொருளை விளக்கும் உள்ளுறையாகவும் அமைவதைக் காண முடிகின்றது. இதனை, "புலியால் கொல்லப்பட்ட தன் பிணவின் குட்டியைத் தந்தையாகிய கேழல் புரக்கும் நாடன் என்றது பரத்தையர் காரணமாக யான் இறந்தால் தன் புதல்வனைத் தானே வளர்க்கத் துணிந்து என்னை நீத்தான் என்பதாம்"[98] என்று விளக்குவர். இவற்றால் மருதப் பாடுபொருளில் மயங்கும் குறிஞ்சி, மருதப் பாடுபொருளுக்கேற்ப உள்ளுறையாக அமைவதும் உணரப்படும்.

வாயில் வேண்டிய தோழிக்குத் தலைவி கூறும் மருதக் கூற்றில் தலைவனைக் குறிஞ்சி நிலத்தவனாகப் படைப்பர். இதனை,

**"இசைபட வாழ்பவர் செல்வம் போலக்**
**காண்தொறும் பொலியும் கதழ்வாய் வேழம்,**
**இருங்கேழ் வயப்புலி வெரீஇ, அயலது**
**கருங்கால் வேங்கை ஊறுபட மறலி,**
**பெருஞ்சினம் தணியும் குன்ற நாடன்**
**நனி பெரிது இனியன் ஆயினும், துனிபடர்ந்து**
**ஊடல் உறுவேன் – தோழி! - நீடு**

**புலம்பு சேண் அகல நீக்கி**

**புலவி உணர்த்தல் வன்மையானே"** (நற்.217)

என்னும் பாடல் வழிக் காணமுடிகின்றது. நனி பெரிது இனியன் ஆயினும், துனிபடர்ந்து ஊடல் உறுவேன் என்பதால் மருதத்திணைக்குரிய பாடுபொருள் என்பதும், இதனுள் குன்றநாடன், வேழம், வயப்புலி, கருங்கால் வேங்கை எனும் குறிஞ்சியின் முதல், கருப்பொருட்கள் மயங்குவதும் உணரப்படும். இங்கு மருதத்துள் மயங்கிய குறிஞ்சிப் புனைவு மருதப்பாடு பொருளை உள்ளுறையால் விளக்கி நிற்கிறது. இதனை, "வேழம் வயப்புலி வெரீஇ அயலதாகிய வேங்கையொடு ஊறுபட மறலிப் பெருஞ்சினம் தணியும் என்றது வாயில் வேண்டிப் போந்த தலைமகன் யான் அதனை மறுத்தற்கஞ்சித் தன் வருத்தம் தோன்ற நினக்கு மாற்றம் வழங்கித் தன் கருத்து முற்றப் பெறுகிறான் எனத் தலைவி உள்ளுறுத்துரைத்தவாறு"[99] என்பர். இப்பாடலுள் இடம் பெறும் திணை மயக்கத்தைக் குறிக்குமிடத்து, "இது நிலத்தாற் குறிஞ்சி"[100] எனக் குறிப்பர் பின்னத்தூர் அ.நாராயணசாமி ஐயர்.

பரத்தமை யொழுக்கம் மேற்கொண்ட தலைவனைத் தோழி "கொடியன்" என்றுரைக்க, அத்தோழிக்குத் தலைவி கூறுவதாக அமையும் மருதத்திணையின் பாடுபொருளில் தலைவனை, 'குன்று கெழுநாடன்' எனக் குறிப்பிட்டு திணை மயக்கம் படைக்கிறார் கிடங்கில் குலாதி நக்கண்ணனார். இத்திணை மயக்கத்தை,

**"நெடிய திரண்ட தோள் வளை நெகிழ்த்த**

**கொடியன் ஆகிய குன்றுகெழு நாடன்**

**வருவதோர் காலை, இன்முகம் திரியாது,**

**கடவுட் கற்பின் அவன் எதிர்பேணி**

**'மடவை மன்ற நீ' எனக் கடவுபு**

**துனியல் வாழி - தோழி! - சான்றோர்**

**புகழும் முன்னர் நாணுப;**

**பழியாங்கு ஒல்பவோ காணுங்காலே?"** (குறுந்.252)

என்னும் பாடல் குறித்தமைகின்றது. இதனுள், 'பழியாங்கு ஒல்பவோ' என்பதால் தலைவி வாயில்நேர்ந்த பாடுபொருளும், குன்றுகெழுநாடன் என்பதால் மருதப் பாடுபொருளில் குறிஞ்சியின் முதல், கரு மயங்குவதும் புலப்படும். 'தலைவனது மார்பை நாம் இரந்து பெறவில்லை. தானே வந்து தந்தனன். இதற்காகத் தலைவி நம் மீது வருந்துவது ஏன்' எனக் காதற் பரத்தை கூறும் கூற்றில் தலைவனைக் குறிஞ்சி நிலத்தவனாகக் குறிப்பிட்டு திணைமயக்கம் படைக்கிறார் கபிலர். இதனை,

**"முருகு உறழ் முன்பொடு கடுஞ்சினம் செருக்கிப்**

**பொருத யானை வெண்கோடு கடுப்ப,**

**வாழை ஈன்ற வைஏந்து கொழுமுகை,**

**மெல் இயல் மகளிர் ஓதி அன்ன**

**பூவொடு துயல்வரும் மால்வரை நாடனை"** (நற்.225: 1-5)

என்னும் பாடல் அடிகளின் வழிக் காண முடிகின்றது. தலைவி வாயில் நேர்ந்ததைக் கண்டு தோழி கூறும் கூற்றில் தலைவன் தலைவியர் குறிஞ்சி நிலத்தவராகப் படைக்கப்படுபதைக் காண முடிகின்றது. இதனை,

**"வன்கட் கானவன் மென்சொல் மடமகள்**

**புன்புல மயக்கத்து உழுத ஏனல்**

**பைம்புறச் சிறு கிளி கடியும் நாட!**

**பெரிய கூறி நீப்பினும்,**

**பொய் வலைப் படூஉம் பெண்டு தவப்பலவே"** **(ஐங்.283)**

என்னும் பாடல் உணர்த்தும். தலைவன் வேண்டிய வாயிலுக்கு உடன்பட்ட தோழி, தலைவியின் முகக் குறிப்பாள் தலைவி சினம் தணியாமல் இருப்பதை உணர்ந்தாள். அந்நிலையில், 'தலைவியின் உள்ளம் நோக்காது வாயில் நேர்ந்தேன், இனித் தலைவியின் குறிப்பு உணர்ந்து செயல்படுவேன்' எனும் சிந்தனையினை மனதில் கொண்டு பிறிதொரு காரணம் பற்றிச் சென்றவள் போல் கூற்றுரைக்கும் மருதப் பாடுபொருளில் குறிஞ்சியின் முதல், கருப்பொருட்கள் தலைமகட்குரிய நிலப்புனைவாகக் கூறப்படுகின்றது. இவ்வாறு குறிஞ்சியின் முதல், கருப்பொருட்கள் மருதத்துள் மயங்குதை,

**"சிறுகட் பன்றிப் பெருஞ்சின ஒருத்தல்,**

**துறுகட் கண்ணிக் கானவர் உழுத**

**குலவுக் குரல் ஏனல் மாந்தி, ஞாங்கர்,**

**விடர் அளைப் பள்ளி வேங்கை அஞ்சாது,**

**கழை வளர் சாரல் துஞ்சும் நாடன்**

**'அணங்குடை அருஞ்சூள் தருகுவென்' என நீ,**

**'நும்மோர் அன்னோர் துன்னார் இவை' என,**

**தெரிந்து அது வியந்தனென் - தோழி!-பணிந்து நம்**

**கல்கெழு சிறுகுடிப் பொலிய,**

**வதுவை என்று அவர் வந்த ஞான்றே."** (நற்.386)

என்னும் பாடல் உணர்த்தும். இதனுள் கழைவளர் சாரல், கல்கெழுசிறுகுடி, பன்றி, கானவர், ஏனல், வேங்கை என்னும் குறிஞ்சித் திணைக்குரிய முதல், கருப்பொருட்கள் மயங்குவது விளங்கும். மருதப் பாடுபொருளில் மயங்கிய குறிஞ்சித்திணையின் கூறுகள் உள்ளுறைப் பொருள் தந்து மருதப் பாடுபொருளைச் சிறக்கச் செய்வது உணரப்படுகின்றது. இதனை, "பன்றி குறவருடைய ஏனற்கதிரைத் தின்று வேங்கைக்கு அஞ்சாது சாரலிலே துஞ்சுமென்றது, தலைமகன் பரத்தையர் இன்பம் துய்த்து உலகமகிழும் இகழ்ச்சிக்கு அஞ்சாது நின் முன்றிலிற் காத்து வைகினானென்றதாம்"(101) என விளக்குவர். தலைவன் புறத்தொழுக்கம் 'இல்லை' எனக்கூறிய நிலையில் தோழி கூறும் கூற்றில் பரத்தை குறிஞ்சி நிலத்தவளாகப் படைக்கப்படுவதை,

**"அறியேம் அல்லேம்; அறிந்தனம் மாதோ**
**பொறி வரிச் சிறைய வண்டினம் மொய்ப்பச்**
**சாந்தம் நாறும் நறியோள்**
**கூந்தல் நாறும் நின் மார்பே – தெய்யோ!" (ஐங்.240)**

என்னும் பாடல் அடிகள் உணர்த்தும். பரத்தை விறலிக்குக் கூறும் மருதத் திணையின் பாடுபொருளில் ஊர் மக்கள் குறிஞ்சி நிலத்தவராகக் குறிக்கப்படுதைக் காண முடிகின்றது. இத்திணை மயக்கத்தை,

**"எம் நயந்து உறைவி ஆயின், யாம் நயந்து**
**நல்கினம் விட்டது என்? நலத்தோன் அவ்வயின்**
**சால்பின் அளித்தல் அறியாது, அவட்கு அவன்**
**காதலன் என்னுமோ? உரைத்திசின் - தோழி!**

**நிரைத்த யானை முகத்து வரிகடுப்பப்**

**போது பொதி உடைந்த ஒண்செங்காந்தள்**

**வாழை அம் சிலம்பின் வம்பு படக்குவைஇ,**

**யாழ் ஓர்த்தன்ன இன்குரல் இனவண்டு,**

**அருவி முழவின் பாடொடு ஒராங்கு,**

**மென்மெல இசைக்கும் சாரல்,**

**குன்ற வேலித் தம் உறைவின் ஊரே"** (நற்.176)

என்னும் பாடல் விளக்கும். இதனுள் இடம்பெறும் மருதப் பாடுபொருளை "பரத்தை தலைவியின் பாங்கிக்குப் பாங்காயினார் கேட்ப, விறலிக்குச் சொல்லியது" எனும் துறைக்குறிப்பு உறுதிப்படுத்தும். இம்மருதப் பாடுபொருளுள், வாழைஅம் சிலம்பு, சாரல், குன்ற வேலி, யானை, செங்காந்தள், அருவி எனும் குறிஞ்சித்திணையின் முதல், கருப்பொருள்கள் மயங்குவது புலப்படும். இவற்றால் குறிஞ்சி நில மக்களின் மருதத்திணை யொழுக்கம் மருதத்துள் குறிஞ்சி மயங்கியதாகப் பாடப் பெற்றிருப்பதும் அப்பாடல்கள் குறிஞ்சி எனக் குறிக்கப் பெற்றிருப்பதும் விளங்கும்.

தலைவன் தனக்கு இன்பம் செய்யாது பரத்தையிடம் இருந்த போதும் அவனைக் கண்ணால் கண்டு மகிழ்வதாகக் கூறும் தலைவியின் மருதத் திணைக் கூற்றில் உவமையாகக் குறிஞ்சியின் முதல் கருவைத் திணை மயக்க நெறியில் குறிக்கிறார் பரணர். இதனை,

**"குறுந்தாட் கூதளி ஆடிய நெடுவரைப்**

**பெருந்தேன் கண்ட இருங் கால் முடவன்,**

**உட்கைச் சிறுகுடை கோலி, கீழ் இருந்து,**

**சுட்டுபு நக்கியாங்கு, காதலர்**

**நல்கார் நயவார் ஆயினும்,**

**பல்கால் காண்டலும், உள்ளத்துக்கு இனிதே”** (குறுந்.60)

என்னும் பாடல் உணர்த்தும். இவற்றால் மருதத்துள் குறிஞ்சி மயங்குதற்குக் குறிஞ்சி நில மக்களின் மருதவொழுக்கம் பாடப் பெறுவதும், மருதப் பாடலில் குறிஞ்சி நில உவமை குறிக்கப் பெறுவதும் காரணங்களாகப் பெறப்படுகின்றன.

நெய்தலுள் குறிஞ்சி

குறிஞ்சித் திணைப் பகுப்பில் நெய்தற்றிணையின் உரிப்பொருளுடன் குறிஞ்சி மயங்கிய திணை மயக்கப் பாடல் ஒன்று காணப்படுகின்றது.[102] ‘என் உள்ளமும் – உடலும் பொலிவற்றது. சந்தனமரத்தின் நீர்ச் சத்து குன்றியபின் அது இறந்து விடும். அவ்வாறே யானும் இறந்து விடுவேன். நான் இறப்பது உறுதி’ எனத் தலைவி இரங்கிக் கூறும் நெய்தற் பாடுபொருளைப் படைக்கிறார் உலோச்சனார். இந்நெய்தல் பாடுபொருளில் இனி அவர் வரினும் நோய் மருந்து அல்லர் எனத் தலைவி இரங்கிக் கூறுவதைக் காணமுடிகின்றது. இப்பாடல் நெய்தற்றிணைக்குரிய இரங்கல் உரிப்பொருளுடன் அமைவதால் உலோச்சனார் நெய்தல் திணைக்குரிய இரங்கல் உரிப்பொருள் பாட வல்லவரே என்பதை உணரமுடியும். இதனை, வ.சுப.மாணிக்கனார், “நெய்தற்றிணையில் குறிஞ்சிப் புணர் பொருள் பாடவல்ல இவர் உரிய இரங்கற் பொருளும் பாடவல்லவரே”[103] என்று கூறி இப்பாடலை எடுத்துக்காட்டுவதன் மூலம் அறியமுடியும். இப்பாடலுள் தலைவியின் உள்ள வேக்காடும் அவளின் ஆழ்ந்த

வருத்தமும் வாய் விட்டு, இரங்கிப் பேசும் தன்மையும் காணப்படுகின்றன. இதனை, "மிகப்பெரிய உள்ள வேக்காட்டிலிருந்து பொங்கிய தலைவியின் குரல் இப்பாட்டு. என்னராயினும், அன்னவாக, இன்னமாக, என வரும் வினாச் சுட்டுச் சொற்கள் அவளது ஆழ்ந்த வருத்தத்தைப் புலப்படுத்தவில்லையா? கடற்சோலைக்கு எல்லா இனிமையும் இருந்து என்ன பயன்?. அச்சோலைக் கண் அவரது தேரின் இன்னொலி கேட்கவில்லையே என்று ஒரு தலைவி வாய் விட்டுக் கேட்கும்போது அவளது ஏக்கத்தை உணர்கிறோம்"[104] என்றுரைப்பர். எனவே தலைவி வாய்விட்டுப் புலம்பியதன் அடிப்படையில் இப்பாடல் நெய்தல் பாடுபொருளாகிறது. இந்நெய்தற்பாடு பொருளில் குறிஞ்சியின் முதல் கருவை உவமையின் வழி மயங்கச் செய்கிறார் உலோச்சனார். இதனை,

**"மரல்நார் உடுக்கை மலை உறை குறவர்**
***அறியாது அறுத்த சிறியிலைச் சாந்தம்***
**வறனுற்று ஆர முருக்கி, பையென**
**மரம் வறிதாகச் சோர்ந்து உக்காக்கு..."** (நற்.64: 4-7)

என்னும் அடிகள் உணர்த்தும். இதனால் நெய்தற் பாடுபொருளில் குறிஞ்சி மயங்கியமை உவமையின் வழியாகப் பெறப்படும்.

**பாலைத் திணைப்பகுப்பும் திணை மயக்கமும்**

சங்க இலக்கியத்துள் பாலை எனக் குறிக்கப்பெறும் பாடல்கள் 530 காணப்படுகின்றன. இவற்றுள் 129 பாடல்கள் பிற திணையின் உரியுடனும் 401 பாடல்கள் பாலைத் திணையின் உரியுடனும் காணப்படுகின்றன.[105] பிற திணையின் உரியுடன் பாலையின் முதல், கரு

மயங்கிய பாடல்கள் 109 அறியப்படுகின்றன. 20 பாடல்கள் பிற திணைக்குரிய திணை மயங்காப் பாடல்களாக அமைகின்றன.[106]

**முல்லையுள் பாலை**

பாலை எனக் குறிக்கப்பெறும் சங்க இலக்கியப் பாக்களுள், முல்லையின் உரிப்பொருளுடன் பாலையின் முதல் கரு மயங்கிய பாடல்கள் 92 காணப்படுகின்றன.[107]

இளவேனிற் காலத்துள் வருவதாகக் குறித்த தலைவன் பருவ வரவில் கூறுவதாக அமையும் முல்லைத் திணையின் பாடுபொருளில் பாலைக்குரிய வேனிற்காலம் மயங்குவதைக் காணமுடிகின்றது. இத்திணை மயக்கத்தை இளவேட்டனார்,

**"இருங்கண் ஞாலத்து ஈண்டு தொழில் உதவிப்**
**பெரும் பெயல் பொழிந்த வழிநாள் அமையத்து,**
**பல்பொறி அரவின் செல்புறம் கடுப்ப**
**யாற்று அறல் நுணங்கிய நாட்பதவேனில்,**
**இணர் துதை மாஅத்த புணர்குயில் விளித்தொறும்,**
**நம் வயின் நினையும் நெஞ்சமொடு கைம்மிகக்**
**கேட்டொறும் கலுழுமால் பெரிதே - காட்ட**
**குறும்பொறை அயல நெடுந்தாள் வேங்கை**
**அம் பூந்தாது உக்கன்ன**
**நுண்பல் தித்தி மாஅயோளே" (நற்.157)**

என்று இயற்றுகின்றார். இதில் ஆற்றியிருக்கும் தலைவி, பருவ வரவில்

வருந்திக் கூறுவதான முல்லைப் பாடுபொருளில், இளவேனில் இடம் பெறுவது அறியப்படுகிறது. தலைவன் வருமளவும் ஆற்றியிருத்தல் வேண்டும் எனக் கூறும் தோழிக்குத் தலைவி கூறும் கூற்றில் தலைவன் குறித்த வேனிற்காலம் குறிக்கப்படுகின்றது. இதனை,

**"காமர் வேனில்மன் இது,**

**மாண்நலம் நுகரும் துணை உடையோர்க்கே!"**(அகநா.37: 17-18)

என்னும் அடிகள் சுட்டும். 'தோழியே, அழாதே என்று கூறுகின்றாய். ஆனால் முன்பனிக்காலம் நீங்கி இளவேனிற்காலம் வந்துவிட்டது. வெளிர்மேகங்கள் வானத்தே தவழ, குயில்களின் குரலினைக் கேட்டு எவ்வாறு ஆற்ற இயலும்' என்று தலைவி தனது ஆற்றாமைக்குக் காரணம் கூறும் முல்லைப் பாடுபொருளில் பாலைத் திணைக்குரிய இளவேனிற் பொழுது மயங்குவதை அகநானூற்றில் காணமுடிகின்றது."[108] இளவேனிற்கால வரவில் தலைவனை எதிர்நோக்கி ஆற்றியிருந்த தலைவியின் கூற்றை,

**"செங்கண் இருங்குயில் நயவரக் கூஉம்**

**இன்இள வேனிலும் வாரார்,**

**'இன்னே வருதும்' எனத் தெளித்தோரே"** (அகநா.229: 19-21)

என்று படைக்கின்றார் மதுரைக் கூலவாணிகன் சீத்தலைச்சாத்தனார். இதனுள் குயில் கூவும் இளவேனில் திணைமயக்கமாகக் குறிக்கப்படுகிறது.

'வளமான ஊர் கிடைப்பினும் தலைவர் தங்குவார் அல்லர் விரைந்து வருவர்' எனக்கூறி ஆற்றுவிக்கும் தோழியின் கூற்றில் இளவேனிற் கால வரவால் தலைவி துயரமடைவது அகநானூற்றால்

அறியப்படுகிறது.[109] அவர் வரவிற்குத் தூதாக இப்பருவம் வந்தது எனக் கூறி ஆற்றுவிக்கும் தோழியின் கூற்றில்,

**"நோதக வந்தன்றால், இளவேனில் மேதக**

**................. ................. ................. .................**

**வரும் என வந்தன்று அவர் வாய் மொழித் தூதே"**(கலித்.26:8, 25)

என்றும் தலைவன் வரவுணர்ந்து கூறும் கூற்றில்,

**"ஏதிலான் படைபோல, இறுத்தந்தது இளவேனில்.**

**நிலம் பூத்த மரமிசை நிமிர்பு ஆலும் குயில் எள்ள,**

**................. ................. ................. .................**

**காமவேள் விழவாயின், 'கலங்குவள் பெரிது' என,**

**ஏமுறு கடுந்திண்தேர் கடவி,**

**நாம் அமர் காதலர் துணைதந்தார், விரைந்தே"**

(கலித்.27:8-9, 24-26)

என்றும், பருவ வரவில் ஆற்றாளாய தலைவிக்குத் தோழி கூறும் கூற்றில்,

**"வையை வார் அவிர் அறல், இடைபோழும் பொழுதினான்**

**விரிந்து ஆனா மலராயின், விளித்து ஆலும் குயிலாயின்,"**

(கலித்.28: 7-8)

என்றும் வரவுணர்ந்து தோழி கூறும் கூற்றில்,

**"வளையவர் வண்டல் போல், வார்மணல் வடுக்கொள**

**இளையவர் ஐம்பால் போல், எக்கர் போழ்ந்து அறல் வாரா;**

**................. ................. ................. .................**

**மேதக இளவேனில் இறுத்தந்த பொழுதின்கண்"**

(கலித்.29: 5-6, 9)

என்றும், பருவ வரவில் தலைவி துயரமடைவதைக் கண்ட பாணன், பாசறைக்கண் சென்று கூறும் கூற்றில்,

**"அறல் வாரும், 'வையை' என்று அறையுநர் உளராயின்**

**என ஆங்கு**

**தணியா நோய் உழந்து ஆனாத் தகையவள்..."**(கலித். 30: 16-18)

என்றும், தலைவர் வருகின்றார் நாம் விருந்து அயர்கம் எனக் கூறும் தோழியின் கூற்றில்,

**"நயந்தார்க்கோ நல்லைமன், இளவேனில்"** (கலித். 32 : 13)

என்றும், தலைவியே நீ குயிலை இகழாதே, தலைவர் விரைந்து வந்தார் எனக் கூறும் தோழியின் கூற்றில்,

**"தாது அவிழ் வேனிலோ வந்தன்று"** (கலித்.33:9)

என்றும் வரவுணர்ந்து தோழி கூறும் கூற்றில்,

**"இன் அமர் இளவேனில்"** (கலித். 34: 7)

என்றும், துனிகொள்ளாதே அவர் வந்தார் எனக் கூறி ஆற்றுவிக்கும் கூற்றில்,

**"மலர் தாய பொழில்நண்ணி மணிநீர கயம்நிறப**

**அலர்தாய துறைநண்ணி அயிர்வரித்து அறல்வார**

**நனிஎள்ளும் குயில்நோக்கி ..."** (கலித். 35: 5-7)

என்றும், பருவ வரவு கண்டு ஆற்றாத தலைவியது நிலைமை கண்டு, ஆற்றாத தோழி தான் ஆற்றாளாய், அவட்குக் கூறும் கூற்றில்,

**“இருங்குயில் ஆலப், பெருந்துறை கவின்பெறக்,**

**குழவி வேனில் விழவு எதிர் கொள்ளும்”** (கலித். 36: 8-9)

என்றும், தலைவன் வரவுணர்ந்து தோழி கூறும் கூற்றில்,

**“ஆள் ஏமுற்ற காமர் வேனில்”** (அகநா.317:14)

என்றும், பாலைக்குரிய வேனிற் காலம் திணைமயக்கமாகக் குறிக்கப்படுகிறது. இப்பாடல்களைப் பொழுது நோக்கிப் பாலை எனக் கொண்டனர். ஆயின் இவை முல்லையின் பாடுபொருளுடன் பாலையின் கூறுகள் மயங்கிய திணை மயக்கப் பாடல்கள் என்பது விளங்கும். ஐங்குறுநூற்றுள் காணப்படும் இளவேனிற் பத்து இத்திணை மயக்க நெறியில் அமைந்ததாகும்.”[110] குறித்த பருவ வரவின்கண் மாலைப்பொழுது கண்டு கூறும் தலைவியின் கூற்றில் பாலையின் கூறுகள் மயங்குவதை,

**“அம்மவாழி, தோழி! சிறியிலைக்**

**குறுஞ்சினை வேம்பின் நறும்பழம் உணீஇய**

**வாவல் உகக்கும் மாலையும்**

**இன்று கொல், தோழி! அவர் சென்ற நாட்டே”** (ஐங்.339)

என்னும் பாடல் உணர்த்தும். இதனுள் இடம்பெறும் திணை மயக்கத்தை “பாலைக்கண் மாலை வந்தது.”[111] என்பர் நச்சினார்க்கினியர். “முல்லைக்குரிய மாலைப்பொழுது மயங்கிய பாலைப்பாட்டு இச்செய்யுள்”[112] என்பர். ஆயின் இப்பாடலுள் இடம்பெறும் பாடுபொருள் முல்லைக்குரியதாகும். இது துறைக்குறிப்பாலும் உறுதிப்படுகின்றது.

எனவே மாலை என்பது பாடுபொருளுக்கு ஏற்ப வர, வேம்பின் பழம் பழுக்கும் பருவமான வேனிற்காலமே திணை மயக்கமாக இடம்பெறுகின்றது. எனவே முல்லையின் பாடுபொருள் மாலைப் பொழுது எனும் இவற்றுடன் பாலையின் வேனில் மயங்கிய திணை மயக்கம் என்பது உணரப்படும்.

வேனிற்காலம் வந்தும் தலைவன் வாராமையால் வருந்தியுரைக்கும் தலைவியின் கூற்றில் பாலையின் வேனில் திணை மயக்கமாய் இடம் பெறுவதை,

**"சிதர் சிதர்ந்து உகுத்த செவ்விவேனில்**
**வந்தன்று அம்ம, தானே;**
***வாரார் தோழி! நம் காதலோரே"*** (அகநா.277.18-20)

என்னும் பாடல் அடிகள் உணர்த்தும். வினைவயிற் பிரிந்த தலைமகன் வருவேன் எனக் குறித்த இளவேனிற் காலத்துள் வராமையால் தலைவி, 'நம்மை மறந்தாரோ' என வருந்தியுரைப்பதைக் காணமுடிகின்றது. இவ்வாறு பருவ வரவில் தலைவி கூறும் முல்லைத்திணையின் பாடுபொருளில் பாலைத் திணையின் வேனிற்கால இயல்பு திணைமயக்கமாக இடம்பெறுவதை,

**"அடைகரை மாஅத்து அலங்கு சினை பொலியத்**
**தளிர் கவின் எய்திய தண்நறும் பொதும்பில்,**
**சேவலொடு கெழீஇய செங்கண் இருங்குயில்**
**புகன்று எதிர் ஆலும் பூ மலி காலையும்,**
**'அகன்றோர் மன்ற நம் மறந்திசினோர்'. . ."** (நற்.118: 1-5)

என்னும் அடிகள் விளக்கும். இவ்வாறான அமைப்பில் முல்லையுள் பாலையின் வேனில் மயங்குவதை சங்கப் பாடல்கள் பலவற்றுள் காணமுடிகின்றது.[113] வேனிற்காலத்தே வினைமுடித்து வந்ததைக் கேட்ட தோழி தலைவிக்குக் கூறும் கூற்றில் வேனில் இடம்பெறுவதைக் காணமுடிகின்றது. இதனை,

**"நல் தளிர் நயவர நுடங்கும்**

**முற்றா வேனில் முன்னி வந்தோரே!"** (நற்.86: 8-9)

என்னும் அடிகள் உணர்த்தும். தலைவன் மீண்டு வந்த செய்தியைக் கூறும் முல்லைப் பாடுபொருளில் பாலைத் திணைக்குரிய இளவேனில் இடம்பெறுவதை,

***"குரவம் மலர, மரவம் பூப்ப,***

***சுரன் அணி கொண்ட கானம் காணூஉ***

***'அழுங்குக, செய்பொருட் செலவு!' என விரும்பி நின்***

***அம் கலிழ் மாமை கவின***

***வந்தனர் - தோழி! - நம் காதலோரே"*** (ஐங்.357)

என்னும் பாடல் உணர்த்தும்.

இவற்றால் தலைவன் இளவேனிற் காலத்துள் வினை முற்றுப் பெற்று வருவான் எனும் நடைமுறையின் வழி முல்லைப் பாடுபொருளில் பாலையின் இளவேனில் மயங்குவது விளங்கும். எனினும் இப்பாடல்கள் பாலையின் கூறினை நோக்கி பாலை எனக் குறிக்கப்பட்டன.

பாலைத் திணைக்குரிய புலனெறி வழக்கில் பனிப்பருவமும் கொள்ளப்பெறும். வினைமுற்றி மீண்டு வருவேன் எனக் கூறும் தலைவன்

பனிப்பருவத்தே வருவேன் எனக்கூறிச் சென்ற நிலையில் அப்பனிப் பருவ வரவில் தலைவி ஆற்றாளாகத் தோழி கூறும் முல்லைப் பாடுபொருளிலும் பாலையின் பனிக்காலம் இடம்பெறுவதைக் காணமுடிகின்றது. இதனை,

**"நனிசேய் நாட்டர்; நம் உன்னலரே;**
**யாங்குச் செய்வாம் கொல்- தோழி!-ஈங்கைய**
**வண்ணத் துய்ம்மலர் உதிர**
**முன்னர்த் தோன்றும் பனிக் கடு நாளே!"** (குறுந்.380: 4-7)

என்னும் அடிகள் சுட்டும். தலைமகன் வினைமுற்றி மீண்டமை உணர்ந்த தோழி கூறும் பாடலில் பாலைக்குரிய பனிக்காலம்,

**"பனி அடூஉ நின்ற பானாட் கங்குல்"** (அகநா. 125: 11)

என்று திணைமயக்கமாகக் கூறப்படுகின்றது. இளவேனிற் காலத்து வருவேன் எனக் கூறிச் சென்ற தலைமகன் பருவ வரவில் வாராது காலம் நீட்டித்து வந்தான். அத்தலைவன் இளவேனில், முன்பனிக்காலத்தும் வாராது பின்பனிக் காலத்தே வருவதால் வரவு உணர்ந்து கூறுவதான முல்லைப் பாடுபொருளில் பின்பனியும் திணைமயக்கமாக இடம்பெறுவதை காணமுடிகின்றது. இதனை,

**"புகை எனப் புதல் சூழ்ந்து, பூ அங்கண் பொதி செய்யா**
**முகைவெண்பால் நுதிபொர, முற்றிய கடும்பனி?**
**என ஆங்கு ........... ................ ................**
**வாளாதி, வயங்கிழாய்! 'வருந்துவள் இவள்' என,**

**நாள்வரை நிறுத்துத் தாம் சொல்லிய பொய் அன்றி**

**மீளிவேற் தானையர் புகுதந்தாள்"** (கலித். 31: 19-24)

என்னும் அடிகள் விளக்கும்.

முல்லையுள் பாலை மயங்கும் பாடல்களில் தலைவன் வினைமுற்றி வரும் வழி முல்லை நிலமாகக் குறிக்கப் பெறாது பாலை நிலமாகக் குறிக்கப் பெறுவதைக் காணமுடிகிறது. இதனை,

**"திருந்து இழை அரிவை! நின்நலம் உள்ளி,**

**'அருஞ்செயல் பொருட்பிணி பெருந்திரு உறுக'! எனச்**

**சொல்லாது பெயர் தந்தேனே – பல் பொறிச்**

**சிறுகண் யானை திரி தரும்**

**நெறி விலங்கு அதர கானத்தானே "** (ஐங்.355)

என்னும் பாடல் வழி உணர முடியும். பொருள்முற்றி மீளும் தலைமகன் தேர்ப்பாகற்குக் கூறும் கூற்றில் தலைவன் கடந்து செல்ல வேண்டிய பாலை நிலத்தைக் குறிப்பிடுகின்றான். இதனை,

**"கோட்புலி வழங்கும் சோலை**

**எனைத்து என்று எண்ணுகோ-முயக்கிடை மலைமேவ!"**

(குறுந்.237: 6-7)

என்னும் அடிகள் குறிக்கும். வினைமேற் சென்ற தலைவன் வினைமுடித்து மீண்டு வரும்போது, தன்நெஞ்சம் தனக்கு முன்பே தன் தலைவிபாற் சென்றுவிட்டதைத் தேர்ப்பாகற்குக் கூறுகின்றான். இக்கூற்று முல்லையின் பாடுபொருளாகக் கொள்ளத்தக்கது. இதனுள்,

**"நெடுமால் வரைய குடினையோடு இரட்டும்**

**குன்று பின் ஒழியப் போகி, உரம் துரந்து**

**ஞாயிறு படினும் 'ஊர் சேய்த்து' எனாது,**

**.................. .................... .................. ..................**

**மென்தோள் பெற நசைஇச் சென்ற என் நெஞ்சே"**

(அகநா.9: 13-15, 26)

என்று தலைவன் கடந்து வரும் வழி பாலையாகக் குறிக்கப்பெறுவதைக் காணமுடிகின்றது. பிரிந்த தலைமகன் வரவுணர்ந்து தோழி தலைமகட்குச் சொல்லும் முல்லைத் திணைக்கூற்றில் தலைவன் பாலை நிலத்தைக் கடந்து வந்த தன்மை கூறப்படுகின்றது. இதனை,

**"அத்தப் பலவின் வெயில் தின் சிறுகாய்**

**அருஞ்சுரம் செல்வோர், அருந்தினர் கழியும்**

**காடு பின் ஒழிய வந்தனர்..."** (ஐங்.351: 1-3)

என்னும் பாடல் அடிகள் குறிக்கும். இதனை,

**"விழுத்தொடை மறவர் வில்லிடத் தொலைந்தோர்**

**எருத்துடை நடுகல் அன்ன விழுப் பிணர்ப்**

**பெருங்கை யானை இருஞ்சினம் உறைக்கும்**

**வெஞ்சுரம் 'அரிய' என்னார்,**

**வந்தனர் - தோழி! - நம் காதலோரே!"** (ஐங்.352)

என்னும் பாடல் அடிகளும்,

**"நீ இனிது முயங்க, வந்தனர்**

**மா இருஞ்சோலை மலை இறந்தோரே"** (ஐங்.353: 3-4)

என்னும் பாடல் அடிகளும்,

**"ஈர்ம் பிணவு புணர்ந்த செந்நாய் ஏற்றை**

**மறியுடை மான்பிணை கொள்ளாது கழியும்**

**அரிய சுரன் வந்தனரே"** (ஐங்.354: 1-3)

என்னும் பாடலடிகளும் உணர்த்தும். தலைமகன் பொருள்முடித்து வந்ததை வாயில்கள்வாய்க் கேட்ட தோழி தலைமகளுக்குக் கூறும் கூற்றில் தலைவன் பாலை வழிகளைக் கடந்து வந்த செய்தி கூறப்படுகின்றது. இதனை,

**"பார்வை வேட்டுவன் படுவலை வெரீஇ,**

**நெடுங்கால் கணந்துள்அம் புலம்பு கொள் தெள்விளி**

**சுரம் செல் கோடியர் கதுமென இசைக்கும்**

**நரம்பொடு கொள்ளும் அத்தத்து ஆங்கண்,**

**கடுங்குரற் பம்பைக் கதநாய் வடுகர்**

**நெடும் பெருங்குன்றம் நீந்தி, நம் வயின்**

**வந்தனர், வாழி, தோழி . . . . ."** (நற்.212: 1-7)

என்னும் அடிகள் விளக்கும்.

இதனால் கார் கால வரவிற்கு முன்பே வினை முற்றி வரும் தலைமகனின் முல்லைத் திணைக் கூற்றில் தலைவன் வரும் வழி பாலையாகக் குறிக்கப்பட்டு முல்லையுள் பாலை மயங்கும் என்பது விளங்கும். வினைமுற்றி வரும் தலைமகன் வரும் வழியைப் பாலையாகப் படைத்துத் திணை மயக்கம் அமைப்பதைப் பொருந்தில் இளங்கீரனார்,

**"குறைவினை முடித்த நிறைவு இன்இயக்கம்**

**அறிவுறுஉம் கொல்லோ தானே கதிர் தெற,**

**கழல் இலை உகுத்த கால்பொரு தாழ்சினை**

**அழல் அகைந்தன்ன அம்குழைப் பொதும்பில்,**

**புழல்வீ இருப்பைப் புன்காட்டு அத்தம்**

**மறுதரல் உள்ளமொடு குறுக..."** (அகநா.351: 4-9)

என்று குறிப்பர். வினைமுற்றி வந்த தலைமகன் தலைவியை நலம் பாராட்டிக் கூறுமிடத்துப் பாலைவழி வந்த செய்தி,

**"ஒள்ளரி மேய்ந்த சுரத்திடை**

**உள்ளம் வாங்க, தந்த நின் குணனே"** (ஐங்.356: 3-4)

**"அரும் பொருள் வேட்கையம் ஆகி, நிற்துறந்து**

**பெருங்கல் அதரிடைப் பிரிந்த காலைத்**

**தவநனி நெடிய ஆயின; இனியே,**

**அணியிழை உள்ளியாம் வருதலின்**

**நணிய ஆயின - சுரத்திடை ஆறே"** (ஐங்.359)

என்றும்,

**"எரிகவர்ந்து உண்ட என்றூழ் நீள் இடை**

**அரிய ஆயினும், எளிய அன்றே"** (ஐங்.360: 1-2)

என்றும் குறிக்கப்படுகின்றது. இவற்றால் வினைமுற்றி வரும் தலைமகன் பாலை நிலத்தின் வழியே வந்ததாக அமைக்கப்பட்டு முல்லையுள் பாலை மயங்குவதை அறிய முடிகின்றது.

முல்லைப் பாடல்களில் தலைவன் பிரிந்து சென்ற பாலை நிலம் திணை மயக்கமாகக் குறிக்கப்படுவது பெறப்படுகிறது. குறித்த பருவத்தில்

வாராது பிரிவு நீட்டித்த நிலையில் ஆற்றியிருக்கும் தலைவியின் கூற்றில் தலைவன் சென்ற நீண்ட இடைவெளியைத் தலைவி நோக்கியிருப்பது கூறப்படுகிறது. இதனை,

**"நீள் இடை அத்தம் நோக்கி"** (நற்397: 2)

என்னும் அடி உணர்த்தும். வினைமுற்றி மீளும் தலைமகன் தனது நெஞ்சு தலைவியைப் பெற்று மகிழட்டும் என்கிறான், இக்கூற்றுள் தலைவனின் நெஞ்சு பாலைவழியே வினைமேற் சென்ற நிலையில் எய்திய துயரமும் ஒப்பிட்டுரைக்கப்படுகிறது. இதனை,

**"கடுங்கண் மறவர் கல்கெழு குறும்பின்**
**எழுந்த தண்ணுமை இடங்கட் பாணி,**
**அருஞ்சுரம் செல்வோர் நெஞ்சம் துண்ணென,**
**குன்றுசேர் கவலை, இசைக்கும் அத்தம்**
**நனிநீடு உழந்தனை மன்னே! அதனால்**
**உவஇனி - வாழிய, நெஞ்சே...!"** (அகநா.87: 7-12)

என்பது உணர்த்தும். பொருள்முற்றி மறுத்தரும் தலைமகன் தோழிக்கு உரைப்பானாய்க் கிழத்தியைத் தெருட்டிக் கூறும் முல்லையின் பாடுபொருளில் தலைவன் வினைமேற்சென்ற பாலைநிலம் குறிக்கப்படுகின்றது. பாலையின் கொடுமைகளை நினைக்காது தலைவியின் நட்பை நினைத்திருந்த தன்மை தலைவனால் கூறப்படுகிறது. இதனை,

**"சுரந் தலைப்பட்ட நெல்லி அம் பசுங்காய்**
**மறப்புலிக் குருளை கோள் இடம் கரக்கும்**

**இறப்பு அருங்குன்றம் இறந்த யாமே,**

**குறுநடைப் புள் உள்ளலமே, நெறிமுதல்**

**கடற்றில் கலித்த முடச் சினை வெட்சித்**

**தளை அவிழ் பல்போது கமழும்**

**மை இருங்கூந்தல் மடந்தை நட்பே"** (குறுந்.209)

என்னும் பாடல் விளக்கும். இதனுள் சுரம், அருங்குன்றம் எனப் பாலை நிலப்புனைவு திணைமயக்கமாகக் குறிக்கப்படுவது புலப்படும்.

பாலையின் வெம்மையினை எவ்வாறு போக்கினீர் என்று தோழி வினவியவழித் தலைவன் கூறும் முல்லைத்திணையுள் பாலையின் புனைவு குறிக்கப்படுகின்றது. இதனை,

**"எரி கவர்ந்து உண்ட என்றூழ் நீள் இடைச்**

**சிறிது கண் படுப்பினும் காண்குவென்........."** (ஐங்.324: 1-2)

**"வேனில் அரையத்து இலை ஒலி வெரீஇ**

**போகில் புகா உண்ணாது, பிறிது புலம்படரும்**

**வெம்பு அலை அருஞ் சுரம் நலியாது**

**எம் வெங்காதலி பண்பு துணைப் பெற்றே"** (ஐங்: 325)

எனும் அடிகள் விளக்கும். வினைமுற்றி வந்த தலைவன் பாலையிற் சென்ற போது நெல்லியினை அருந்தி உயிர் பிழைத்துச் சென்றதைக் குறிக்கின்றான்.(114) 'என் உடம்பே பாலை நிலத்துள் இருந்தது என் நினைவுகள் உன் அருகே இருந்தது' என்று குறிக்கின்றான்.(115) இதனை,

**"வினவல் ஆனாப் புனையிழை! - கேள் இனி**

**வெம்மை தண்டா எரி உகு பறந்தலை,**

கொம்மை வாடிய இயவுள் யானை
நீர் மருங்கு அறியாது, தேர் மருங்கு ஓடி,
அறுநீர் அம்பியின் நெறிமுதல் உணங்கும்
உள்ளுநர்ப் பனிக்கும் ஊக்கு அருங் கடத்திடை
எள்ளல் நோனாப் பொருள் தரல் விருப்பொடு
நாணுத் தளை ஆக வைகி, மாண்வினைக்கு
உடம்பு ஆண்டு ஒழிந்தமை அல்லதை,
மடம் கெழு நெஞ்சம் நின் உழையதுவே" (அகநா.29: 14-23)

என்னும் அடிகள் உணர்த்தும். பொருள் முற்றி வந்த தலைமகனிடம் எம்மை என்றேனும் நினைத்துப் பார்த்தீரோ என வினவிய தலைவிக்குத் தலைவன், காட்டுத்தீயும் யானைக் கூட்டமும் நிறைந்த பாலை நிலத்துள் கனவு கண்டு வருந்தியதைக் குறிக்கிறான்.[116]

பருவ வரவில் வருந்தியுரைக்கும் தலைவியின் முல்லைத் திணைக்குரிய கூற்றில் தலைவன் சென்ற பாலை நிலம் குறிக்கப்படுகிறது. இதனை,

"நிலம் கரி கள்ளிஅம் காடு இறந்தோரே" (குறுந். 67: 5)
"வாடா வள்ளிஅம் காடு இறந்தோரே" (குறுந். 216: 2)
"ஊன் நசைஇப் பருந்து இருந்து உகக்கும்
வான் உயர் பிறங்கல் மலை இறந்தோரே" (குறுந்.285: 7-8)
"அத்த நீள் இடை அழப்பிரிந்தோரே?" (குறுந். 307: 9)
"மைசூழ் வெற்பின் மலை பல இறந்து" (நற். 214: 7)
"வழங்கு அருங்கானம் இறந்திசினோரே?" (நற். 302: 10)

**“அத்தம் ஆர் அழுவம் நத்துறந்து அருளார்”** (அகநா.183: 3)

**“அருஞ்சுரம் இறந்தோர்...”** (ஐங். 317: 3)

**“மா இருஞ் சோலை மலை இறந்தோரே”** (ஐங். 353: 4)

என்பன உணர்த்தும். இன்று அவர் வருவர் என்று கூறித் தலைவியை ஆற்றுவிக்கும் தோழியின் கூற்றில் தலைவன் சென்ற பாலைநிலப் புனைவு திணைமயக்கமாகக் கூறப்படுகின்றது. இதனை,

**“படரும் பைபயப் பெயரும்; சுடரும்**
**என்றூழ் மா மலை மறையும்; இன்று அவர்**
**வருவர் கொல், வாழி- தோழி! -நீர்இல்**
**வறுங் கயம் துழைஇய இலங்கு மருப்பு யானை**
**குறும்பொறை மருங்கின் அமர்துணை தழீஇக்**
**கொடு வரி இரும்புலி காக்கும்**
**நெடுவரை மருங்கின் சுரன் இறந்தோரே”** (குறுந்.215)

என்னும் பாடல் சுட்டும். ‘உள்ளார் கொல்லோ? தோழி- உள்ளியும் வாய்ப் புணர்வு இன்மையின் வாரார் கொல்லோ’ எனக் கூறி ஆற்றுவிக்கும் தோழியின் முல்லைப் பாடுபொருளில் தலைவன் சென்ற பாலைநிலப் புனைவு,

**“மரற்புகா அருந்திய மா எருத்து இரலை,**
**உரற்கால் யானை ஒடித்து உண்டு எஞ்சிய**
**யாஅ வரி நிழல், துஞ்சும்**
**மா இருஞ்சோலை மலை இறந்தோரே”** (குறுந்.232: 3-6)

என்று திணை மயக்கமாக இடம்பெறுவது அறியப்படுகிறது. தலைவனின்

வரவிற்கான நிமித்தங்களைக் கண்டு ஆற்றாளாய தலைமகட்குக் கூறும் தோழி கூற்றான முல்லைப் பாடுபொருளில் தலைவன் சென்ற பாலைநிலப் புனைவு,

**“மண் எடுத்து உண்ணும் அண்ணல் யானை**

**வண் தேர்த் தொண்டையர் வழை அமல் அடுக்கத்து,**

**கன்று இல் ஓர் ஆ விலங்கிய**

**புன் தாள் ஓமைய சுரன் இறந்தோரே”** (குறுந்.260: 5-8)

என்று திணைமயக்கமாக இடம்பெறுகின்றது. வருவர் எனக் கூறி ஆற்றுவிக்கும் முல்லைப் பாடுபொருளில்,

**“பருவரல் நெஞ்சமொடு பல்படர் அகல**

**வருவர் வாழி - தோழி** .............

................. ..................... ..................... .....................

**கடாஅம் கழீஇய கதன் அடங்கு யானைத்**

**தடாஅ நிலை ஒரு கோட்டன்ன**

**ஒன்று இலங்கு அருவிய குன்று இறந்தோரே”**(நற். 18: 1-2, 8-10)

என்று பாலையின் கூறுகள் மயங்குகின்றன. இன்னும் வாரார் ஆயினும் வேறு எங்கும் செல்ல மாட்டார் விரைவில் வருவார் எனக் கூறி ஆற்றுவிக்கும். தோழியின் கூற்றில் தலைவன்,

**“கொலை வல் வேட்டுவன் வலை பரிந்து போகிய**

**கானப் புறவின் சேவல் வாய் நூல்**

**சிலம்பிஅம் சினை வெரூஉம்**

**அலங்கல் உலவைஅம் காடு இறந்தோரே?”** (நற்.189: 7-10)

என்று பாலைப் புனைவுடன் கூறப்படுகிறான்.

'நன்னிமித்தங்கள் தோன்றின, கொன்றையும், பிடவும் மலரும் பொருட்டு, அவர் வரும் எனக்கூறிய பருவமும் இதுவே' எனக் கூறி ஆற்றுவிக்கும் தோழியின் கூற்றில்,

**"உரம்புரி உள்ளமொடு சுரம் பல நீந்தி,**

**செய்பொருட்கு அகன்றனர் ஆயினும் . . . "** (நற்.246: 5-6)

என்று தலைவன் சென்ற பாலைநிலப் புனைவு கூறப்படுகின்றது. "உதுக்காண் இருவிசும்பு அதிர மின்னி, கருவி மாமழை கடல் முகந்தனவே" என்று பருவ வரவு காட்டி ஆற்றுவிக்கும் தோழியின் கூற்றில் தலைவன் சென்ற பாலைநிலம்,

**"வரையா நயவினர் நிரையம் பேணார்,**

**கொன்று ஆற்றுத் துறந்த மாக்களின் அடு பிணன்**

**இடு முடை மருங்கில், தொடு இடம் பெறாஅது,**

**புனிற்று நிரை கதித்த, பொறிய முது பாறு**

**இறகு புடைத்து இற்ற பறைப் புன் தூவி**

**செங்கணைச் செறித்த வன்கண் ஆடவர்**

**ஆடு கொள் நெஞ்சமோடு அதர் பார்த்து அல்கும்,**

**அத்தம் இறந்தனர் ஆயினும். . . . "** (நற்.329: 1-8)

என்று குறிக்கப்படுகின்றது. 'உதுக்காண், நெடும் பெருங்குன்றம் முற்றி, கடும்பெயல் பொழியும், கலிகெழு வானே', எனப் பருவங்காட்டி ஆற்றுவிக்கும் தோழியின் கூற்றில்

**"ஒல்லாச் செந்தொடை ஒரீஇய கண்ணிக்**

**கல்லா மழவர் வல்லிடை விலங்கிய**

**துன் அருங்கவலை அருஞ் சுரம் இறந்தோர்"** (நற்.387: 3-5)

என்று தலைவன் சென்ற பாலைநிலப்புனைவு கூறப்படுகின்றது.

‘தான்குறித்த இளவேனிற் பருவத்தே வாராமையால் வெறுப்புற்று வருந்தாதே, இளையாளே நீ இங்ஙனம் துன்பம் அடையுமாறு செய்த என் உயிர் வருந்துவதாக எனும் மென்மை வார்த்தைகளைக் கூற அவர் வருவார்’ என ஆற்றுவிக்கும் தோழியின் கூற்றில்,

**“கல்மிசை அருவிய காடு இறந்தோரே”** (அகநா.25: 22)

என்று தலைவன் சென்ற பாலைநிலமும் கூறப்படுகின்றது. ‘தலைமகன் பருவ வரவில் வாராது நீட்டித்தான்’ எனக் கூறி வருந்தும் தலைவியை வருவர் எனக் கூறி ஆற்றுவிக்கும் தோழியின் கூற்றில் தலைவன் சென்ற பாலைநிலம் திணைமயக்கமாகக் கூறப்படுகிறது. இதனை,

**“பராரை நெல்லி அம் புளித்திரள் காய்**
**கான மடமரைக் கணநிரை கவரும்**
**வேனில் அத்தம் என்னாது, ஏமுற்று**
**விண் பொரு நெடுங்குடை இயல்தேர் மோரியர்**
**பொன் புனை திகிரி திரிதரக் குறைத்த**
**அறை இறந்து அகன்றனர் ஆயினும், எனையதூஉம்**
**நீடலர் - வாழி, தோழி! . . . . .”** (அகநா.69: 7-13)

என்னும் அடிகள் உணர்த்தும். ‘தலைவியே, தலைவன் இன்னும் வரவில்லையே இனி என்ன செய்வது என்று நாள்தோறும் வருந்தாதே சிறிது காலம் நீட்டித்த போதும் வருவர்’ எனக் கூறி ஆற்றுவிக்கும் தோழியின் கூற்றில் தலைவன் சென்ற பாலைநிலப் புனைவு,

**“கழை அமல் சிலம்பின் வழைதலை வாடக்**
**கதிர் கதம் கற்ற ஏ கல் நெறியிடை,**

**பைங்கொடிப் பாகற் செங்கனி நசைஇ,**

**கான மஞ்ஞைக் கமஞ்சூல் மாப்பெடை**

**அயிர் யாற்று அடைகரை வயிரின் நரலும்**

**காடு இறந்து அகன்றோர் நீடினர் ஆயினும்**

**வல்லே வருவர் ............"** (அகநா.177 : 7-13)

என்று திணைமயக்கமாகக் குறிப்பிடப்படுகிறது. உன்கண்களில் வடியும் நீரைத் துடைக்கும் பொருட்டு இதோ தலைவர் வந்தனர் எனக் கூறி தலைவியை ஆற்றுவிக்கும் தோழியின் கூற்றில்

**"இளையர் பதிப்பெயரும் அருஞ்சுரம் இறந்தோர்"**(அகநா.269: 13)

என்று பாலை குறிக்கப்படுகிறது.

அழுது நீர் சொரிந்த கண்களையும் பசலை பாய்ந்த தோள்களையும் பிறர் அறியாவாறு மறைத்து ஆற்றியிருக்கும் நிலையில், தலைவன் காலம் நீட்டிக்கத் தலைவி துயரம் அடைகின்றாள். அத்தலைவியை ஆற்றுவிக்கும் தோழியின் கூற்றில் தலைவன் பாலை நிலத்தே சென்ற தன்மை திணைமயக்கமாகக் குறிக்கப்பெறுகின்றது.[117] சென்ற தலைவர் பொருள் முடித்து வந்தான் என்பது வாயில்கள் வாய்க்கேட்டு தோழி தலைவிக்குக் கூறும் கூற்றில் தலைவன் சென்ற பாலை நிலம் குறிக்கப்படுகின்றது. இதனை,

**"உறை துறந்திருந்த புறவில், தனாது**

**செங்கதிர்ச் செல்வன் தெறுதலின், மண்பக,**

**உலகு மிக வருந்தி உயாவுறு காலைச்**

**சென்றனர் ஆயினும், நன்று செய்தனர்..... ".** (நற்.164: 1-4)

என்பதால் அறியமுடியும். பொருள் ஈட்டும் முயற்சியில் வெற்றி பெற்று நம்மிடத்தே வந்து சேர்ந்தார் எனக் கூறும் தோழியின் கூற்றில் தலைவன் சென்ற பாலைநிலச் செய்தி திணைமயக்கமாக இடம்பெறுதலை அகநானூற்றில் காணமுடிகின்றது.(118)

அவ்வாறே முல்லைப் பாடு பொருளில் தலைவன் சென்ற நிலம் திணை மயக்கமாகக் குறிக்கப்படுவதைச் சங்கப் பாடல்கள் உணர்த்துகின்றன."(119)

ஆற்றியிருக்கும் தலைவி தனது துயர மிகுதியால் தலைவனைக் காணச் செல்வோம் என்றுரைக்கின்றாள். இம்முல்லைத் திணைக் கூற்றில் பாலைப் புனைவு தேடிச் செல்ல வேண்டிய வழியாகக் குறிக்கப்படுகிறது. இதனை,

**"வறல்மரம் பொருந்திய சிள் வீடு, உமணர்**
**கணநிரை மணியின், ஆர்க்கும் சுரன் இறந்து,**
**அழி நீர் மீன் பெயர்ந்தாங்கு, அவர்**
**வழிநடைச் சேறல் வலித்திசின், யானே."** (அகநா. 303: 17-20)

என்பது உணர்த்தும். இதனுள் 'சுரன்' என்பது பாலைப் புனைவாக மயங்குகிறது. ஆற்றியிருக்கும் முல்லைப் பாடு பொருளில் பாலைச் செய்தி உவமையின் வழி மயங்குவதை,

**"விட்டுச் சென்றனர் நம்மே**
**தட்டைத் தீயின் ஊர் அலர் எழவே"** (ஐங். 340:3-4)

என்னும் அடிகள் சுட்டும். இவற்றால் முல்லையுள் பாலை மயங்குமிடத்து, பாலைச்செய்தி தலைவன் மீண்டு வரும் பொழுதாகவும், நிலமாகவும், பிரிந்து சென்ற நிலமாகவும், உவமையாகவும் குறிக்கப்பட்டு மயங்குவதும், இப்பாடல்கள் 'முல்லையுள் பாலை' எனக் குறிக்கப்பெறாது பாலை எனக் குறிக்கப்பட்டுள்ளன என்பதும் தெளிவு.

**குறிஞ்சியுள் பாலை**

பாலை எனக் குறிக்கப் பெறும் சங்க இலக்கியப் பாக்களுள் குறிஞ்சியின் உரிப்பொருளுடன் பாலையின் முதல் கரு மயங்கிய திணை மயக்க நிலையில் 13 பாடல்கள் அறியப்படுகின்றன.[120]

நலம் பாராட்டல் எனும் குறிஞ்சித் திணையின் பாடுபொருளில் தலைவி பாலை நில எயினரின் தங்கையாகக் குறிக்கப்படுகின்றாள். பாலை நிலத்துள் மக்கள் வாழ்ந்தனர் என்பதை, "எயினர் பாலைநில மாந்தராவார். ஆறலைத்தல் இவர்தம் குலத்தொழிலாம். இவர்கள் குறும்புகள் அமைத்து வாழ்ந்தனர் என்பதைப் பெரும்பாணாற்றுப் படையாலும் பிற சங்க இலக்கியங்களாலும் அறியலாம். இக்குடியினருள் சிலர் புலமை பெற்றிருந்தனர் எனக் கருத இடமுண்டு. இளஎயினி, குறியெயினி, எயிற்றியனார் என்று புலவர்கள் அறியப்படுகின்றனர்"[121] என்று குறிப்பர். பாலை நில மக்களின் வாழ்க்கை முறையினைக் குறிக்குமிடத்து, "பாலை நில மக்கள் அப்பகுதியில் எவ்வளவு வறட்சி ஏற்பட்டாலும் அங்கிருந்து செல்லாமல் அப்பகுதியிலேயே வாழ்ந்துள்ளனர். அவர்கள் அப்பகுதியின் தன்மைக்கேற்ப வாழ வேண்டிய சூழ்நிலையில் வாழ்க்கை முறைகளும் வேறுபடுகின்றன"[122] என்பர் சு.இராசாராம்.

இவற்றால் பாலை நிலத்துள் மக்கள் வாழ்ந்தமை உறுதிப்படுகின்றது. இப்பாலை நிலத்து எயினரின் தங்கையினை நலம் பாராட்டிக் கூறும் தலைவன் கூற்றால் குறிஞ்சிப் பாடுபொருளில் பாலை மயங்குதல் பெறப்படுகின்றது. இத்திணை மயக்கம்,

**"சிலைவில் பகழிச் செந்துவர் ஆடைக்**

**கொலைவில் எயினர் தங்கை! நின் முலைய**

**சுணங்கு என நினைதி நீயே;**

**அணங்கு என நினையும், என் அணங்குறு நெஞ்சே"** (ஐங்.363)

என்னும் பாடலுள் காண முடிகின்றது. இப்பாடலுள் காணப்பெறும் திணை மயக்கத்தை, "புணர்தற் பொருண்மை வந்ததாயினும் 'கொலைவிலெயினர் தங்கை' எனப் பாலைக்குரிய மக்கட்பெயர் கூறுதலிற் பாலையாயிற்று"(123) என்பர் இளம்பூரணர். "இப்பாலைப் பாட்டினுள் புணர்தலென்னும் உரிப்பொருள் வந்தது"(124) என்பர். இவற்றால் குறிஞ்சியுள் பாலை மயங்கிய திணை மயக்கமும், இத்திணைமயக்கம் பாலை எனும் பகுப்பில் கொள்ளப்பட்டுள்ளமையும் புலப்படும்.

வரைவிடை வைத்துப் பிரிந்த தலைவன் மீள்கின்ற நிலையில் கூறும் குறிஞ்சித்திணைப் பாடுபொருளில் தலைவி பாலை நிலத்தவளாகக் குறிக்கப்பட்டு குறிஞ்சியுள் பாலைத் திணையின் கூறுகள் மயங்குவதைக் காணமுடிகின்றது. இதனை,

**"கணமா தொலைச்சித் தன்னையர் தந்த**

**நிண ஊன் வல்சிப் படுபுள் ஓப்பும்**

**நலம் மாண் எயிற்றி போலப் பல மிகு**

**நன்னல நயவரவு உடையை**

**என் நோற்றனையோ? - மாவின் தளிரே!"** (ஐங்.365)

என்னும் பாடல் உணர்த்தும். இதனுள் திணைமயக்கமாக இடம்பெறும் பாலை நிலப் புனைவு 'எயிற்றி' என்பதால் பெறப்படுகின்றது.

வரையாது பிரிந்து வரும் தலைவன் வாடைக்குக் கூறும் குறிஞ்சித்திணையின் பாடுபொருளில் தலைவி வசிக்கும் சூழல் பாலைநிலப் புனைவாகக் குறிக்கப்பட்டு குறிஞ்சியுள் பாலை மயங்குவதை,

**"ஓம்புமதி; வாழியோ-வாடை!-பாம்பின்**

**தூங்கு தோல் கடுக்கும் தூவெள் அருவிக்**

**கல் உயர் நண்ணியதுவே- நெல்லி**

**மரையினம் ஆரும் முன்றிற்**

**புல்வேய் குரம்பை நல்லோள் ஊரே"** (குறுந். 235)

என்னும் பாடல் உணர்த்துகின்றது. இதில் நெல்லி, குரம்பை என்பன பாலைநிலப் புனைவாக மயங்குகின்றன.

உடன் போயின பின் தோழி செவிலிக்கு அறத்தொடு நின்றாள்; அச்செவிலி நற்றாய்க்கு அறத்தொடு நின்றாள் என்பதாக அமையும் குறிஞ்சியின் பாடுபொருளில் தலைவன் பாலைப் பாடலுக்குரியவனாகக் குறிக்கப்படுகிறான். இதனை,

**"வாய்ஆ கின்றே - தோழி! ஆய் கழல்**

**சேயிலை வெள்வேல் விடலையொடு**

**தொகுவளை முன்கை மடந்தை நட்பே"** (குறுந்.15: 4-6)

என்னும் அடிகளின் வழி உணரமுடியும். இதனால் குறிஞ்சிப் பாடு பொருளில் தலைவன் பாலைத் திணைப் பாடலுக்கான மரபின் அடிப்படையில் 'விடலை' எனக் குறிக்கப்பட்டு திணை மயங்குவது உணரப்படும்.

தோழி குறை நயப்பக் கூறும் குறிஞ்சியின் பாடு பொருளில் குறிஞ்சி நிலம் இளவேனிற்கால இயல்புடன் கூறப்பட்டு குறிஞ்சியுள் பாலை மயங்குவதை அறிய முடிகிறது. இதனை,

**"மணி என இழி தரும் அருவி, பொன் என**
**வேங்கை தாய ஓங்குமலை அடுக்கத்து,**
**ஆடு கழை நிவந்த பைங்கண் மூங்கில்**
**ஓடு மழை கிழிக்கும் சென்னி,**
**கோடு உயர் பிறங்கல், மலைகிழவோனே!"** (நற்.28.5-9)

என்பது உணர்த்தும். குறிஞ்சி வேனிற்கால இயல்பில் கூறப்படுவதால் பாலைப் புனைவாக மயங்குகிறது.

தோழி அறத்தொடு நிற்கும் குறிஞ்சிப்பாடு பொருளில் தலைவியின் காதல் தோன்றிய காலம் பாலைக்குரிய வேனிலாகக் குறிக்கப்பட்டு குறிஞ்சியுள் பாலை மயங்குகிறது. இத்திணை மயக்கத்தை,

**"பொரி அரைக் கோங்கின் பொன் மருள் பசுவீ**
**விரி இணர் வேங்கையொடு, வேறுபட மிலைச்சி,**
**விரவு மலர் அணிந்த வேனில் கான்யாற்றுத்**

தேரொடு குறுக வந்தோன்

பேரொடு புணர்ந்தன்று – அன்னை! – இவள் உயிரே” (ஐங்.367)

என்னும் பாடலுள் காண முடியும். இதில் காணப்படும் திணை மயக்கத்தை, “இது காலத்தாற் பாலை”[125] எனக் குறிப்பர் ஐங்குறுநூற்றின் பழைய உரையாசிரியர். இவ்வாறே வேனிற்காலத்தை பூத்தரு புணர்ச்சியைக் கூறி அறந்தொடு நிற்கும் குறிஞ்சிப் பாடுபொருளுள் பாலை மயங்குதல் உணரப்படுகின்றது. இதனை,

“அன்னாய் வாழி! வேண்டு, அன்னை! ‘என்தோழி

பசந்தனள் பெரிது’ எனச் சிவந்த கண்ணை,

கொன்னே கடவுதி ஆயின், என்னதூஉம்

அறிய ஆகுமோ மற்றே

முறிஇணர்க் கோங்கம் பயந்தமாறே?” (ஐங்.366)

என்னும் பாடல்வழி அறியமுடியும். இதனுள் காணப்பெறும் திணை மயக்கத்தை, “இது முன்னாள் அவன் தந்த கோங்கம் பூவால் விளைந்ததென்ப – பூத்தரு புணர்ச்சி கூறியவாறாயிற்று – இது கருப்பொருளாற் பாலை”[126] என்பர் பழையவுரைகாரர். “இஃது இவ்வேறுபாடு என் என்ற செவிலிக்குத் தோழி பூத்தரு புணர்ச்சியால் அறத்தொடு நின்றது. இது பாலையிற் குறிஞ்சி”[127] என்பர் நச்சினார்க்கினியர். “இது பூத்தரு புணர்ச்சியால் தோழி செவிலிக்கு அறத்தோடு நின்றது. இது பாலையிற் குறிஞ்சி – கருப்பொருளால் பாலை; ஒழுக்கத்தால் குறிஞ்சி”[128] என்பர் ந. சுப்புரெட்டியார். இவற்றால் குறிஞ்சியின் பாடுபொருளில் களவு நிகழ்ந்த காலமாக வேனில்

குறிக்கப்பட்டு குறிஞ்சியுள் பாலை மயங்கும் திணை மயக்கம் அறியப்படும்.

களவுக்காலத்தில் வரைவிற்கான பொருள் தேடிச் செல்வதற்காகப் பிரியும் தலைவன், மீண்டும் இளவேனிற்காலத்தில் வந்து விளையாடி மகிழ்வதாகக் குறிக்கின்றான். இத்தலைவனுக்குத் தோழிகூறும் கூற்றாக அமையும் பாடல் களவுத் திணையான குறிஞ்சித்திணைக்குரியதாகும். இக்குறிஞ்சிப் பாடுபொருளுள் பாலையின் வேனிற்கால இயல்பு திணை மயக்கமாக இடம்பெறுவதை,

**"எரிப்பூ இலவத்து ஊழ் கழி பல்மலர்**
**பொரிப்பூம் புன்கின் புகர் நிழல் வரிக்கும்**
**தண்பத வேனில் இன்ப நுகர்ச்சி**
**எம்மொடு கொண்மோ, பெரும! - நின்**
**அம் மெல்லோதி அழிவிலள் எனினே!"** (ஐங்.368)

என்னும் பாடல் உணர்த்தும். இதனுள், 'தண்பத வேனில்' எனும் பாலைத்திணையின் புனைவு குறிஞ்சியின் பாடுபொருளுடன் மயங்குவது உணரப்படும்.

வரைவுகடாவும் குறிஞ்சித் திணையின் கூற்றில் தலைவன் வரும் வழியிடத்துள்ள ஏதம் குறிக்கப்பெறும். குறிஞ்சியுள் பாலை மயங்கிய திணைமயக்கப் பாடலுள் தலைவன் கடந்து வரும் வழியில் உள்ள ஏதம் பாலை நிலத்தால் வருவதாகக் குறிக்கப்படுகிறது. இதனை,

**“பதுக்கைத்து ஆய ஒதுக்கு அருங்கவலை,**

**சிறுகண்யானை உறுபகை நினையாது,**

**யாங்கு வந்தனையோ - பூந்தார்மார்ப!**

**அருள்புரி நெஞ்சம் உய்த்தர**

**இருள் பொர நின்ற இரவினானே?”** (ஐங்.362)

என்னும் பாடலுள் காணமுடியும். இதனுள் பாலைநிலத்து ஏதம் வரைவு கடாவும் தோழியால் குறிக்கப்படுகிறது. இதனை, “பதுக்கை – பாலைப் பரப்பிலே ஆறலை கள்வர் தம்மாற் கொல்லப்பட்டோர் உடலைக் கற்கொண்டு மூடிய கற்குவியல்கள் – யானை முதலிய கொடிய விலங்குகளைக் கண்டுழி மறைந்துய்தற்கும் சோலை முதலிய சூழல்களில்லாத பாழ் வெளியாயிற்றே! என்று பரிவாள் ஒதுக்கருங்கவலை என்றாள்”(129) என்று விளக்குவர். இதனால் வரைவு கடாவும் தோழியின் குறிஞ்சித் திணைக் கூற்றில் தலைவன் கடந்து வரும் பாலைவழியின் ஏதம் குறிக்கப்பட்டு குறிஞ்சியுள் பாலை மயங்குவது பெறப்படும்.

களவில் தலைவன் கடமையின் பொருட்டுப் பிரிந்து சென்ற நிலையில் தோழி தலைவனை இயற்பழிப்பதும் அதற்குத் தலைவி இயற்பட மொழிதலுமான குறிஞ்சியின் பாடுபொருளில் தலைவன் வினைமேற்சென்ற நிலம் பாலையாகக் குறிக்கப்பட்டு குறிஞ்சித்திணையின் பாடுபொருளுடன் பாலைத் திணையின் முதல், கரு மயங்குவதைக் காணமுடிகின்றது. இதனை,

**“தொல் கவின் தொலைய தோள் நலம் சாஅய**

**நல்கார் நீத்தனர் ஆயினும், நல்குவர்;**

**கடுமான் புல்லிய காடு இறந்தோரே"** (நற்.14: 1-2, 11)

என்னும் அடிகள் உணர்த்தும். இதனுள், 'கடுமான் புல்லிய காடு' என்பது பாலைப் புனைவாக மயங்குகின்றது. பட்டபின்றை வரையாது கிழவோன் நெட்டிடைக் கழிந்து பொருள்வயிற் பிரிய ஆற்றாளாகித் தலைவி கூறும் களவுக் காலத்தைய கூற்றில் தலைவன் சென்ற நிலம் பாலையாகக் குறிக்கப்பட்டு குறிஞ்சியின் பாடுபொருளில் பாலை மயங்குவதைக் காண முடிகின்றது. இதனை,

**"வெம்மலை அருஞ்சுரம் இறந்தோர்க்கு**

**என் நிலை உரையாய், சென்று, அவண் வரவே"** (நற்.277: 11-12)

என்னும் அடிகள் உணர்த்தும். இதனுள் மயங்கும் பாலைப் புனைவு 'வெம்மலை அருஞ்சுரம்' என்பதாகும்.

அறத்தொடு நின்ற பின்பு திருமணம் செய்து கொள்ளாமல் தலைவன் பொருள் தேடிச் சென்ற நிலையில் தலைவி ஆற்றாமை அடைகின்றாள். அத்தலைவியை ஆற்றுவிக்கும் தோழி, 'கார்காலம் வந்து விட்டது. தலைவன் இனி வந்து மணம்புரிவர்' எனக் குறிக்கின்றாள். இவ்வாறு தோழியின் கூற்றாக அமையும் பாடலானது களவுக் காலச் செய்தியினையுடையதால் குறிஞ்சித் திணைக்குரிய பாடுபொருளாகும். இப்பாடுபொருளுள் தலைவன் பிரிந்து சென்ற நிலம், 'வாடு பெருங்காடு' எனப் பாலைநிலப் புனைவாகவும், அக்காட்டுள் கார்கால மழை பெய்யும் என்பதை, 'கழைமாய் நீத்தம் காடு அலை ஆர்ப்ப தழங்கு குரல் ஏறொடு முழங்கி வானம் இன்னே பெய்ய மின்னுமால்' என்று முல்லை

திணைக்குரிய புனைவாகவும் குறிக்கப்பட்டு குறிஞ்சித்திணையுள் பாலை மற்றும் முல்லைத் திணையின் கூறுகள் மயங்குவதைக் காணமுடிகின்றது. இத்திணை மயக்கத்தை நல்வெள்ளியார்,

**"சூருடை நனந் தலைச் சுனை நீர் மல்க,**
**பெருவரை அடுக்கத்து அருவி ஆர்ப்ப,**
**கல் அலைத்து இழிதரும் கடுவரற் கான்யாற்றுக்**
**கழைமாய் நீத்தம் காடு அலை ஆர்ப்ப,**
**தழங்கு குரல் ஏறொடு முழங்கி, வானம்**
**இன்னே பெய்ய மின்னுமால் - தோழி!**
**வெண்ணெல் அருந்திய வரி நுதல் யானை**
**தன்நறுஞ் சிலம்பில் துஞ்சும்**
**சிறியிலைச் சந்தின வாடு பெருங்காட்டே"** (நற்.7)

என்று படைக்கின்றார். வரைவிடை வைத்த பிரிவின் கண் தோழி கூறுவதாக அமையும் குறிஞ்சிப் பாடுபொருளில் தலைவன் செல்லவிருக்கும் நிலப்புனைவாகப் பாலை நிலப்புனைவும் 'தன்னால் தலைவியை ஆற்றுவிக்க இயலாதவாறு கார்காலம் வரும்' என முல்லைத் திணையின் பொழுதும் திணைமயக்கமாக இடம் பெறுவதைக் காணமுடிகின்றது. இத்திணை மயக்கத்தை,

**"பிணங்குஅரில் வாடிய பழவிறல் நனந்தலை,**
**உணங்கு ஊண் ஆயத்து ஓர் ஆன் தெள்மணி**
**பைபய இசைக்கும் அத்தம், வை எயிற்று**
**இவளொடும் செலினோ நன்றே; குவளை**

நீர் சூழ் மாமலர் அன்ன கண் அழ,
கலை ஒழி பிணையின் கலங்கி, மாறி
அன்பிலிர் அகறிர் ஆயின், என்பரம்
ஆகுவது அன்று, இவள் அவலம்-நாகத்து
அணங்குடை அருந்தலை உடலி, வலன்ஏர்பு,
ஆர்கலி நல் ஏறு திரிதரும்
கார்செய் மாலை வரூஉம் போழ்தே" (நற்.37)

என்னும் பாடல் உணர்த்தும். இவற்றால் பாலை நில மக்களின் குறிஞ்சியொழுக்கம் பாடப் பெறுவதும், தலைவன் பாலைப் பாடலுக்குரிய பெயரால் குறிக்கப் பெறுவதும் குறிஞ்சி நிலம் வேனிற் கால இயல்புடன் கூறப் பெறுவதும், குறிஞ்சியுள் பாலைத்திணை மயங்குவதற்கான காரணிகளாக அமைவது உணரப்படும்.

**மருதத்துள் பாலை**

பாலை எனும் திணைப்பகுப்பில் மருத உரியுடன் பாலையின் முதல் கரு மயங்கிய திணை மயக்கப் பாடல்கள் நான்கு அறியக் கிடக்கின்றன.[128]

வினைமுற்றி வந்த அண்மையில் தலைவன் பரத்தமை யொழுக்கத்தானாக ஆனான். அதனால் தலைவி வருத்தம் எய்தினாள். தலைவி வருந்துவதைக் கண்ட தோழி 'பாலை வழியில் சென்ற தலைவர் வந்தனர். இனி வருந்துவது ஏன்' என வினவினாள். இத்தோழிக்குத் தலைவி, தலைவனின் பரத்தமை ஒழுக்கத்தைச் சுட்டியுரைப்பதாக அமையும் மருதத் திணைக்குரிய பாடுபொருளில் தோழி வினவியதைக்

கொண்டெடுத்து மொழியும் பகுதியில் பாலைத் திணைப்புனைவு குறிக்கப்படுகிறது. இதனை,

**“கற்றை ஈந்தின் முற்றுக் குலை அன்ன**
**ஆள் இல் அத்தத் தாள்அம் போந்தைக்**
**கோளுடை நெடுஞ்சினை ஆண்குரல் விளிப்பின்**
**புலி எதிர் வழங்கும் வளி வழங்கு ஆர் இடைச்**
**சென்ற காதலர் வந்து, இனிது முயங்கி**
**பிரியாது ஒருவழி உறையினும், பெரிது அழிந்து**
**உயங்கினை, மடந்தை! என்றி - தோழி**
**அற்றும் ஆகும், அஃது அறியாதோர்க்கே;**
**விழாக் கொள்கை வீழ்ந்த கொண்டி**
**மல்லல் மார்பு மடுத்தனன்**
**புல்லுமற்று எவனோ அன்பு இலங்கடையே?” (நற்.174)**

என்னும் பாடலுள் காணமுடிகின்றது. இதனுள், ‘புல்லுமற்று எவனோ அன்பு இலங்கடையே’ எனும் மருதத் திணையின் பாடுபொருளில், ‘ஆள் இல் அத்தம்’, ‘புலி எதிர் வழங்கும் வளி வழங்கு ஆர்இடை’ என்னும் பாலைத் திணைப் புனைவுகள் மயங்குவது உணரப்படும். மருதப் பாடு பொருளில் மயங்கும் இப்பாலைப் புனைவு மருதப் பாடுபொருளை விளக்கும்விதமாய் அமைகிறது. இதனை, “ஈந்தின் முற்றுக் குலை போன்றது தாளிப் பனங்குலை யென்றது பரத்தையும் என் போலத் தலைமகனுக்குரியளாயினாளென்றதாம்”[131] என்றும், “தாளிப்பனை மடலிலிருந்து ஆண் பறவை பெண் பறவையை விளித்தால் புலி எதிரொலியெடுப்ப முழங்கா நிற்குமென்றது, இல்லத்திருக்கும் யான்

கணவனை விரும்பி ஏற்பின் அயலே பரத்தை முழக்கத்தோடு தலைவனை அழையா நிற்குமென்றதாம்"[132] என்றும் விளக்குவர். இதனால் வினை முற்றி வந்த அண்மைக் காலத்தில் தலைவனிடம் தோன்றிய பரத்தமை ஒழுக்கத்தைப் பாடுமிடத்து மருதத்துள் பாலைத்திணைப் புனைவு திணைமயக்கமாகக் குறிக்கப்பெறும் என்பது விளங்கும்.

வாயில் மறுக்கும் தோழி, 'இன்று பரத்தையிடம் இருந்து வந்த தலைவன் மீண்டும் செல்லாதிருப்பான் என்பதை அறிய முடியாது' என்று கூறுகின்றாள். இக் கூற்றுள் தலைவன் பொருள்வயிற் பிரியான் என எண்ணியிருந்த நிலையில் பிரிந்து சென்ற நிகழ்வு உறழ்ந்து கூறப்பட்டுத் திணை மயக்கம் படைக்கப்படுகிறது. இதனை,

***"சிறுபல் குன்றம் இறப்போர்;***

***அறிவார் யார், அவர் முன்னியவ்வே"*** (நற். 269: 8-9)

என்னும் பாடல் அடிகளின் வழி உணரமுடியும். இதனுள், 'அறிவார் யார் அவர் முன்னியவ்வே' எனத் தோழி வாயில் மறுக்கும் மருதத் திணையின் பாடுபொருளுடன், 'சிறுபல் குன்றம் இறப்போர்' எனப் பாலைத்திணையின் புனைவு திணைமயக்கமாகக் கூறப்படுகின்றது. இதனால் தலைவனின் பாலையொழுக்கச் செயல்பாடு மருதவொழுக்க நிகழ்வுடன் உறழ்ந்து நோக்கப்படுமிடத்து மருதத்துள் பாலை மயங்கும் என்பது விளங்கும்.

'யாரையும் அறியேன்' என்று கூறும் தலைமகனுக்குத் தலைவி கூறுவதாக அமையும் மருதத் திணையின் பாடுபொருளில் உவமையின் வழிப் பாலைப் புனைவு திணைமயக்கமாகக் குறிக்கப்படுவதைக் காண முடிகின்றது. இதனை,

**“வளமலர் ததைந்த வண்டுபடு நறும்பொழில்**

**முளைநிரை முறுவல் ஒருத்தியொடு, நெருநல்**

**குறிநீ செய்தனை என்ப; அலரே,**

**குரவ! நீள் சினை உறையும்**

**பருவமாக் குயிற் கௌவையின் பெரிதே!”** (ஐங். 369)

என்னும் பாடல்வழி உணர முடிகின்றது. இதனுள், ‘ஒருத்தியொடு நெருநல் குறி நீ செய்தனை’ என்னும் மருதத்திணைக்குரிய பாடுபொருளுடன் வேனிற்காலத்திற்குரியதான குரவு, குயிற்குரல் என்பன திணைமயக்கமாகக் குறிக்கப்பெறுகின்றன. இதனுள் காணப் பெறும் திணை மயக்கத்தை, “இது பாலைக்குரித்தாகிய வேனிற்கண் நிகழும் குரவும் குயிலும் கூறுதலாற் பாலையாயிற்று”[133] என்பர் பழையவுரைகாரர். “இஃது ஊடற் பொருண்மைத் தேனும் வேனிற் காலத்து நிகழும் குயில் குரலை உவமித்தலிற் பாலைத் திணையாயிற்று”[134] என்பர் இளம்பூரணர். “இது பாலைக்கண் மருதம் நிகழ்ந்தது”[135] என்பர் நச்சினார்க்கினியர். “வேனிலுக்குரிய குரவும் குயிலும் சுட்டினமையால் பாலையாயிற்று. பாலையில் மருதம் நிகழ்ந்தது”[136] என்பர் அ.தட்சிணாமூர்த்தி.

தலைவன் பரத்தையொருத்திக்குப் பூவணிந்தான் என்பதைக் கேட்ட தலைமகள், ‘அஃது இல்லை’ என மறைக்கும் தலைமகற்குக் கூறும் கூற்றில் உவமையின் வழி பாலை மயங்குதல் அறியப்படுகிறது. இதனை,

**“வன் சினைக் கோங்கின் தண் கமழ் படலை**

**இருஞ்சிறை வண்டின் பெருங்கிளை மொய்ப்ப,**

**நீ நயந்து உறையப்பட்டோள்**

**யாவளோ? எம் மறையாதீம்மே"** (ஐங்.370)

என்னும் பாடல் உணர்த்தும். இப்பாடலின் திணை மயக்க அமைப்பை, "இது பாலைக்குரிய கருப்பொருளாகிய கோங்கு கூறினமையால் பாலையாயிற்று"(137) என்பர் பழையவுரைகாரர். "பரத்தைக்கு பூவணிந்தமை கேட்ட தலைவி அஃதின்றென்றாற்குக் கூறியது. இவை பாலைக்கண் மருதம் நிகழ்ந்தது"(138) என்பர் நச்சினார்க்கினியர். இவற்றால் மருதப் பாடுபொருளில் உவமையின் வழி பாலை மயங்குதல் உணரப்படுகிறது. எனவே, தலைவன் வினைமுற்றி வந்து அண்மையில் நிகழ்ந்த மருதவொழுக்கம் பாடப்பெறும் பொழுதும், மருதவொழுக்கம் பாலையொழுக்கத்துடன் உறழ்ந்து நோக்கிக் கூறப்படுமிடத்தும். மருதப்பாடலில் பாலைப் புனைவு உவமையாகக் குறிக்கப்படுமிடத்தும் மருதத்துள் பாலை மயங்கும் என்பது உணரப்படும்.

**மருதத் திணைப்பகுப்பும் திணைமயக்கமும்**

சங்க இலக்கியத்துள் மருதம் எனக் குறிக்கப்பெறும் பாடல்கள் 263 காணப்படுகின்றன. இவற்றுள் 42 பாடல்கள் பிறதிணையின் உரிப்பொருளுடனும், 221 பாடல்கள் மருத உரிப் பொருளுடனும் காணப்படுகின்றன.(139) இவற்றுள் பிற திணையின் உரிப்பொருளுடன் மருதத்தின் முதல், கரு மயங்கிய திணைமயக்கப் பாடல்கள் 32 ஆகும். பிற திணைக்குரிய திணை மயங்காப் பாடல்கள் 10 ஆகும்.(140)

**முல்லையுள் மருதம்**

முல்லையின் உரிப்பொருளுடன் மருதத்திணையின் முதல், கரு மயங்கிய திணை மயக்கம் மருதம் எனக் குறிக்கப் பெறும். சங்க இலக்கியப் பாக்களுள் இத்தகைய திணைமயக்கப் பாடல்கள் 10 அறியப்படுகின்றன."(141)

களவின் வழி வந்த கற்பு வாழ்வில் தலைவன் 'நான் வரைவு நீட்டித்த நிலையில் தங்களின் திறம் யாது?' என வினவ அத்தலைவனுக்குத் தோழி கூறுவதாக அமையும் முல்லையின் பாடு பொருளில் தலைவன் மருத நிலத்தவனாகக் குறிக்கப்பட்டு முல்லையுள் மருதம் மயங்குவதை அறிய முடிகின்றது. இதனை,

**"மலர்ந்த பொய்கை, முகைந்த தாமரைத்**

**தண் துறை ஊரன் வரைக!**

**எந்தையும் கொடுக்க! என வேட்டேமே"** (ஐங். 6: 4-6)

என்னும் பாடல் அடிகளின் வழிக் காணமுடிகின்றது. களவில் ஆற்றியிருந்த நிகழ்வு கற்பு வாழ்வில் பேசப்படுகின்றது. எனவே பாடுபொருள் கற்பிற்கு உரியது என்பதும் இம்முல்லையின் பாடுபொருளுடன் பொய்கை, தண்துறை ஊரன், தாமரை என்னும் மருதநிலப் புனைவுகள் திணைமயக்கமாகக் குறிக்கப்படுகின்றன என்பதும் விளங்கும். இவ்வமைப்பில் தண்துறை ஊரன், மருதமரம் எனும் மருதநிலப் புனைவுகள் மயங்குவதை,

**"உளைப்பூ மருதத்துக் கிளைக்குருகு இருக்கும்**

**தண் துறை ஊரன் தன் ஊர்க்**

**கொண்டனன் செல்க! என வேட்டேமே"** (ஐங்.7: 4-6)

என்னும் பாடலடிகள் உணர்த்தும். தண்துறை ஊரன், வைக்கோல்போர், கயல் எனும் மருதப் புனைவுகள் மயங்குவதை,

**"கயல் ஆர் நாரை போர்வில் சேக்கும்**

**தண்துறை ஊரன் கேண்மை**

**அம்பல் ஆகற்க என வேட்டேமே"** (ஐங்.9: 4-6)

என்னும் அடிகள் சுட்டும். தண்துறைஊரன், மாமரம், புலால் அம் சிறுமீன் எனும் புனைவுகள் திணை மயக்கமாக இடம்பெறுவதை,

**பூத்த மாஅத்து, புலால் அம் சிறுமீன்**

**தண்துறை ஊரன் தன்னொடு**

**கொண்டனன் செல்க! என வேட்டேமே"** (ஐங்.10: 4-6)

என்னும் அடிகள் குறிக்கும். இவற்றால் வேட்கைப்பத்தில் பின் ஐந்து பாடல்கள் முல்லையின் பாடுபொருளுடன் மருதத்திணையின் முதல், கருப்பொருள்கள் மயங்கிய திணை மயக்கம் அமைந்தன என்பது தெளிவு பெறும். இப்பாடல்கள் முல்லையின் பாடுபொருளை உடையன என்பதை, "ஐங்குறுநூற்றின் முதற்பத்தாக அமையும். வேட்கைப் பத்து வழங்கும் ஐந்து பாடல்கள் இங்குக் குறிக்கத்தக்கன. இப்பத்தின் முதலைந்து பாடல்கள் மருத உரிப்பொருளையுடையன. பின்னைய ஐந்து பாடல்கள் முல்லையைச் சார்ந்தவை"[(142)] என்று விளக்குவர் இலா.குளோறியா. இவற்றால் முல்லையின் பாடுபொருளுடன் மருதத்திணையின் முதல் கருப்பொருள் மயங்குவது உணரப்படும்.

ஆற்றியிருக்கும் தலைவியைத் துயரடையச் செய்யும் மாலைப் பொழுது மருத நிலச் சூழலுடன் கூறப்பட்டு, முல்லையுள் மயங்குவதைக் காண முடிகின்றது. இதனை,

**"ஆம்பற் பூவின் சாம்பல் அன்ன**
**கூம்பிய சிறகர் மனை உறை குரீஇ**
**முன்றில் உணங்கல் மாந்தி, மன்றத்து**
**எருவின் நுண்தாது குடைவன ஆடி,**
**இல் இறைப் பள்ளித் தம் பிள்ளையொடு வதியும்**
**புன்கண் மாலையும், புலம்பும்,**
**இன்று கொல் - தோழி! - அவர் சென்ற நாட்டே?"** (குறுந். 46)

என்னும் பாடல் உணர்த்தும். இத்திணைமயக்கத்தைக் கழார்க்கீரன் எயிற்றியார்,

**"நலத்தகைப் புலைத்தி பசை தோய்த்து எடுத்துத்**
**தலைப்புடைப் போக்கித் தண் கயத்து இட்ட**
**நீரின் பிரியாப் பருஉத்திரி கடுக்கும்**
**பேர் இலைப் பகன்றைப் பொதி அவிழ் வான்பூ**
**இன் கடுங் கள்ளின் மணம் இல கமழும்**
**புன்கண் மாலையும், புலம்பும்,**
**இன்று கொல் - தோழி! - அவர் சென்ற நாட்டே?"**(குறுந். 330)

என்று பாடுவர். இப்பாடல்களுள் இடம்பெறும் மருதப்புனைவு மனை, இல், தண்கயம் என்னும் சொற்களால் விளங்கும். இங்கு முல்லையுள் மருதம் மயங்குகின்றது. எனினும் 'மருதம்' எனக் கொண்டனர். இதனை,

“புன்கண் மாலையும் புலம்பும் – இன்று கொல் தோழி அவர் சென்ற நாட்டே (குறுந்46, 330, ஐங்.330) என்று தலைவி தோழியிடம் கூறும் பாடல்கள் முல்லைக்குரிய உரிப்பொருளும் மாலை எனும் சிறு பொழுதும் கொண்டுள்ளன. எனினும் மாலை வருணனையில் உள்ள குறிப்புகளைக் கொண்டு மருதத்திணை என்று கூறியுள்ளார். ஆயின் மருதத்திற்குரிய உரிப்பொருள் குறிப்பு எதுவும் காணப்படவில்லை. எனவே இப்பாடல்களை முல்லை எனக் கொள்வதே பொருத்தம்”[(143)] என்பர் நா.செயராமன். ஆற்றியிருக்கும் தலைவியின் கூற்றில் வாடைக் காலத்தை மருத நில இயல்புடன் குறிப்பிட்டு முல்லையுள் மருதம் மயங்கும் திணைமயக்கம் படைக்கப்படுகிறது. இதனை,

***“நாண் இல மன்ற, எம் கண்ணே – நாள் நேர்பு,***
***சினைப் பசும்பாம்பின் சூல் முதிர்ப்பன்ன***
***கனைத்த கரும்பின் கூம்பு பொதி அவிழ***
***நுண் உறை அழிதுளி தலைஇய***
***தண்வரல் வாடையும், பிரிந்திசினோர்க்கு அழலே”*** (குறுந். 35)

என்னும் பாடல் உணர்த்தும். இதனுள், தலைவி ஆற்றியிருக்கும் முல்லைப் பாடுபொருளுடன் ‘கரும்பு பொதி அவிழும்’ என்று மருதப் புனைவு திணைமயக்கமாக இடம்பெறுவது புலப்படும்.

மருத நிலப் புனைவுடன் மருதத்திற்குரிய விடியற்காலமும் மயங்குமாறு, வினைமுற்றி வந்து இல்லத்திருக்கும் தலைமகனின் முல்லைத் திணைக்குரியக் கூற்றைப் படைக்கிறார் மதுரைக் கண்ணனார். இத்திணை மயக்கம்,

**“யாணர் ஊரனொடு வதிந்த**

**ஏம இன்துயில் எடுப்பியோயே”** (குறுந். 107: 6-7)

என்னும் பாடலடிகளால் உணரப்படும். தலைவி தலைவனுடன் இல்லத்தே இனிதிருப்பது ஏம இன்துயில் என்பதால் பெறப்படுகிறது. இதனுடன் 'யாணர் ஊரன்' எனும் மருதத்திணைக்குரிய புனைவு திணைமயக்கமாக இடம்பெறுகின்றது. இவற்றால் முல்லைப் பாடுபொருளில் மருதத் திணையின் முதல், கருப்பொருட்கள் மயங்குவது உணரப்படும்.

தலைவன் தலைவியரின் இல்லறச் சிறப்பைக் காணச் சென்ற தோழியின் கூற்றில் உவமையின் வழி மருதம் மயங்கப் பாடுகிறார் நெடும் பல்லியத்தையார். இதனை,

**“அயிரை பரந்த அம்தண் பழனத்து**

**ஏந்து எழில் மலர தூம்புடைத் திரள்கால்**

**ஆம்பல் குறுநர் நீர் வேட்டாங்கு, இவள்**

**இடைமுலைக் கிடந்தும், நடுங்கல் ஆனீர்;**

**தொழுது காண் பிறையின் தோன்றி, யாம் நுமக்கு**

**அரியம் ஆகிய காலைப்**

**பெரிய நோன்றனிர்; நோகோயானே”** (குறுந். 178)

என்னும் பாடல் உணர்த்தும். இதனுள் மயங்கும் மருதப்புனைவு பழனம், ஆம்பல் என்பதால் விளங்கும். முல்லைப் பாடுபொருளுடன் தலைவன், தலைவியர் மருத நிலத்தவராகப் படைத்தலும், மருதப் புனைவிலான உவமை இடம்பெறுதலும் முல்லையுள் மருதம் மயங்குதற்குரிய காரணிகளாகின்றன.

**குறிஞ்சியுள் மருதம்**

மருதப் பகுப்பில் குறிஞ்சியின் பாடுபொருளுடன் மருதத் திணையின் முதல், கருப்பொருள் மயங்கிய பாடல்கள் காணப்படுகின்றன. இத்திணைமயக்க நெறியில் மருதப் பகுப்பில் 22 பாடல்கள் காணப்படுகின்றன.(144)

மருத நிலத்து மக்களின் குறிஞ்சியொழுக்கம் குறிஞ்சியுள் மருதம் மயங்கியதாகப் பாடப் பெறுகின்றது. கூட்டம் உண்மை என்பதைத் தோழிக்குக் கூற அஞ்சிய தலைவியின் அச்சம், நீட்டித்து தலைவி கூறும் கூற்றில் களவு நிகழ்ந்த இடம் மருதமாகக் குறிக்கப்படுகிறது. மருத நிலத்து நீர் நிலையில் தலைவி புனல் விளையாடியதும்; அவ்விடத்துள்ள தாமரை மலரைப் பறித்துப் புற இதழை ஒடித்து மாலையாக்கித் தலைவன் தலைவிக்குக் கொடுத்ததும் அறியப்படுகிறது.(145) இத்திணை மயக்கத்தை, "அச்சம் நீடினும் என்றதனால் கூட்டம் உண்மை உணர்ந்த தோழிக்கு உண்மை கூறுதற்கு அஞ்சிய அச்சம் நீட்டித்துத் தலைவி கூறியது. இது திணை மயக்குறுதலும் கடிநிலை இலவே என்னும் சூத்திர விதியான் மருதத்துக் குறிஞ்சி வந்தது"(146) என்பர்.

குறியிடம் பெயர்த்துக் கூறும் தோழியின் கூற்றில் குறியிடத்தை மருத நிலமாக அமைத்துக் குறிஞ்சியுள் மருதம் மயங்கச் செய்கிறார் மாதீர்த்தனார். இதனை,

> **"ஊர்க்கும் அணித்தே, பொய்கை; பொய்கைக்குச்**
>
> **சேய்த்தும் அன்றே, சிறுகான்யாறே;**

**இரைதேர் வெண்குருகு அல்லது யாவதும்**

**துன்னல் போகின்றால், பொழிலே; யாம் எம்**

**கூழைக்கு எருமணம் கொணர்கம் சேறும்;**

**ஆண்டும் வருகுவள் பெரும் பேதையே"**(குறுந். 113)

என்னும் பாடல் வழி அறிய முடியும். இதனுள் குறியிடம் மருதத்திணைக்குரிய பொய்கையாகக் குறிக்கப்பட்டு குறிஞ்சியுள் மருதம் மயங்குவது பெறப்படும்.

வரைவுகடாவும் தோழியின் கூற்றில் குறியிடம் மருதநிலமாகக் குறிக்கப்படுவதை,

**"கழனி ஆம்பல் முழுநெறிப் பைந்தழை,**

**காயா ஞாயிற்றாக, தலைப் பெய,**

**'பொய்தல் ஆடிப்பொலிக!' என வந்து,**

**நின் நகாப் பிழைத்த தவறோ..."**(அகநா.156: 9-12)

என்னும் அடிகள் உணர்த்தும். இதனுள் கழனி, ஆம்பல் என்று மருதப்புனைவுகள் திணை மயக்கமாக இடம்பெறுகின்றன.

வரைவுகடாவும் தோழியின் கூற்றில் தலைவன் மருத நிலத்தவனாகப் படைக்கப் பெற்றிருப்பதை,

**"செழுஞ்செய் நெல்லின் சேயரிப் புனிற்றுக் கதிர்**

**மூதாதின்றல் அஞ்சி, காவலர்**

**பாகல் ஆய்கொடிப் பகன்றையொடு பரீஇ,**

**காஞ்சியின் அகத்து, கரும்பு அருத்தி யாக்கும்**

**தீம்புனல் ஊர!"** (அகநா.156: 3-7)

என்னும் அடிகள் வழி உணர முடிகின்றது. 'தலைவனே! நீ தந்தையின் வேலுக்கு அஞ்சவில்லை; ஆனால் நாங்கள் அஞ்சுகின்றோம் என்று கூறி வரைவு கடாவும் தோழியின் கூற்றில்,

**"பழனக் கம்புள் பயிர்ப்பெடை அகவும்**

**கழனி ஊர ... ... ..."** (ஐங்.60: 1-2)

என்றும், அலர் மிகுதியைக் கூறி வரைவு கடாவும் கூற்றில்,

**"மயங்கு மலர்க்கோதை குழைய மகிழ்நன்"**(குறுந். 393: -1)

என்றும், தோழி அறத்தொடு நிற்கும் கூற்றில்,

**"தண் சேறு களவன் வரிக்கும் ஊரற்கு"** (ஐங்.28: 1)

என்றும்,

**"மாரி கடிகொள காவலர் கடுக**

**வித்திய வெண்முளை களவன் அறுக்கும்**

**கழனி ஊரன் ... ... ..."**(ஐங்.29: 1-3)

என்றும்,

**"வேப்பு நனை அன்ன நெடுங்கட் களவன்**

**தண்ணக மண் அளை நிறைய நெல்லின்**

**இரும்பூ உறைக்கும் ஊரற்கு..."** (ஐங்.30: 1-3)

என்றும் குறிக்கப்படுகிறது. ஐங்குறுநூற்று முப்பதாவது பாடல் குறிஞ்சியுள் மருதம் மயங்குவதாக அமைவதை, "மருதத்துக் குறிஞ்சி நிகழ்ந்தது; தோழி அறத்தொடு நின்றது"(147) என்பர். இவற்றால் தலைவன் மருத

நிலத்தவனாகக் குறிக்கப்பட்டு குறிஞ்சியுள் மருதம் மயங்குவது பெறப்படும்.

தோழி குறை நயப்பக் கூறும் குறிஞ்சித் திணையின் பாடுபொருளில் தலைவனின் நிலமாக மருதம் குறிக்கப்பெறுவதை,

**"மேல்துறைக் கொளீஇய கழாலின் கீழ்த்துறை**
**உகுவார் அருந்த பகுவாய் யாமை**
**கம்புள் இயவன் ஆக, விசி பிணித்**
**தெண்கண் கிணையின் பிறழும் ஊரன்"** (அகநா.356: 1-4)

என்னும் பாடல் அடிகளால் உணர இயலும். சேட்படுக்கப்பட்ட தலைமகனின் கூற்றில் தலைவியின் மருதநிலப் புனைவு குறிக்கப்படுகிறது. இதனை,

**மன்ற எருமை மலர் தலைக் காரான்**
**இன்தீம் பாற்பயம் கொண்மார், கன்றுவிட்டு,**
**ஊர்க் குறுமாக்கள் மேற்கொண்டு கழியும்**
**பெரும் புலர் விடியலின் விரும்பிப் போத்தந்து,**
**தழையும் தாரும் தந்தனன், இவன், என,**
**இழை அணி ஆயமொடு தகு நாண் தடைஇ,**
**தைஇத் திங்கள் தண் கயம் படியும்**
**பெருந்தோட் குறுமகள் அல்லது,**
**மருந்து பிறிது இல்லை, யான் உற்றநோய்க்கே** (நற்.80)

என்னும் பாடல் உணர்த்தும். இதனுள் குறிஞ்சித்திணைக்குரிய பாடுபொருளுடன் மன்ற எருமைக்காரான் பெரும்புலர்விடியல், தண்கயம்

என்று மருதத்திணைக்குரிய புனைவுகள் திணை மயக்கமாக இடம் பெறுகின்றன.

வரைவுகடாவும் தோழி தாங்கள் வாழும் சூழலை மருதமாகக் குறிப்பது அறியப்படுகிறது. இதனை,

**"எருமை நல் ஏற்றினம் மேயல் அருந்தென**
**பகுமோரோடமோடு ஆம்பல் ஒல்லா**
**செய்த வினைய மன்ற - பல்பொழில்**
**தாது உண் வெறுக்கைய ஆகி இவள்**
**போது அவிழ் முச்சி ஊதும் வண்டே"**(ஐங்.93)

என்னும் பாடல் விளக்கும். மருதத் திணைக்குரிய துணங்கைக் கூத்தைக் கொண்டு அறத்தொடு நிற்கும் குறிஞ்சியினைத் திணைமயக்கமாகப் படைக்கிறார் ஆதிமந்தியார். இதனை,

**"மள்ளர் குழீஇய விழவி னானும்**
**மகளிர் தழீஇய துணங்கை யானும்**
**யாண்டும் காணேன், மாண் தக்கோனை**
**யானும் ஓர் ஆடுகள மகளே; என்கைக்**
**கோடீஈர் இலங்கு வளை நெகிழ்த்த**
**பீடுகெழு குரிசிலும் ஓர் ஆடுகள மகனே "**(குறுந். 31)

என்னும் பாடல் வழி உணரமுடியும். தலைவியை மருத நிலத்தவளாகப் படைத்து, 'தலைவியைப் பெறுதல் உறுதியெனில் யானே நேரில் வருவேன்' எனத் தலைவன் கூறும் குறிஞ்சிப் பாடுபொருளைப் படைக்கிறார் ஓரம்போகியார் இதனை,

"கருங்கோட்டு எருமைச் செங்கட் புனிற்று ஆ

காதல் குழவிக்கு ஊறுமுலை மடுக்கும்

நுந்தை நும் ஊர் வருதும்

ஒண்தொடி மடந்தை! நின்னையாம் பெறினே "(ஐங்.92)

என்னும் பாடல் உணர்த்தும். களவில் தலைவனின் வரவை எதிர் நோக்கியிருக்கும் தலைவி வரைதல் வேட்கையில் கூறும் கூற்றைப் படைக்குமிடத்து தலைவன் தலைவியரை மருத நிலத்தவராகப் படைத்துக் குறிஞ்சியுள் மருதம் மயங்கச் செய்வதை வெள்ளிவீதியார் பாடலில் காணமுடிகின்றது. இதனை,

சிறு வெள்ளாங்குருகே! சிறு வெள்ளாங்குருகே!

துறைபோகு அறுவைத் தூமடி அன்ன

நிறம் கிளர் தூவிச் சிறு வெள்ளாங்குருகே

எம் ஊர்வந்து, எம் உண்துறைத் துழைஇ

சினைக் கெளிற்று ஆர்கையை அவர் ஊர்ப்பெயர்தி;

அனைய அன்பினையோ, பெரு மறவியையோ

ஆங்கண் தீம்புனல் ஈங்கண் பரக்கும்

கழனி நல் ஊர் மகிழ்நர்க்கு என்

இழை நெகிழ் பருவரல் செப்பாதோயே? (நற்.70)

என்னும் பாடல் உணர்த்தும். இப்பாடலுள் களவில் காமம் மிக்க கழிபடர் கிளவியாகத் தலைவி கூற்று நிகழ்த்துவதும், இக்குறிஞ்சியின் பாடுபொருளுடன் உண்துறை, கழனி, நெல், ஊர், மகிழ்நர் என்று மருதநிலப் புனைவுகள் திணைமயக்கமாக இடம்பெறுவதும் புலப்படும். தலைவனைச்

சேட்படுத்தியுரைக்கும் தோழியின் கூற்றில் தலைவியின் மருத நில வளம் திணை மயக்கமாகக் குறிக்கப் பெறுவதை,

**"நெறிமருப்பு எருமை நீல இரும்போத்து**
**வெறிமலர்ப் பொய்கை, ஆம்பல் மயக்கும்**
**கழனி ஊரன் மகள் இவள்;**
**பழன வெதிரின் கொடிப் பிணையலளே"**(ஐங்.91)

என்னும் பாடலுள் காணமுடியும். இங்கு பொய்கை, கழனி ஊரன், எருமை, ஆம்பல் எனும் மருதத் திணையின் புனைவுகள் குறிஞ்சித் திணைக்குரிய பாடுபொருளுடன் மயங்குகின்றன. வரைவிடை வைத்துப் பிரிந்த தலைவன் மீள்கின்ற போது கூறும் கூற்றில் தலைவியின் நிலப்புனைவாக மருதம் குறிக்கப்பட்டு, குறிஞ்சியுள் மருதம் மயங்குவதைக் காணமுடிகின்றது. இதனை,

**"மன்னர் அன்ன தடங்கோட்டு எருமை**
**மகளிர் அன்ன துணையொடு வதியும்**
**நிழல் முதிர் இலஞ்சிப் பழனத்ததுவே**
**கழனித் தாமரை மலரும்,**
**கவின்பெறு சுடர் நுதல் தந்தை, ஊரே"** (ஐங்.94)

என்னும் பாடல் விளக்கும். இதனுள் பழனம், கழனி, எருமை என மருதப் புனைவுகள் மயங்குகின்றன.

இற்செறிக்கப்பட்டதைக் கூறி வரைவுகடாவும் தோழியின் கூற்றான குறிஞ்சித் திணையின் பாடுபொருளில் கேட்போரை மருத நிலத்தவராகப் படைத்துத் திணைமயக்கம் இயற்றுவர் தூங்கலோரியார். இதனை,

**“நீர் உறு செறுவின் நாறுமுடி அழுத்த நின்**

**நடுநரொடு சேறி ஆயின் அவண**

**சாயும் நெய்தலும் ஓம்புமதி... ”**(நற்.60: 7-9)

என்னும் பாடல் அடிகள் விளக்கும். இங்கு நீர்உறுசெறு, நடுநர் என்பன மருதத்திணைக்குரியன. இவை குறிஞ்சியின் பாடுபொருளுடன் மயங்குகின்றன. இவற்றால் மருதச் சூழலில் அமையும் குறிஞ்சியொழுக்கம் குறிஞ்சியுள் மருதம் மயங்கியதாகப் பாடப் பெறுவது விளங்கும்.

காப்பு மிகுதிக்கண் தோழி அறத்தொடு நிற்பாளாக, தனது ஆற்றாமை தோன்றக் கூறும் தலைவியின் கூற்றான குறிஞ்சித் திணைக்குரிய பாடுபொருளில் மருதநிலப் புனைவு உவமையின் வழி மயங்குவதைக் காணமுடிகின்றது. இதனை,

**“குப்பைக் கோழித் தனிப்போர் போல**

**விளிவாங்கு விளியின் அல்லது,**

**களைவோர் இலை – யான் உற்ற நோயே”** (குறுந்.305: 6-8)

என்னும் அடிகளின் வழி உணர முடியும். இதனுள் குறிஞ்சியின் பாடுபொருளைச் சிறப்பிக்கும் விதமாகக் குப்பைக்கோழியின் தனிப்போர் எனும் மருதநிலப்புனைவு திணைமயக்கமாக இடம்பெறுகின்றது. வரைவு நீட்டித்த இடத்து, தலைமகள் தோழிக்குக் கூறும் குறிஞ்சித் திணைக்குரிய பாடுபொருளுடன் மருதப் புனைவு திணைமயக்கமாக இடம்பெறுகிறது. இதனை,

**“ஊர் உண் கேணி உண்துறைத் தொக்க**

**பாசி அற்றே பசலை - காதலர்**

தொடுவுழித் தொடுவுழி நீங்கி,

விடுவுழி விடுவுழிப் பரத்தலானே" (குறுந்.399)

என்னும் பாடல் குறிக்கும். இதனுள் இடம்பெறும் உவமை மருதப் புனைவாக அமைகிறது.

'நின்னால் தழுவப்பட்டவள் நினக்கே உரிமையாவாள் - வேறாகாள்' என்று கூறி வரைவுகடாவும் கூற்றில் மருத நில உவமை திணை மயக்கமாகக் குறிக்கப்படுவதை,

"பாணர் பசுமீன் சொரிந்த மண்டை போல

எமக்கும் பெரும் புலவு ஆகி,

நும்மும் பெறேஎம், இறீஇயர் எம் உயிரே"(குறுந்.169: 4-6)

என்னும் பாடலடிகள் விளக்கும். இதனுள், பாணர் பசுமீன் சொரிந்த மண்டை என்பது மருதநிலப் புனைவாகும். உவமையின் வழிக் குறிஞ்சித் திணையின் பாடுபொருளுடன் மயங்குகின்றது.

நொதுமலர் வரைவிற்கு அஞ்சியுரைப்பதாய் அமையும் குறிஞ்சித்திணைக்குரிய பாடுபொருளில் உவமையின் வழி மருதத்திணையின் முதல், கருவை மயங்கச் செய்கிறார் பூங்கணுத்திரையார். இது,

"காண் இனி வாழி - தோழி யாணர்க்

கடும்புனல் அடைகரை நெடுங்கயத்து இட்ட

மீன் வலை மாப் பட்டாஅங்கு,

இதுமற்று - எவனோ, நொதுமலர் தலையே?"(குறுந்.171)

என்பதால் பெறப்படும். இதனுள் நெடுங்கயம் என்று மருதப்புனைவு உவமை எனும் உத்தியின் வழி மயங்குகின்றது.

வெறியாட்டு நிகழ்ந்ததைக் கூறி வரைவுகடாவும் குறிஞ்சிப் பாடுபொருளில் தலைவன் சூளுரைத்த இடமாகவும், வெறியாட்டு நிகழ்ந்த இடமாகவும் நெய்தல் நிலம் குறிக்கப்படுகின்றது. இதனுள் தலைவன் 'மகிழ்ந' எனக் குறிக்கப்படுகின்றான். இதனை,

**"எம்அணங்கினவே - மகிழ்ந! முன்றில்**
**நனை முதிர் புன்கின் பூத்தாழ் வெண்மணல்,**
**வேலன் புனைந்த வெறி அயர் களம்தொறும்**
**செந்நெல் வான் பொரி சிதறி அன்ன**
**எக்கர் நண்ணிய எம் ஊர் வியன்துறை,**
**நேர்இறை முன்கை பற்றி**
**சூரர மகளிரோடு உற்ற சூளே"** (குறுந்.53)

என்பது உணர்த்தும். எம் அணங்கினவே மகிழ்ந சூரர மகளிரோடு உற்ற சூளே, என்பதால் வரைவுகடாவும் குறிஞ்சிப் பாடுபொருள் பெறப்படுகிறது. இதனுடன் புன்கின் பூத்தாழ் வெண்மணல், எக்கர் நண்ணிய எம் ஊர் வியன்துறை, என்று நெய்தல் நிலப் புனைவுகள் திணைமயக்கமாக இடம்பெறுகின்றன. இப்பாடல் குறிஞ்சியுரியுள் நெய்தல் மயங்கியதாகவும் நெய்தல் எனும் முதற்பொருளில் 'மகிழ்ந' எனும் கருப்பொருள் மயங்கியதாகவும் அமைகிறது. 'மகிழ்ந' என்பதை நோக்கி மருதம் எனக் கொண்டுள்ளனர்.

**குறிஞ்சியுள் நெய்தல் (மருதப் பகுப்பு)**

குறிஞ்சித் திணைக்குரிய உரிப்பொருளில் நெய்தலின் முதல், கருப்பொருள்கள் மயங்கிய திணைமயக்கம் மருதத் திணைப் பாடல்களில் அமைந்துள்ளது. மருதப் பகுப்பில் காணப்படும் இத்திணை மயக்கம் ஒரு பாடலுள் அறியப்படுகின்றது.(151)

வரைவு மலிந்த செய்தியினைத் தோழி தலைவிக்குக் கூறுவதாக அமையும் குறிஞ்சித் திணையின் பாடுபொருளுடன் நெய்தற் திணையின் முதல் கரு மயங்குவது மருதத்திணைப் பாடலில் அறியப்படுகின்றது. இதனை,

**"ஒறுப்ப ஓவலர், மறுப்பத் தேறலர்**
**தமியர் உறங்கும் கௌவை இன்றாய்,**
**இனியது கேட்டு இன்புறுக, இவ்வூரே**
**முனாஅது, யானையங்குருகின் கானல் அம் பெருந்தோடு**
**அட்ட மள்ளர் ஆர்ப்பு இசை வெரூஉம்**
**குட்டுவன் மரந்தை அன்ன எம்**
**குழை விளங்கு ஆய் நுதற் கிழவனும் அவனே"** (குறுந்.34)

என்னும் பாடல் உணர்த்தும். இதனுள் இனியது கேட்டு இன்புறுக இவ்வூரே என்பதால் குறிஞ்சித் திணையின் பாடுபொருள் புலப்படுகின்றது. இதனுடன் கானல் எனும் நெய்தல் திணைக்குரிய நிலப்புனைவு புறச்செய்தியாக மயங்குவது விளங்கும்.

இவற்றால் மருதத்திணைப் பாடல்களில், குறிஞ்சித்திணையின் பாடுபொருளுடன் நெய்தல் திணையின் முதல், கருப்பொருள்கள் மயங்குவது விளங்கும்.

## நெய்தல்திணைப் பகுப்பும் திணைமயக்கமும்

சங்க அக இலக்கியத்துள் நெய்தல் எனக் குறிக்கப்பெற்று 344 பாடல்கள் காணப்படுகின்றன."[149] இவற்றுள் முல்லை, குறிஞ்சி, பாலை, மருதம் எனும் திணைகளுக்குரிய உரிப்பொருளுடன் நெய்தல் திணையின் முதல், கருப்பொருட்கள் மயங்கும் பாடல்கள் காணப்படுகின்றன.

நெய்தற் பகுப்பில் காணப்படும் இத்திணைமயக்கத்தை அறிஞர் பலர் குறித்துள்ளனர். "அம்மூவனார் நெய்தலறிஞர் – நெய்தற்றிணைக்கு உரியது இரங்கல் பொருள் எனினும் புணர்தல் இருத்தல் ஊடல் என்ற பிறவுரிப் பொருள்களை நெய்தற் சூழ்நிலையில் வைத்துப் பாடியுள்ளார்"[150] என்பர். வ.சுப. மாணிக்கனார். "அகநானூற்றில் உள்ள 40 நெய்தல் பாடல்களில் மூன்று (40,50,170) பாடல்களே நெய்தல் உரிப்பொருளைப் பேசுவன. ஏனைய பாடல்கள் களவுப் பாடல்களே. குறிஞ்சி உரிப் பொருளைப் பேசுவனவே. ஆயின் நாற்பது பாடல்களிலும் முதற்பொருளும் கருப்பொருளும் நெய்தலுக்கு உரியவையே"[151] என்பர் ப.அருணாச்சலம். "அம்மூவனார் நெய்தற் திணைக்குரிய இரங்கற் பொருளைப் பாடவேண்டியிருப்பினும் புணர்தல், இருத்தல், ஊடல் என்ற பிற உரிப்பொருள்களையும் நெய்தற் சூழ்நிலையில் வைத்துப் பாடியுள்ளார். இது இவர்தம் தனிச் சிறப்பு"[152] என்பர் ந.சுப்புரெட்டியார். இவற்றால் நெய்தற் பகுப்பில் காணப்படும் திணை மயக்கம் உணரப்படும்.

### முல்லையுள் நெய்தல்

நெய்தல் எனும் திணைப்பகுப்பில் காணப்படும் பாடல்களில்

முல்லைத் திணையின் உரிப்பொருளுடன் நெய்தல் திணையின் முதல், கரு மயங்கிய நிலையில் பன்னிரண்டு பாடல்கள் அறியக் கிடக்கின்றன.[153] இத்திணை மயக்கம் 'முல்லையுள் நெய்தல்' எனக் கொள்ளப் பெறும்.

ஆற்றியிருக்கும் தலைவியின் கூற்று முல்லைத் திணையின் பாடுபொருளாகும். முல்லையின் உரிப்பொருளுடன் நெய்தலின் கூறுகள் மயங்கும் திணைமயக்கப் பாடலினுள் தலைவி எற்பாடு பொழுதில் இனி மாலையும் கங்குலும் வரும் என வருந்தியுரைப்பதைக் காணமுடிகின்றது. இதனை,

> **"பைங் காற் கொக்கின் புன் புறத்தன்ன**
> **குண்டுநீர் ஆம்பலும் கூம்பின; இனியே**
> **வந்தன்று, வாழியோ, மாலை!**
> **ஒருதான் அன்றே; கங்குலும் உடைத்தே!"** (குறுந்.122)

என்னும் பாடலில் காணமுடியும். இதனுள் தலைவி ஆற்றியிருப்பதை, "மாலை வந்தன்று, என்பது மாலை மட்டும் வந்தது; அம்மாலையில் வரல் குறித்த தலைவர் யான் கூம்புதல் விட்டு மலர வந்திலர் எனக் குறிப்பிற் கொள்ள வைத்தவாறு"[154] எனக் குறிப்பர். இதனுள் 'இனியே வந்தன்று' என்பதால் இப்பொழுது கூற்று நிகழுவதான பொழுது மாலைக்கு முந்தையதான எற்பாடு பொழுது என்பதும் இப்பொழுது முல்லையின் பாடு பொருளினுள் திணைமயக்கமாக இடம்பெறுவதும் விளங்கும்.

தலைவன் வந்த நிலையில் தலைவியின் ஆற்றாமை நீங்குவதைக் கண்டு வாயில்கள் தம்முள்ளே கூறுவதாக அமையும் முல்லையின் பாடு பொருளில் நெய்தல் மயங்குவது உணரப்படுகின்றது. இம்மயக்கத்தை,

**"இருங்கழி மாமலர் கூம்ப, அரோ, என்**
**அரும்படர் நெஞ்சம் அழிவொடு கூம்பும்**
................ ............... ................ ..............
**படுசுடர் மாலையொடு பைதல்நோய் உழப்பாளை,**
**குடி புறம் காத்து ஓம்பும் செங்கோலன் வியன்தானை**
**விடுவழி விடுவழிச் சென்றாங்கு, அவர்**
**தொடுவழித் தொடுவழி நீங்கின்றால் பசப்பே"**

(கலித்.130: 12-13, 18-21)

என்னும் பாடலடிகளும்,

**"இருங்கடல் ஒலித்து ஆங்கே இரவுக் காண்பது போல,**
**பெருங்கடல் ஓத நீர் வீங்குபு கரைசேரப்**
**போஓய வண்டினால் புல்லென்று துறையவாய்,**
................ .............. ................ ................
**இருநிலம் பெயர்ப்பு அன்ன, எவ்வம் கூர் மருண்மாலை**
................ .............. ................ ................
**விரைவனர் காதலர் புகுதர,**
**நிரைதொடி துயரம் நீங்கின்றால், விரைந்தே"**

(கலித்.134: 5-7, 10, 26-27)

என்னும் பாடல் அடிகளும் விளக்கும். இதனுள் தலைவி ஆற்றியிருந்த

மாலைக்காலம் நெய்தல் திணைக்குரிய புனைவுடன் கூறப்படுகிறது. இவ்வளவில் நெய்தல் முல்லையுள் மயங்குவது விளங்கும்.

தலைவன் தான் குறித்த இளவேனிற் பருவத்தும் வாராது கண்ட தலைமகள், வினைமுடித்து வருவர் எனும் நம்பிக்கையுடன் உயிர்வாழ்வதைக் குறிக்கின்றாள். தலைவியின் இக்கூற்று முல்லையின் பாடுபொருளாகும். இதனுள், தலைவன் வரல் குறித்த இளவேனிற் பருவம் நெய்தல் திணையின் புனைவுடன் குறிக்கப்பட்டு முல்லையுள் நெய்தல் மயங்குகின்றது. இதனை,

"***பல்வீ படரிய பசுநனைக் குரவம்***
***பொரிப் பூம் புன்கொடு பொழில் அணிக் கொளாஅச்***
***சினை இனிது ஆகிய காலையும், காதலர்***
***பேணார் ஆயினும், பெரியோர் நெஞ்சத்துக்***
***கண்ணிய ஆண்மை கடவது அன்று என***
***வலியா நெஞ்சம் வலிப்ப,***
***வாழ்வேன் - தோழி! என் வன்கணானே***" (குறுந்.341)

என்னும் பாடல் விளக்கும். இதனுள் 'வாழ்வேன் - தோழி என் வன்கணானே' என்பது தலைவி ஆற்றியிருப்பதைப் புலப்படுத்துகின்றது. இதனுள் தலைவி ஆற்றியிருப்பதை, "பல்லிப்படீஇ நெஞ்சம் வலிப்ப என்று கொண்டு பல்லி ஒலியா நிற்க என்னெஞ்சம் அவர் வருவார் என்று என்னுயிர் போகாது ஈர்க்க என்று கூறினும் அமையும்"(155) என்பர் ரா.இராகவையங்கார். "தலைவி, தன்பால் அன்புடைய தலைவர் வினை முற்றாமலேயே வருவர் என முதலில் எண்ணினாள். பின்னர், அவர்

வினை முடித்து வருவர் எனத் துணிந்தாள். இத்துணிவே, அவர் உயிர் வாழ்விற்குக் காரணமாயிற்று"(156) என்பர். இவற்றால் இப்பாடலுள் முல்லையின் பாடுபொருள் அமைந்திருப்பது புலப்படும். இதனுடன் 'பொரிப் பூம் புன்கொடு பொழில் அணிக்கொள' என நெய்தல் திணையின் புனைவு திணைமயக்கமாக இடம்பெறுகின்றது.

வினைமுற்றிய தலைமகன் பாகற்குக் கூறுவதான முல்லைத் திணையின் பாடுபொருளில் தலைவன் தலைவியரின் நிலப் புனைவு நெய்தலாகக் குறிக்கப்படுகிறது. நெய்தல் நில மக்களின் முல்லையொழுக்கம் முல்லையுள் நெய்தலாகப் படைக்கப்படுகிறது. இதனை,

**"அறிதலும் அறிதியோ - பாக! - பெருங்கடல்**
**எறிதிரை கொழீஇய எக்கர் வெறிகொள,**
**ஆடுவரி அலவன் ஓடுவயின் ஆற்றாது,**
**அசைஇ, உள் ஒழிந்த வசைதீர் குறுமகட்கு**
**உயவினென் சென்று, யான், உள் நோய் உரைப்ப,**
**மறுமொழி பெயர்த்தல் ஆற்றாள், நறுமலர்**
**ஞாழல் அம் சினைத் தாழ் இணர் கொழுதி,**
**முறி திமிர்ந்து உதிர்த்த கையள்,**
**அறிவு அஞர் உறுவி ஆய் மட நிலையே?"**(நற்.106)

என்னும் பாடல் வழிக் காணமுடியும். இதனுள் 'அறிதலும் அறிதியோ பாக ... ஆய் மட நிலையே?' என்று வினை முற்றிய தலைமகன் தேர்ப்பாகனிடம் சாற்றுவது புலப்படுகிறது. இதனுடன் பெருங்கடல்

கொழிய எக்கர், அலவன், ஞாழல் என்று நெய்தல் திணைப் புனைவுகள் திணைமயக்கமாக இடம்பெறுகின்றன. திருமணம் நடைபெற்ற பின்பு தோழி களவுக்காலத்தில் நன்கு ஆற்றினாய் என்று கூற, அத்தோழிக்குத் தலைவி கூறுவதாக அமையும் முல்லைக்குரிய பாடுபொருளுடன் தலைவன் தலைவியர் நெய்தற் சூழலில் வாழ்வது குறிக்கப்படுகிறது. இது,

**"வீழ்தாழ் தாழை ஊழுறு கொழுமுகை**
**குருகு உளர் இறகின், விரிபு தோடு அவிழும்**
**கானல் நண்ணிய சிறுகுடி முன்றில்,**
**திரை வந்து பெயரும் என்ப - நத் துறந்து**
**நெடுஞ்சேண் நாட்டார் ஆயினும்,**
**நெஞ்சிற்கு அணியரோ, தண்கடல் நாட்டே"** (குறுந்.228)

என்னும் பாடலால் உணரப்படும். இதனுள் 'கானல் நண்ணிய சிறுகுடி' என்பது தலைவி வாழும் சூழலையும், 'தண்கடல் நாடு' என்பது தலைவன் வாழும் சூழலையும் குறித்தமைகின்றன.

வதுவை கரண வகையான் முடிந்த பின்பு தலைமகளைப் பள்ளியிடத்து உய்க்கும் தோழியின் கூற்றில் தலைவன் நெய்தல் நிலத்தவனாகக் குறிக்கப்பட்டு முல்லையுள் நெய்தல் மயங்குகின்றது. இம்மயக்கம்,

**"எக்கர் ஞாழல் இகந்து படு பெருஞ்சினை**
**வீ இனிது கமழும் துறைவனை**

**நீ இனிது முயங்குமதி, காதலோயே!"** (ஐங்.148)

என்னும் பாடலால் உணரப்படும். இதனுள் ஞாழல், துறைவன் என நெய்தல் மயங்குகிறது. தலைவி தலைவனோடு பள்ளியிடத்து இருக்கும் போது தோழி வாழ்த்துவதாக அமையும் முல்லைப் பாடுபொருளில் நெய்தல் மயங்குவதை,

**"எக்கர் ஞாழற் பூவின் அன்ன**

**சுணங்கு வளர் இள முலை மடந்தைக்கு**

**அணங்கு வளர்த்து, அகறல் வல்லாதீமோ!"** (ஐங்.149)

என்னும் பாடல் விளக்கும். இதனுள் எக்கர், ஞாழல் என்பதால் நெய்தல் மயங்குவது உணரப்படும்.

திருமணத்திற்குப் பின்பு தலைவன் தலைவியர் வாழும் இல்லத்திற்குச் சென்ற தோழியிடம் தலைவன், களவுக்காலத்தில் நன்கு ஆற்றுவித்தாய் என்றுரைக்க, அத்தலைவனுக்குத் தோழி கூறுவதாக அமையும் முல்லைப் பாடுபொருளில்,

**"உயர் மணற் சேர்ப்ப"** (நற்.131: 3)

என்று நெய்தல் மயங்குகின்றது. தலைமகன் வினைமுற்றி வந்தவிடத்து கவின்பெற்ற தலைமகள் கூறுவதான முல்லையின் பாடுபொருளுடன் தலைவனின் நிலப் புனைவாக நெய்தல் திணைக் கூறுகள் மயங்குவதை,

**"காண்மதி, பாண! இருங்கழிப் ..........**

**பாய்பரி நெடுந் தேர்க் கொண்கனொடு**

**தான் வந்தன்று, என் மாமைக் கவினே"** (ஐங்.134)

என்னும் பாடல் வழிப் பெறமுடிகின்றது. அறத்தொடு நின்று வதுவை கூட்டிய தோழி, புதல்வற் பெற்ற வழி மனைக்கண் சென்ற செவிலிக்கு அவன் ஊர் நன்மை காட்டிச் சொல்லுவதான முல்லையின் பாடுபொருள் முல்லையுள் நெய்தல் மயங்கியதாகப் படைக்கப்படுவதை,

**"அன்னை, வாழி! வேண்டு, அன்னை! - நம் ஊர்ப்**
**பலர் மடி பொழுதின், நலம் மிகச் சாஅய்**
**நள்ளென் வந்த இயல்தேர்ச்**
**செல்வக் கொண்கன் செல்வனஃது ஊரே"**(ஐங்.104)

என்னும் பாடல் உணர்த்தும். இங்கு 'கொண்கன் செல்வனஃது ஊரே' எனும் நெய்தல் திணைக்குரிய கூறுகள் திணைமயக்கமாக இடம்பெறுகின்றன. இவற்றால் நெய்தல் நில மக்களின் முல்லையொழுக்கம் முல்லையுள் நெய்தல் எனும் திணை மயக்கமாகப் படைக்கப்படுவது விளங்கும்.

திருமண நிகழ்வின்பின் 'இவளைப் பிரியாது வாழ்தல் வேண்டும்' எனத் தோழி கூறுவதான முல்லைத் திணையின் பாடுபொருளில் நெய்தல் மயங்குவதை,

**"பொங்குதிரை பொருத வார்மணல் அடைகரைப்**
**புன்கால் நாவல் பொதிப்புற இருங்கனி**
**கிளை செத்து மொய்த்த தும்பி, பழம் செத்துப்**
**பல்கால் அலவன் கொண்ட கோட்கு அசாந்து**
**கொள்ளா நரம்பின் இமிரும் பூசல்**
**இரை தேர் நாரை எய்தி விடுக்கும்**
**துறைகெழு மரந்தை அன்ன இவள் நலம்"** (நற்.35: 1-7)

என்னும் பாடலடிகள் விளக்கும். இதனுள் தலைவியின் அழகிற்குரிய உவமையாக நெய்தல் மயங்குவது அறியப்படுகின்றது. இவற்றால் நெய்தல் நில மக்களின் முல்லையொழுக்கத்தைப் பாடுமிடத்தும், முல்லைக் கூற்றில் நெய்தல் நிலச் செய்தி உவமையாகக் கூறப்படுமிடத்தும் முல்லையுள் நெய்தல் திணைமயக்கமாக இடம் பெறுவது விளங்கும்.

**குறிஞ்சியுள் நெய்தல்**

நெய்தல் எனும் திணைப்பகுப்பில் குறிஞ்சியின் உரிப்பொருளுடன் நெய்தலின் முதல் கரு மயங்கிய திணைமயக்க நிலையில் 244 பாடல்கள் உள்ளன.(157)

களவுக் காலத்தில் தலைவி திருமணம் நடைபெற வேண்டும், பிள்ளைப் பேறு எய்துதல் வேண்டும் எனும் விருப்பில் நிகழ்த்தும் கூற்றில் நெய்தல் திணைக்குரிய எற்படு பொழுதில் தலைவியின் துயரத்தைப் படைத்து குறிஞ்சியுள் நெய்தல் மயங்குவதைப் படைப்பர். இதனை,

**"ஞாயிறு பட்ட அகல் வாய் வானத்து**
**அளியதாமே - கொடுஞ் சிறைப் பறவை,**
**இறைஉற ஓங்கிய நெறி அயல் மராஅத்த**
**பிள்ளை உள்வாய்ச் செரீஇய**
**இரை கொண்டமையின், விரையுமால் செலவே"** (குறுந்.92)

என்னும் பாடலுள் காணமுடிகின்றது. இப்பாடல் களவுக்குரியது என்பதை நச்சினார்க்கினியர் களவில் எடுத்தாள்வதாலும்"(158) "பறவை ஆண்

பெண் இரண்டுமாகிய பொது. இவை காதல் செய்து இன்புற்றுப் பிள்ளைப் பேறெய்தி அவற்றை இனிதோம்புதல் போலத் தானும் தலைவனை வதுவையிற் கூடி மகப்பேறெய்தி அம் மகவினை இனிதோம்பி மகிழ்தல் வேண்டித் தலைவி களவிற் கூறியதாக நினைக"[159] எனும் குறுந்தொகை உரையாலும் உறுதி செய்ய முடிகிறது. இக்குறிஞ்சியின் பாடு பொருளுடன் 'ஞாயிறுபட்ட அகல்வாய் வானம்' என நெய்தல் திணைக்குரிய எற்படு பொழுது மயங்குவது உணரப்படும். வரைவிடை மெலிந்த தலைமகள் வன்புறை எதிரழிந்து கூறும் குறிஞ்சியின் பாடுபொருளில் எற்படு பொழுது மயங்குவதை,

**"ஞாயிறு ஞான்று கதிர் மழுங்கின்றே;**

**எல்லியும், பூவீ கொடியின் புலம்பு அடைந்தன்றே**

................ ................ ................ ................

**ஆனா நோய் அட வருந்தி, இன்னும்**

**தமியேன் கேட்குவென் கொல்லோ,**

***பரியரைப் பெண்ணை அன்றிற் குரலே?"*** (நற். 218:1-2, 9-11)

என்னும் அடிகளும் குறிக்கும் வரைவிடைப் பிரிவில் தலைவியின் துயரைக் கண்டார் கூறும் கூற்றுள் தலைவி நெய்தல் நிலச் சூழ்நிலையில் மாலைப் பொழுதுதில் துயரம் எய்தியிருப்பதைக் காணமுடிகின்றது.[160]

நெய்தல் நிலத் தலைவியை இயற்கைப் புணர்ச்சியில் புணர்ந்து நீங்கும் தலைமகனின் கூற்று குறிஞ்சியுள் நெய்தலாக அமைகிறது. இக்கூற்றுள் தலைவியின் நெய்தல் நிலப் புனைவு திணை மயக்கமாகக் குறிக்கப்பெறுகிறது. இதனை,

**"பெருங்கடல் வேட்டத்துச் சிறுகுடிப் பரதவர்**

**இருங்கழிச் செறுவின் உழாஅது செய்த**

**வெண்கல் உப்பின் கொள்ளை சாற்றி**

**என்றூழ் விடர குன்றம் போகும்**

**கதழ்கோல் உமணர் காதல் மடமகள்**

............ ............ ............. ............

**வெய்ய உயிர்க்கும் நோய் ஆகின்றே"** (அகநா. 140:1-5,15)

என்னும் அடிகளின் வழி உணரமுடியும். இதனுள் பெருங்கடல் வேட்டம், பரதவன், இருங்கழி, வெண்கடல் உப்பு என்று நெய்தல் நிலக் கூறுகள் குறிஞ்சியின் பாடுபொருளில் மயங்குகின்றன. இரண்டாம் கூட்டத்துத் தலைவியை எதிர்ப்பட்டுத் தலைவன் கூறுவதாக அமைக்கப்படும் குறிஞ்சியின் பாடுபொருளில் தலைவி நெய்தல் நிலத்தவளாக, நெய்தல் பரப்பில் நிற்பது திணைமயக்கமாகக் குறிக்கப்படுகின்றது. இதனை,

**"பெருங்கடல் பரப்பின் அமர்ந்து உறை அணங்கோ?**

**இருங்கழி மருங்கு நிலை பெற்றனையோ?**

**சொல், இனி, மடந்தை! என்றனென்..."** (நற்.155: 6-8)

என்னும் அடிகள் உணர்த்தும். இத்திணை மயக்கத்தைக் குறிக்குமிடத்து, "இது நெய்தல் தலைவிக்கும் குறிஞ்சித் தலைவனுக்கும் இடையே நடைபெற்ற காதல் தொடுப்பு"[161] என்பர் ந.சுப்புரெட்டியார். குறிஞ்சியின் பாடுபொருளில் தலைவி நெய்தல் நிலத்தவளாகக் குறிக்கப்பட்டு குறிஞ்சியுள் நெய்தல் மயங்குவதை, தலைமகளைக் கண்ணுற்று நீங்கும் தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது,"[162] நின்னால் காணப்பட்டவள்

எவ்விடத்து எத்தன்மையள்? என்று வினாவிய பாங்கற்குக் கூறியது,[163] கழறிய பாங்கற்குக் கிழவன் உரைத்தது[164] தலைமகன் பாங்கற்குச் சொல்லியது; நெஞ்சிற்குச் சொல்லியது,[165] களவொழுக்கம் மேற்கொண்ட தலைமகன் தோழி கேட்கத் தன்னுள்ளே சொல்லியது,[166] இரண்டாம் கூட்டத்து தலைவியை எதிர்பட்டுத் தலைவன் சொல்லியது,[167] வரைவிடைப் பிரிவில் ஆற்றானாய் கூறியது[168] ஒருவழித்தணத்தலில் ஆற்றானாய்க் கூறியது,[169] எனும் குறிஞ்சித் திணைக்குரிய தலைவன் கூற்றுப் பாடல்களிலும், தலைமகன் சிறைப்புறத்து நின்று கேட்பத் தலைமகள் தோழிக்குச் சொல்லியது,[170] வரைவிடை வைத்துப் பிரிந்துழி ஆற்றாளாகின்ற தலைமகள், அவன் வரைதற்குப் பிரியவும் நீ ஆற்றாய் ஆகின்றது என்னை? என்ற தோழிக்குச் சொல்லியது.[171] தலைவன் சிறைப்புறமாகத் தலைவி சொல்லியது,[172] காமம் மிக்க கழிபடர் கிளவியால் சொல்லியது,[173] காப்பு மிகுதிக்கண் ஆற்றாத தலைவி தலைவன் பால் சென்ற நெஞ்சினை நோக்கி அழிந்து கூறியது,[174] வரைவு நீட்டித்த நிலையில் கூறியது[175] எனும் தலைவி கூற்றுப் பாடல்களிலும், தோழி கையுறை மறுத்தது[176] தலைவனைச் சேட்படுத்தது,[177] குறைநயப்பக் கூறியது[178] பகற்குறி வந்து நீங்கும் தலைமகனுக்குச் சொல்லுதல்,[179] இரவுக்குறி வந்து நீங்கும் தலைமகனுக்குக் கூறல்,[180] காப்பு மிகுதிக்கண் ஆற்றாளாகிய தலைவிக்குக் கூறியது,[181] அலர் கூறப்பட்டு ஆற்றாளாகிய தலைமகளைத் தோழி ஆற்றிவித்தது,[182] தலைவனிடம் வரைவுகடாயது,[183] அறத்தொடு நிற்றல்,[184] தலைவன் வரைவிற்கு வருவர் எனக் கூறல்,[185] வரைவு உணர்த்தி வற்புறுத்தல்,[186] தலைவன் வரைவிற்கு வந்த நிலையைக் கூறல்[187] எனும் தோழி

கூற்றிலும் காணமுடிகின்றது. மடல் விரித்த தலைவன் முன்னிலைப் புறமொழியாக, தோழி கேட்பச் சொல்லும் குறிஞ்சியின் பாடுபொருளுடன் நெய்தல் மயங்குமிடத்து நெய்தல் நிலப் புனைவுகள் தலைவனின் நிலப் புனைவாக இடம்பெறுகின்றன. இதனை,

**"வடந்தை துவலை தூவ, குடம்பைப்**
**பெடை புணர் அன்றில் உயங்கு குரல் அளைஇ**
**கங்குலும் கையறவு தந்தன்று;**
**யாங்கு ஆகுவென்கொல்; அளியென்யானே?"** (நற். 152: 6-9)

என்னும் அடிகள் உணர்த்தும்.

இற்செறிப்பர் எனக் கேட்ட தலைமகள் தலைவன் சிறைப்புறமாகத் தோழிக்குக் கூறும் குறிஞ்சித் திணையின் கூற்றில் தலைவனின் நெய்தல் நிலப் புனைவு குறிஞ்சியுள் நெய்தல் எனும் திணை மயக்கமாகப் படைக்கப்படுகிறது. இதனை,

**"அம்மவாழி, தோழி! பாணன்**
**சூழ்கழி மருங்கின் நாண் இரை கொளீஇச்**
**சினைக்கயல் மாய்க்கும் துறைவன் கேண்மை**
**பிரிந்தும் வாழ்துமோ நாமே**
**அருந்தவம் முயறல் ஆற்றாதேமே"** (ஐங்.111)

என்னும் பாடல் மூலம் காணமுடியும். இதனுள் சூழ்கழி, துறைவன் என்பன நெய்தல் நிலப் புனைவாக மயங்குகின்றன. இவ்வாறான திணை மயக்கத்தை, ஒருவழித்தணத்தில் தோழி ஆற்றுவிக்க தலைவி கூறியது,(188) காப்பு மிகுதியான இடத்துக் கூறியது,(189) களவு நீட்டித்த வழி

வரையலன்கொல்? என அஞ்சிய தோழிக்குத் தலைமகள் கூறியது,[190] வரைவிடைப் பிரிவின் ஆற்றாளாகிக் கூறியது,[191] வரைவு நீட்டித்த வழிக்கூறியது,[192] தலைவன் சிறைப்புறமாகத் தலைவி தோழிக்குச் சொல்லியது,[193] வரைவிடைப்பிரிவில் தோழிக்குச் சொல்லியது,[194] கடிதின் வரைவு தலைவந்துழி தோழிக்குச் சொல்லியது,[195] வரைவு தலைவந்துழி தோழிக்குச் சொல்லியது,[196] தலைவன் வரவிற்கு வந்துழி தன் மெலிவு நீங்கியமைத் தோழிக்குச் சொல்லியது,[197] எனும் தலைவி கூற்றுப் பாடல்களிலும், தோழி தெளிவிடை விலக்கியது,[198] தலைமகனை இயற்பழித்தது.[199] பகற்குறி வந்த தலைமகற்குக் கூறியது,[200] இரவுக்குறி வந்து நீங்கும் தலைமகற்குத் தோழி கூறியது,[201] வரைவுகடாயது,[202] வரைவிடை வைத்து நீங்கும் தலைமகற்கு உரைத்தது,[203] வரைவிடை வைத்துப் பிரிவான், இவள் வேறுபடாமை ஆற்றுவி என்றாற்கு தோழி நகையாடி உரைத்தது,[204] தலைவன் சிறைப்புறமாகத் தோழி சொல்லியது,[205] அறத்தொடு நிற்றல்,[206] அறத்தொடு நின்று அதனை வற்புறுப்பான் வேண்டிச் சொல்லியது,[207] வரைவு நீட்டித்த வழி ஆற்றுவித்தது.[208] அறத்தொடு நின்ற பின்பு ஐயுற்ற செவிலிக்குச் சொல்லியது,[209] அவர் வரையும் நாள் அணித்து எனச் சொல்லியது,[210] வரைவிற்கு தலைமகன் சான்றோரை விடுத்தது அறிந்து தோழி கூறியது,[211] தலைவன் வரைவிற்கு வந்துழிச் சொல்லியது,[212] சுற்றத்தார் வேண்டியது கொடுத்து தலைமகன் வரைவு மாட்சிப்படுத்தமை அறிந்து தோழி கூறியது,[213] வரைவு மலிவில் கூறியது,[214] திருமண நிகழ்வில் உவந்து கூறியது[215] எனும் தோழி கூற்றிலும் காணமுடிகின்றது.

களவுக்காலத்தில் தலைமகளைக் கண்டுவந்த பாங்கன் தலைமகனிடம் கூறிய வழி, அவ்விடம் செல்லக் கருதிய தலைமகன் கூறும் கூற்று குறிஞ்சித் திணைக்குரியது. இக்கூற்றுள் குறியிடம் நெய்தலாகக் குறிக்கப்பட்டு குறிஞ்சியுள் நெய்தல் மயங்குதலைக் காணமுடிகின்றது. இதனை,

**"அணங்குடைப் பனித் துறைத் தொண்டி அன்ன**
**மணம் கமழ் பொழில்குறி நல்கினள் - நுணங்கு இழை**
**பொங்கு அரி பரந்த உண்கண்,**
**அம் கலிழ் மேனி - அசைஇய எமக்கே,"** (ஐங்.174)

எனும் பாடலுள் காணமுடியும். இதனுள் பொழில் என்பது தொண்டி போன்ற நெய்தல் நிலப்பரப்பு என்பதும் இப்புனைவு திணைமயக்கமாக இடம்பெறுகிறது என்பதும் விளங்கும். இத்திணைமயக்க அமைப்பை இடந்தலைப்பாட்டின்கண் தலைவியது நிலைமை கண்டு கூறும் தலைவன் கூற்றிலும்,(216) காப்பு மிகுதிக்கண் ஆற்றானாகிய தலைமகன் கூறும் கூற்றிலும்,(217) இற்செறிக்கப்பட்ட தலைமகள் தன்னுள்ளே கூறும் கூற்றிலும் காணமுடிகின்றது.(218) வரையாது நெடுங்காலம் வந்து ஒழுக, தோழி தலைமகனை வரைவு முடுகச் சொல்லும் கூற்றிலும், குறிஞ்சித் திணையின் பாடுபொருளில் நெய்தல் நிலப்புனைவு குறியிடத்திற்கான புனைவாகக் குறிக்கப்படுகிறது. இதனை,

**"அறிந்தோர் 'அறன் இலர்' என்றலின், சிறந்த**
**இன் உயிர் கழியினும் நனி இன்னாதே;**
**புன்னை அம் கானல் புணர்குறி வாய்த்த**

**பின் ஈர் ஓதி என் தோழிக்கு..."** (நற். 227: 1-4)

என்னும் அடிகள் குறிக்கும். இத்திணைமயக்கம், தோழி குறை நயப்பக் கூறல்,[219] செறிப்புஅறிவுறி இயது,[220] அறத்தொடு நிற்றல்,[221] வரைவு கடாவுதல்,[222] எனும் துறைக்குறிப்புடைய பாடல்களிலும் காணமுடிகிறது. வரைவிடை ஆற்றாது தோழிக்குக் கூறும் தலைமகளின் கூற்றில்,

**"உறைபதி அன்று, இத்துறைகெழு சிறுகுடி**
**கானல்அம் சேர்ப்பன் கொடுமை எற்றி,**
**ஆனாத் துயரமொடு வருந்தி, பானாள்**
**துஞ்சாது உறைநரொடு உசாவாத்**
**துயில்கண் மாக்களொடு நெட்டிரா உடைத்தே"** (குறுந்.145)

என்று தலைவி நெய்தல் நிலத்துள் துயரப்பட தலைவன் 'சேர்ப்பன்' என நெய்தல் நிலத்தவனாகக் குறிக்கப்படுகின்றான். தலைவன் தலைவியர் நெய்தல் நிலத்தவராகக் குறிக்கப்பட்டு இடம்பெறும் திணைமயக்கத்தைப் பின்னின்ற தலைமகன் தோழி கேட்பச் சொல்லியது[223] எனும் பாடுபொருளிலும் காணமுடிகிறது.

தலைவன் தலைவியர் மற்றும் குறியிடம் என்பன நெய்தலாக அமைந்து குறிஞ்சியுள் நெய்தல் மயங்குவதை அறியமுடிகிறது.

களவுக்காலத்தில் தலைமகன் சிறைப்புறமாகத் தலைமகள் தோழிக்குச் சொல்லுவதாகப் பாடப்பெறுதல் குறிஞ்சியின் பாடுபொருளாகும். இவ்வாறான குறிஞ்சியின் பாடு பொருளில் தலைவன் தலைவியின் நிலப்புனைவுகள் நெய்தலாகக் குறிக்கப்பட்டு குறிஞ்சியுள் நெய்தல் மயங்குவதைக் காணமுடிகின்றது. இதனை,

"சேயாறு சென்று, துணைபரி அசாவாது,
உசாவுநர்ப் பெறினே நன்றுமன் தில்ல
வயச்சுறா எறிந்த புண் தணிந்து, எந்தையும்
நீல்நிறப் பெருங்கடல் புக்கனன்; யாயும்
உப்பை மாறி வெண்ணெல் தரீஇய
உப்பு விளை கழனிச் சென்றனள்; அதனால்
பனி இரும் பரப்பின் சேர்ப்பற்கு,
இனி வரின் எளியள் என்னும் தூதே" (குறுந். 269)

என்னும் பாடல் உணர்த்தும். இதனுள் எந்தை பெருங்கடல் புக்கனன், யாயும் உப்பு விளை கழனி சென்றனள் என்று தலைவியின் நெய்தல் நிலப்புனைவும், 'பனி இரும் பரப்பின் சேர்ப்பன்' எனத் தலைவனுக்குரிய நெய்தல் நிலப் புனைவு மயங்குவதும் விளங்கும். இத்திணை மயக்கத்தை, தலைவியின் கூற்றாக அமையும் குறிஞ்சித்திணையின் பாடுபொருளிலும்,[224] குறை நயப்பக் கூறல்,[225] பகற்குறி வந்து நீங்குமிடத்துக் கூறல்,[226] குறிநேர்தல்,[227] செறிப்பறிவுறுதல்,[228] சிறைப்புறமாகத் தோழி கூறல்,[229] வரைவுகடாதல்,[230] அறத்தொடு நிற்றல்,[231] வரையக் கருதினாய்ஆயின் அதற்கு இது இடம் எனக் கூறல்,[232] வரைவிடைப் பிரிவில் ஆற்றுவித்துக் கூறல்,[233] விரிச்சி பெற்று புகன்ற தோழி கூறல்,[234] வரைவிற்கு வந்த நிலையில் கூறுதல்,[235] வரைவு மலிவில் கூறல்,[236] பின்னும் குறை வேண்டிய தலை மகனுக்குக் கூறல்,[237] இரவுக்குறி நேர்தல்,[238] சிறைப்புறமாகக் கூறல்,[239] வரைவு நீட்டித்த வழிக் கூறல்,[240] வரைவு கடாயது,[241] வரைவு மலிவில் கூறல்,[242] வரைந்து எய்திய பின்பு கூறல்[243] எனும் தோழி கூற்றுப் பாடல்களிலும்

காணமுடிகின்றது. வரையாது நெடுங்காலம் வந்தொழுக, தலைமகளது நிலை உணர்ந்த தோழி வரைவுகடாயது எனும் துறைப் பாடல் குறிஞ்சியின் பாடுபொருளாகும். இதனுள் நெய்தற்திணையின் கூறுகள் தலைவன், தலைவி மற்றும் குறியிடத்திற்குரிய நிலப்புனைவுகளாக அமைந்து குறிஞ்சியுள் நெய்தல் மயங்குவதைக் காணமுடிகின்றது. இதனை,

**"நீடு சினைப் புன்னை நறுந்தாது உதிர,**
**கொடு புனை குருகின் தோடு தலைப் பெயரும்**
**பல் பூங் கானல் மல்கு நீர்ச் சேர்ப்ப!**
**அன்பு இல்லை; ஆதலின், தன் புலன் நயந்த**
**என்னும் நாணும் நன்னுதல் உவப்ப,**
**வருவை ஆயினோ நன்றே- பெருங்கடல்**
**இரவுத் தலை மண்டிலம் பெயர்ந்தென, உரவுத்திரை**
**எறிவன போல வரூஉம்**
**உயர் மணல் படப்பை எம் உறைவின் ஊரே"** (நற். 375)

என்னும் பாடல் உணர்த்தும். இதனுள் நெய்தல் திணைக் கூறாக பெருங்கடல், கானல், சேர்ப்பன், புன்னை, குருகு என்பன மயங்குகின்றன. இவை தலைமக்களின் நிலப் புனைவாகவும், குறியிடமாகவும் குறிக்கப்படுவது விளங்கும்.

குறிஞ்சியில் நெய்தல் மயங்கிய திணை மயக்கப்பாடலுள், தலைவியின் புனைவுச் செய்தியாக நெய்தல் திணைக்குரிய கூறுகள் குறிக்கப்படுவதைக் காண முடிகின்றது. இயற்கைப் புணர்ச்சி புணர்ந்து செல்லும் தலைமகன் தலைவியை ஆயத்தொடு கண்டு கூறுங் கூற்றில்

தலைவியின் தோள் சிறப்பிற்கான செய்தியாக நெய்தல் குறிக்கப்படுகிறது. இதனை,

**"திரை இமிழ் இன் இசை அளைஇ, அயலது**
**முழவு இமிழ் இன் இசை மறுகுதொறு இசைக்கும்**
**தொண்டி அன்ன பணைத்தோள்,**
**ஒண்தொடி, அரிவை - என் நெஞ்சு கொண்டோளே!"** (ஐங்.171)

என்னும் பாடல் வழிக் காணமுடியும். இதனுள் நெய்தல் புனைவாக 'திரைஇமிழ் இன்னிசை' என்பது இடம்பெறுகிறது. தலைவியும் தோழியும் ஒருங்கே நின்றவிடத்து 'இவள் என்னை வருத்தியதற்குக் காரணம் என்ன?' என வினவிய தலைவனுக்குத் தோழி கூறும் கூற்றாக அமையும் குறிஞ்சியின் பாடு பொருளில் தலைவியின் தோள் சிறப்பினைக் குறிக்க நெய்தல் நிலப் புனைவு கூறப்படுகிறது. இதனை,

**"தவறு இலர் ஆயினும், பனிப்ப மன்ற**
**இவறு திரை திளைக்கும் இருமணல் நெடுங்கோட்டு**
**முண்டக நறுமலர் கமழும்**
**தொண்டி அன்னோள் தோள் உற்றோரே"** (ஐங்.177)

என்பது விளக்கும். இதனுள் 'இவறுதிரை' என நெய்தல் மயங்குகின்றது. தலைமகன் குறி வழிச் சென்று தலைமகளைக் கண்ட பாங்கன் தன்னுள்ளே கூறும் குறிஞ்சித் திணைக் கூற்றில்,

**"இரவினானும் இன்துயில் அறியாது**
**அரவு உறு துயரம் எய்துப – தொண்டித்**

**தண்நறு நெய்தல் நாறும்**

**பின் இருங் கூந்தல் அணங்குற்றோரே"** (ஐங்.173)

என்று தலைவியின் கூந்தல் சிறப்பிற்கு நெய்தல் நிலச் செய்தி திணை மயக்கமாகக் கூறப்படுகிறது. தலைவியும் தோழியும் ஒருங்கு நின்றவிடத்துத் தலைமகன் கூறும் கூற்றில்,

"........... ................ ............. **தொண்டித்**

**தண் கமழ் புது மலர் நாறும் ஒண்தொடி** (ஐங்.176: 1-2)

என்று தலைவியின் ஒண்தொடிச் சிறப்பினைக் குறிக்கும் விதமாக நெய்தல் மயங்குகிறது. கடிதின் வரைய வேண்டும் எனக் கூறும் தோழியின் கூற்றில்

**"சிறுநணி வரைந்தனை கொண்மோ – பெருநீர்**

**வலைவர் தந்த கொழுமீன் வல்சிப்**

**பறை தபு முது குருகு இருக்கும்**

**துறை கெழு தொண்டி அன்ன இவள் நலனே"** (ஐங்.180)

என்று தலைவியின் குணச் சிறப்பினைக் குறிக்கவும், பாங்கற் கூட்டம் கூடிய தலைவன் கூறும் கூற்றில்,

**"தொண்டி அன்ன நின் பண்பு பல கொண்டே"**(ஐங்.175.4)

என்று தலைவியின் பண்புச் சிறப்பைக் குறிக்கவும் நெய்தற் செய்திகள் குறிஞ்சியுள் திணை மயக்கமாகக் கூறப் பெறுவதைக் காணமுடிகிறது. இத்திணைமயக்கத்தை, பட்டபின்றை வரையாது பொருள்வயிற் பிரிந்த காலத்து ஆற்றாளாய் நின்ற தலைவி கூற்று(244) கழறி பாங்கற்குத் தலைமகன் கூறும் கூற்று(245) தலைவன் தோழியை இரந்து குறையுறும்

கூற்று[246] நின்னால் நயக்கப்பட்டவள் யாவள் என வினவிய தோழிக்குத் தலைமகன் கூறும் கூற்று[247] முதலியவற்றுள்ளும் காணமுடிகின்றது.

கண் துயிலாமைக்குரிய காரணம் என்ன? என வினவிய பாங்கனுக்குத் தலைவன் கூறும் குறிஞ்சித் திணைக் கூற்றில் நெய்தல் நிலப் புனைவு கண் துயிலாமையினை விளக்கும் உவமையாக இடம் பெறுகிறது. இதனை,

> **"உரவுக்கடல் ஒலித்திரைபோல,**
>
> **இரவினானும் துயில் அறியேனே"** (ஐங்.172: 3-4)

என்னும் அடிகளின் வழி உணர முடியும். மடல் ஏறுகின்ற தலைமகன் சான்றோர்க்குக் கூறும் கூற்றில்,

> ***"யாமத்தும் எல்லையும் எவ்வத்திரை அலைப்ப***
>
> ***மாமேலென் என்று? மடல் புணையா நீந்துவேன்"***
>
> (கலித்.139: 14-15)

என்று நெய்தல் நிலச் செய்தி திணைமயக்கமாகக் கூறப் பெறுகின்றது. அல்லகுறிப்பட்டு மீளும் தலைமகன் தலைவியைப் பெறமுடியாத நிலைக்கு நெய்தல் நிலஞ் சார் உவமையினைப் படைப்பர். தலைவியைப் பெற முடியாத தலைவனின் நிலையானது, முதுமையால் சிறகு நீங்கிய நாரை, கிழக்குக் கடற்கரையில் இருந்து மேற்குக் கடற்கரையில் கிடைக்கும் அயிரை மீனுக்காகத் தலையைத் தூக்கிப் பார்க்கும் நெய்தல் நிலப் புனைவு உரைக்கப்படுகிறது. இதனை,

> ***"குண கடற் திரையது பறைதபு நாரை***
>
> ***திண் தேர்ப் பொறையன் தொண்டி முன்துறை***

**அயிரை ஆர் இரைக்கு அணவந் தாஅங்குச்**

**சேயள் அரியோட் படர்தி;**

**நோயை – நெஞ்சே! - நோய்ப் பாலோயே" (குறுந்.128)**

என்னும் பாடல் வழி காணமுடிகின்றது. காப்பு மிகுதிக்கண் ஆற்றாளாகிய தலைமகள் தோழிக்குக் கூறும் குறிஞ்சிக் கூற்றில்,

**"பூ இடைப் படினும் யாண்டு கழிந்தன்ன**

**நீர் உறை மகன்றில் புணர்ச்சி போலப்"** (குறுந்.57: 1-2)

என்று நெய்தல் நிலப்புனைவு உவமை வழியாக இடம்பெறுகிறது. இரவுக்குறி உணர்த்திய தோழிக்குத் தலைவி கூறும் கூற்றில்,

**"ஒருபாற் படுதல் செல்லாது, ஆயிடை,**

**அழுவம் நின்ற அலர் வேர்க் கண்டல்**

**கழிபெயர் மருங்கின் ஒல்கி, ஓதம்**

**பெயர் தரப் பெயர்தந் தாங்கு**

**வருந்தும் – தோழி! - அவர் இருந்த என் நெஞ்சே"**

(குறுந்.340: 3-7)

என்றும், 'கௌவை ஆகின்றது நின்நட்பே' எனக் கூறி வரைவு கடாவும் தோழியின் கூற்றில் கௌவையினைக் குறிக்கும் உவமையாக,

**"தான் அது பொறுத்தல் யாவது – கானல்**

**ஆடு அரை ஒழித்த நீடு இரும் பெண்ணை**

**வீழ் காவோலைச் சூழ் சிறை யாத்த**

**கானல் நண்ணிய வார் மணல் முன்றில்**

**எல்லி அன்ன இருள் நிறப் புன்னை**

**நல் அரை முழுமுதல் அவ்வயின் தொடுத்த**
**தூங்கல் அம்பித் தூவல் அம் சேர்ப்பின்**
**கடு வெயில் கொதித்த கல் விளை உப்பு**
**நெடு நெறி ஒழுகை நிரை செலப் பார்ப்போர்**
**அளம் போகு ஆகுலம் கடுப்ப,**
**கௌவை ஆகின்றது, ஐய நின் நட்பே?"** (நற்.354)

என்னும் நெய்தல் புனைவு இடம்பெறுகின்றது.

தோழி வரைவு கடாவும் குறிஞ்சித் திணையின் பாடுபொருளில் நெய்தல் திணைக் கூறுகள், விளிக்கப்படும் நிலையில் திணை மயக்கமாக இடம் பெறுகின்றன. இதனை,

**"பாய் திரைப்பாடு ஓவாப் பரப்பு நீர்ப் பனிக்கடல்!**
**'தூஅறத் துறந்தனன் துறைவன்' என்று, அவன் திறம்**
**நோய் தெற உழப்பார்கண் இமிழ்தியோ? எம் போலக்**
**காதல் செய்து அகன்றாரை உடையையோ?"**(கலித்.129: 8-11)

என்னும் அடிகளின் வழிக் காணமுடியும். இதில் நெய்தல் நிலப் புனைவாக பனிக்கடல், துறைவன் என்பன மயங்குகின்றன. களவில் தலைவன் வரைவினை நீட்டிப்பதனால் வருந்தும் தலைவியின் குறிஞ்சிக்குரிய பாடுபொருளில் நெய்தல் விளிக்கப்படும் பொருளாகக் குறிக்கப்படுகிறது. இதனை,

**"யார் அணங்குற்றனை - கடலே! பூழியர்**
**சிறுதலை வெள்ளைத்தோடு பரந்தன்ன**
**மீன் ஆர் குருகின் கானல்அம் பெருந்துறை,**

**வெள்வீத் தாழை திரை அலை**

**நள்ளென் கங்குலும் கேட்கும், நின் குரலே"** (குறுந். 163)

என்னும் பாடல் உணர்த்தும். இதனுள் கடல், கானல் அம்பெருந்துறை என்பன நெய்தல் திணைச் செய்தியாக மயங்குகின்றன.

**குறிஞ்சியுள் முல்லை**

நெய்தல் திணைப்பகுப்பில் குறிஞ்சித்திணையின் பாடுபொருளுடன் முல்லைத் திணையின் கூறுகள் மயங்கிய திணைமயக்கம் உணரப்படுகின்றது. இத்திணைமயக்கமாக நெய்தல் பகுப்பில் ஒரு பாடல் அறியப்படுகிறது.[248]

வரைவு நீட்டிப்பில் தலைவி பொழுது கண்டு வருந்திக் கூறும் கூற்று களவுத் திணையான குறிஞ்சிக்குரியது. இதனுள் தலைவி வருந்தும் பொழுது முல்லைக்குரிய மாலையாக அமைந்து குறிஞ்சியுள் முல்லை மயங்குவதை,

**"புள்ளும் மாவும் புலம்பொடு வதிய**

**நள்ளென வந்த நார் இல் மாலை,**

**பலர் புகுவாயில் அடைப்பக் கடவுநர்,**

**வருவீர் உளீரோ? எனவும்**

**வாரார் - தோழி நம் காதலோரே"** (குறுந். 118)

என்னும் பாடல் வழி உணரமுடிகின்றது. இதனுள் அமையும் குறிஞ்சிப் பாடுபொருளை, வரைவு நீட்டித்த வழி, தலைமகள் பொழுது கண்டு தோழிக்குச் சொல்லியது எனும் துறைக்குறிப்பும் உறுதிப்படுத்துகின்றது.

இப்பாடுபொருளுடன் ‘நள்ளென வந்த நார் இல்மாலை’ என முல்லைத்திணையின் பொழுது மயங்குவது விளங்கும். எனினும் இப்பாடல் நெய்தல் எனக் கொள்ளப்பட்டுள்ளது.

**பாலையுள் நெய்தல்**

நெய்தல் எனக் குறிக்கப்பெறும் திணைப் பகுப்பில் பாலையுரியுடன் நெய்தலின் முதல், கரு மயங்கிய திணைமயக்கப் பாடல்கள் 11 அறியக் கிடக்கின்றன.(249)

தலைவன் தலைவியைப் பிரிந்து சென்ற நிலையில் தோழி ‘இவள் பிரிவை ஆற்றாள்’ எனக் கூற, அத்தோழிக்குத் தலைவி, தலைவன் பிரிந்து சென்றதனால் உண்டான ஆற்றாமையினைக் குறிக்கின்றாள். இக்கூற்று பாலைத் திணைக்குரிய பாடுபொருளாகும். இதனுள் தலைவன் நெய்தல் நிலத்தலைவனாகக் குறிக்கப்பட்டு பாலையுள் நெய்தல் மயங்குவதைக் காணமுடிகின்றது. இதனை,

**“அதுகொல், தோழி! காமநோயே?**
**வதி குருகு உறங்கும் இன் நிழற் புன்னை**
**உடை திரைத் திவலை அரும்பும் தீம்நீர்,**
**மெல்லம் புலம்பன் பிரிந்தென,**
**பல் இதழ் உண்கண் பாடு ஒல்லாவே”** (குறுந்.5)

என்னும் பாடல் குறிக்கின்றது. இதனுள் மெல்லம் புலம்பன், புன்னை என்னும் நெய்தற் புனைவுகள் திணைமயக்கமாக இடம்பெறுகின்றன. இவ்வமைப்பில் அமையும் திணைமயக்கம்,

**“புன்இமிழ் பெருங்கடற் சேர்ப்பனை**

**உள்ளேன் தோழி படீஇயர், என் கண்ணே”** (குறுந்.243: 4-5)

என்னும் பாடல் அடிகளாலும் விளங்கும். இதனுள் பெருங்கடற் சேர்ப்பன் என்பது திணைமயக்கமாக மயங்குகின்றது. தலைவன் பிரிந்து சென்றதால் மாலைப் பொழுது துயரம் செய்வதைக் குறிக்கும் தலைவி கூற்றில்

**“............ ................. ................ வீ ததை கானல்**

**தண்ணந்துறைவன்...”** (குறுந்.386: 1-2)

என்று நெய்தல் மயங்குகிறது. தலைவன் பிரிந்து செல்ல, தலைவி தோழிக்குக் கூறும் பாலையின் பாடுபொருளில் தலைவன் நெய்தல் நிலத்தவன் என்பதை,

**“தண்ணுமை வெரீஇய தடந்தாள் நாரை**

**செறி மடை வயிரின் பிளிற்றி, பெண்ணை**

**அகமடல் சேக்கும் துறைவன்”** (அகநா.40: 14-16)

என்னும் அடிகள் விளக்கும். தலைவி தலைவனின் பிரிவில் வருந்தியுரைக்கும் சூழல் நெய்தலாகக் குறிக்கப்பட்டு திணைமயங்குவதை,

**“கானல் மாலைக் கழிப்பூக் கூம்ப**

**நீல்நிறப் பெருங்கடல் பாடு எழுந்து ஒலிப்ப**

**மீன் ஆர் குருகின் மென் பறைத் தொழுதி**

**குவை இரும் புன்னைக் குடம்பை சேர”** (அகநா.40: 1-4)

என்னும் அடிகளால் அறிய முடியும். தலைவன் பிரிந்தவிடத்து தலைவி வருந்துவதாகப் பாடப் பெறும் பாலைப் பாடுபொருளுடன் தலைவன், தலைவியர் நெய்தல் நிலத்தவராகப் படைக்கப்பட்டு பாலையுள் நெய்தல் மயங்குவதைக் காணமுடிகின்றது. இதனை,

**"மெல்லம் புலம்பன் பிரியின், புல்லெனப்**

**புலம்பு ஆகின்றே -தோழி! கலங்கு நீர்க்**

**கழிசூழ் படப்பைக் காண்ட வாயில்,**

**ஒலி காவோலை முள் மிடைவேலி,**

**பெண்ணை இவரும் ஆங்கண்**

**வெண்மணற் படப்பை, எம் அழுங்கல் ஊரே"** (நற்.38: 5-10)

என்னும் பாடலடிகள் உணர்த்தும். இதனுள் மெல்லம் புலம்பன், கழிசூழ் படப்பை என்று நெய்தல்திணைப் புனைவு மயங்குவது விளங்கும். நெய்தல் நிலத்தலைவன் பிரிந்து சென்ற நிலையில் நெய்தல் நிலத்து மணல் மேடுகளில் உள்ள பனைமரத்தில் உள்ள நாரை தன் துணையை அழைக்கும் ஓசையைக் கேட்டுத் தலைவி துயரமடைகின்றாள் என்ற படைப்பில் பாலையுள் நெய்தல் மயங்குகின்றது.[250]

தலைவனின் பிரிவால் இரவில் துயரமடையும் தலைவியின் கூற்றில் நெய்தல் நிலச் சூழல் தலைவியின் துயரை அதிகரிக்கச் செய்வதாகப் படைக்கப்படுகிறது. இதனை,

**"கானே பூமலர் கஞலிய பொழில் அகம்தோறும்**

**தாம் அமர் துணையொடு வண்டு இமிரும்மே;**

**யானே, புனை இழை ஞெகிழ்த்த புலம்புகொள் அவலமொடு**

**கனை இருங் கங்குலும் கண்படை இலனே"** (நற்.348: 5-8)

என்னும் அடிகள் விளக்கும். இதனுள் கானல் என்பது கானே எனக் குறிக்கப்படுகின்றது.

உடன் போக்குத் துணிந்த வழி அதற்கு இரவின் கண் தலைமகன் வந்தது அறிந்த தோழி தலைமகளைப் பாயல் உணர்த்திச் சொல்லியது" எனும் துறையில் அமைந்த பாலைப் பாடுபொருளில் தலைவன் **"கொண்கன்"**(ஐங்.200:2) என நெய்தல் நிலத்தவனாகக் குறிக்கப்படுகின்றான். இதனால் நெய்தல் நிலத் தலைவனின் பாலையொழுக்கம் பாலையுள் நெய்தலாக அமைவது விளங்கும். பிரிவுக் காலத்தில் துன்புறும் தலைவியின் கூற்றில் துன்பம் எல்லை கடந்து செல்வதாகக் குறிக்குமிடத்து நெய்தல் திணையின் புனைவு திணைமயக்கமாக இடம்பெறுகிறது. இதனை,

**"எவன் செய்தனள், இப்பேர் அஞர் உறுவி? என்று**
**ஒருநாள் கூறின்றுமிலரே; விரிநீர்**
**வையக வரையளவு இறந்த**
**எவ்வநோய்; பிறிது உயவுத் துணை இன்றே"** (நற்.130: 9-12)

என்னும் அடிகள் உணர்த்தும். தலைமகனைச் செலவழுங்குவிக்கும் தோழி, 'ஐயனே தலைவி தனித்து வருந்தியிருப்பதை என்னால் ஆற்ற இயலாது; பருவம் வந்துற்றது என வருந்துவாள். ஆகையால் பிரியாதிருப்பாயாக' என்று கூறுகின்றாள். இப்பாலைப் பாடுபொருளில் நெய்தல் நிலச் செய்தி உவமையின்வழி மயங்குவதைக் காணமுடிகின்றது. இதனை,

**"ஒன்று இல் காலை அன்றில் போலப்**
**புலம்பு கொண்டு உறையும் புன்கண் வாழ்க்கை**
**யானும் ஆற்றேன்; அது தானும் வந்தன்று**

***நீங்கல் வாழியர்"*** (நற்.124: 1-4)

என்னும் பாடல் அடிகள் உணர்த்தும். தலைவர் பிரியார் எனும் நம்பிக்கையில் 'பிரியேன்' எனக் கூறிய தலைமகனுக்குச் 'செல்க' என்று கூறியபின் தலைவன் பிரிந்தான் அப்பிரிவில் வருந்தும் தலைவியின் பாலைத் திணைப் பாடுபொருளில் நெய்தல் திணையின் புனைவு இடம்பெறுவதை,

**"சேறும் சேறும் என்றலின், பண்டைத் தம்**
**மாயச் செலவாச் செத்து, மருங்கு அற்று**
**மன்னிக் கழிக என்றேனே; அன்னோ!**
**ஆசு ஆகு எந்தை யாண்டு உளன் கொல்லோ?**
**கருங்கால் வெண் குருகு மேயும்**
**பெருங்குளம் ஆயிற்று, என் இடைமுலை நிறைத்தே"** (குறுந்.325)

என்னும் பாடலுள் காணமுடிகின்றது. இங்கு பெருங்குளம் என்பது நெய்தல் நிலப் பகுதியைக் குறித்தமைகின்றது. இவற்றால் நெய்தல் நில மக்களின் பாலையொழுக்கமும், பாலைப் பாடலுள் நெய்தல் நில உவமையும் பாலையுள் நெய்தல் மயங்கியதாக அமைகின்றன என்பது பெறப்படும்.

**மருதத்துள் நெய்தல்**

நெய்தல் எனும் திணைப் பகுப்பில் அமைந்த பாக்களுள் மருதப் பாடு பொருளுடன் நெய்தலின் முதல், கரு மயங்கிய திணை மயக்கம் அறியப்படுகிறது. இத்திணை மயக்கத்துள் 47 பாடல்கள் பெறப்படுகின்றன.[251]

பரத்தை, தலைமகற்குச் சொல்லிய மருதப் பாடு பொருளில் தலைவன் நெய்தல் நிலத்தவனாகக் குறிக்கப்படுகிறான். இதனை,

**"கண்டிகும் அல்லமோ கொண்க! நின்கேளே?**

**தும்பை மாலை இளமுலை**

**நுண்பூண் ஆகம் விலங்குவோளே!"** (ஐங்.127)

என்னும் பாடலும்,

**"கண்டிகும் அல்லமோ கொண்க! நின்கேளே**

**உறாஅ வறுமுலை மடாஅ,**

**உண்ணாப் பாவையை ஊட்டுவோளே!"** (ஐங்.128)

என்னும் பாடலும் விளக்கும். தலைமகனைப் பரத்தை நொந்து சொல்லியதாக அமையும் மருதப் பாடுபொருளிலும் இம்மயக்கம் உணரப்படுகிறது.(252) வாயிலாகப் புகுந்தார்க்குத் தோழி சொல்லியது எனும் கூற்றில்,

**"வெள்ளாங் குருகின் பிள்ளை செத்தென**

**காணிய சென்ற மடநடை நாரை**

**உளர ஒழிந்த தூவி குவவு மணற்**

**போர் வில் பெறூஉம் துறைவன் கேண்மை**

**நல்நெடுங் கூந்தல் நாடுமோ மற்றே" (ஐங்.153)**

என்று தலைவன் நெய்தல் நிலத்தவனாகக் குறிக்கப்படுகின்றான். இத்திணை மயக்கத்தை வாயிலாகப் புக்க தலைமகற்குச் சொல்லியது,(253) வாயிலாகப் புக்க பாணற்குச் சொல்லியது,(254) தலைமகற்கு வாயில் மறுத்தது,(255) வாயில்களுக்கு வாயில் மறுத்தல்,(256) வாயில் நேர்ந்தது(257) எனும் தோழி கூற்றுப் பாடல்களிலும் அறியப்படுகிறது.

பாணன் தூதாகச் செல்லவேண்டும் என்னும் குறிப்பில், தலைமகள் தன் மெலிவு காட்டிச் சொல்லும் மருதப் பாடல்களுள் தலைமகன் நெய்தல் நிலத்தவனாகக் குறிக்கப்படுகிறான். இதனை,

**"காண்மதி பாண! நீ உரைத்தற்கு உரியை**
**துறை கெழு கொண்கன் பிரிந்தென,**
**இறை கேழ் எல்வளை நீங்கிய நிலையே"** (ஐங்.140)

என்பது உணர்த்தும். இவ்வாறான திணைமயக்கம் 'அவற்கு அவ்வாறு நிகழ்ச்சி இல்லை' எனத் தெளிக்கும் தோழிக்குத் தலைவி சொல்லியது எனும் மருதப்பாடுபொருளுடன் அமைவதை,

**"பெருங் கடற்கரையது சிறுவெண் காக்கை**
**இருங்கழி நெய்தல் சிதைக்கும் துறைவன்**
**'நல்லன்' என்றி ஆயின்**
**பல் இதழ் உண்கண் பசத்தல் மற்று எவனோ?"** (ஐங்.170)

என்பது உணர்த்தும். இத்திணைமயக்கத்தை, "கணவனது பரத்தொழுக்கம் பற்றித் தலைவி புரிந்து கூறும் பாடலாகும். இது நெய்தல் நிலத்து ஊடல் உரிப்பொருள் குறித்தது. இருப்பினும் கடற்கரை, காக்கை, இருங்கழி, துறைவன் என இப்பாடலில் நெய்தல் திணைச் சூழலை அமைத்திருத்தல் காணலாம்"(258) என்பர் ந. சுப்புரெட்டியார். "கணவது பரத்தொழுக்கம் பற்றித் தலைவி புரிந்து கூறும் பாட்டு. இது நெய்தல் நிலத்து மருதவொழுக்கம் கூறியது"(259) என்பர் வ.சுப.மாணிக்கனார். இவ்வாறு தலைமகனுக்குப் புறத்தொழுக்கம் உளதாகிய வழித் தலைவி தோழிக்குச் சொல்லியது,(260) வாயில் வேண்டி வரும் தலைமகனுடன் புதல்வன் வாராது தனித்து வந்தவிடத்துச் சொல்லியது,(261) பாணன்

இவ்வாறு வேறுபடுதல் கூடாது என்று கூறிய வழித் தலைவி கூறியது,(262) தலைவி வாயில் மறுத்தது,(263) வாயில் நேர்விக்கும் தோழிக்குச் சொல்லியது,(264) வாயிலாய் வந்தார்க்குத் தோழி இயற்பழித்த வழித் தலைவி கூறியது,(265) தலைவன் ஆற்றாமையே வாயிலாகப் புகுந்த வழிச் சொல்லியது,(266) பாணற்குத் தலைமகள் நகையாடிச் சொல்லியது,(267) இந்த வேறுபாடு ஏன் என வினவிய பாணற்குச் சொல்லியது,(268) 'இவ்வாறு செய்ததற்குக் காரணம் என்ன?' என வினவிய தோழிக்குச் சொல்லியது,(269) வாயில் நேரும் தலைமகள் சொல்லியது(270) எனும் மருதப் பாடுபொருளிலும் தலைமகன் நெய்தல் நிலத்தவனாகப் படைக்கப்பட்டு திணை மயங்குவதைக் காண முடிகின்றது.

தலைமகன் பரத்தை மாட்டுப் பிரிந்த வழி ஆற்றாளாகிய தலைமகள் அவனைக் கண்ட வழி அவ்வாற்றாமை நீங்குமன்றே; நீங்கிய வழிப் பள்ளியிடத்தானாகிய தலைமகற்குச் சொல்லும் தலைவி,

**"அணிற்பல் அன்ன கொங்கு முதிர் முண்டகத்து**
**மணிக்கேழ் அன்ன மாநீர்ச் சேர்ப்ப!**
**இம்மை மாறி மறுமை ஆயினும்**
**நீ ஆகியர் எம் கணவனை;**
**யான் ஆகியர் நின் நெஞ்சு நேர்பவளே"** (குறுந்.49)

என்றுரைக்கின்றாள். இதனுள் காணப்படும் திணை மயக்கத்தை "தலைவன் கருப்பொருளால் நெய்தல் நிலத்தவன். பாடலின் பின்புலம் நெய்தலாக இருந்தும் உரிப் பொருளால் இது மருதத்துக்கு உரியதாகின்றது"(271) என்பர்.

தோழி பாணனுக்குச் சொல்லியது,[272] தோழி வாயில் நேர்தல்,[273] புறத்தொழுக்கம் மேற்கொண்ட தலைமகனுக்குச் சொல்லியது,[274] வாயில் வேண்டிய பாணற்குத் தலைவி சொல்லியது,[275] வாயில் மறுக்கும் தலைவி சொல்லியது,[276] எனும் மருதப் பாடுபொருளிலும் தலைவன் தலைவியருக்குரிய நிலச் செய்தியாக நெய்தல் குறிக்கப்பட்டு மருதத்துள் நெய்தல் மயங்குவதைக் காண முடிகின்றது. தலைவி பாணற்கு வாயில் மறுக்கும் மருதப் பாடுபொருளில் தலைவன்

***"சிறுவீ ஞாழற் பெருங்கடற் சேர்ப்பன்"*** (நற்.74:5)

என்றும், தலைவி வாழும் நெய்தல் நிலச் சூழல்,

***"புது மணற் கானல் புன்னை நுண் தாது,***
***கொண்டல் அசைவளி தூக்குதொறும், குருகின்***
***வெண்புறம் மொசிய வார்க்கும், தெண்கடல்***
***கண்டல் வேலிய ஊர், 'அவன்***
***பெண்டு' என அறிந்தன்று; பெயர்த்தலோ அரிதே!"*** (நற்.74:7-11)

என்றும் குறிக்கப்படுகின்றது. தலைவனின் பரத்தமையொழுக்கத்தால் துயரப்பட்ட தலைவி அதனைப் பிறர் அறியாதவாறு மறைத்திருந்தாள். தலைவியின் துயரைத் தலைவன் அறியும் வண்ணம் தோழி பாணனுக்குக் கூறும் மருதப் பாடுபொருளில் தலைவன் தலைவியின் நிலப் புனைவாக நெய்தல் குறிக்கப்படுவது உணரப்படுகிறது.[277] தலைவன் ஒரு பரத்தையினை அடைய முயற்சி செய்தான். அதனைக் குறிப்பில் உணர்ந்த தலைவி தலைவன் காதில் விழுமாறு பாணனுக்குச் சொல்வதாக அமையும் மருதத் திணைக்குரிய பாடுபொருளுடன் பரத்தை,

**“நெய்தல் அம் கண்ணி”** (ஐங்.135:3)

என்று குறிக்கப்பட்டு திணை மயங்குவது பெறப்படுகின்றது.

மருதப் பாடுபொருளில் நெய்தல் மயங்கும் நிலையில் நெய்தல் திணைச் செய்தி உவமையின் வழி இடம் பெறுவதை,

> **“இருங்கழிச் சேயிறா இனப்புள் ஆரும்**
> **கொற்கைக் கோமான் கொற்கை அம் பெருந்துறை**
> **வைகறை மலரும் நெய்தல் போலத்**
> **தகை பெரிது உடைய காதலி கண்ணே!”** (ஐங்.188)

என்னும் பாடல் கொண்டு உணர முடிகின்றது. இவற்றால் நெய்தலின் முதல் கருப்பொருள்கள் மருதத்துள் மயங்குதற்கு, நெய்தல் நில மக்களின் மருதவொழுக்கம் பாடப்பெறுதல் காரணம் என்பது விளங்கும்.

**தொகுப்புரை**

திணை இலக்கிய மரபில் உரிப்பொருளும் முதல் கருப்பொருளும் வரையறுக்கப்பட்டு, இன்ன உரிப்பொருளுக்கு இன்னின்ன முதற் பொருள் இன்னின்ன, கருப்பொருள் சிறப்பாகும் எனப் புலனெறி வழக்கம் செய்யப்படும் இம்மரபில் உரிப்பொருளுடன் அதற்கு உரியவல்லாத பிற திணைக்குரிய முதல், கருப்பொருள்கள் இடம்பெறுதல் திணை மயக்கம் எனும் பாடுநெறியாகக் கொள்ளப்பெறும்.

சங்க அக இலக்கியப் பாக்களுள் திணைமயங்காப் பாடல்களும், திணை மயக்கப்பாடல்களும் காணப்படுகின்றன. உரிப்பொருளுடன் முதல், கருப்பொருள் மயங்கிய திணை மயக்கப்பாடல்கள் முதல், கருவிற்குரிய திணைப்பெயரால் பாகுபடுத்தப்பட்டுள்ளன.

முல்லைத் திணைப்பகுப்பில் 234 பாடல்கள் உள்ளன. இவற்றுள் 136 பாடல்கள் முல்லைக்குரிய திணைமயங்காப் பாடல்களாகவும், 7 பாடல்கள் பிற திணைக்குரிய திணைமயங்காப் பாடல்களாகவும் மருதம் 2 பாடல்கள், பாலை 2 பாடல்கள், கைக்கிளை 3 பாடல்கள் காணப்படுகின்றன. இவற்றால் முல்லைத் திணைப் பகுப்பில் காணப்படும் திணைமயங்காப் பாடல்களின் எண்ணிக்கை 143 ஆகின்றன. இப்பாடல்களைத் தவிர்த்து காணப்படும் 91 பாடல்கள் திணைமயக்கப் பாடல்களாகக் காணப்படுகின்றன. இவற்றுள் முல்லைக்குரிய உரிப்பொருளுடன் பிற திணையின் முதல் கருப்பொருள்கள் மயங்கிய திணைமயக்கப் பாடல்கள் 58 ஆகவும், பிறதிணையின் உரிப்பொருளுடன் முல்லைத் திணையின் முதல் கருப்பொருள்கள் மயங்கிய திணைமயக்கப் பாடல்கள் 33 ஆகவும் காணப்படுகின்றன. இவற்றுள் குறிஞ்சித் திணையின் பாடுபொருளுடன் முல்லையின் முதல் கரு மயங்கிய பாடல்கள் 17, பாலைத் திணையின் பாடுபொருளுடன் முல்லையின் முதல் கரு மயங்கிய பாடல்கள் 16 ஆகும்.

குறிஞ்சித் திணையின் பாடுபொருளில் முல்லைத் திணையின் முதல், கரு மயங்கிய திணைமயக்கப் பாடல்கள் குறிஞ்சியுள் முல்லை எனக் குறிக்கப்பெறுகின்றது. குறிஞ்சியின் பாடுபொருளில் முல்லையின் முதல் கருப்பொருள் மயங்குமிடத்து முல்லையின் கூறுகள் குறிஞ்சிக்குரிய குறியிடமாகவும், களவைச் சிறப்பிக்கும் ஏறுதழுவல் நிகழும் இடமாகவும் தலைவன் தலைவியருக்குரிய இடமாகவும் அமைவதுடன், முல்லைத் திணைக்குரிய மாலைப்பொழுது களவுக்காலத்தில் தலைவியைக் கண்ட

தலைவனின் அறிவை மயங்கச் செய்யும் பொழுதாகவும், களவில் தலைவனின் வரைவை எதிர் நோக்கியிருக்கும் தலைவியின் துயரை மிகுதிப்படுத்தும் பொழுதாகவும் அமைகின்றன.

பாலையுள் முல்லையின் முதல் கருப்பொருள்கள் மயங்குமிடத்து முல்லைத் திணையின் கார்காலம் தலைவன் செலவு மேற்கொண்ட பொழுதாகக் குறிக்கப்படுகின்றது. இப்புலனெறி வழக்கம் புதுமையான ஒன்றாக அமைகின்றது. இப்புலனெறி மாற்றத்தால் தலைவனைச் செலவழுங்குவிக்குமிடத்து முல்லைத் திணையின் கார்கால இயல்பு ஆற்ற இயலாது எனக் காரணம் காட்டப்படுகிறது. தலைவன் செலவழுங்கும் சூழலில் கார்காலத்தே வேந்தன் போர்வினையைத் தவிர்த்ததனைக் குறிப்பிடுகின்றான். தலைவனின் பிரிவிற்கு வருந்தும் தலைவியைத் தோழி அவர் சென்ற வழி கார்காலத்தால் இனியனவாகின எனக் குறிப்பிடுகின்றாள். பாலையுள் முல்லை மற்றும் குறிஞ்சியின் முதல் கருப்பொருள் மயங்கும் பாடல்களில் தலைவன் கார்காலத்தே பிரிந்து சென்றதால் அவன் செல்லும் வழியான முல்லை மற்றும் குறிஞ்சியாக அமைவது குறிக்கப்படுகின்றது.

குறிஞ்சித்திணைப் பகுப்பில் 488 பாடல்கள் காணப்படுகின்றன. இவற்றுள் 372 பாடல்கள் திணை மயங்காப் பாடல்களாகவும், 116 பாடல்கள் திணை மயக்கப் பாடல்களாகவும் உள்ளன. குறிஞ்சித் திணைப்பகுப்பில் முல்லைத் திணைக்குரிய பாடுபொருளுடன் குறிஞ்சியின் முதல் கருப்பொருள் மயங்கிய திணைமயக்கப் பாடல்கள் 12 காணப்படுகின்றன. முல்லையின் பாடுபொருளில் குறிஞ்சியின் முதல் கருப்பொருள் மயங்கும்

நிலையில் கூதிர்காலமும் யாமப் பொழுதும் குறிப்பிடத்தக்க அளவில் திணைமயக்கமாக இடம்பெறுகின்றன. கார்கால வரவை நோக்கி ஆற்றியிருக்கும் தலைவி கார்காலம் கடந்துவிட்ட நிலையிலும் துயரப்பட்டு ஆற்றியிருக்கும் நிலையில் கூதிர்காலமும் யாமப் பொழுதும் முல்லையின் பாடுபொருளில் மயங்கியுள்ளன.

முல்லைத் திணைப் பாடல்களைச் சிறப்பிக்கும் கார்கால மேகங்கள் குறிஞ்சி நிலத்தைச் சூழ்ந்து பெய்யத் தொடங்குவதாகக் குறிக்கப்படும் நிலையில் முல்லையின் பாடுபொருளில் குறிஞ்சியின் முதல் கருப்பொருள்கள் மயங்குகின்றன.

குறிஞ்சி நில மக்களின் முல்லையொழுக்கம் படைக்கப்படும் பொழுது முல்லையின் பாடுபொருளுடன் குறிஞ்சியின் முதல், கரு மயங்குவதைக் காணமுடிகின்றது.

குறிஞ்சித் திணைப் பகுப்பில் பாலைத்திணையின் பாடுபொருளுடன் குறிஞ்சித் திணையின் முதல், கருப் பொருள் மயங்கிய திணைமயக்கப் பாடல்களாக 5 பாடல்கள் காணப்படுகின்றன.

தலைவன் பிரிந்து செல்லக்கருதிய நிலம் குறிஞ்சியாகக் குறிக்கப்படும் நிலையில் பாலையின் பாடுபொருளில் குறிஞ்சி மயங்குகின்றது. பிரிவை மையமிட்டுப் பாலைப்பாடுபொருளில் குறிஞ்சித் திணையின் கூதிர் மற்றும் யாமப் பொழுதுகள் தலைவன் பிரிந்தால் தலைவியைத் துயரப்படுத்தும் பொழுதாகவும், பிரிதற்கு இயலாப் பொழுதாகவும், உடன்போக்கில் கொண்டுசெல்ல, தலைவன் வரும் பொழுதாகவும் குறிக்கப்படுகின்றது.

பாலையின் பாடுபொருளைச் சிறக்கச் செய்யும் உவமைக் குறிப்புக்களாகவும் குறிஞ்சியின் முதல், கருப்பொருட்கள் பாலையின் பாடுபொருளுடன் மயங்குவதைக் காணமுடிகின்றது.

மருதத் திணைக்குரிய பாடுபொருளுடன் குறிஞ்சித் திணையின் முதல், கருப்பொருள்கள் மயங்கிய பாடல்கள் 9 காணப்படுகின்றன. இப்பாடல்கள் குறிஞ்சி எனும் பகுப்பில் குறிக்கப்படுகின்றன. மருதத் திணையின் பாடுபொருளுடன் குறிஞ்சியின் முதல், கரு மயங்கும்போது குறிஞ்சி நிலப்புனைவுகள் தலைமக்களுக்குரிய நிலப் புனைவாகக் குறிக்கப்படுகின்றன. இவற்றுடன் குறிஞ்சி நிலப்புனைவைக் கொண்ட உவமைகளும் இத்திணைமயக்கத்திற்கு அடிப்படையாக அமைகின்றன.

குறிஞ்சித் திணைப்பகுப்பில் நெய்தல் திணையின் பாடுபொருளுடன் குறிஞ்சித் திணையின் முதல், கருப்பொருள்கள் மயங்கிய நிலையில் ஒரு பாடல் காணப்பெறுகின்றது. இதனுள் தலைவியின் இரங்கல் உணர்வைச் சிறப்பிக்கும் விதமாகக் குறிஞ்சித் திணையின் கூறுகள் உவமையின் வழியாக இடம்பெறுகின்றன.

சங்க இலக்கியத்துள் பாலை எனும் திணைப்பகுப்பில் 530 பாடல்கள் கொள்ளப்படுகின்றன. இவற்றுள் 129 பாடல்கள் பிற திணையின் பாடுபொருளுடன் காணப்படுகின்றன.

பாலைப் பகுப்பில் முல்லையின் பாடுபொருளுடன் 92 பாடல்களும், குறிஞ்சியின் பாடுபொருளுடன் 13 பாடல்களும், மருதப் பாடுபொருளுடன் 4 பாடல்களும் அமைந்து அவற்றுள் பாலையின் முதல், கருப்பொருள்கள் மயங்குவதைக் காணமுடிகிறது.

முல்லையின் பாடுபொருளுடன் பாலையின் முதல், கரு மயங்குமிடத்து முல்லைத்திணைக்குரியதான பருவ வரவு இளவேனிலாக அமைவதைக் காணமுடிகிறது. வினைமுற்றி வரும் தலைமகன் முல்லையுள் பாலை மயங்கிய பாடலுள், பாலை நிலத்தைக் கடந்து வருவதாகக் குறிக்கப்பெறுகிறான். முல்லைப் பாடுபொருளில் தலைவனைக் குறிக்குமிடத்து அவன் சென்ற பாலை நிலமும் திணைமயக்கமாகக் குறிக்கப்பெறுகின்றது. தலைமகன் வினைமுற்றி வந்த நிலையில் இடம்பெறும் முல்லைக்குரிய கூற்றுக்களுள், முன்பு பாலை நிலத்துள் நிகழ்ந்த நிகழ்வுகள் உரைக்கப்பட்டு, முல்லையுள் பாலை மயங்குகின்றது. முல்லையுள் பாலை மயங்குமிடத்து பாலையின் கூறுகள் உவமையின் வழியாகவும் இடம்பெறுகிறது.

குறிஞ்சியின் பாடுபொருளுடன் பாலையின் முதல், கருப்பொருள்கள் மயங்குமிடத்துப் பாடப்பெறும் தலைமக்கள் பாலை நிலத்துள் வாழ்பவராகக் குறிக்கப்பெறுகின்றனர். குறிஞ்சியின் பாடுபொருளுடன் குறிக்கப்படும் குறிஞ்சி நிலம், வேனிற்கால இயல்புடன் கூறப்படும் போது குறிஞ்சியுள் பாலை மயங்குகிறது. குறிஞ்சியின் பாடுபொருளைச் சிறப்பிக்கும் களவு, வேனிற்காலத்துள் நிகழ்ந்ததாகக் குறிக்கப்பட்டு குறிஞ்சியுள் பாலை மயங்குகிறது. தலைவன் களவிற்கு வரும் வழியின் ஏதம் பாலை நிலத்து ஏதமாகக் குறிக்கப்படும் போது குறிஞ்சியுள் பாலை மயங்குவது பெறப்படுகிறது.

மருதப் பாடுபொருளுடன் பாலை மயங்குமிடத்து, பொருள்முற்றி வந்த அண்மைக்காலத்தில் நிகழும் மருத ஒழுக்கம் பாடப்பெற்று மயங்குகிறது.

பொருள்வயிற் பிரிவு பரத்தையிற் பிரிவுடன் உறழ்ந்து நோக்கப்படும் நிலையிலும், மருதப் பாடுபொருளுடன் பாலையின் கூறுகள் உவமையின் வழி குறிக்கப்படும் நிலையிலும் மருதத்துள் பாலை மயங்குகிறது.

சங்க இலக்கியத்துள் மருதப் பகுப்பில் 263 பாடல்கள் காணப்படுகின்றன. இவற்றுள் 39 பாடல்கள் பிற திணையின் உரிப்பொருளை உடையன.

மருதப் பகுப்பில் முல்லையின் பாடுபொருளுடன் ஒன்பது பாடல்களும், குறிஞ்சியின் பாடுபொருளுடன் 22 பாடல்களும் அமைந்து அவற்றுள் பாலையின் முதல், கரு மயங்குவதைக் காணமுடிகின்றது.

மருதப் பாடுபொருளில் தலைமக்கள் முல்லை நிலத்தவர்களாகக் குறிக்கப்படும் போதும், மாலை, வாடை எனும் பொழுதுகளின் இயல்புகள் மருத நிலப் புனைவின் வழி விளக்குமிடத்தும், மருதப்புனைவுடன் கூடிய உவமைகளைக் குறிக்கும் நிலையிலும், முல்லையுடன் மருதம் மயங்குகிறது.

குறிஞ்சியின் பாடுபொருளுடன் மருதத்தின் முதல், கருப்பொருள்கள் மயங்குமிடத்து, மருத நில மக்களின் குறிஞ்சி ஒழுக்கம் பாடப்பெறுவதும், குறிஞ்சியின் குறியிடங்களாக மருதப் புனைவு குறிக்கப்பெறுவதும், மருதப் புனைவுடனான உவமை இடம்பெறுவதும் காரணங்களாக அமைகின்றன.

குறிஞ்சியுள் நெய்தல் மயங்கிய பாடல் ஒன்று மருதம் எனக் குறிக்கப் பெற்றுள்ளது. இப்பாடலுள் குறிஞ்சியின் பாடுபொருளுடன் நெய்தல் புனைவுகள் புறச் செய்தியின் வழியாகக் குறிக்கப் பெறுகின்றன.

சங்க இலக்கியத்தில் நெய்தல் எனும் பகுப்பில் 343 பாடல்கள் அறியப்படுகின்றன. அவற்றுள் முல்லை, குறிஞ்சி, பாலை, மருதம் எனும். திணைகளுக்கான பாடுபொருளைக் காணமுடிகிறது.

முல்லையின் பாடுபொருளுடன் நெய்தல் திணையின் முதல், கரு மயங்கிய நிலையில் 12 பாடல்கள் காணப்படுகின்றன.

நெய்தல் நில மக்களின் முல்லை ஒழுக்கமும், முல்லையுள் இடம்பெறும் நெய்தல் திணையின் உவமையும், முல்லையுள் நெய்தல் மயங்குவதற்குக் காரணிகள் ஆகின்றன.

குறிஞ்சியுள் நெய்தல் மயங்குதலை 244 பாடல்களில் காணமுடிகின்றது. குறிஞ்சியுள் நெய்தல் மயங்குமிடத்து நெய்தல் நில மக்களின் குறிஞ்சி ஒழுக்கம் படைக்கப்படுவதும், குறியிடங்கள் நெய்தலாகக் குறிக்கப்படுவதும், உவமை மற்றும் சிறப்புக்களைப் புனைந்துரைக்கும் கூறுகளாக நெய்தல் திணைக்குரிய முதல், கருப்பொருள்கள் குறிக்கப்படுவதும் காரணங்களாகின்றன.

நெய்தல் நில மக்களின் பாலை ஒழுக்கம் பாடப்பெறுவதும், பாலை பாடுபொருளுடன் நெய்தல் புனைவிலான உவமை இடம்பெறுவதும் பாலையுள் நெய்தல் மயங்குதற்கு அடிப்படையாகின்றன.

நெய்தல் நிலத்துள் நிகழும் மருதவொழுக்கம் மருதத்துள் நெய்தல் மயங்குதற்கு வாய்ப்பாக அமைகின்றது.

## சான்றெண் விளக்கம்

1. மு.வரதராசன், தமிழ் இலக்கியவரலாறு, ப.30.
2. வ.சுப.மாணிக்கம், தமிழ்க் காதல், ப.247.
3. ஔவை சு. துரைசாமிப்பிள்ளை, ஐங்குறுநூறு, ப.9.
4. ப.அருணாச்சலம், தொல்காப்பியர், ப.71.
5. மேலது, ப.71.
6. C.H.Herford. 'Shakespear's Treatment of Love and Marriage and after ressays' p.152.
7. வ.சுப. மாணிக்கம், தமிழ்க்காதல், ப.28.
8. மேலது, ப.247.
9. மேலது, ப.35.
10. மேலது.ப159
11. கு.வெ.பாலசுப்பிரமணியன், சங்க இலக்கியத்தில் புறப்பொருள் பக்.36-37.
12. அ.அ. மணவாளன், அகப்பொருள் இலக்கியத்தின் மறுமலர்ச்சிக் காலம், ப.422.
13. அ.ச.ஞானசம்பந்தன், இலக்கியக் கலை, பக்.3-4.
14. ஔவை சு.துரைசாமிப்பிள்ளை, ஐங்குறுநூறு, ப.9.
15. காண்க: பின்னிணைப்பு - அகத்திணைகளும் முதல், கரு, உரிப்பொருள் வரையறையும் அட்டவணை-1.
16. அ.பாண்டுரங்கன், திணைக்கோட்பாடு, (Journals of Tamil studies) ப.2.
17. த.வசந்தாள், தமிழ் இலக்கியத்தில் அகப்பொருள் மரபுகள் ஒரு வரலாற்றுப் பார்வை, ப.114.

18. ஆ.மணி, குறுந்தொகைத் திணை வேறுபாடுகள் (சங்க இலக்கியம் பன்முகப் பார்வை), ப.81.

19. கோ.இளவழகன் (ப.ஆ), தொல்காப்பியம் பொருளதிகாரம் இளம்பூரணம், I, ப.172.

20. ஔவை சு.துரைசாமிப்பிள்ளை, ஐங்குறுநூறு, ப.23.

21. அ.பாண்டுரங்கன், திணைக்கோட்பாடு(Journals of Tamil studies), ப.2.

22. இலா.குளோறியா சங்க இலக்கியம் மருதம்.ப.107

23. உ.வே.சாமிநாதய்யர் (உ.ஆ),குறுந்தொகை மூலமும் உரையும் முகவுரை, ப.XVIII.

24. மு.வரதராசன், இலக்கியத் திறன், ப.17.

25. கோ.இளவழகன் (ப.ஆ),தொல்காப்பியம் பொருளதிகாரம் இளம்பூரணம், I, ப.179.

26. நச்சினார்க்கினியர் (உ.ஆ), தொல்காப்பியம் பொருளதிகாரம் (அகத்திணையியல், புறத்திணையியல்), ப.37.

27. ஔவை.சு.துரைசாமிப்பிள்ளை, ஐங்குறுநூறு, ப.9.

28. மு.வரதராசன், பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை, ப.17.

29. கா.சுப்பிரமணியபிள்ளை, பழந்தமிழர் நாகரிகம், ப.15.

30. கோ.இளவழகன் (ப.ஆ), தொல்காப்பியம் பொருளதிகாரம் இளம்பூரணம், I, ப.179.

31. ந.சுப்புரெட்டியார், அகத்திணைக் கொள்கைகள், ப.512.

32. நச்சினார்க்கினியர் (உ.ஆ), தொல்காப்பியம் பொருளதிகாரம் (அகத்திணையியல், புறத்திணையியல்) ப.38.

33. “போக்கெல்லாம் பாலை, புணர்தல் நறுங்குறுஞ்சி
ஆக்கஞ்சேர் ஊடல் அணிமருதம்- நோக்குங்கால்
இல்லிருத்தல் முல்லை, இரங்கல் நறுநெய்தல்
சொல்லிருத்தல் நூலின் தொகை,” - பழம்பாடல்
(புலவர் குழந்தை, தொல்காப்பியர் காலத்தமிழர், ப.67).

34. மு.தங்கராசு, சங்க இலக்கியத்தில் நிலவியல், ப.16.

35. மேலது, ப.16.

36. இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றம்- ஒன்பதாவது ஆய்வுக் கோவை, தொகுதி -I ப.169.

37. கோ.இளவழகன் (ப.ஆ), தொல்காப்பியம் பொருளதிகாரம் இளம்பூரணம்-I ப.176.

38. நச்சினார்க்கினியர் (உ.ஆ) தொல்காப்பியம் பொருளதிகாரம் (அகத்திணையியல் புறத்திணையில்) ப.16.

39. நக்கீரர் (உ.ஆ), களவியல் என்ற இறையனார் அகப்பொருள், ப.23.

40. மா.சோமசுந்தரம், சங்க அகப்பாடல்களில் திணைமயக்கம் (ஆய்வேடு), பக்.19-20.

41. கோ.இளவழகன் (பதி.ஆ) தொல்காப்பியம் பொருளதிகாரம் இளம்பூரணம்-I ப.176.

42. மா.இராசமாணிக்கம், பத்துப்பாட்டு ஆராய்ச்சி, ப.76.

43. நச்சினார்க்கினியர் (உ.ஆ), தொல்காப்பியம் பொருளதிகாரம் (அகத்திணையில் புறத்திணையியல்), ப.16.

44. வ.சுப.மாணிக்கம், தமிழ்க்காதல், ப.51.

45. கோ.இளவழகன் (ப.ஆ), தொல்காப்பியம் பொருளதிகாரம் இளம்பூரணம்-I, ப.179.

46. மேலது, ப.179.

47. உ.வே.சாமிநாதய்யர், குறுந்தொகை மூலமும் உரையும். ப.XXX.

48. கோ.இளவழகன் (ப.ஆ), தொல்காப்பியம் பொருளதிகாரம் இளம்பூரணம் I, ப.177.

49. ந.சுப்புரெட்டியார், அகத்திணைக் கொள்கைகள், ப.13.

50. கலைக்களஞ்சியம், தொ. எட்டு ப.143.

51. கோ.இளவழகன் (ப.ஆ), தொல்காப்பியம் பொருளதிகாரம் இளம்பூரணம் I, ப.176.

52. நச்சினார்க்கினியர்,தொல்காப்பியம் பொருளதிகாரம் (அகத்திணையியல் புறத்திணையியல்), ப.19.

53. மா.சோமசுந்தரம், சங்க அகப்பாடல்களில் திணைமயக்கம் (ஆய்வேடு), ப.21.

54. கோ.இளவழகன் (ப.ஆ) தொல்காப்பியம் பொருளதிகாரம் இளம்பூரணம் - I ப.176.

55. அ.பாண்டுரங்கன்- திணைக்கோட்பாடு ( Journals of Tamil studies), ப.8.

56. சி.பாலசுப்பிரமணியன், கட்டுரை வளம், ப.63

57. நச்சினார்க்கினியர் (உ.ஆ) தொல்காப்பியம் பொருளதிகாரம் (அகத்திணையியல் புறத்திணையியல்) ப.38.

58. கோ.இளவழகன் (ப.ஆ)தொல்காப்பியம் பொருளதிகாரம் இளம்பூரணம் I, பக்.176-177.

59. ஔவை.சு.துரைசாமிப்பிள்ளை, ஐங்குறுநூறு I, ப.9.

60. நா.செயராமன், முல்லைப் பாடல்கள், ப.75.

61. அ.பாண்டுரங்கன்- திணைக்கோட்பாடு (Journals of Tamil studies), ப.10

62. இலா. குளோறியா சங்க இலக்கியம் மருதம், ப.107.

63. காண்க: பின்னிணைப்பு, சங்க அக இலக்கியப் பாடல்கள் திணைப்பகுப்பு அடிப்படையிலான எண்ணிக்கை - அட்டவணை-11.

64. காண்க: பின்னிணைப்பு, முல்லைத் திணைப் பகுப்பில் திணை மயங்காப் பாடல்களும் திணை மயக்கப் பாடல்களும்-அட்டவணை-14.

65. மேலது.

66. மருதம் குறுந். 191,370, பாலை ஐங்.426,429. கைக்கிளை.கலித்.109, 112, 113.

67. குறிஞ்சியுள் முல்லை (17 பாடல்கள்) குறுந். 233, 240 அகநா.394, கலித் .101-108, 110, 111, 114-117

68. வ.சுப.மாணிக்கம், தமிழ்க் காதல், ப.338.

69. ப.அருணாச்சலம், தொல்காப்பியர் ப.67.

70 வி. சசிவல்லி, முல்லை, ப.89.

71. நா.செயராமன், முல்லைப் பாடல்கள், ப.31.

72. ந.சுப்புரெட்டியார், அகத்திணைக் கொள்கைகள், ப.511.

73. அ.விசுவநாதன் (உ.ஆ), கலித் தொகை (மூலமும் உரையும்), ப.517.

74. நா.செயராமன், முல்லைப் பாடல்கள், ப.31.

75. பாலையுள் முல்லை (16 பாடல்கள் ) நற்.266, ஐங்.423, 424, 427, 428, 430, 431, 432, 433, 434, 435, 436, 437, 438, 439, 440.

76. அ.தட்சிணாமூர்த்தி (உ.ஆ), ஐங்குறுநூறு (மூலமும் உரையும்), ப.920.

77. மேலது, ப.920.

78. மேலது, ப.921.

79. எஸ்.கலியாண சுந்தரையர் (ப.ஆ), ஐங்குறுநூறு மூலமும் பழையவுரையும், ப.181.

80. மேலது, ப.181.

81. அ.தட்சிணாமூர்த்தி (உ.ஆ), ஐங்குறுநூறு (மூலமும் உரையும்), ப.921.

82. வ.சுப.மாணிக்கம், தமிழ்க்காதல், ப.156.

83. அ.தட்சிணாமூர்த்தி (உ.ஆ), ஐங்குறுநூறு (மூலமும் உரையும்), ப.941.

84. காண்க: பின்னிணைப்பு - சங்க அக இலக்கியப் பாடல்கள் திணைப்பகுப்பு அடிப்படையிலான எண்ணிக்கை-அட்டவணை-11.

85. குறுந்தொகையில் 114, நற்றிணையில் 91, அகநாநூற்றில் 54, ஐங்குறுநூற்றில் 85, கலித்தொகையில் 19 (காண்க: பின்னிணைப்பு:குறிஞ்சித்திணைப் பகுப்பில் திணைமயங்காப் பாடல்களும் திணைமயக்கப் பாடல்களும் அட்டவணை)

86. முல்லை: ஐங்.23, பாலை: குறுந்.100, கைக்கிளை, கலித்.56, 57, 58 பெருந்திணை: கலித். 62

87. காண்க: பின்னிணைப்பு - குறிஞ்சித் திணைப் பகுப்பில் திணை மயங்காப் பாடல்களும் திணைமயக்கப் பாடல்களும்- அட்டவணை-16.

88. முல்லையுள் குறிஞ்சி குறுந்.68, 82, 86, 158, 160, 201, நற்.112, 294, 341 ஐங்.280, 292.

பாலையுள் குறிஞ்சி குறுந்.76, நற்.1, 5, 129, ஐங்.235,

மருதத்துள் குறிஞ்சி குறுந்.60, 252, நற்.176, 217, 225, 386, ஐங்.240, 265, 283, நெய்தலுள் குறிஞ்சி. நற்.64.

89. ந.காந்திமதிலட்சுமி, தொல்காப்பிய இலக்கியக் கோட்பாடுகளும் ஐங்குறுநூறும், ப.182.

90. முல்லையுள் பாலை (11 பாடல்கள்) குறுந். 68, 82, 86, 158, 160, 201 நற். 112, 294, 341, ஐங்.280, 292

91. நா.செயராமன், முல்லைப்பாடல்கள், ப.79.

92. ரா.இராகவையங்கர், குறுந்தொகை விளக்கம், ப.125.

93. அ.நாராயணசாமி ஐயர், நற்றிணை நானூறு, ப.140.

94. நா. செயராமன், முல்லைப் பாடல்கள், ப.79.

95. பாலையுள் குறிஞ்சி (5 பாடல்கள்) குறுந்.76, நற்.1, 5, 129 ஐங்.235.

96. மருதத்துள் குறிஞ்சி, (9 பாடல்கள்) குறுந்.60, 252, நற்.176, 217, 225, 386 ஐங்.240, 265, 283.

97. ந.சுப்புரெட்டியார், அகத்திணைக் கொள்கைகள், ப.33.

98. எஸ்.கலியாண சுந்தரையர் (ப.ஆ), ஐங்குறுநூறு மூலமும் பழையவுரையும், ப.117.

99. ஔவை சு. துரைசாமிப்பிள்ளை, நற்றிணை மூலமும் விளக்கவுரையும், ப.863.

100. அ.நாராயணசாமி ஐயர், நற்றிணை நானூறு ப.273.

101. மேலது ப.475.

102. நெய்தலுள் குறிஞ்சி (1 பாடல்) நற்.64

103. வ.சுப.மாணிக்கம், தமிழ்க் காதல், ப.291.

104. மேலது, ப.291.

105. காண்க: பின்னிணைப்பு உரிப்பொருள் அடிப்படையிலான வகைப்பாடு (பாலைத்திணைப் பகுப்பு) அட்டவணை எண்.17.

106. காண்க: பின்னிணைப்பு பாலைத்திணைப் பகுப்பில் திணை மயங்காப் பாடல்களும், திணை மயக்கப் பாடல்களும்- அட்டவணை எண்.18.

107. முல்லையுள் பாலை (92 பாடல்கள்) குறுந். 67, 192, 209, 215, 216, 232, 237, 254, 260, 285, 307, 380,
நற்.18, 86, 92, 118, 157, 164, 189, 212, 214, 241, 246, 274, 302, 329, 387, 397, அகநா.9, 25, 29, 37, 39, 69, 87, 97, 115, 125, 177, 183, 185, 209, 223, 229, 237, 249, 269, 277, 295, 303, 311, 313, 317, 351, 355, 359, 363, ஐங்317, 324, 325, 339, 340, 341, 350, 351, 352, 353, 354, 355, 356, 357, 359, 360, கலித்.26, 27, 28, 29, 30, 31, 32, 33, 34, 35, 36.

108. அகநா.97.

109. மேலது, 237.

110. ஐங்.341 முதல் 350 வரை

111. நச்சினார்க்கினியர் (உ.ஆ), தொல்காப்பியம் பொருளதிகாரம் (அகத்திணையியல் புறத்திணையியல்), ப.34.

112. அ.தட்சிணாமூர்த்தி (உ.ஆ), சங்க இலக்கியம் ஐங்குறுநூறு மூலமும் உரையும், ப.752.

113. குறுந்.192, நற்.241, அகநா.25, 355 ஐங்.339,

114 குறுந்.106.

115. அகநா.29.

116. மேலது 39.

117. மேலது, 359.

118. மேலது, 363.

119. நற்.92, 274, அகநா.115, 185, 209, 223, 249, 295, 311, 313

120. குறிஞ்சியுள் பாலை (13 பாடல்கள்) குறுந்.15, 235, நற்.7, 14, 28, 37, 277, ஐங்.362, 363, 365, 366, 367, 368.

121. அ. தட்சிணாமூர்த்தி (உ.ஆ), ஐங்குறுநூறு (மூலமும் உரையும்), ப.793.

122. சு.இராசாராம், சங்க இலக்கியத்தில் நடைமுறை வாழ்க்கை, ப.31.

123. கோ.இளவழகன் (ப.ஆ) தொல்காப்பியம் பொருளதிகாரம் இளம்பூரணம்I, ப.188.

124. நம்பியகப்பொருள், ஒழிபியல் 42.

125. எஸ்.கலியாண சுந்தரையர் (ப.ஆ), ஐங்குறுநூறு மூலமும் பழையவுரையும், ப.159.

126. மேலது, ப.158.

127. நச்சினார்க்கினியர் (உ.ஆ) தொல்காப்பியம் பொருளதிகாரம் (அகத்திணையியல் புறத்திணையியல்), ப.28.

128. ந.சுப்புரெட்டியார், அகத்திணைக் கொள்கைகள், ப.33.

129. பொ.வே.சோமசுந்தரனார், ஐங்குறுநூறு, ப.502.

130. மருதத்துள் பாலை (4 பாடல்கள்) நற்.174.269. ஐங்.369,370.

131. அ.நாராயணசாமி ஐயர், நற்றிணை நானூறு, ப.219.

132. மேலது ப.219

133. எஸ்.கலியாண சுந்தரையர் (ப.ஆ) ஐங்குறுநூறு மூலமும் பழையவுரையும் ப.160.

134. கோ.இளவழகன் (ப.ஆ) தொல்காப்பியம் பொருளதிகாரம் இளம்பூரணம்- I, ப.226.

135. நச்சினார்க்கினியர் (உ.ஆ) தொல்காப்பியம் பொருளதிகாரம் (அகத்திணையியல் புறத்திணையியல் ) ப.29.

136. அ.தட்சிணாமூர்த்தி (உ.ஆ), சங்க இலக்கியம் ஐங்குறுநூறு மூலமும் உரையும், ப.808.

137. எஸ்.கலியாண சுந்தரையர் (ப.ஆ), ஐங்குறுநூறு மூலமும் பழையவுரையும், ப.160.

138. நச்சினார்க்கினியர் (உ.ஆ), தொல்காப்பியம் பொருளதிகாரம் (அகத்திணையியல் புறத்திணையியல்) ப.29.

139. காண்க: பின்னிணைப்பு உரிப்பொருள் அடிப்படையிலான வகைப்பாடு (மருதத்திணைப் பகுப்பு) - அட்டவணை எண்.19.

140. காண்க: பின்னிணைப்பு மருதத்திணைப் பகுப்பில் திணை மயங்காப் பாடல்களும் திணை மயக்கப்பாடல்களும் - அட்டவணை எண்.20.

141. முல்லையுள் மருதம் (10 பாடல்கள்) குறுந்.35, 46, 107, 178, 330, ஐங்.6, 7, 8, 9, 10

142. இலா. குளோறியா, சங்க இலக்கியம் மருதம் ப.108.

143. நா.செயராமன், முல்லைப்பாடல்கள், ப.80.

144. குறிஞ்சியுள் மருதம் (22 பாடல்கள்) குறுந். 31, 53, 113, 169, 171, 305, 393, 399, நற்.60, 70, 80, அகநா.156, 356, ஐங்.28, 29, 30, 60, 91, 92, 93, 94, கலித். 76.

145. கலித். 76.

146. துறைக்குறிப்பு கலித்.76.

147. நச்சினார்க்கினியர்(உ.ஆ)தொல்காப்பியம் பொருளதிகாரம் (அகத்திணையியல் புறத்திணையியல்) ப.30.

148. குறிஞ்சியுள் நெய்தல் (மருதப் பகுப்பு) - (1 பாடல்) - குறுந்.34.

149. காண்க: பின்னிணைப்பு- சங்க அக இலக்கியப் பாக்கள் - திணைப்பகுப்பு அடிப்படையிலான எண்ணிக்கை அட்டவணை-11.

150. வ.சுப.மாணிக்கம், தமிழ்க் காதல், ப.299.

151. ப.அருணாச்சலம், தொல்காப்பியர், ப.71.

152. ந.சுப்புரெட்டியார், அகத்திணைக் கொள்கைகள், ப.545.

153. முல்லையுள் நெய்தல், (12 பாடல்கள்) குறுந்.122, 128, 341, நற்.35, 106, 131, ஐங்.104, 134,148,149, கலித். 130, 134.

154. ரா.இராகவையங்கார்- குறுந்தொகை விளக்கம் ப.195

155. மேலது, ப.509.

156. வி.நாகராசன் சங்க இலக்கியம் குறுந்தொகை ப.818.

157. குறிஞ்சியுள் நெய்தல் (244 பாடல்கள்) குறுந். 51, 55, 57, 92, 97, 109, 114, 117, 123, 125, 128, 145, 163, 166, 175, 177, 184, 205, 212, 219, 226, 230, 236, 245, 246, 248, 269, 294, 296, 299, 303, 304, 306, 310, 311, 313, 316, 318, 320, 324, 326, 328, 334, 340, 345, 351, 381, 397, 401. நற்.4, 11, 15, 19, 27, 31, 45, 49, 54, 58, 63, 67, 72, 78, 87, 91, 94, 96, 101, 111, 117, 123, 132, 135, 138, 145, 149, 152, 155, 159, 163, 172, 175, 178, 183, 187, 191, 195, 203, 207, 211, 215, 218, 219, 223, 227, 231, 235, 239, 245, 249, 254, 258,263, 267,

272, 275, 278, 283, 287, 295, 299, 303, 307, 311, 319, 323, 327, 331, 335, 338, 342, 345, 349, 354, 358, 363, 372, 375, 378, 388, 392, 395, 398. அகநா.10, 20, 30, 60, 70, 80, 90, 100, 110, 120, 130, 140, 150, 160, 170, 180, 190, 200, 210, 220, 230, 240, 250, 260, 270, 280, 290, 300, 310, 320, 330, 340, 350, 360, 370, 380, 390, 400. ஐங். 101, 102, 103, 105, 106, 107, 108, 109, 110, 111, 112, 113, 114, 115, 116, 117, 119, 120, 141, 142, 144, 145, 146, 147, 161, 162, 163, 166, 168, 171, 172, 173, 174, 175, 176, 177, 178, 179, 180, 181, 182, 183, 185, 186, 187, 189, 190, 191, 192, 193, 194, 195, 196, 197, 199. கலித். 121, 123, 124, 125, 126, 127, 128, 129, 131, 132, 133, 135, 136, 137, 138, 139, 148, 149.

158. தொல். களவியல் நூ.20.

159. ரா.இராகவையங்கார், குறுந்தொகை விளக்கம், ப.156.

160. கலித். 148.

161. ந.சுப்புரெட்டியார், அகத்திணைக் கொள்கைகள், ப.549.

162. அகநா. 230, 280.

163. ஐங்.191.

164. குறுந். 184.

165. அகநா. 390.

166. நற். 349.

167. நற்.155.

168. ஐங்.195.

169. நற்.338.

170. ஐங்.116, 120, கலித். 137.

171. ஐங்.141.

172. குறுந்.246, 311, அகநா. 260.

173. நற். 335.

174. கலித்.123.

175. நற்.117

176. ஐங்.187.

177. நற். 45.

178. அகநா.250.

179. நற்.398, அகநா.120, 340.

180. அகநா.220.

181. குறுந். 166, நற்.132.

182. நற்.311.

183. குறுந்.55, 123, 345, நற்.67, 123, 215, 195, அகநா.60, 150.

184. நற்.207, ஐங். 107.

185. குறுந்.177.

186. நற்.392.

187. ஐங்.102.

188. ஐங்.161, 162, 163.

189. குறுந். 306, நற்.287.

190. ஐங். 112.

191. நற். 87.

192. குறுந்.97, 125, 334, நற்.272, 327,

193. குறுந். 219, 296, 299, 313, 318, நற்.94, 275, 388, அகநா.290, ஐங்.113, 114, 115, 117, 119, 142.

194. குறுந்.175, 205, 226, 304, 316, நற்.219.

195. ஐங்.144.

196. ஐங்.146.

197. ஐங்.192.

198. நற்.345.

199. குறுந்.381, ஐங்.166.

200. நற்.58.

201. அகநா.10.

202. குறுந்.109, நற். 4, 15, 19, 195 211 263, 283, 395, ஐங்.179, 193, கலித்.124, 133, 149.

203. குறுந்.397 நற்.183.

204. குறுந்.236.

205. நற்.149, 175, 178.

206. ஐங்.110, 168, 190.

207. ஐங். 106.

208. குறுந்.248.

209. ஐங்.108, 109.

210. குறுந்.328.

211. ஐங்.145.

212. ஐங்.105, 189.

213. ஐங்.147.

214. குறுந்.51.

215. ஐங்.103.

216. ஐங்.197.

217. நற்.319.

218. குறுந்.401.

219. நற்.245, 342.

220. குறுந்.294.

221. அகநா. 110, 190.

222. குறுந். 324, நற்.11, 96, 135, 203, அகநா.90, 300, 370.

223. குறுந்.10, நற்.101.

224. குறுந். 245, 310, 320, 326, நற்.31, 54, 72, 187, 249, 303, 372, 378, 382, அகநா. 170, ஐங்.181, 183, கலித்.128.

225. குறுந்.212, 230, அகநா.180, 200, 310, 330, 380.

226. குறுந். 114, நற்.363, அகநா.30, 350.

227. நற்.323.

228. நற்.258

229. நற்.299

230. நற். 145, 191, 267, அகநா.20, 240, 270, ஐங்.186, கலித்.126, 132, 135, 136.

231. ஐங். 182.

232. கலித்.121.

233. ஐங்.199, கலித்.131.

234. நற். 111.

235. ஐங். 101.

236. நற்.278, அகநா.70.

237. ஐங்.196.

238. நற்.331, அகநா.360.

239. நற்.63, 172, 239.

240. குறுந். 117.

241. குறுந்.303, நற். 49, 138, 159, 223, 231, 254, 307, அகநா.80, 210, 320, ஐங்.194. கலித்.125, 127,

242. குறுந். 351, நற்.78, 91, 163, 235, அகநா.160.

243. அகநா.400.

244. நற்.358.

245. அகநா.130

246. ஐங்.170.

247. ஐங்.185.

248. குறிஞ்சியுள் முல்லை (நெய்தல் பகுப்பு) (1 பாடல்) குறுந்.118.

249. பாலையுள் நெய்தல் (11 பாடல்கள்) குறுந். 5, 243, 325, 386, நற்.38, 124, 130, 199, 348, அகநா.40, ஐங்.200

250. நற். 199.

251. மருதத்துள் நெய்தல் (47 பாடல்கள்) குறுந்.9, 49, 349, நற்.74, 127, 167, 270, 291, 315, அகநா.50, ஐங்.121, 122, 123, 124, 125, 126, 127, 128, 131, 132, 133, 135, 136, 137, 138, 139, 140, 143, 150, 151, 152, 153, 154, 155, 156, 157, 158, 159, 160, 164, 165, 167, 169, 170, 184, 188, 198.

252. நற்.315, ஐங்.121, 122, 123, 124, 125, 126.

253. ஐங்.159.

254. நற்.291.

255. ஐங். 158.

256. ஐங்.156.

257. குறுந்.9.

258. ந.சுப்புரெட்டியார், அகத்திணைக் கொள்கைகள், ப.545-546.

259. வ.சுப. மாணிக்கம், தமிழ்க்காதல், ப.279.

260. ஐங்.164, 165.

261. ஐங்.157.

262. ஐங். 133.

263. ஐங். 136, 151, 154, 160, 184.

264. ஐங். 152, 155, 169.

265. ஐங்.167.

266. ஐங்.139.

267. ஐங். 138.

268. ஐங். 137.

269. ஐங்.150.

270. குறுந்.349.

271. தமிழியல் 2001, ப.7.

272. நற். 127, 167.

273. நற்.270 ஐங்.198.

274. ஐங்.143.

275. ஐங்.132.

276. ஐங்.131.

277. அகநா.50.

# இயல் - 3

## நிலமயக்கமும் கருப்பொருள் மயக்கமும்

அகத்திணையின் அடிப்படைக் கூறுகளாக அமைவன முதல், கரு, உரி என்பனவாகும். இக்கூறுகள் புலனெறி வழக்கில் ஒரு வரன் முறையில் பாடப் பெறும். புணர்தலுக்குக் குறிஞ்சி நிலமும், இருத்தலுக்கு முல்லை நிலமும், பிரிதலுக்குப் பாலை நிலமும், ஊடலுக்கு மருத நிலமும், இரங்கலுக்கு நெய்தல் நிலமும் பின்புலமாக அமைக்கப் பெறும். நிலப் புனைவில் அந்நிலங்களுக்குரிய கருப்பொருளும் குறிக்கப்பெறும். திணை மயக்க நெறியில் குறிஞ்சி முதலான உரிப்பொருளைப் பாடுமிடத்து அவ்வுரிக்கு உரிமை செய்யப் பெறாத பிற நிலங்களும் அவற்றின் கருப்பொருள்களும் குறிக்கப் பெறும். சங்க அகஇலக்கியத் திணைப்பகுப்பில் அத்திணைப் பகுப்பிற்குரிய உரிப்பொருளுடன் பிறதிணையின் நிலம் மற்றும் கருப்பொருள் மயங்கும் பாடல்களைக் கண்டறிந்து அவற்றுள் நிலமும் கருப்பொருளும் மயங்குவதற்கான காரணிகளைக் காண்பது இவ்வியலின் நோக்கமாகும்.

### முல்லையுள் குறிஞ்சி

முல்லைத் திணைப்பகுப்பில் அத்திணைக்குரிய உரிப்பொருளுடன் குறிஞ்சித் திணையின் நிலம் மற்றும் கருப்பொருள் புனைவுகள் திணைமயக்கமாக இடம்பெறுவது முல்லையுள் குறிஞ்சி எனக் குறிக்கப்பெறுகின்றது. முல்லைத்திணைப் பகுப்பில் இருத்தல் எனும் உரிப்பொருளைப் பாடுமிடத்து குறிஞ்சியின் நிலம் மற்றும்

கருப்பொருள்கள் திணை மயக்கமாக இடம்பெறுவது படைப்பது அறியப்படுகின்றன.

குறிஞ்சி நிலத் தலைவன் வினைவயிற் பிரிந்து காலம் நீட்டிக்க, குறிஞ்சி நிலத் தலைவி ஆற்றியிருக்கின்றாள். இந்நிகழ்வைப் படைக்குமிடத்து முல்லையுள் குறிஞ்சி மயங்குகிறது. இதனை,

**"பெருஞ்சின வேந்தனும் பாசறை முனியான்;**
**இருங்கலி வெற்பன் தூதும் தோன்றா;**
**ததை இல வாழை முழுமுதல் அசைய,**
**இன்னா வாடையும் அலைக்கும்;**
**என் ஆகுவென்கொல், அளியென்யானே?" (ஐங்.460)**

என்னும் பாடலுள் அறிய முடிகின்றது. இதனுள் என் ஆகுவென்கொல், அளியென்யானே? என்று ஆற்றியிருக்கும் முல்லைத்திணைக்குரிய பாடுபொருளுடன், இருங்கலி வெற்பன், வாழை என்று குறிஞ்சியின் நிலம் மற்றும் கருப்பொருள்கள் திணை மயக்கமாக இடம்பெறுவது விளங்கும்.

'அவரை நமக்குத் தருவதற்கு வந்தது இப்பருவம்' - எனப் பருவம் காட்டி ஆற்றுவிக்கும் தோழியின் கூற்றில்,

**"பைந்தினை உணங்கல் செம்பூழ் கவரும்**
**வன்புல நாடற் தரீஇய வலன் ஏர்பு**
**அம்கண் இருவிசும்பு அதிர, ஏறொடு**
**பெயல் தொடங்கின்றே வானம்;**
**காண்குவம்; வம்மோ, பூங்கணோயே"** (ஐங்.469)

என்றும், குறித்த பருவத்தில் தலைமகன் வந்த வழித் தலைவிக்குக் கூறும் தோழி கூற்றில்,

***"வரையாக நாடன் வந்தமாறே"*** **(ஐங்.498:5)**

என்றும் தலைவன் குறிஞ்சி நிலத்தவனாகக் குறிக்கப் பெறுகின்றான். இவற்றால் முல்லையின் பாடுபொருளில் வன்புலம், வன்புல நாடன், வரை, வரையகநாடன், பைந்தினை என்னும் குறிஞ்சியின், நிலம் மற்றும் கருப்பொருட் கூறுகள் மயங்குவது விளங்கும்.

வினைமுற்றி வந்த தலைவன் தலைவியுடன் இனிதிருக்கும் நிலையில் பெய்த மழையை வாழ்த்தும் தலைவனின் கூற்றில் தலைவன் தலைவியரின் நிலம் குறிஞ்சியாகக் குறிக்கப்பெறுகின்றது. இதனை,

***"புணர்ந்து இனிது நுகர்ந்த சாரல் நல் ஊர்"*** (நற்.139: 8)

என்னும் அடியுணர்த்தும். இதனுள் குறிஞ்சிப் புனைவு, 'சாரல்' எனக் குறிக்கப்படுகிறது. இவற்றால் முல்லைப் பாடுபொருளில், குறிஞ்சிச் சூழல் பின்புலமாகக் குறிக்கப்பட்டு முல்லையுள் குறிஞ்சி மயங்குவது உணரப்படும்.

வினைமுற்றி வரும் தலைமகன் தேர்ப்பாகற்குக் கூறும் கூற்றில் தலைவி ஆற்றியிருக்கும் முல்லை நிலம் குறிக்கப்படும். இம்முல்லை நிலப் புனைவில் முல்லை நிலத்தைச் சார்ந்த குறிஞ்சி நிலமும் திணை மயக்கமாகப் புனையப் பெறுவதைக் காண முடிகின்றது. இதனை,

**“மறித் துரூஉத் தொகுத்த பறிப்புற இடையன்**

**தண் கமழ் முல்லை தோன்றியொடு விரைஇ,**

**வண்டு படத் தொடுத்த நீர் வார் கண்ணியன்,**

**ஐதுபடு கொள்ளி அங்கை காய,**

**குறுநரி உளம்பும் கூர் இருள் நெடு விளி**

**சிறுகட் பன்றிப் பெருநிரை கடிய,**

**முதைப்புனம் காவலர் நினைத்திருந்து ஊதும்**

**கருங்கோட்டு ஓசையொடு ஒருங்கு வந்து இசைக்கும்**

**வன்புலக் காட்டு நாட்டதுவே....” (அகநா.94:4-12)**

என்னும் முல்லைத் திணையின் பாடல் அடிகள் உணர்த்தும். இதனுள், வன்புலம், சிறுகட்பன்றி என்பன குறிஞ்சித் திணைக்குரிய நிலம் மற்றும் கருப்பொருள் செய்தியாகும். இப்புனைவுகள் முல்லையுள் குறிஞ்சியாக அமைகின்றன.

தலைவி ஆற்றியிருக்கும் முல்லைத் திணையுள் முல்லை நிலத்துடன் குறிஞ்சியினையும் குறிப்பர் இடைக்காடனார். இதனை,

**“புன்புலம் தழீஇய பொறை முதல் சிறுகுடி**

**தினைக்கள் உண்ட தெறிகோல் மறவர்,**

**விசைத்த வில்லர், வேட்டம் போகி,**

**முல்லைப் படப்பைப் புல்வாய் கெண்டும்” (அகநா.284: 7-10)**

என்று குறிக்கின்றார். இதனுள், புன்புலம், பொறைமுதல் சிறுகுடி, தினை என்பன குறிஞ்சித் திணையின் நிலம் மற்றும் கருப்பொருட் புனைவாகும். இவை முல்லைத் திணையுடன் திணைமயக்கமாக இடம் பெறுகின்றன.

தலைவி ஆற்றியிருக்கும் முல்லையைச் சார்ந்த குறிஞ்சி நிலம் முல்லைத் திணைப் பாடலில் குறிக்கப்படுவதை,

**"........ ........... ......... பொறைய,**
**கண்போல் நீலம், சுனைதொறும், மலர,**
**வீததர் வேங்கைய வியல் நெடும் புறவின்,**
**இம்மென் பறவை ஈண்டு கிளை இரிய,**
**நெடுந்தெரு அன்ன நேர்கொள் நெடுவழி,**
**இளையர் ஏகுவனர் பரிப்ப, வளை எனக்**
**காந்தள் வள் இதழ் கவிகுளம்பு அறுப்ப,**
**தோள்வலி யாப்ப, ஈண்டு நம் வரவினைப்**
**புன் அறிவுறீஇயின கொல்லோ...."** (நற்161 : 1-9)

என்னும் அடிகள் உணர்த்தும். இங்கு, பொறை, சுனை, வேங்கை, காந்தள் என்னும் குறிஞ்சியின் நிலம் மற்றும் கருப் பொருட்புனைவுகள் முல்லையுள் மயங்குகின்றன. முல்லையும் குறிஞ்சியும் சார்ந்திருப்பதால் குறிஞ்சி நிலத்துள் குவளையும் முல்லை நிலத்துள் வேங்கையும் காந்தளும் பூத்துள்ளன. இப்பாடலுள் காணப்பெறும் திணை மயக்கத்தை, "முல்லையும் குறிஞ்சியும் முறையே மணந்து கிடந்த நாடு என்றதற்கு மலையிடத்துச் சுனைகளையும் மலைக் காட்டிடத்து வேங்கை மரங்களையும் விதந்து கூறுகின்றார்"(1) என்பர்.

பருவங்கண்டு வருந்தியுரைக்கும் தலைவியின் கூற்றில் கார்கால மழை குறிக்கப்படுகிறது. கார்கால மழை முல்லை மற்றும் குறிஞ்சி நிலங்களில் பெய்தமை சுட்டப்படுகிறது. கார்கால மழையால் முல்லை

நிலத்துள் தேரைகள் ஒலிக்கின்றன. கொன்றை, தோன்றி, முல்லை முதலிய மலர்கள் மணம் பரப்புகின்றன எனும் முல்லைப் புனைவுடன் குறிஞ்சி நிலத்துள் விலங்குகள் நீருண்ணுமாறு சுனைகளில் நீர் நிரம்பின என்று குறிஞ்சிப் புனைவு திணை மயக்கமாக அமைவதை,

**"மாதிரம் புதையப் பாஅய், கால் வீழ்த்து,**
**ஏறுடைப் பெருமழை பொழிந்தென, அவல்தோறு**
**ஆடுகளப் பறையின் வரிநுணல் கறங்க,**
**ஆய் பொன் அவிர் இழை தூக்கியன்ன**
**நீடு இணர்க் கொன்றை கவின்பெற, காடு உடன்**
**சுடர்புரை தோன்றிப் புதல் தலைக் கொளாஅ,**
**முல்லை இல்லமொடு மலர, கல்ல**
**பகுவாய்ப் பைஞ்சுனை மா உண மலிர,**
**கார் தொடங்கின்றே ... ..."** (அகநா. 364:1-9)

எனும் பாடல்வழி பெறமுடிகின்றது. இதனுள் 'பகுவாய்ப் பைஞ்சுனை மா உண மலிர' என்று குறிஞ்சித் திணையின் முதல் கருப்பொருள்கள் மயங்குகின்றன.

முல்லை நிலத்துக் கறவை மாடுகள் மேய்ச்சலுக்கு முல்லை நிலத்தைச் சார்ந்த குறிஞ்சி நிலத்திற்கு ஓட்டிச் செல்லப்படுவதைக் கூறும் நிலையில் முல்லைத் திணையுள் குறிஞ்சி நிலம் மயங்குகிறது. இத்திணை மயக்கம், பருவம் கண்டு அழியும் தலைமகளின் கூற்றில்,

**"மழை விளையாடும் குன்றுசேர் சிறுகுடிக்**
**கறவை கன்றுவயின் படர, புறவில்**

**பாசிலை முல்லை ஆகுஇல் வான்பூச்**

**செவ்வான் செவ்வி கொண்டன்று"** (குறுந்.108: 1-4)

என்று குறிக்கப் பெற்றுள்ளது. இதனுள் இடம்பெறும் 'குன்றுசேர் சிறுகுடி' என்பது குறிஞ்சித்திணை மயக்கமாகும்.

கடிமனை சென்று வந்த செவிலி கூற்றில் தலைவனின் நாட்டை முல்லையும் குறிஞ்சியும் இணைந்த நிலமாகக் காட்டுகின்றார் பேயனார். இதனை,

**"நறும்பூந் தண்புறவு அணிந்த,**

**குறும்பல் பொறைய நாடு கிழவோனே"** (ஐங்.404: 3-4)

என்னும் அடிகள் விளக்கும். இதனுள், 'குறும்பல் பொறைய நாடு' என்பது குறிஞ்சிப் புனைவாக மயங்குகின்றது. புறவு அணிந்த குறும்பல்பொறை என்பதால் முல்லை நிலம் சூழ்ந்த, குறிஞ்சி நிலம் என்பது விளங்கும். முல்லை மற்றும் குறிஞ்சி நில வளம் பெற்ற தலைவனை 'குறும்பொறை நாடன்' என்றே வழங்குவர். இதனை "குறும்பல், பொறை நாடன் என்றது முல்லை நிலத்திற்கும் அதனை அடுத்த குறிஞ்சிக்கும் கோமான் என அவன் செல்வச் சிறப்போதியவாறு"(2) என்பர். இதனால் செல்வச் செழிப்பை உணர்த்தும் நோக்குடன் திணைமயக்கம் படைக்கப் பெற்றிருப்பது விளங்கும்.

பாணனின் முல்லைத் திணைக் கூற்றில் முல்லையைச் சார்ந்த குறிஞ்சி நிலத்துள் முல்லை நிலத்து மான்கள் மேய்வதும், முல்லை நில ஆயர்கள் மாலை கட்டி விளையாடுவதும் குறிக்கப்படுகிறது. இதனை,

**" ... ... ... குன்றம் கவை இய**

**அம் காட்டு ஆர்இடை, மடப் பிணை தழீஇ,**

**திரிமருப்பு இரலை புல் அருந்து உகள,**

**முல்லை வியன்புலம் பரப்பி, கோவலர்**

**குறும்பொறை மருங்கின் நறும்பூஅயர"** (அகநா.14:4-8)

என்பது விளக்கும். இங்கு, குறிக்கப்படும் குன்றம், குறும்பொறை என்பன முல்லையைச் சார்ந்துள்ள குறிஞ்சித் திணைக்குரிய நிலப் புனைவுகளாகும். இதில் முல்லையும் குறிஞ்சியும் சார்ந்தமையும் நிலப்பகுதி, 'குன்றம் கவைஇய அம்காடு' என வழங்கப்படுவது குறிக்கத்தக்கது. முல்லைத் திணைக்குரிய தலைவன் கூற்றில், முல்லை நிலத்துப் பூக்களைக் குறிஞ்சி நிலத்தின் புறப்பகுதியில் வாழும் பார்ப்பன மகளிர் அணிவதை,

**"கான முல்லைக் கயவாய் அலரி**

**பார்ப்பன மகளிர் சாரற் புறத்து அணிய,"** (நற். 321 : 3-4)

என்னும் அடிகள் குறிக்கும். இதனுள், சாரல் எனும் குறிஞ்சி நிலம் திணைமயக்கமாக இடம் பெறுகிறது. இதனை "காட்டிடத்தே உள்ள முல்லையின் விரிந்த வாயையுடைய மலரை மலைச் சாரலின் புறத்தே உள்ள பார்ப்பன மகளிர் பறித்துச் சூடுவர்"(3) என்று விளக்குவர்.

பருவ வரவில் வருந்திக் கூறும் தலைவியின் முல்லைக் கூற்றில், மாலைப் பொழுதின் இயல்பு முல்லை மற்றும் குறிஞ்சி நிலப் புனைவுடன் விளக்கப்படுகிறது. இதனை,

**"மான்ஏறு மடப்பிணை தழீஇ, மருள் கூர்ந்து,**
**கானம் நண்ணிய புதல் மறைந்து ஒடுங்கவும்,**
**கையுடை நல்மாப் பிடியொடு பொருந்தி,**
**மைஅணி மருங்கின் மலையகம் சேரவும்,**
**மாலை வந்தன்று ... ... ... "** (குறுந். 319 : 1-5)

என்னும் அடிகள் உணர்த்தும். இங்கு, மலை, யானை (கையுடை நல்மா) என்று குறிஞ்சி மயங்குகின்றது. இவற்றால் முல்லைத் திணைப் பாடல்களில் முல்லை நிலத்தைச் சார்ந்த குறிஞ்சி நிலம் திணைமயக்கமாகக் குறிக்கப்படுவது விளங்கும்.

முல்லைத் திணையின் பாடுபொருளைச் சிறப்பிக்கும் கார்கால மழையின் வரவைக் கூறுமிடத்து குறிஞ்சித் திணையின் புனைவு திணை மயக்கமாக இடம் பெறுவது அறியப்படுகிறது. கார்கால மழை குறிஞ்சி நிலத்துள் பெய்வதாகக் குறிக்கப்பெறுகிறது. வினைமுற்றிய தலைமகன் கூறும் கூற்றில்,

**"காயாங் குன்றத்துக் கொன்றை போல,**
**மாமலை விடர் அகம் விளங்க மின்னி,**
**மாயோள் இருந்த தேஎம் நோக்கி,**
**வியல் இரு விசும்பு அகம் புதையப் பாஅய்**
**பெயல் தொடங்கினவே, பெய்யா வானம்"** (நற்.371: 1-5)

என்று குறிஞ்சியின் புனைவு கூறப்படுகின்றது. இங்கு குன்றம், மாமலை என்பன திணை மயக்கமாக இடம்பெறுகின்றன.

முல்லைத் திணைப் பாடல்களில் முல்லைப் புனைவால் குறிஞ்சியின் கருப்பொருள் மயங்குவதும் உணரப்படுகின்றது. வினைமுற்றி வந்த

தலைவன் இனிதே தலைவியுடன் கூடியிருந்து கூறும் கூற்றில் முல்லையுள் குறிஞ்சி மயங்குகின்றது. இதனை,

**"களிச் சுரும்பு அரற்றும் காமர் புதலின்**

**மடப் பிடி தழீஇய, மாவே;**

**சுடர்த் தொடி மடவரற் புணர்ந்தனம், யாமே,"** (ஐங்.416.3-5)

என்னும் அடிகள் உணர்த்தும். இதனுள் முல்லை நிலத்துப் புதல்களில் குறிஞ்சி நிலத்துக் களிறுகள் தம் இளம் பிடிகளைத் தழுவியது கூறப்படுகின்றது. எனவே முல்லையுள் குறிஞ்சியின் கருப்பொருள் மயங்குவது புலப்படும். பருவம் காட்டி வற்புறுத்தும் தோழியின் கூற்றில்,

**"நெடும் பெருங்குன்றத்து அமன்ற காந்தட்**

**போது அவிழ் அலரின் நாறும்**

**ஆய்தொடி அரிவை! நின் மாண் நலம் படர்ந்தே"**

(அகநா.4: 15-17)

என்றும், தலைவன் வினைமுற்றி வர, தலைவியின் கண்கள் அழகு பெறுகின்றன. இந்நிலையில் தோழி கூறும் முல்லைத் திணைக்குரிய கூற்றில்,

**"கொன்றைப் பூவின் பசந்த உண்கண்,**

**குன்றக நெடுஞ்சுனைக் குவளை போல,**

**தொல்கவின் பெற்றன இவட்கே ..."** (ஐங்.500: 1-3)

என்றும், தலைவன் வினைமுற்றி வந்த நிலையில் தோழி புல்லு மகிழ்வு கூறும் முல்லைக் கூற்றில்,

**"கற்பால் அருவியின் ஒலிக்கும் நல் தேர்த்**

**தார்மணி ... ...** " (அகநா.184: 17-18)

என்றும், வினைமுற்றி மீளும் தலைமகனின் கூற்றில்,

**"... ... ... வேலன்**

**வெறி அயர் களத்துச் சிறுபல தாஅய**

**விரவு வீ உறைத்த ஈர்நறும் புறவின்" (அகநா.114:1-3)**

என்றும், குறித்த பருவத்தில் தலைவன் வந்தவிடத்துத் தோழி கூறும் கூற்றில் முல்லை நிலத்துக் கொன்றை மலர்களைக் குறிப்பதற்கு,

**"குறும்பல் கோதை கொன்றை மலர"** (ஐங்.497:1)

என்றும் குறிஞ்சி நிலச் செய்தி உவமையின் வழி மயங்குவதைக் காணமுடிகின்றது. இவற்றால் முல்லையின் பாடுபொருளுடன் நெடும் பெருங்குன்றம், குன்றம், கற்பால் அருவி, குறும்பல் நெடுஞ்சுனை, காந்தள், என்னும் நிலம் மற்றும் கருப்பொருட்கள் புனைவுகள் உவமையின் வழித் திணை மயக்கமாகக் குறிக்கப்பெறுவது விளங்கும்.

**முல்லையுள் பாலை**

முல்லைத் திணைப் பகுப்பில் முல்லையின் உரிப்பொருளை உடைய பாடல்களில் பாலை நிலம் மற்றும் பாலையின் கருப்பொருட் புனைவுகள் திணை மயக்கமாகக் குறிக்கப்படுகின்றன.

குறிஞ்சி, முல்லை எனும் நிலங்கள் வேனிற்காலத்து வெப்பத்தால் பாலைநிலமாகவும்; பாலை நிலங்கள் கார் கால மழையால் குறிஞ்சி, முல்லை நிலங்களாகவும் தோற்றம் பெறும். இதன் அடிப்படையிர் கார்

கால மழையினைக் குறிக்கும் முல்லைத் திணைப் பாடல்கள் கார் கால மழை பாலை நிலத்துள் பெய்யத் தொடங்கியதாகக் குறிக்கின்றன. பாசறைக் கண் இருந்த தலைமகன் தன்னெஞ்சிற்குக் கூறுவதான முல்லைத் திணைக்குரிய பாடுபொருளில் கார் கால மழை பாலை நிலத்துள் பெய்வது குறிக்கப்படுகிறது. இதனை,

**"கதிர் கையாக வாங்கி, ஞாயிறு**

**பைது அறத் தெறுதலின், பயம் கரந்து மாறி,**

**விடுவாய்ப் பட்ட வியன்கண் மாநிலம்**

**காடுகவின் எதிரக் கனைபெயல் பொழிதலின்;"** (அகநா.164:1-4)

என்று குறிக்கின்றார் மதுரைத் தமிழக் கூத்தன் நாகன் தேவனார். இதனுள், பாலைநிலம் வெப்பத்தால் பயனற்றுக்கிடப்பது, 'பயம், கரந்துமாறி' என்றும் பாலைநில வெப்பம் 'ஞாயிறு பைது அறத்தெறுதலின் என்றும்' திணை மயக்கமாகக் குறிக்கப்படுகிறது. இத்திணைமயக்க நெறியில், பருவ வரவின்கண் ஆற்றாள் எனக்கவன்ற தோழிக்குக் கூறும் தலைவியின் கூற்றைப் படைக்கிறார் பொன்மணியார். இதனை

**"உவரி ஒருத்தல் உழாஅது மடியப்**

**புகரி புழுங்கிய புயல் நீங்கு புறவில்,**

**கடிதுஇடி உருமின் பாம்புபை அவிய,**

**இடியொடு மயங்கி இனிது வீழ்ந்தன்றே"** (குறுந். 391: 1-4)

என்னும் பாடலடிகள் உணர்த்தும். இதனுள் பாலைநிலம், 'புயல் நீங்கு புறவு' எனக் குறிக்கப்படுகின்றது. பாலையின் வெம்மையால் எருதுகள் உழாமல் சோம்பிக் கிடப்பதும் மான்கள் புழுங்கிக் கிடப்பன எனும்

நிகழ்வுகளும் குறிக்கப்படுகின்றன. இதனை, "வேனிற் பருவத்து வெம்மையால் உழுபகடுகள் தொட்டில்களில் சோம்பிக் கிடந்தன. மான்கள் உடலும் உள்ளமும் புழுங்கின"(4) என்று விளக்குவர். குறித்த பருவத்து வாராத நிலையில் தலைவி கூறும் முல்லைத் திணைப்பாடலில்,

**"வறந்த ஞாலம் தெளிர்ப்ப வீசிக்**

**கறங்கு குரல் எழிலி கார் செய்தன்றே;"** (ஐங்.452:1-2)

என்று பாலை நிலத்தைப் படைப்பர் பேயனார். இங்கு வேனிற்காலம் கழிந்து கார்கால மழை பெய்வதும் அக்கார்கால மழை பெய்யும் பாலை நிலம், 'வறந்த ஞாலம்' எனக் குறிக்கப்படுவதும் விளங்கும். இத்திணைமயக்கத்தை, கண்டார் கூற்றாக அமையும் முல்லைப்பாடல்

**"இடைச்சுரத்து எழிலி உறைத்தென"** (நற்.394: 7)

என்றுரைக்கின்றது. இங்கு பாலைப்புனைவு இடைச்சுரம் எனக் குறிக்கப்படுவது விளங்கும்.

இவற்றால் கார்கால மழை பாலை நிலத்துள் பெய்வதாகக் குறிக்கப்படும் நிலையில் முல்லைத் திணையுள் பாலை மயங்கும் என்பது உணரப்படும்.

முல்லைத் திணைப் பாடல்களில் தலைவன் பிரிந்து சென்ற பாலை நிலம் திணை மயக்கமாகக் குறிக்கப்படுகிறது. வற்புறுத்தும் தோழிக்குத் தலைமகள் சொல்லும் முல்லைத் திணைக் கூற்றைப் படைக்கும் மதுரை மருதனிளநாகனார்,

"மழை கழூஉ மறந்த மா இருந் துறுகல்

துகள் சூழ் யானையின் பொலியத் தோன்றும்

இரும்பல் குன்றம் போகி" (குறுந்.279:5-7)

என்று பாலை நிலச் செய்தியைத் திணைமயக்கமாகக் குறிக்கின்றார். இப்பாடலுள் இடம் பெறும் பாலை நிலச் செய்தியினை, "மழை கழூஉ மறந்த குன்றம்' என்பதால் மழை இல்லாத அருஞ்சுரம் நினைக்கப்பட்டது"(5) என்று விளக்குவர். இவ்வாறான திணை மயக்க அமைப்பில், 'பருவம் அன்று' என வற்புறுத்தும் தோழி கூற்றில்,

"கல் பிறங்கு அத்தம் சென்றோர்" (குறுந்.66: 2)

என்று கோவர்த்தனாரும்,

"நீர் அற வறந்த நிரம்பா நீள் இடை

துகில் விரித்தன்ன வெயில் அவிர் உருப்பின்,

அஞ்சுவரப் பனிக்கும் வெஞ்சுரம் இறந்தோர்" (நற்.99: 1-3)

என்று இளந்திரையனாரும், தோழிக்குப் பருவங் காட்டிக் கூறும் தலைமகளின் கூற்றில்,

"இன்னா வைப்பின் சுரன் இறந்தோரே" (குறுந்.314: 6)

என்று பேரிசாத்தனாரும், திணைமயக்கத்தைப் படைத்திருப்பது புலப்படுகிறது. வினைமுற்றி மீளும் தலைமகனைக் கண்டார் கூறும் முல்லைப் பாடுபொருளில் தலைவன் பாலைவழியில் பிரிந்து சென்ற நிகழ்வு கூறப்படுகிறது. இந்நிலையில் முல்லையுள் பாலை மயங்குவதை,

"மரந்தலை மணந்த நனந்தலைக் கானத்து
அலந்தலை ஞெமையத்து இருந்த குடிஞை,
பொன் செய் கொல்லனின், இனிய தெளிர்ப்ப,
பெய்ம் மணி ஆர்க்கும் இழை கிளர் நெடுந்தேர்,
வன்பரல் முரம்பின், நேமி அதிர,
சென்றிசின் வாழியோ- - - - " (நற்.394:1-6)

என்னும் அடிகளின் வழிக் காணமுடிகின்றது. வினைமுற்றி மீளும் தலைவன் கூற்றாக அமையும் பாடுபொருளில் பாலைநிலப் புனைவு திணைமயக்கமாக இடம்பெறுகின்றது. வினைமுற்றி மீளும் தலைமகன் இடைச்சுரத்தில் கூற்று நிகழ்த்தும் போது இடைச்சுரமான பாலைப்புனைவு முல்லைப் பாடுபொருளுடன் மயங்குகின்றது. இதனை,

"முரம்பு தலை மணந்த நிரம்பா இயவின்
ஓங்கித் தோன்றும் உமண்பொலி சிறுகுடிக்
களரிப் புளியின் காய் பசி பெயர்ப்ப
உச்சிக் கொண்ட ஓங்கு குடை வம்பலிர்" (நற்.374: 1-4)

என்று தலைவன் விளித்துரைக்கும் அடிகள் விளக்கும். இதனால் தலைவன் கார்கால வரவிற்கு முன்பே வினைமுற்றுப்பெற்று வருவது புலப்படுகிறது. இவற்றால் முல்லைத் திணையுள் பாலை நிலச் செய்தி கார் கால மழை பெய்த பாலை நிலமாகவும் தலைவன் சென்ற வழியாகவும் வினைமுற்றி வரும் வழியாகவும் குறிக்கப்பட்டு மயங்குவது பெறப்படுகிறது.

**முல்லையுள் மருதம்**

முல்லைத் திணைப் பகுப்பில் முல்லையின் உரிப்பொருளுடன் மருதத் திணைக்குரிய நிலம் மற்றும் கருப்பொருட் புனைவுகளின் திணை

மயக்கம் காணப்படுகிறது. தலைவன் வினைமுற்றி விரைவில் வருவான் என்பதைக் கேட்ட தலைமகளின் கூற்றான முல்லைத் திணைப் பாடுபொருளில் தலைவனின் நாட்டுப் புனைவாக மருத நிலத்தைக் குறிக்கின்றார் பேயனார். இதனை,

**“மெல் இறைப் பணைத்தோட் பசலை தீர,**
**புல்லவும் இயைவது கொல்லோ - புல்லார்**
**ஆர் அரண் கடந்த சீர் கெழு தானை**
**வெல்போர் வேந்தனொடு சென்ற**
**நல் வயல் ஊரன் நறுந்தண் மார்பே?”** (ஐங்.459)

என்பது உணர்த்தும். இதனுள் ‘நல் வயல் ஊரன்’ என்பது திணைமயக்கமாகிறது.

கார் கால வரவினைக் காட்டி ‘தலைவர் தவச்சேய் நாட்டார் ஆயினும் மிகப் பேர் அன்பினர். விரைவில் வருவர்‘ எனக் கூறித் தலைவியைத் தோழி, ஆற்றுவிக்கும் முல்லைப் பாடுபொருளில்,

**“மலர்ந்த பொய்கைப் பூக் குற்று அழுங்க**
**அயர்ந்த ஆயம் கண் இனிது படீஇயர்”** (நற்.115:1-2)

என்று தலைவிக்குரிய சூழலாக மருத நிலத்தைக் குறிப்பர். இவற்றால் மருத நிலத் தலைவன் தலைவியரின் முல்லையொழுக்கம் பாடப்படும் நிலையில் முல்லையுள் மருதம் மயங்கும் என்பது விளங்கும்.

பருவ வரவில் வற்புறுத்தும் தோழிக்குத் தலைமகள் கூறும் முல்லைத் திணைக் கூற்றில், தலைவி துயரமடையும் அற்சிரக் காலம் குறிக்கப்படுகின்றது. அற்சிரக் காலத்தின் இயல்பை மருதநிலப்

பின்புலத்துடன் விளக்கி முல்லையுள் மருதத்தை மயங்கச் செய்கிறார் கழார்க்கீரன் எயிற்றியார். இதனை,

**" ... ... ... அகல்வயல்**

**கதிர் வார் காய்நெல் கட்கு இனிது இறைஞ்ச,**

**சிதர் சினை தூங்கும் அற்சிர அரைநாள்"** (அகநா.294: 9-11)

என்னும் அடிகள் உணர்த்தும். இதனுள் அகல்வயல் என்று மருத நிலமும், கதிர், காய்நெல் என்று மருதத் திணைக்குரிய கருப்பொருளும் திணை மயக்கமாக இடம் பெறுகின்றன. கூதிர் காலத்தை மருதநிலப் புனைவுடன் கூறுதலை நெடுநல் வாடையில் காணமுடிகின்றது. முல்லையுள் மருதநிலப் புனைவு மயங்குவதை,

**"அங்கண் அகல்வயல் ஆர்பெயல் கலித்த**

**வண்தோட்ட நெல்லின் வருகதிர் வணங்க"** (நெடுநல். 21-22)

என்னும் அடிகள் குறிக்கின்றன. இதனால் முல்லைப் பாடலுள் பருவ கால இயல்பு மருதநிலப் பின்புலத்தால் விளக்கப்படும் போது முல்லையுள் மருதம் மயங்கும் என்பது விளங்கும்.

வினைமுற்றிய தலைமகன் தலைவியின் கூந்தலைச் சிறப்பித்துக் கூறுகின்றான். இம்முல்லைத் திணைக் கூற்றில் தலைவியின் கூந்தல் சிறப்பினைக் குறிக்குமிடத்து, மருத நிலப் புனைவு திணைமயக்கமாக இடம் பெறுகின்றது. இதனை,

**"வெண்ணெல் அரிநர் மடிவாய்த் தண்ணுமை**

**பல் மலர்ப் பொய்கைப் படுபுள் ஓப்பும்**

**காய்நெல் படப்பை வாணன் சிறுகுடித்**

**தண்டலை கமழும் கூந்தல்"** (அகநா. 204: 10-13)

என்னும் அடிகள் விளக்கும். இதனுள், பல்மலர்ப் பொய்கை என மருத நிலப் பகுதியும், நெல், நெல்லரிநர், புள் ஓப்புதல் என்னும் கருப்பொருட்களும் திணை மயக்கமாக இடம் பெறுவது புலப்படும். தலைவியின் குணச்சிறப்பைக் குறிப்பிடும் தலைமகனின் முல்லைத் திணைக் கூற்றில், மருதப் புனைவு,

**"பழம்பல் நெல்லின் பல்குடிப் பரவை,**

**பொங்கடி படிகயம் மண்டிய பசு மிளை,**

**தண்குடவாயில் அன்னோள்"** (அகநா.44:16-18)

என்று குறிக்கப்படுகின்றது. இங்கு, கயம், பழம்பல்நெல் என்பன திணை மயக்கமாக இடம்பெறுகின்றன. இவற்றால் முல்லைத்திணைப் பாடலில் தலைவியின் கூந்தல், குணம் என்பவற்றின் சிறப்பினைக் குறிக்குமிடத்து மருதப் புனைவு திணை மயக்கமாகக் கூறப் பெறும் என்பது விளங்கும்.

பாசறையிருப்பில் தலைவன் கூறும் கூற்றில், வேந்தன் திறைப் பொருளை விரும்பாது போரை விரும்புவது குறிக்கப்படுகின்றது. இதனுள் திறைப் பொருளைக் குறிக்குமிடத்து மருதப் புனைவு குறிக்கப்படுகிறது. இதனை,

**"எரிபுரை பல்மலர் பிறழ வாங்கி,**

**அரிஞர் யாத்த அலங்கு தலைப் பெருஞ்சூடு**

**கள்ஆர் வினைஞர் களம் தொறும் மறுகும்**

தண்டை தழீஇய கொடி நுடங்கு ஆர்எயில்

அருந்திறை கொடுப்பவும் கொள்ளான்......" (அகநா.84 : 10-14)

என்னும் பாடல் அடிகள் உணர்த்தும். இங்கு, மருதநிலப் பகுதிகளுள் ஒன்றாக அமையும் நெற்களம், அதனுள் உள்ள பெருஞ்சூடு, நெற்கதிர் அடிக்கும் வினைஞர் எனும் புனைவுகள் திணைமயக்கமாக அமைகின்றன.

இவற்றால் முல்லையின் உரிப்பொருளுடன் மருத நிலத் தலைவன் தலைவியரைக் குறிக்கவும், தலைவியின் கூந்தல் மற்றும் குணச்சிறப்பைச் சுட்டவும், அற்சிரக்காலத்தின் இயல்பினை விளக்கவும், திறைப் பொருளைக் குறிப்பிடவும் மருதப் புனைவு மயங்குவது உணரப்படும்.

**முல்லையுள் நெய்தல்**

முல்லையின் உரிப்பொருளுடன் நெய்தல் மயங்கியதை முல்லைப் பகுப்பில் உள்ள பாடல்களில் காணமுடிகின்றது. பாசறை முற்றிய தலைமகன் தேர்ப்பாகற்குக் கூறும் முல்லைத் திணையின் பாடுபொருளில், கார்கால மழை மேகம் தனக்கு வேண்டிய நீரை நெய்தல் நிலத்துள் முகந்து கொண்டது குறிக்கப்படுகின்றது. இதனை இடைக்காடனார்,

"மாக்கடல் முகந்து, மாதிரத்து இருளி,

மலர்தலை உலகம் புதைய, வலன் ஏர்பு,

பழங்கண் கொண்ட கொழும்பல் கொண்மூ," (அகநா.374:1-3)

என்பர். இங்கு நெய்தல் நிலம் மாக்கடல் எனக் குறிக்கப்படுகிறது. இதனால் கார்கால மழையினைக் குறிக்கும் முல்லைத்திணைப் பாடல்களில் நெய்தல் நிலம் குறிக்கப்பட்டு திணை மயக்கமாகப் பாடப் பெறுவது விளங்கும்.

ஆற்றியிருக்கும் தலைவிக்கு இரவுப் பொழுது மிக நீண்டதாக அமையும் என்பதைக் குறிக்குமிடத்தும் "கங்குல் வெள்ளம் கடலினும் பெரிதே" (குறுந்.387; 5) என்று நெய்தல் நிலப் புனைவு குறிக்கப்படுகின்றது. இவற்றால், முல்லைத்திணைப் பாடல்களில் கார்கால மழையினைக் குறிக்குமிடத்தும், இரவுப் பொழுதின் நீட்சியைச் சுட்டுமிடத்தும் நெய்தல் நிலச் செய்தி திணை மயக்கமாகப் பாடப் பெறுகின்றன என்பது பெறப்படும்.

***குறிஞ்சியுள் முல்லை***

குறிஞ்சித்திணையின் உரிப்பொருளுடன் முல்லைத் திணயின் நிலம் மற்றும் கருப்பொருள் மயங்கும் திணை மயக்கம் குறிஞ்சித் திணைப் பாடல்களில் காணப்படுகிறது.

பகற்குறி வந்து, பெயர்ந்து செல்லும் தலைமகனுக்குத் தோழி சொல்லியதாக அமையும் குறிஞ்சித் திணைப் பாடலில் குறிஞ்சி நிலத்தைச் சார்ந்த முல்லை நிலப் புனைவுகள் திணை மயக்கமாகக் குறிக்கப்பெறுகின்றன. இதனை,

***"கோடு துவையா, கோள்வாய் நாயொடு***
***காடுதேர்ந்து அசைஇய வயமான் வேட்டு***
***வயவர் மகளிர் என்றிஆயின்,***
***குறவர் மகளிரேம்; குன்றுகெழு கொடிச்சியேம்;"***

(நற். 276:1-4)

என்னும் அடிகள் உணர்த்தும். இதனுள் குறிக்கப்படும் 'வயவர்' என்போர்

குறிஞ்சியைச் சார்ந்த காட்டுப் பகுதியில் வாழ்வர். இதனை, "குறிஞ்சி நிலத்தவருள் கானத்து வாழ்பவர் கானவர் எனவும்... கூறப்படுவர்... 'கோணாய் கொண்ட கொள்ளைக் கானவர்'(நற்.82) என்பதனால் வயவர் ஈண்டுக் கானவர் மேற்றாயிற்று"[(6)] என்று விளக்குவர். வரைவிடைப் பிரிந்த தலைமகனின் மீட்சியுணர்ந்து தோழி கூறும் கூற்றில் முல்லை நிலத்துக் கானத்தில், குறிஞ்சி நிலத்து வேங்கை மலர்களை முல்லை நிலத்து மான்கள் மேய்வது கூறப்படுகின்றது. இதனை,

**"பெருவரை வேங்கைப் பொன் மருள் நறுவீ**
**மான் இனப் பெரும் கிளை மேயல் ஆரும்**
**கானக நாடன் ... ..."** (ஐங். 217:1-3)

என்பது விளக்கும். தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழி கூறும் குறிஞ்சித் திணைக் கூற்றில் குறிஞ்சி நிலத்து விலங்கான புலி, வேட்டையாடுதற்காக அருகே உள்ள முல்லை நிலத்துள் பதுங்கியிருப்பது கூறப்படுகிறது, இதனை,

**"குறுங்கை இரும்புலிக் கோள்வல் ஏற்றை,**
**நெடும் புதல் கானத்து மடப்பிடி ஈன்ற**
**நடுங்கு நடைக் குழவி கொளீஇய, பலவின்**
**பழம் தூங்கு கொழுநிழல் ஒளிக்கும்....."** (ஐங்.216: 1-4)

என்பது உணர்த்தும். இரவுக்குறி வந்த தலைமகற்குக் கூறும் தோழியின் கூற்றில், குறிஞ்சியைச் சார்ந்த முல்லைக் காட்டில் குறிஞ்சி நிலத்து வேங்கைப் பூ காணப்படுவதை,

“கருங்கால் வேங்கை வீஉகு துறுகல்

இரும்புலிக் குருளையின் தோன்றும் காட்டிடை” (குறுந்.47:1-2)

என்னும் அடிகள் உணர்த்துகின்றன. இங்கு ‘காடு’ என்பது முல்லைப் புனைவாக மயங்குகிறது. தோழி அறத்தொடு நிற்பதாக அமையும் குறிஞ்சித் திணைக் கூற்றில் குறிஞ்சியைச் சார்ந்த முல்லை நிலத்துள் குறிஞ்சியின் கருப்பொருளான மயில் ஆடி மகிழ்வது குறிக்கப்படுகின்றது. இதனை,

“மணி வரைக் கட்சி மடமயில் ஆலும் நம்

மலர்ந்த வள்ளி அம் கானம்” (ஐங்.250:2-3)

என்னும் அடிகள் விளக்கும். இங்கு கானம் என்பது முல்லைப் பகுதியைக் குறிக்கும். வரைவு நீட்டித்த நிலையில் தலைவி கூறும் கூற்றில் குறிஞ்சித் திணைக்குரிய மயில் முல்லை நிலத்துள் வாழ்வது குறிக்கப்படுகிறது. இது,

“கான மஞ்ஞை அறை ஈன்முட்டை

வெயில் ஆடு முசுவின் குருளை உருட்டும்” (குறுந்.38: 1-2)

என்பதால் விளங்கும். இங்கு முல்லைப் புனைவு ‘கானம்’ என்பதால் பெறப்படுகிறது. தோழி, சிறைப்புறமாகச் சொல்லும் கூற்றில் குறிஞ்சியில் பெய்த மழை அருகேயுள்ள முல்லை நிலத்தைக் குளிரச் செய்வது குறிக்கப்படுகின்றது.

“வான்உற நிவந்த பெருமலைக் கவாஅன்,

ஆர்கலி வானம் தலைஇ, நடுநாள்

கனைபெயல் பொழிந்தென, கானக் கல்யாற்று” (நற்.53:4-6)

என்னும் அடிகள் விளக்கும். இங்கு 'கானக் கல்யாறு' என்பது முல்லைப் பகுதியைக் குறித்த புனைவாக மயங்குகிறது. தோழியின் சிறைப்புறக் கூற்றில் குறிஞ்சியில் பெய்த மழை முல்லை நிலத்துள் காட்டாறாக ஓட குறிஞ்சி நிலக் குரங்கு உணவு உண்ண; முல்லை நிலத்து மான்கள் துள்ளி விளையாடுவதைக் காணமுடிகின்றது. இதனை,

**"இன்முகப் பெருங்கலை நன் மேயல் ஆரும்**
**பன்மலர்க் கான்யாற்று உம்பர், கருங்கலை**
**கடும்பு ஆட்டு வருடையொடு தாவன உகளும்"** (நற்.119:5-7)

என்பதால் உணரமுடிகின்றது. இதனுள் கான்யாறு எனும் முல்லைப்புனைவு மயங்குகிறது. இரவுக்குறி வந்த தலைமகற்குச் சொல்லும் கூற்றில், குறிஞ்சி நிலத்துப் புலி, அருகே உள்ள முல்லை நிலத்துப் புதரில் குட்டியை ஈன்றெடுப்பதும், பெண் புலிக்கு இரை தேடிச் சென்ற ஆண் புலியைக் கண்டு முல்லை நிலத்துப் பசு ஓடுவதும், ஆண் புலி காட்டுப் பசுவின் எருதினை வீழ்த்திக் குறிஞ்சி நிலம் சிவக்கும்படி இழுத்து வருவதும் குறிக்கப்படுகின்றது. இதனை,

**"மான்றமை அறியா மரம்பயில் இறும்பின்,**
**ஈன்று இளைப்பட்ட வயவுப் பிணப் பசித்தென,**
... ... ... ...
**மடக்கண் ஆமான் மாதிரத்து அலற,**
**தடக்கோட்டு ஆமான் அண்ணல் ஏஎறு**
**நனந்தலைக் கானத்து வலம்படத் தொலைச்சி**
**இருங்கல் வியல் அறை சிவப்ப ஈர்க்கும்"** (அகநா.238:1-2,6-9)

என்பர். இதனுள் இறும்பு, கானம் என முல்லைப்புனைவு மயங்குகிறது. இரவுக்குறி வந்த தலைமகன் சிறைப்புறத்தானாகத் தலைமகள் தோழிக்குச் சொல்லும் குறிஞ்சித் திணையின் பாடுபொருளில் முல்லை மயங்குவதை,

**“இறும்பு பட்டு இருளிய இட்டு அருஞ் சிலம்பில்**
**குறுஞ் சுனைக் குவளை வண்டு படச் சூடி,**
**கான நாடன் வரூஉம்”** (அகநா.128 :8-10)

என்னும் அடிகள் உணர்த்தும். இங்கு கானம் என்பது முல்லையைக் குறிக்கின்றது. இதனுள், முல்லை நிலக் காடுகள் இருண்டு கிடக்கவும், குறிஞ்சி நிலத்துச் சுனையில் வண்டு மொய்க்கவும் என்று, தலைவன் வரும் வழி குறிக்கப்படுகின்றது. இவற்றால் குறிஞ்சித் திணைப்பாடல்களில் குறிஞ்சி நிலப் புனைவுடன் அருகேயுள்ள முல்லை நிலப்புனைவு திணை மயக்கமாகக் குறிக்கப் பெறும் என்பது உணரப்படும்.

இரவுக் குறியில், ஆற்றானாய தலைமகன் தோழி கேட்பத் தன்னெஞ்சிற்குக் கூறுவதான குறிஞ்சிப் பாடுபொருளில் முல்லை நிலத்துப் புனைவு குறிக்கப்படுகிறது. தலைவியின் கூந்தல் நறுமணத்திற்கும், அடர்த்திக்கும், முல்லை நிலக் காடுகளின் நறுமணமும் அக்காடுகள் இருண்டு காணப்படும் தன்மையும் கூறப்படுகிறது. இதனை,

**“அத்தக் குமிழின் கொடு மூக்கு விளைகனி**
**எறிமட மாற்கு வல்சி ஆகும்**
**வல்வில் ஓரி கானம் நாறி,**
**இரும்பல் ஒலிவரும் கூந்தல்”** (நற்.6: 7-10)

என்னும் அடிகள் விளக்கும். இதனுள் கானம், மான் என்று முல்லைநிலமும் கருப்பொருளும் திணைமயக்கமாகக் குறிக்கப்படுகின்றன. தோழி செறிப்பு அறிவித்தவிடத்து தலைவன் தன்னெஞ்சிற்குக் கூறும் கூற்றில்,

**"கை வள் ஓரி கானம் தீண்டி**

**எறிவளி கமழும் நெறிபடு கூந்தல்"** (குறுந்.199: 3-4)

என்று தலைவியின் கூந்தல் சிறப்பிற்கு முல்லைநிலம் குறிக்கப்படுகின்றது. இவற்றால் குறிஞ்சித் திணையில் தலைவன் தன்னெஞ்சிற்குக் கூறும் கூற்றில் தலைவியின் கூந்தலைச் சிறப்பித்துரைக்க முல்லை நிலப் புனைவு திணை மயக்கமாகக் குறிக்கப்படுவது தெளிவுறும்.

தலைமகளைப் புணர்ந்து நீங்கும் தலைமகன் களவில் தான் கொண்டுள்ள உறுதியுடன் அன்னிமிஞிலி கொண்ட உறுதியை ஒப்பிடுகின்றான். இக்குறிஞ்சித் திணைக் கூற்றில் அன்னிமிஞிலிக்கு முல்லை நிலத்துள் நிகழ்ந்த நிகழ்வு குறிக்கப்படுகிறது. இவ்வளவில் குறிஞ்சித் திணையின் உரிப் பொருளுடன் முல்லை நிலப் புனைவு மயங்குவதை,

***"முதைபடு பசுங்காட்டு அரில் பவர் மயக்கி,***

***பகடுபல பூண்ட உழவுறு செஞ்செய்,***

***இடுமுறை நிரம்பி, ஆகுவினைக் கலித்து,***

***பாசிலை அமன்ற பயறு ஆ புக்கென***

***வாய் மொழித் தந்தையைக் கண் களைந்து..."***(அகநா.262:1-5)

என்னும் அடிகளின் வழிக் காண முடிகின்றது. இதனால் புறச் செய்தியின் வழியாகவும் திணைமயக்கம் இடம்பெறுவது உணரப்படுகிறது.

**குறிஞ்சியுள் பாலை**

குறிஞ்சித் திணைப் பாடல்களில் குறிஞ்சியின் உரிப் பொருளுடன் பாலைத் திணையின் நிலப்புனைவு மயங்குதல் அறியப்படுகின்றது.

தலைவன் வரைவொடு வரின் யான் உயிர் வாழ்தல் கூடும் எனக் கூறும் தலைவி கூற்றில், குறிஞ்சி நிலம் வேனிற்கால இயல்பில் கூறப்படுகின்றது. இதனை,

> **"நறுவடி மாஅத்து மூக்கு இறுபு உதிர்ந்த**
> **ஈர்ந்தண் பெருவடு பாலையில் குறவர்**
> **உறைவீழ் ஆலியின் தொகுக்கும் சாரல்"** (ஐங். 213 : 1-3)

என்னும் அடிகள் உணர்த்தும். மாம்பிஞ்சுகள் கோடை வெயிலுக்கு காம்பு அற்று விழும், இதனை, "நறுமணம் மிக்க மாம் பிஞ்சுகள் பாலை வெப்பத்தால் காம்பு அற்று வீழ்ந்தன"(7) என்பர். இதனால் குறிஞ்சித் திணைப் பாடலில் குறிக்கப்படும் குறிஞ்சி நிலம் வேனிற்கால இயல்புடன் கூறப்படும் போது குறிஞ்சியுள் பாலை மயங்குவதாய் அமையும் என்பது பெறப்படும்.

தலைமகன் வரைவு மலிந்தமையினைத் தோழி கூறும் குறிஞ்சித் திணைப் பாடலில், தலைவன் வரைவிற்கு வந்ததினால் எய்திய மகிழ்ச்சி, பாலை நிலத்துள் மழை பெய்தவிடத்து மக்கள் எய்திய மகிழ்வுடன் ஒப்பிட்டுக் கூறப்படுகிறது. இந்நிலையில் குறிஞ்சித் திணைப் பாடலில் பசுமையற்ற கோடைகாலம்; வளமையற்ற நாடு; உழாது கிடக்கும் கலப்பை; நீரற்ற குளம்; பறவைகள் இல்லாக் குளக்கரைகள் என்னும் பாலைப்

புனைவுகள் திணைமயக்கமாகக் கூறப்படுகின்றன. இதனை,

**"நாடு வறம் கூர, நாஞ்சில் துஞ்ச,**
**கோடை நீடிய பைது அறு காலை,**
**குன்று கண்டன்ன கோட்ட யாவையும்**
**சென்று சேக்கல்லாப் புள்ள, உள்இல்**
**என்றூழ் வியன் குளம் நிறைய வீசி,**
**பெரும் பெயல் பொழிந்த ஏம வைகறை,**
**பல்லோர் உவந்த உவகை எல்லாம்**
**என்னுள் பெய் தந்தற்றே..."** (அகநா.42:5-12)

என்பது உணர்த்தும். இதனுள் இடம்பெறும் பாலைப் புனைவு 'கோடை நீடிய பைது அறு காலை' என்பதால் தெளிவுபெறும்..

தோழி வரைவுகடாவும் கூற்றில் தலைவன் குறியிடத்துக்கு வந்து செல்வதால் ஏற்படும் ஏதங்கள் குறிக்கப்படும். தலைவன் வரும் வழியில் உள்ள இடர்ப்பாடுகள் சுட்டப்பெறும். இதன் அடிப்படையில் குறிஞ்சியுள் பாலை மயங்குவதான திணை மயக்கத்துள் களவில் தலைவியைக் காண வரும் தலைவன் பாலை நிலத்தைக் கடந்து வருபவனாகக் குறிக்கப்படுகின்றான். இதனை,

**"எண் அரும் பிறங்கல் மான்அதர் மயங்காது**
**மின்னுவிடச் சிறிய ஒதுங்கி ... ...**
**... ... ... ...**
**நெறிகெட விலங்கிய நீயிர், இச்சுரம்,**
**அறிதலும் அறிதிரோ? என்னுநர்ப் பெறினே"**(அகநா.8:13-14,17-18)

என்பர் பெருங்குன்றூர்க்கிழார், அல்லகுறிபட்டு நீங்கிச் செல்லும் தலைமகன் கூற்றில், தலைவன் பாலை வழியில் வருவதை,

**“பெறல் அருங்குரையாள் என்னாய், வைகலும்,**

**இன்னா அருஞ்சுரம் நீந்தி நீயே**

**என்னை இன்னற் படுத்தனை....”** (அகநா. 212 : 10-12)

என்று குறிப்பர் பரணர். இதனால் குறிஞ்சித் திணைப் பாடல்களில் தலைவன் குறியிடத்திற்குப் பாலையைக் கடந்து வருவதாகப் படைக்கப்படுவதும் அவ்வளவில் குறிஞ்சித் திணையுள் பாலைநிலப் புனைவு திணை மயக்கமாய் இடம் பெறுவதும் உணரப்படும். தோழி வரைவு மலிந்த கூற்றில், 'நல்ல சொற்களைக் கூறி அவற்றைக் கேட்டு, தலைவனோடு கூடிப்போதலே செய்யத் தக்கது என அவர் உணர்வதற்கு முன்னரே யான் உணர்ந்தேன்' என்று குறிக்கின்றாள். இதனுள் உடன்போக்கு செல்வதற்கான பாலை நிலப் புனைவு கூறப்படுகிறது. இதனை,

**“அவ் விளிம்பு உரீஇய கொடுஞ்சிலை மறவர்**

**வை வார் வாளி விறற் பகை பேணார்,**

**மாறு நின்று எதிர்ந்த ஆறு செல் வம்பலர்**

**உவல் இடு பதுக்கை ஊரின் தோன்றும்**

**கல் உயர் நனந்தலை, நல்ல கூறி,**

**புணர்ந்து உடன் போதல் பொருள் என**

**உணர்ந்தேன் மன்ற, அவர் உணரா ஊங்கே”** (குறுந்.297)

என்னும் பாடலுள் காணமுடியும்.

இதனுள் குறிஞ்சியின் பாடுபொருளுடன் பாலையின் முதல், கரு மயங்குவது பெறப்படுகின்றது. இத்திணை மயக்கத்தை "பாலை நிலத்துக் கொடிய வழிகளும், தலைவனுடன் உடன் போக்கில் புணர்ந்துடன் செல்லுங்கால் இனியவாகும் எனத் தலைவிக்குக் கூறினாள். இடைச்சுரத்துத் தலைவியோடு செல்லும் போது, தமர்வரின் ஆணையிட்டுக் கூறுதலும், வரைந்து கொள்வல் என்று கூறுதலும் நல்ல கூறுகளாகும்"(8) என்று விளக்குவர்.

**குறிஞ்சியுள் மருதம்**

குறிஞ்சித்திணைப் பகுப்பில் குறிஞ்சிக்குரிய உரிப்பொருளுடன் மருத நிலப் புனைவு திணை மயக்கமாக இடம் பெறுவதைக் காண முடிகிறது.

தோழி தலைமகன் சிறைப்புறத்தானாகத் தலைமகளுக்குச் சொல்லும் குறிஞ்சித் திணையின் கூற்றில் குறிக்கப்படும் குறிஞ்சி நிலம், வயல் சூழ்ந்த நிலமாகக் குறிக்கப்படுகிறது. இதனை,

> **"அகல் வயற் படப்பை அவன் ஊர் வினவி,**
> **சென்மோ வாழி - தோழி!** ... ...
> ... ... ... ...
> **வான்தோய் மாமலைக் கிழவனை..."** (நற். 365: 4-5,8)

என்னும் பாடல் அடிகள் உணர்த்தும். இதனுள் 'மலை கிழவோன்' என்பதால் குறிஞ்சிநிலமும், 'அகல் வயல் அவன் ஊர்' என்பதனால் குறிஞ்சி நிலத்தைச் சார்ந்த மருத நிலமும் பெறப்படும். இங்கு குறிஞ்சியுள் அகல்வயல் எனும் மருதப் புனைவு மயங்குகின்றது.

குறிஞ்சித் திணையின் தோழி கூற்றுப் பாடலில், குறிஞ்சி நில மக்கள் திணைக் கதிரை போரிட்டு அடிக்கும் பாறை குறிக்கப்படுகிறது. குறிஞ்சியின் பாறையைக் குறிக்குமிடத்து மருத நிலத்துள் உழவர்கள் நெல் அடிக்கும் களமும் திணை மயக்கமாகக் கூறப்படுகிறது. இதனை

**"வேங்கைக் கண்ணியர் எருதுஎறி களமர்**

**நிலம்கண்டன்ன அகன்கண் பாசறை**

**மென் திணை நெடும்போர் புரிமார்"** (நற்.125: 9,11)

என்னும் அடிகள் உணர்த்தும். இதனுள் 'எருது எறி களமர்' என மருதநிலமும் அவற்றின் கருப்பொருளும் திணைமயக்கமாகக் கூறப்படுகின்றன. தலைவன் சிறைப்புறமாகத் தலைவிக்குக் கூறுவாளாய்த் தோழி கூறும் குறிஞ்சித் திணைப் பாடலில், குறிஞ்சி நிலத்துள் பன்றி கிளறிய இடத்தில் கோரை முளைத்திருக்கும் காட்சி கூறப்படுகிறது. இவ்விடத்து, மருத நிலத்துள் உழுது விதைத்து நெற்பயிர் முளைத்திருக்கும் மருதப் புனைவும் திணை மயக்கமாகக் கூறப்படுகிறது. இதனை,

**"கேழல் உழுதெனக் கிளர்ந்த எருவை**

**விளைந்த செறுவின் தோன்றும் நாடன்"** (ஐங். 269; 1-2)

என்பதால் அறிய முடியும். இதனுள் இடம்பெறும் மருதப்புனைவு, 'செறு' என்பதால் பெறப்படும். தோழி வரைவு மலிந்து சொல்லிய கூற்றில் குறிஞ்சி நிலத்துக் கூதளஞ் செடிகள் குறிக்கப்படுகின்றன. இதனைக் குறிக்குமிடத்து மருத நிலப் பகுதியில் ஆறு பாயும் இடத்தில், புதரில் அமர்ந்திருக்கும் நாரையும் குறிக்கப்படுகிறது. இவ்வாறு குறிஞ்சியுள் மருதம் மயங்குவதை,

**“யாறு சேர்ந்தன்ன ஊறு நீர்ப் படாஅர்ப்**

**பைம்புதல் நளிசினைக் குருகு இருந்தன்ன**

**வண்பிணி அவிழ்ந்த வெண் கூதளத்து”** (அகநா.178:7-9)

என்னும் அடிகளால் உணரமுடியும். இவற்றால் குறிஞ்சி நிலக் காட்சிகள் மருத நிலக் காட்சிகளுடன் இயைபு படுத்திக் கூறப்படும்போது குறிஞ்சித் திணையுள் மருத நிலப் புனைவு மயங்கும் என்பது பெறப்படும்.

தலைவன் வரைவொடு வருதலைக் குறிப்பிடும் தோழி கூற்றான குறிஞ்சியின் பாடுபொருளில், வரைவால் எய்திய மகிழ்ச்சி சுட்டப்படுகிறது. இங்கு மருத நிலத்து நெற்பயிர்கள் மழையின்றி வாடிய போது அப்பயிர்களுக்கு இரவில் மழை பெய்தாற்போல அமைந்தது என்று மருதப் புனைவு திணைமயக்கமாகக் கூறப்படுகிறது. இம்மயக்கம்,

**“வந்தனன்; வாழி- தோழி! - உலகம்**

**கயம் கண் அற்ற பைது அறு காலை,**

**பீளொடு திரங்கிய நெல்லிற்கு**

**நள்ளென் யாமத்து மழை பொழிந்தாங்கே”** (நற். 22: 8-11)

என்னும் அடியால் உணரப்படுகிறது. இதில் பின்னின்ற தலைமகன் தலைவியை அடைதற்கு இயலா நிலையினைக் குறிக்கின்றான். இக்குறிஞ்சிப் பாடுபொருளில் மருத நிலத்து ஊர், பகைவர்களால் அடைதற்கு இயலாத் தன்மையில் அமைவது குறிக்கப்படுகிறது. இங்கு, குறிஞ்சியுள் மருதம் மயங்குவதை,

**“வண்டு மூசு நெய்தல் நெல்லிடை மலரும்**

**அரியல் அம் கழனி ஆர்க்காடுஅன்ன**

**காமர் பணைத் தோள் நலம் வீறு எய்திய**

**வலை மான் மழைக்கண் குறுமகள்**

**சின்மொழித் துவர்வாய் நகைக்கு மகிழ்ந்தோயே!"**(நற்.190: 5-9)

என்னும் அடிகள் குறிக்கின்றன. இயற்கைப் புணர்ச்சியின் பின், தலைவியை அவளின் சுற்றத்தாருடன் காண்கிறான் தலைவன், தலைவியைப் பெற்று வளர்த்த அவளின் தாய் மிகச் சிறந்த செல்வத்தைப் பெற வேண்டும் என வாழ்த்துகிறான். குறிஞ்சித் திணைக்குரிய இப்பாடுபொருளில் தலைவியரின் தாயர் மருதநிலம் போன்று சிறப்புப் பெற வேண்டுமென மருத நிலப்புனைவு திணை மயக்கமாகக் குறிக்கப்படுகிறது. இதனை,

**"துயரம் உறீஇயினள் எம்மே; அகல்வயல்**

**அரிவனர் அரிந்தும் தருவனர்ப் பெற்றும்**

**தண்சேறு தாஅய், மதனுடை நோன்தாள்**

**கண்போல் நெய்தல் போர்வில் பூக்கும்**

**திண் தேர்ப் பொறையன் தொண்டி**

**தன் திறம் பெறுக, இவள் ஈன்ற தாயே!"** (நற்.8: 5-10)

என்பது உணர்த்தும்.

தலைவன் வரைவிற்கு வாராது இருப்பவன் அல்லன் என, இயற்பட மொழியும் குறிஞ்சித் திணையின் பாடுபொருளில், மருத நிலத்துள் நிழல் மிக்க குளத்துக் குவளை வெம்பி விடாது இருக்கும். அதே போன்று தலைவனும் வரைவிற்கு வாராது இருப்பவன் அல்லன். வரையும்

தன்மையுடையவன் என்று மருத நிலப் புனைவும் திணை மயக்கமாகக் கூறப்படுகிறது. இதனை,

**"வாராது அமைகுவன் அல்லன் மலை நாடன்**

**ஈரத்துள் இன்னவை தோன்றின் நிழற் கயத்து**

**நீருள் குவளை வெந்தற்று"** (கலித்.41 : 29-31)

என்னும் அடிகள் உணர்த்தும். இதனுள் கயம், குவளை என்று மருதப் புனைவு மயக்கமாகக் குறிக்கப்படுகிறது. இவற்றால் குறிஞ்சித் திணைப் பாடல்களில் மருத நிலச் செய்திகள் மயங்கும் திறம் உணரப்படும்.

**குறிஞ்சியுள் நெய்தல்**

குறிஞ்சியின் உரிப்பொருளை உடைய குறிஞ்சித் திணைப் பாடல்களில் நெய்தல் திணையின் நிலம் மற்றும் கருப்பொருட் புனைவுகள் திணை மயக்கமாகக் காணப்படுகின்றன.

தலைவனை வரைவு கடாவும் தோழி ஊரில் எழுந்த அலரைக் குறிக்கின்றாள். இக்கூற்றுள் புணர்ச்சி நிகழ்ந்த இடமாக நெய்தல் நிலம் குறிக்கப்படுகின்றது. இத்திணை மயக்கத்தை,

**"பனைத் தலைக் கருக்குடை நெடுமடல் குருத்தொடுமாய,**

**கடுவளி தொகுத்த நெடுவெண் குப்பைக்**

**கணம் கொள் சிமைய உணங்கும் கானல்,**

**அழிதலை வீசிய அயிர்ச்சேற்று அருவிக்**

**கூழை பெய் எக்கர் குழீஇய பதுக்கை**

**புலர் பதம் கொள்ளா அளவை,**

**அலர் எழுந்தன்று, இவ்அழுங்கல் ஊரே"** (குறுந்.372)

என்பர் விற்றூற்றுமூதெயினனார். இங்கு கானல், எக்கர், பனை என்னும் நெய்தற்குரிய நிலம் மற்றும் கருப்பொருட் புனைவுகள் குறிஞ்சியின் பாடுபொருளுடன் மயங்குவது விளங்கும்.

இரவுக்குறி மறுத்துரைக்கும் தோழியின் கூற்றில், நெய்தல் நிலம் தலைவனுக்குரிய நிலப் புனைவாகக் குறிக்கப்பட்ட குறிஞ்சியுள் மயங்குகிறது. இதனை,

**"செறுவர்க்கு உவகை ஆக, தெறுவர,**
**ஈங்கனம் வருபவோ? தேம்பாய் துறைவ!**
**சிறுநா ஒண்மணி விளரி ஆர்ப்பக்**
**கடுமா நெடுந்தேர் நேமி போகிய**
**இருங்கழி நெய்தல் போல,**
**வருந்தினள் அளியள்-நீ பிரிந்திசினோளே."** (குறுந்.336)

என்று இயற்றுவர் குன்றியனார். இங்கு இருங்கழி எனும் நெய்தல் நிலப் பகுதியும், துறைவ, விளரி, நெய்தல் எனும் நெய்தல் கருப்பொருட்களும் குறிஞ்சியுள் மயங்குவது உணரப்படும்.

தலைவன் தோழியிற் கூட்டம் கூடிப் பிரிகின்றான். அவனுக்குத் தோழி கூறும் கூற்றைப் படைக்கும் வடம வண்ணக்கன் பேரி சாத்தனார் தலைவிக்குரிய நிலத்தையும் குறியிடத்தையும் நெய்தலாகப் படைத்து குறிஞ்சியுள் நெய்தல் மயங்கச் செய்கின்றார். இதனை,

**"இவளே, நின் சொற்கொண்ட என்சொற் தேறி,**
**பசுநனை ஞாழற் பல்சினை ஒரு சிறைப்**

**புதுநலன் இழந்த புலம்புமார் உடையள்;**

**உதுக்காண் தெய்ய; உள்ளல் வேண்டும்**

**நிலவும் இருளும் போலப் புலவுத் திரைக்**

**கடலும் கானலும் தோன்றும்**

***மடல் தாழ் பெண்ணை எம் சிறுநல் ஊரே"*** (குறுந். 81)

என்னும் பாடல் உணர்த்தும். . இதனுள் 'பசு நனை ஞாழற் பல்சினை ஒரு சிறைப் புதுநலன் இழந்த' என்பதால் குறியிடம் நெய்தலாகக் குறிக்கப்படுவதும். கடலும் கானலும் தோன்றும் மடல் தாழ் பெண்னை எம் சிறு நல் ஊரே, என்பதால் தலைவியின் ஊர் நெய்தல் நிலப்பகுதி என்பதும் விளங்கும். இதனால் தலைவியின் ஊர் மற்றும் குறியிடப் பகுதியாக நெய்தலின் நிலப் புனைவு குறிஞ்சியுள் மயங்குவது புலனாகும். இதனுள் காணப்படும் திணைமயக்கத்தை, "குறுந்தொகை 81 ஆம் பாடலில் இடம் பெறும், கடல், கானல், பெண்ணே, ஞாழல், போன்ற நெய்தல் நிலக் கருப் பொருள்கள் இருப்பதால் இப்பாடலின் தலைவி நெய்தல் நிலத்தவள் என்று தெரிகின்றது. இப்பாடலின் உரிப்பொருள் புணர்தலும், புணர்தலின் நிமித்தமுமாக அமைந்திருப்பதால் குறுந்தொகைப் பதிப்பாசிரியர்கள் இப்பாடலைக் குறிஞ்சித் திணை எனப் பதிப்பித்தனர்"(9) என்று விளக்குவர். இவற்றால் நெய்தற்றிணையின் பின்புலத்தில் அமையும் குறிஞ்சிப் பாடுபொருள் குறிஞ்சியுள் நெய்தல் மயங்கிய திணை மயக்கமாகப் பாடப் பெறும் என்பதும் இத்திணை மயக்கப்பாடல் உரிப்பொருளை நோக்கி, குறிஞ்சி எனக் கொண்டனர் என்பதும் உணரப்படுகின்றது. வரைவிடைப் பிரிவில் தலைவி தோழிக்குக் கூறுவதாக அமைக்கப்படும் குறிஞ்சியின் பாடுபொருளுடன் தலைவி

அற்றியிருக்கும் சூழலை நெய்தல் பகுதியாக அமைத்து குறிஞ்சியுள் நெய்தல் மயங்கச் செய்கிறார் குன்றியனார். இத்திணைமயக்கத்தை,

**“முழவு முதல் அரைய தடவு நிலைப் பெண்ணைக்**
**கொழுமடல் இழைத்த சிறுகோற் குடம்பைக்**
**கருங்கால் அன்றிற் காமர் கடுஞ்சூல்**
**வயவுப் பெடை அகவும் பானாட்கங்குல்,**
**............ ............... ............... ....................**
**துயில் துறந்தனவால் - தோழி - என் கண்ணே”**

(குறுந்.301:1-4, 8)

என்னும் பாடலுள் காணமுடிகின்றது. இதனுள் பெண்ணை, அன்றில் என்று நெய்தல் பரப்பில் உள்ள கருப்பொருட் புனைவுகள் திணை மயக்கமாகக் கூறப்படுகின்றன.

மழைமேகத்தைக் குறிக்கும் குறிஞ்சியின் பாடுபொருளை உடைய பாடல்களில் அம்மழை மேகம் நீரை முகந்து கொண்ட கடற்பரப்பும் கூறப்படுகிறது. இதனை,

**“பெருங்கடல் முகந்த இருங்கிளைக் கொண்மூ”** (அகநா.188 :1)
**“குண கடல் முகந்த கொள்ளை வானம்”** (அகநா.278 :1)
**“நிறை இரும்பௌவம் குறைபட முகந்து”** (குறிஞ்சிப்.47)

என்னும் அடிகள் உணர்த்தும்.

தலைவனை வரைவு கடாவும் தோழி தலைவியின் துயரை எடுத்துரைக்கின்றாள். தலைவி தனது துயரை மறைத்த போதும்

கண்ணீரைத் தடுத்து நிறுத்தும் ஆற்றல் இன்றி அழுத நிலையைச் சுட்டுகின்றாள். இக்கூற்றுள் தலைவி கண்ணீர் சிந்தியதைக் குறிக்குமிடத்து நெய்தல் நிலப் புனைவைத் திணை மயக்கமாகப் படைக்கிறார் கணக்காயனார். இதனை,

**"முத்துப்படு பரப்பின் கொற்கை முன் துறைச்**
**சிறு பாசடைய செப்பு ஊர் நெய்தல்**
**தெண்நீர் மலரின் தொலைந்த**
**கண்ணே காமம் கரப்பு அரியவ்வே"** (நற்.23; 6-9)

என்னும் பாடல் அடிகள் விளக்கும். இதனுள் முத்துப்படுபரப்பு, துறை, நெய்தல் என்று நெய்தலின் நிலப் புனைவு திணைமயக்கமாக இடம்பெறுகிறது. தலைவி உள்ளம் உருகி வருந்துவதைக் கூறி வரைவு கடாவும் தோழியின் கூற்றில் உள்ளம் உருகுதற்கு, நெய்தல் நிலத்துள் உள்ள உப்புக்குவியல் மழை பெய்யும் நிலையில் உருகும் காட்சியைத் திணை மயக்கமாகக் கூறுகின்றார் நல்லந்துவனார். இதனை,

**"... ... ... புணர்திரைக்**
**கடல் விளை அமுதம் பெயற்கு ஏற்றாஅங்கு**
**உருகி உகுதல் அஞ்சுவல் ... ... "** (நற்.88: 3-5)

என்னும் அடிகள் விளக்கும். இங்கு புணர்திரை, கடல்விளை உப்பு என்பன மயக்கமாக இடம்பெறுகின்றன. குறை மறுக்கப்பட்ட தலைமகன் தன்னெஞ்சிற்குக் கூறும் கூற்றில், தலைவனின் உடல் நின்று உள்ளம் அழிவது குறிக்கப்படுகிறது. இச்செய்தியுள் சகடம் நின்று உப்பு அழியும்

நெய்தல் நிலக் காட்சியைத் திணை மயக்கமாகப் படைக்கிறார் பரணர், இதனை,

**" . . .  . . .  நீ வெய்துற்றனை**
**இருங்கரை நின்ற உப்பு ஒய் சகடம்**
**பெரும் பெயல் தலைய வீஇந்தாங்கு...."** (குறுந்.165 : 2-4)

என்னும் அடிகள் குறிக்கும். இதனுள் இருங்கரை உப்பு ஒய்சகடம் என்பன மயங்குகின்றன. வரைவு மறுக்கப்பட்ட தலைமகன் பொருள் ஈட்டி வர எண்ணுகின்றான். தலைவனின் இக்கூற்றில் நெய்தல் நில அன்னம் இமயத்து வாழும் தன் பார்ப்புகளுக்கு இரையினைத் தேடித்தரும் நிகழ்வைத் திணைமயக்க நெறியால் குறிக்கின்றார் பரணர். இதனை,

**"நிலம்தாழ் மருங்கின் தெண் கடல் மேய்ந்த**
**விலங்குமென் தூவிச் செங்கால் அன்னம்,**
**பொன்படு நெடுங்கோட்டு இமயத்து உச்சி**
**வான் அர மகளிர்க்கு மேவல் ஆகும்**
**வளராப் பார்ப்பிற்கு அல்கு இரை ஒய்யும்**
**அசைவு இல் நோன் பறை போல, செலவர**
**வருந்தினை - வாழி! என் உள்ளம்!"** (நற். 356: 1-7)

என்னும் பாடல் அடிகளுள் காணமுடியும். இங்கு தெளிகடல், அன்னம் என்பன திணைமயக்கமாக இடம்பெறுகின்றன. தலைமகன் பாங்கற்கு உரைத்த கூற்றில் தலைவியின் நெற்றிக்கு நெய்தல் நிலச் சூழலில் தோன்றும் திங்களைக் கூறுகின்றார் கோப்பெருஞ்சோழனார். இதனை,

**"மாக்கடல் நடுவண் எண்நாள் பக்கத்துப்**

**பசுவெண் திங்கள் தோன்றியாங்குக்**

**கதுப்பு அயல் விளங்கும் சிறுநுதல்"** (குறுந்.129:3-5)

என்னும் அடிகள் விளக்கும். இதனுள், மாக்கடல் என்பது திணைமயக்கமாக இடம்பெறுகிறது. குறிஞ்சித் திணைக்குரிய தலைவியின் கூற்றில் குறிஞ்சி நிலத்து அருவியினைக் குறிக்குமிடத்து நெய்தல் நிலத்துள் காட்சி தரும் நிலவினைக் குறிக்கிறார் மதுரை வேளாதத்தனார். இதனை,

**"எழுதரு மதியம் கடற் கண்டாஅங்கு**

**ஒழுகு வெள் அருவி ஓங்கு மலைநாடன்"** (குறுந்.315 :1-2)

என்னும் அடிகள் சுட்டியுரைக்கும். இங்கு கடல் என்பது திணைமயக்கமாகச் சுட்டப்படுகிறது. முன்னிலைப் புறமொழியாகத் தலைமகள் தோழிக்குச் சொல்லும் கூற்றில் குறிஞ்சி நிலத்து அருவியின் பெருக்கத்தைக் குறிக்குமிடத்து நெய்தல் நிலத்து அலைகடலை,

**"நாள் மழை தலைஇய நல் நெடுங்குன்றத்து,**

**மால்கடல் திரையின் இழிதரும் அருவி"** (நற்.17:1-2)

என்று திணைமயக்கமாகக் குறிக்கின்றார் நொச்சி நியமங்கிழார். வரைவுகடாவும் தோழியின் கூற்றில் திணைப் பயிர்கள் முற்றிய நிலையில் காணப்படும் தோற்றத்தை நெய்தல் கடல்பெயர்ந்து அமைந்தால் போலக் காணப்படுவதாகக் குறிப்பர் கொற்றங் கொற்றனார். இதனுள் நெய்தல் நிலம் திணை மயக்கமாகக் கூறப்படுவதை,

***"......... ........ .......... விரிதிரைக்***

***கடல் பெயர்ந்தனைய ஆகி,***

***புலர் பதம் கொண்டன ஏனற் குரலே?"*** (நற். 259: 8-10)

என்பது விளக்கும். கடல் கொள்ளக் கொள்ள குறைவுபடாதது; ஆழம் உடையது; அளத்தற்கு அரியது; கருமையான தோற்றம் உடையது கடலுக்குரிய இத்தன்மைகளின் காரணமாக, இரவுக்குறி வந்து நீங்கும் தலைமகன் தன்னெஞ்சிற்குச் சொல்லும் குறிஞ்சித் திணைப் பாடலில், வானத்தைக் கூற வந்த கபிலர் நெய்தற் கடலையும் திணைமயக்கமாகக் குறிக்கின்றார். இதனை,

***"கொளக் குறை படாஅக் கோடு வளர் குட்டத்து***

***அளப்பு அரிது ஆகிய குவை இருந்தோன்றல்,***

***கடல் கண்டன்ன மாக விசும்பின்"*** (அகநா.162: 1-3)

என்பது உணர்த்தும். இங்கு நெய்தல் நிலத்தன்மைகள் திணைமயக்கமாக அமைகின்றன. இரவுக்குறி வந்து நீங்கும் தலைமகன் மிக்க இருளிலும் தலைவி வந்து செல்வதை வியந்து கூறுகின்றான். இக்குறிஞ்சித் திணையின் பாடுபொருளில், இருளின் மிகுதியை உணர்த்துவதற்கு நெய்தல் நிலப் புனைவைத் திணை மயக்கமாகக் கூறுகின்றார் பரணர். இதனை,

***"கடல் மீன் துஞ்சும் நள்ளென் யாமத்து,***

***உருவுகிளர் ஓவினைப் பொலிந்த பாவை"*** (அகநா. 142 : 20-21)

என்னும் அடிகள் விளக்கும். இதனுள் கடல்மீன் என்பது திணைமயக்கமாக இடம்பெறுகிறது.

அல்ல குறிப்பட்டு மீளும் தலைமகன் தன்னெஞ்சிற்குக் கூறும் கூற்றில் தலைவிக்குத் தொடர்ந்து தூதனுப்ப வேண்டும் என்கிறான். இக்குறிஞ்சித் திணைக் கூற்றில் தொடர்ந்தமையும் தன்மைக்கு நெய்தற் கடலலைகள் தொடர்ந்து வரும் இயல்பு கூறப்படுகிறது. இதனை மதுரைக் கணக்காயனார்,

"... ... பொருள்மலி பாக்கத்து

வழங்கல் ஆனாப் பெருந்துறை

முழங்கு இரு முந்நீர்த் திரையினும் பலவே !"(அகநா.338:19-21)

என்று திணை மயக்கமாகக் குறிக்கின்றார். இரவுக்குறி வந்து நீங்கும் தலைமகன் தன்னெஞ்சிற்குக் கூறும் கூற்றில் பிண்டன் என்பானைக் குறிக்குமிடத்து நெய்தல் நிலச் செய்தியினைத் திணை மயக்கமாகப் படைப்பர் பரணர். இதனை,

"இரங்குநீர்ப் பரப்பின் கானல்அம் பெருந்துறை,

தனம்தரு நன்கலம் சிதையத் தாக்கும்

சிறுவெள் இறவின் குப்பை அன்ன

உறுபகை தருஉம் மொய்ம் மூசு பிண்டன்" (அகநா.152:6-9)

என்னும் அடிகள் உணர்த்தும்.

இயற்கைப் புணர்ச்சி புணர்ந்த தலைமகன் பிரிவச்சமும் வன்புறையும் கூறுவதாக அமையும் குறிஞ்சித் திணையின் பாடுபொருளில் நெய்தல் திணையின் நிலப் புனைவு,

**"யானே, குறுங்கால் அன்னம் குவவு மணற் சேக்கும்**

**கடல் சூழ் மண்டிலம் பெறினும்,**

**விடல் சூழலின் யான், நின்னுடை நட்பே"**(குறுந்.300:6-8)

என்று திணை மயக்கமாக இடம் பெறுகிறது.

இவற்றால் குறிஞ்சியின் பாடுபொருளை நெய்தற் சூழலில் அமைக்குமிடத்தும், குறிஞ்சியின் பாடுபொருளில் நெய்தலைப் பாடுதிறன் அடிப்படையில் குறிக்கப்படும்பொழுதும், குறிஞ்சியுள் நெய்தலின் நிலம் மற்றும் கருப்பொருட் புனைவுகள் திணை மயக்கமாக மயங்குகின்றன என்பது தெளிவு பெறும்.

**பாலையுள் முல்லை**

பாலை எனும் திணைப் பகுப்பை உடைய பாடல்களில் பாலையின் பாடுபொருளில் முல்லைத் திணையின் நிலப் புனைவும், கருப்பொருட் செய்தியும் மயங்குவதைக் காணமுடிகின்றது.

தலைவியை உடன் போக்கில் கொண்டு செல்லும் தலைமகன் தலைவிக்குத் தனது ஊர் அருகில் இருப்பதைக் குறிக்கின்றான். இக்கூற்றைப் படைக்கும் ஆவூர்க் காவிதிகள் சாதேவனார், தலைவன் சுட்டும் ஊரை முல்லை நிலத்து ஊராகப் படைத்து 'பாலையுள் முல்லை' மயங்கச் செய்கின்றார். இதனை,

**"ஏகுமதி - மடந்தை! — எல்லின்று பொழுதே**

**வேய்பயில் இறும்பில் கோவலர் யாத்த**

**ஆ பூண் தெண்மணி இயம்பும்,**

ஈ-காண் தோன்றும், எம் சிறு நல் ஊரே." (நற்.264: 6-9)

என்னும் அடிகள் விளக்கும். இதனுள் முல்லை நிலம் இறும்பில் என்றும் அதன் கருப்பொருள் கோவலர், ஆ, என்றும் குறிக்கப்படுகின்றது.

**பாலையுள் குறிஞ்சி**

பாலைத்திணைப் பகுப்பில் பாலைத் திணையின் உரியுடன் குறிஞ்சித்திணையின் நிலம் மற்றும் கருப்பொருட் புனைவுகள் மயங்குவதைக் காணமுடிகின்றது. மகட்போக்கிய செவிலித் தாயின் கூற்றைப் படைக்கும் கயமனார் தலைவியைக் குறிஞ்சி நிலத்தவளாகப் படைத்து பாலையுள் குறிஞ்சி நிலம் மயங்கச் செய்கின்றார். இத்திணை மயக்கத்தை,

**"ஆய் சுனைப் பலவின் மேய் கலை உதிர்த்த**
**துய்த்தலை வெண்காழ் பெறூஉம்**
**கல்கெழு சிறுகுடிக் கானவன் மகளே"** (அகநா.7: 20-22)

என்னும் பாடலடிகள் உணர்த்தும். இதனால் பாலைப் பொருளில் குறிஞ்சி நிலப்புனைவு மயங்குதல் பெறப்படும். பிரிவு உணர்த்தப்பட்ட தோழி தலைமகற்குக் கூறுவதாகப் பாடப்பெறும் பாலையின் பாடுபொருளுடன் தலைவன் குறிஞ்சி நிலத்தவனாகக் குறிக்கப்பட்டு திணைமயங்குவதைக் காணமுடிகின்றது. இதனை,

**"அவ்வரை இறக்குவை ஆயின்**
**மைவரை நாட - வருந்துவள் பெரிதே"** (ஐங்.301: 3-4)

என்பது சுட்டும். இங்கு மயங்கும் குறிஞ்சி, 'மைவரை நாட' என்பதால்

உணரப்படுகின்றது. 'பொருள்வயிற் பிரிவல்' என்ற தலைமகற்குக் கூறும் கூற்றில் குறிஞ்சி மயங்குவதை,

**"முறுவல் காண்டலின் இனிதோ**

**இறுவரை நாட! - நீ இறந்து செய் பொருளே?"**(ஐங்.309:4-5)

என்னும் அடிகள் சுட்டும். இவற்றால் குறிஞ்சிநில மக்களின் பாலையொழுக்கம் பாலையுள் குறிஞ்சி மயங்கிய திணைமயக்கமாகப் படைக்கப்பெறுவது விளங்கும்.

**பாலையுள் மருதம்**

பாலைத்திணைப் பகுப்பில் பாலையுள் மருதத் திணையின் நிலமும் கருப்பொருள் மயங்குவதைக் காண முடிகின்றது. களவின் வழி வந்த கற்பு வாழ்வில் தலைவன் பொருள்வயிற் பிரிய எண்ணினான். அத்தலைவனைச் செலவழுங்குவிக்கும் தோழியின் பாலைத் திணைக் கூற்றில் தலைவி தனது செல்வ வளமிக்க மருத நிலத்து ஊரை விட்டுவிட்டுத் தலைவனுடன் உடன்போக்கில் வந்த செய்தி குறிக்கப்படுகிறது. இத்திணை மயக்கத்தை,

**"விண்டுப் புரையும் புணர்நிலை நெடுங்கூட்டுப்**

**பிண்ட நெல்லின் தாய் மனை ஒழிய"** (நற்.26: 3-4)

என்னும் அடிகள் விளக்கும். இதனுள் மருதநிலப் புனைவு நெடுங்கூடு, நெல் என்று பாலைப் பாடுபொருளுடன் மயங்குவது உணரப்படும்.

தலைவனைச் செலவழுங்குவிக்கும் தோழி, 'நீ பிரிந்தால் தலைவி இறந்து விடுவாள் என்பதைக் குறிக்கின்றாள். இப்பாலைத் திணையுள்,

'தலைவி விரைவில் இறந்து விடுவாள்' என்பதைக் குறிக்க மருத நிலப் பொய்கையில் உள்ள மலர் நீரின்றி ஒரு நாள் இரவும் வாழாது அழிவுறும் நிகழ்வு திணை மயக்கமாகக் கூறப்படுகிறது. இத்திணை மயக்கத்தை,

**"ஓர் இரா வைகலுள், தாமரைப் பொய்கையுள்**

**நீர் நீத்த மலர் போல, நீ நீப்பின், வாழ்வாளோ?"** (கலித்.5: 14-15)

என்னும் அடிகள் உணர்த்தும், உடன்போக்கிற்கு உடன்பட்ட தலைவி, காமம் பெருகிய வழி, தனக்குக் காவலாக இருந்த நாணம் தற்போது உடன்போக்கிற்கு உடன்பட்டு நீங்கிச் சென்றதைக் குறிக்கின்றாள். இப்பாலைப் பாடலுள் மருத நிலத்துள் வெள்ளம் பெருகிய வழி கரும்பினால் ஆன அணை உடைபட்டுச் செல்லும் நிகழ்வு திணை மயக்கமாகக் கூறப்படுகிறது. இதனை,

**"வான்பூங் கரும்பின் ஓங்கு மணற் சிறுசிறை**

**தீம்புனல் நெரிதர வீந்து உக்காஅங்கு,**

**தாங்கும் அளவைத் தாங்கி**

**காமம் நெரிதரக் கைந்நில்லாதே"** (குறுந்.149: 3-6)

என்று குறிப்பர் வெள்ளிவீதியார். இதனுள் இடம்பெறும் மருதப்புனைவு கரும்பு எனும் கருப்பொருளால் உணரப்படும். கிழத்திக்கு உடன்போக்கு உணர்த்திய பாலைத் திணைக் கூற்றில், யானையின் காலடித் தடத்தில் உள்ள நீரைக் குறிக்க மருதநிலத்துள் கரும்பு நடு பாத்தியில் உள்ள நீரைத் திணைமயக்கமாகக் குறிக்கின்றார் பாலை பாடிய பெருங்கடுங்கோ. இதனை,

**“கரும்பு நடு பாத்தி அன்ன,**

**பெருங் களிற்று அடிவழி நிலைஇய நீரே” (குறுந்.262: 7-8)**

என்னும் அடிகள் உணர்த்தும். கரும்பு நடுபாத்தி என்பது மருதப்புனைவாக மயங்குகின்றது. தலைவனின் செலவுக் குறிப்பை அறிந்த தலைமகள், தலைவன் பிரிந்து சென்றால் தனது அழகைப் பசலையும் அலர் மொழியும் அழித்து விடும் என்று வருந்துகின்றாள். பாலைத் திணைக்குரிய இக்கூற்றைப் படைக்கும் மூலங்கீரனார் மருத நிலத்துள் நெற்பயிர்களின் மீது அன்னப் பறவைகள் துயில் கொண்டு அந்நெற்பயிரைச் சிதைக்கும் நிகழ்வைத் திணை மயக்கமாகப் படைக்கின்றார். இதனை,

**“மயிர் நிரைத்தன்ன வார் கோல் வாங்குகதிர்ச்**

**செந்நெல் அம் செறுவின் அன்னம் துஞ்சும்**

**பூக்கெழு படப்பைச் சாய்க் காட்டு அன்ன என்**

**நுதற்கவின் அழிக்கும் பசலையும்,**

**அயலோர் தூற்றும் அம்பலும், அளித்தே”** (நற்.73: 7-11)

என்னும் அடிகளின் வழிக் காணமுடியும். இங்கு இடம்பெறும் மருதப்புனைவு செறு, நெல், அன்னம் என்பதால் புலப்படும். தலைவன் செலவழுங்கிய பாடுபொருளுடன் மருத நிலச் செய்தி செல்வத்தின் நிலையாமையினைக் குறிப்பதற்கு கூறப்படுவது.

**“............. .............. ................. பொருளே,**

**வாடாப் பூவின் பொய்கை நாப்பண்**

**ஓடுமீன் வழியின் கெடுவ; - - - -”** (நற். 16:4-6)

என்பதால் உணரப்படும். இங்கு பொய்கை, மீன் எனபன மருதப் புனைவாக மயங்குகின்றன. இவற்றால் பாலைப் பாடுபொருளில் மருத நிலப் புனைவு மயங்குதல் உணரப்படும்.

**பாலையுள் நெய்தல்**

பாலைப் பாடுபொருளுடன் நெய்தல் மயங்குவதைப் பாலைத் திணைப் பாடல்களுள் காணமுடிகின்றது. பொருள்வயிற் பிரியும் தலைமகனுக்குத் தோழி சொல்லும் பாலைப் பாடுபொருளுடன் தலைவன் நெய்தல் திணைக்குரியவனாய்ப் படைக்கப்படுகின்றான். இதனை,

**"செல்லாய் ஆயினோ நன்றே**
**மெல்லம் புலம்ப! - இவள் அழப் பிரிந்தே"** (ஐங்.302: 3-4)

என்னும் அடிகள் உணர்த்தும். இத்திணை மயக்கம்,

**"நன்று இல, கொண்க! நின் பொருளே**
**பாவை அன்ன நின் துணைப்பிரிந்து வருமே"** (ஐங்.307: 3-4)

என்னும் அடிகளாலும் உணரப்படும். இங்கு மெல்லம் புலம்பன், கொண்க எனும் கருப்பொருட்களால் நெய்தல் புனைவு குறிக்கப்பட்டுள்ளன.

தலைவியை உடன் போக்கில் கொண்டு செல்லும் தலைவனின் கூற்றில் தலைவியை நெய்தல் நிலத்தவளாகப் படைத்துப் பாலையுள் நெய்தல் மயங்கச் செய்கிறார் அம்மூவனார். இதனை,

**"வருந்தாது ஏகுமதி - வால் இழைக் குறுமகள்!**
**இம்மென்பேர் அலர் நும் ஊர்ப் புன்னை**

**வீமலர் உதிர்ந்த தேன்நாறு புலவின்**

**கானல் வார் மணல் மரீஇ,**

**கல் உறச் சிவந்த நின் மெல்லடி உயற்கே!" (நற்.76: 5-9)**

என்னும் அடிகள் விளக்கும். இதனுள் பாலையுள் இடம்பெறும் நெய்தல் புனைவு புன்னை, புலவு, கானல் என்பதால் விளங்கும். இங்கு பாலையுள் நெய்தல் மயங்குகிறது. இதனை, "பாலைத் திணையிற் பாடத் தொடங்கியவர் கிளவித் தலைவியை நெய்தனிலத்தினளாக அமைத்ததனால் இவரது ஆற்றல் பெரிதும் விளங்கும்"(10) என்னும் உரைப்பகுதி உறுதிப்படுத்தும். இத்திணை மயக்கம், "நெய்தல் திணையில் பாலை உரிப்பொருளாகிய உடன்போக்குப் பிரிவை அமைத்துப் பாடியிருக்கும் அருமைப் பாட்டை நுகர்ந்து மகிழ்க"(11) என்பர் ந.சுப்புரெட்டியார்.

மகட்போக்கிய செவிலி கூறுவதாகப் பாடப்பெறும் பாலைப் பாடுபொருளுடன் தலைவி நெய்தல் நிலத்துக்குரியவனாகப் படைக்கப்பட்டு பாலையுள் நெய்தல் மயங்குவதைக் காணமுடிகின்றது. இத்திணை மயக்கத்தை,

***"கழிய காவி குற்றும், கடல***

***வெண்தலைப் புணரி ஆடியும், நன்றே***

***பிரிவு இல் ஆயம் உரியது ஒன்று அயர,***

***இவ் வழிப் படுதலும் ஒல்லாள் - அவ் வழிப்***

***பரல் பாற் படுப்பச் சென்றனள் மாதோ"*** (குறுந்.144: 1-5)

என்னும் அடிகளால் விளங்க முடியும். இதனுள் இடம்பெறும் நெய்தல் நிலப் புனைவு 'கடல்','புணரி' என்று குறிக்கப்படுகின்றது.

பாலை நிலத்தின் பரந்து பட்ட அமைப்பைக் கூற வந்த கல்லாடனார், **"கடல் போல் கானம்"** (அக.நா.199:13) எனவும், காற்று தொடர்ந்து வீசும் என்பதைக் **"கரைமாய் வெண்திரை கடுப்ப"** (அக.நா.199:1) எனவும் நெய்தல் நிலச் செய்தியைக் குறிக்கிறார். பாலை நிலத்து மரமான ஓமையின் அடிப்பகுதியைக் குறிக்குமிடத்து,

> **"இருங்கழி முதலை மேஎந்தோல் அன்ன**
> **கருங்காய் ஓமை** .......... .........." (அகநா.3: 1-2)

என்று நெய்தல் நிலச் செய்தியைக் குறிக்கின்றார் எயினந்தை மகனார் இளங்கீரனார். பாலை நிலப் பரப்பில் முருங்கையின் பூக்கள் உதிர்ந்து கிடக்கும் தன்மையினைக் காட்சிப்படுத்தும் புலவர், நெய்தல் பரப்பு அலைகளால் உண்டான வெண்ணிற நுரைகளுடன் காணப்படும் தன்மையினையும் குறிக்கின்றார். இது,

> **"சுரம் புல்லென்ற ஆற்ற; அலங்கு சினை**
> **நார் இல் முருங்கை நவிரல் வான்பூச்**
> **சூரல் அம் கடு வளி எடுப்ப, ஆருற்று,**
> **உடை திரைப் பிதிர்வின் பொங்கி, முன்**
> **கடல் போல் தோன்றல** ............." (அகநா.1: 15-18)

என்பதால் விளங்கும். இங்கு உடைதிரை, கடல் என்று நெய்தல் நிலம் திணைமயக்கமாகக் குறிக்கப்படுகிறது.

பாலை நிலப்பரப்பில் யானை உறங்கும் தோற்றத்தை நெய்தல் பரப்பில் காணப்படும் அம்பியுடன் ஒப்பிட்டுப் பாடும் புலவர், பாலையுள் நெய்தல் புனைவையும் மயங்கச் செய்கிறார். இதனை,

**"பனை வெளிறு அருந்து பைங்கண் யானை**

**ஒண்சுடர் முதிரா இளங் கதிர் அமையத்து**

**கண்படு பாயல் கை ஒடுங்கு அசை நிலை**

**வாள் வாய்ச் சுறவின் பனித் துறை நீந்தி,**

**நாள் வேட்டு எழுந்த நயன் இல் பரதவர்**

**வைகு கடல் அம்பியின் தோன்றும்**

**மைபடு மா மலை விலங்கிய சுரனே?"** (அகநா.187: 18-24)

என்னும் அடிகள் விளக்கும். இங்கு பனித்துறை, கடல், பரதவர், சுறா, அம்பி, கடல்வேட்டம் என்று நெய்தலின் முதல் கருப்பொருட்கள் திணை மயக்கமாகப் படைக்கப்பெறுகின்றன.

பாலை நிலத்து மூங்கில் மரங்களில் எழுந்த தீச்சுடருக்கு நெய்தல் நிலத்துள் மீன்பிடி படகுகளின் விளக்குகளைத் திணை மயக்க நெறியில் குறிக்கின்றார் மாமூலனார். இதனை,

***"மால்கழை பிசைந்த கால்வாய் கூர்எரி,***

***மீன்கொள் பரதவர் கொடுந்திமில் நளிசுடர்***

***வான்தோய் புணரிமிசைக் கண்டாங்கு,***

**மேவரத் தோன்றும் ... ... "** (அகநா.65: 10-13)

என்னும் அடிகள் உணர்த்தும். இடைச்சுரத்தில் ஒருபாற்படாத தலைவனின் நெஞ்சிற்கு நெய்தல் நிலக் கடல் அலைகள் வருவதும் போவதுமாகவுள்ள நிகழ்வு திணை மயக்கமாகக் கூறப்படுகின்றது. இதனை,

**"இறவொடு வந்து கோதையொடு பெயரும்**

**பெருங்கடல் ஓதம் போல,**

**ஒன்றில் கொள்ளாய், சென்று தரு பொருட்கே"**(அகநா.123: 12-14)

என்று குறிப்பர் காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார். நெய்தல் நில உப்பு பாலை வழியே கொண்டு செல்லப்படும். எனவே பாலை நிலத்தைக் குறிக்கும் புலவர்கள் நெய்தல் நில உப்பு பாலை வழியே செல்வதையும் குறிக்கின்றனர். இந்நிலையில் பாலையுள் நெய்தல் நிலச் செய்தியும் குறிக்கப்படும். இதனை,

**"அணங்குடை முந்நீர் பரந்த செறுவின்**
**உணங்கு திறம் பெயர்ந்த வெண்கல் அமிழ்தம்**
**குடபுல மருங்கின் உய்ம்மார் புள் ஓர்த்துப்**
**படை அமைத்து எழுந்த பெருஞ் செய் ஆடவர்**
**நிரைப் பரப் பொறைய நரைப்புறக் கழுதைக்**
**குறைக் குளம்பு உதைத்த கல்பிறழ் இயவின்,**
**வெஞ்சுரம் போழ்ந்த, அஞ்சுவரு கவலை"** (அகநா.207: 1-7)

என்று குறிப்பர் மதுரை எழுத்தாளன் சேந்தம்பூதனார். இதனுள் இடம் பெறும் நெய்தற் புனைவு, முந்நீர் பரந்த செறு என்பதால் புலப்படும். இவ்வமைப்பில் பாலையுள் நெய்தல் குறிக்கப்படுவதை,

**"........... ............ ............. ஒலி திரைக்**
**கடல் விளை அமிழ்தின் கணம் சால் உமணர்**
**சுனை கொள் தீம் நீர்ச் சோற்று உலைக் கூட்டும்**
**சுரம் ........... ............... ................"** (அகநா.169:5-8)

என்று குறிப்பர் தொண்டியாமூர்ச் சாத்தனார். இவற்றால் பாலைப் பாடுபொருளில் நெய்தல் நிலம் திணை மயக்கமாகக் குறிக்கப் பெறுவது பெறப்படும்.

**மருதத்துள் முல்லை**

மருதம் எனக் குறிக்கப் பெறும் சங்க இலக்கியப் பாக்களுள் மருதத் திணையின் பாடுபொருளுடன் முல்லைத் திணைக்குரிய நிலப்புனைவு மயங்குவது காணப்பெறுகின்றது.

தலைமகள் தன்னைப் புறங் கூறினாள் என்பதைக் கேட்ட காதற் பரத்தை தலைமகனோடு புலந்து கூறுகின்றாள். மருதத் திணைக்குரிய இக்கூற்றைப் படைக்கும் ஓரம்போகியார் தலைவனை முல்லை நிலத்தவனாகப் படைத்து மருதத்துள் முல்லை நிலப்புனைவை மயங்கச் செய்கின்றார். இத்திணை மயக்கத்தை,

> **"பகன்றைக் கண்ணிப் பல்லான் கோவலர்**
> **கரும்பு குணிலா மாங்கனி உதிர்க்கும்**
> **யாணர் ஊர! நின் மனையோள்**
> **யாரையும் புலக்கும்; எம்மை மற்று எவனோ?"** (ஐங்.87)

என்னும் பாடல் உணர்த்தும். இதனுள் கோவலர் என்பதால் முல்லைப் புனைவு இடம்பெறுவது விளங்கும். இதனால் முல்லை நிலத் தலைவனின் மருதவொழுக்கம் மருதத்துள் முல்லை நிலம் மயங்கிய திணை மயக்கமாகப் படைக்கப் பெற்றிருப்பது விளங்கும்.

**மருதத்துள் குறிஞ்சி**

மருதப் பகுப்பில் மருதப்பாடுபொருளுடன் குறிஞ்சியின் நிலம் அதன் கருப்பொருட் கூறுகளுடன் குறிக்கப்படுவது பெறப்படுகிறது. தலைவனின் பரத்தமையொழுக்கத்தால் எழுந்த அலருக்கு வருந்தாத

தலைவி களவுக் காலத்தில் தலைவன் செய்த சூள் மொழிக்கு வருந்துகிறாள். இம்மருதக் கூற்றில் தலைவன் சூளுரைத்த தெய்வம் குறிஞ்சிக்குரியதாகவும், அக்குறிஞ்சி மருத நிலத்தைச் சார்ந்த நிலமாகவும் குறிக்கப்படுகிறது. இதனை,

**"கழனி உழவர் கலி சிறந்து எடுத்த**
**கறங்கு இசை வெரீஇப் பறந்த தோகை**
**அணங்குடை வரைப்பகம் பொலிய வந்து இறுக்கும்**
**திருமணி விளக்கின் அலைவாய்ச்**
**செருமிகு சேஎயொடு உற்ற சூளே"** (அகநா.266: 17-21)

என்று குறிப்பர் பரணர். காதற் பரத்தையின் ஊடலைத் தணிக்க முயலும் தலைவன் குறிஞ்சி நிலக் கடவுளின் மீது சூள் செய்வதைப் பரிபாடல்

**"இவ்வையை யாறு என்ற மாறு என்னை கையால்**
**தலை தொட்டேன் தண்பரங்குன்று"** (பரி.6: 94-95)

என்றுரைக்கின்றது. இவற்றால் மருதப் பாடுபொருளில் தலைவன் சூளுரைக்குமிடத்து குறிஞ்சி நிலப் புனைவு திணை மயக்கமாக இடம் பெறுவது விளங்கும்.

மருதத் திணைப் பாடல்களில் ஆற்றுநீர் குறிக்கப்படும். மருத நிலத்து ஆறு குறிஞ்சியில் பெய்த மழையால் தோற்றம் பெற்று வருவதை மருதப் பாடல்கள் குறிக்கின்றன.

**"பொறை தவிர்பு அசைவிடப் பொழிந்தன்று வானம்;**
**நிலம் மறைவது போல் மலிர் புனல் தலைத்தலைஇ**
**மலைய இனம் கலங்க, மலைய மயில் அகவ,**

**மலை மாசு கழியக் கதழும் அருவி இழியும்**

**மலி நீர் அதர்பல கெழுவு தாழ்வரை,**

... ... ... ...

**மேவிப் பரந்து விரைந்து வினை நந்தத்**

**தாயிற்றே தண்அம்புனல்"** (பரிபா. 6: 2-7,10)

**"மலையின் இழி அருவி மல்கு இணர்ச் சார்ச் சார்க்**

**கரை மரம் சேர்ந்து"** (பரிபா.16: 32-33)

**"வரையார்க்கும் புயல்"** (பரிபா.16:48)

இங்கு பொறை, மலை, வரை, மயில் என்று குறிஞ்சிப்புனைவு குறிக்கப்படுகிறது. இவற்றால் மருதப் பாடல்களில் புனல் நீரைக் குறிக்குமிடத்து குறிஞ்சி நிலச் செய்தியும் திணை மயக்கமாக இடம் பெறுவது பெறப்படும்.

மருத நிலத்தில் மாடுகளை மேய்க்கும் சிறுவர்கள் எருமையின் முதுகில் ஏறிச் செல்வர். இக்காட்சியினைப் புனையுமிடத்து, குறிஞ்சி நிலக் குன்றுகளில் உட்கார்ந்திருக்கும் மந்தியைத் திணை மயக்கமாகக் குறிக்கின்றார் மருதன் இளநாகனார். இதனை,

**"நகுவரப் பணைத்த திரிமருப்பு எருமை**

**மயிர்க்கவின் கொண்ட மாத்தோல் இரும்புறம்**

**சிறு தொழில் மகாஅர் ஏறி சேணோர்க்குத்**

**துறுகல் மந்தியின் தோன்றும்..."** (அகநா.206: 3-6)

என்னும் அடிகள் உணர்த்தும். இங்கு குறிஞ்சிப் புனைவு, 'துறுகல் மந்தி' என்று குறிக்கப்படுகிறது. மகன் வாயிலாக ஊடல் தீரும் தலைமகள், தன் மகன் தந்தையின் மார்பை நோக்கிப் பாய்ந்து சென்றதைக் குறிக்கின்றாள்.

இதனுள் மலையடிவாரத்தை நோக்கிப் பாயும் சிங்கக் குட்டி பற்றிய புனைவு திணைமயக்கமாகக் கூறப்படுகிறது. இதனை,

**"குன்ற இறுவரைக் கோள்மா இவர்ந்தாங்குத்**

**தந்தை வியன் மார்பில் பாய்ந்தான்"** (கலித்.86: 31-32)

என்று சுட்டுகின்றார். இங்கு மயங்கும் குறிஞ்சிச் செய்தியின் வழி ஊடல் தீரும் தலைவியின் ஈடுபாடும் அன்பும் புலப்படுகிறது. இக்குறிஞ்சிப் புனைவு மருதத்தைச் சிறப்பிக்கிறது. இதனை, "அரிக்குட்டி மலைமேற் பாய்ந்தது போல என்று சொல்லுகையினுள் அவளின் ஈடுபாடும், அகமன அன்பும், புலவி நீக்கமும் வெளிப்படக் காணுதும்"[12] என்பர் வ.சு.ப.மாணிக்கனார்.

தலைவன் புனல் விளையாடும் பரத்தையரை அடுத்தடுத்துத் தழுவுவதால் தலைவனின் மார்பில் பூசப் பெற்ற கத்தூரிக் குழம்பு நெகிழ்ந்து அழிகிறது. இந்நிகழ்வினைப் படைக்கும் நல்லழிசியார், குறிஞ்சி நிலத்தில் மூங்கிலால் தாக்கப் பெற்ற தேனடைகள் நெகிழ்ந்து விழும் காட்சியினைத் திணை மயக்கமாகப் படைக்கிறார். இதனை,

**"அடுத்து அடுத்து ஆடுவார்ப் புல்ல குழைந்து**
**வடுப் படு மான் மதச் சாந்து ஆர் அகலத்தான்**
**எடுத்த வேய் எக்கி நூக்கு உயர்பு தாக்கத்**
**தொடுத்த தேன் சோரும் வரை போலும் தோற்றம்"**

(பரி.16: 43-46)

என்னும் அடிகள் உணர்த்தும். இங்கு வரை, தேன், வேய் என்பன குறிஞ்சிப் புனைவாய் மயங்குகின்றன. மருதத் திணைப் பாடலைப் படைக்கும் மிளைக்கந்தனார். இனிய சுவையுடைய நீரைக் குறிப்பதற்குக் குறிஞ்சி நிலச் சுனைநீரைக் குறிக்கின்றார். இதனை,

**"பாரி பறம்பில் பனிச் சுனைத் தெண்ணீர்**

**தைஇத் திங்கள் தண்ணிய தரினும்"** (குறுந்.196:3-5)

என்னும் அடிகள் உணர்த்தும். இங்கு பறம்புமலை, சுனை என்பன குறிஞ்சிப் புனைவாக மயங்குகின்றன.

**மருதத்துள் பாலை**

மருதப் பாடுபொருளுடன் பாலையின் கூறுகள் மயங்குவததை மருதப் பகுப்பில் காணமுடிகின்றது. தலைவியின் ஊடலைத் தீர்க்கும் தலைவன் யாரையும் அறியேன் என்றான். தலைவனின் கூற்றைத் தலைவி பொய்யெனக் கூறினாள். தலைவி கூறும் இம்மருதத் திணையின் கூற்றைப் படைக்குமிடத்து, தலைவன் கூறிய பொய்யுரைக்கு, பாலை நிலத்துள் கொற்றவைக்குப் பேய்கள் நொடி கூறுதலைத் திணை மயக்கமாகப் படைப்பர். இதனை,

**"பெருங்காட்டுக் கொற்றிக்குப் பேய் நொடித்தாங்கு**

**வருந்தல் நின் வஞ்சம் உரைத்து"** (கலித்.89:8-9)

என்னும் அடிகள் உணர்த்தும். இதனால் மருதப் பாடுபொருளில் பாலை நிலப்புனைவு குறிக்கப்படுவதைக் காணமுடியும்.

**மருதத்துள் நெய்தல்**

மருதப் பாடுபொருளுடன் நெய்தலின் நிலப் புனைவு மயங்குவதை மருதத்திணைப் பகுப்பில் காண முடிகின்றது. கிழவற்குப் பாங்காயின வாயில்களுக்குத் தலைவி கூறுவதாக அமைக்கப்படும் மருதப்

பாடுபொருள் நெய்தல் பின்புலத்துடன் நிகழ்வதாக அமைக்கப்பட்டு மருதத்துள் நெய்தல் மயங்குதலைக் காணமுடிகின்றது. இத்திணை மயக்கம்,

**“ஐயவி அன்ன சிறு வீ ஞாழல்**
**செவ்வி மருதின் செம்மலொடு தாஅய்த்**
**துறை அணிந்தன்று, அவர் ஊரே; இறை இறந்து**
**இலங்கு வளை நெகிழ சாஅய்ப்**
**புலம்பு அணிந்தன்று, அவர் மணந்த தோளே”** (குறுந். 50)

என்பதால் பெறப்படும். இதனுள் மயங்கும் நெய்தல் புனைவு ஞாழல், துறை என்பதால் விளங்கும். இதனுள் மருதப் பாடுபொருளுடன் நெய்தல் புனைவு இடம்பெறுவதை, “தலைவன் பரத்தையரோடு ஆடுதலானே நீர்த்துறையில் ஞாழற் பூக்கள் சிதறி அழகு செய்தது. என் தோள்கள் பிரிவாற்றாமையாலே மெலிந்தன என்றவாறு என்று விளக்கும்”(13) உரைப்பகுதியும் குறிக்கும்.

வாயில் மறுக்கும் தோழியின் கூற்றைப் படைக்கும் குன்றியனார், மருத நிலப் பெண்கள் பாசவல் இடித்த உலக்கையினை மருத நிலத்து வயல் வரப்புகளில் வைத்து விட்டு, அம்மருத நிலத்தருகில் உள்ள நெய்தல் நிலப் பகுதிக்குச் சென்று வண்டல் விளையாடுவர் என்பதைக் குறிக்கின்றார். இதனுள் மருதப் பாடுபொருளுடன் நெய்தல் நிலம் மயங்குவது உணரப்படுகிறது. இத்திணைமயக்கத்தை,

**“பாசவல் இடித்த கருங்காழ் உலக்கை**
**ஆய்கதிர் நெல்லின் வரம்பு அணைத் துயிற்றி**
**ஒண்தொடி மகளிர் வண்டல் அயரும்**
**தொண்டி .......... .............. ...........”** (குறுந். 238: 1-4)

என்னும் அடிகள் உணர்த்தும். இதனுள் மருத நிலமும், நெய்தல் நிலமும் கலந்துள்ள நிலப்பகுதி குறிக்கப்படுகிறது. இதனை, "மகளிர் தொண்டியின் கடற்கரைப்பகுதியில் வண்டல் அயர்வர். மருத நிலப்பகுதியில் பாசவல் இடிப்பர். இதனால் மருதம் நெய்தல் மயங்கிய நிலை கூறப்பட்டது"(14) என்பர்.

காமக் கிழத்தியின் கூற்றாக அமையும் மருதப் பாடலைப் படைக்கும் மருதன் இளநாகனார், தலைவன் பல மகளிரைக் கூடும் பரத்தமையொழுக்கம் உடையவன் என்ற செய்தியைக் குறிக்க, வண்டு மருதநிலப் பகுதியில் உள்ள மலர்களையும் அதன் அருகே உள்ள நெய்தல் நிலப் பகுதியில் உள்ள மலர்களையும் ஊதுவதைக் குறிக்கின்றார். இவ்வமைப்பில் மருதப் பாடு பொருளில் நெய்தல் நிலம் மயங்குதல் உணரப்படுகிறது. இதனை,

> **"பொய்கைப் பூப் புதிது உண்ட வரி வண்டு கழிப்பூத்த**
> **நெய்தல் தாது அமர்ந்து ஆடி, பாசடைச் சேப்பினுள்**
> **செய்து இயற்றியது போல வயல் பூத்த தாமரை,**
> **மைதபு, கிளர் கொட்டை மாண் பதிப்படர் தருஉம்"**
>
> (கலித்.74: 1-4)

என்னும் அடிகள் குறிக்கும். வாயில் வேண்டிய தலைமகனுக்குத் தோழி கூறும் கூற்றில் தலைவியின் அழகைக் குறிக்குமிடத்து எவ்வி என்பானின் நீழல் என்னும் ஊரைக் குறிப்பிடுவர் குடவாயிற் கீரத்தனார். இப்பாடலுள் மருத நிலப் புனைவுடன் அதனைச் சார்ந்த நெய்தல் நிலமும் புனையப்படுகிறது.

"தாழ் சினை மருதம் தகை பெறக் கவினிய
நீர் சூழ் வியன்களம் பொலிய, போர் அழித்து,
கள் ஆர் களமர் பகடு தலை மாற்றி,
கடுங் காற்று எறிய, போகிய துரும்பு உடன்
காயல் சிறுதடிக் கண்கெடப் பாய்தலின்,
இருநீர்ப் பரப்பின் பனித் துறைப் பரதவர்
தீம்பொழி வெள் உப்புச் சிதைதலின், சினைஇ,
கழனி உழவரொடு மாறு எதிர்ந்து, மயங்கி,
இருஞ்சேற்று அள்ளல் எறி செருக்கண்டு
நரை மூதாளர் கைபிணி விடுத்து
நனை முதிர் தேறல் நுளையர்க்கு ஈயும்
பொலம்பூண் எவ்வி நீழல் அன்ன,
நலம் பெறு பணைத்தோள். . ." (அகநா.366:1-13)

என்னும் அடிகள் உணர்த்தும். இங்கு இருநீர்ப்பரப்பு, துறை, பரதவர், உப்பு என நெய்தல் மயங்குகிறது. இப்பாடலுள் காணப்படும் திணை மயக்கத்தை, "பனித் துறைப் பரதவரும் கழனி உழவரும் இங்ஙனம் செருச் செய்தற்கிடமாகிய நீழல் என்றமையால் அவ்வூர் நெய்தலும் மருதமும் மயங்கியதாதல் பெற்றாம்"(15) என்பர். இவற்றால் மருதப் பாடல்களில் மருத நிலத்தைச் சார்ந்த நெய்தல் நிலம் திணை மயக்கமாகக் குறிக்கப் பெறும் என்பது விளங்கும்.

தலைவனைப் பரத்தையர் பலர் பற்றியிழுப்பதைக் கூறும் கொற்றனார், நெய்தல் நிலக் காலுள் சென்ற மரக்கலம் கவிழ

அம்மரக்கலத்தைப் பலர் பற்றியிழுக்கும் நெய்தல் நிலச் செய்தியினைத் திணை மயக்கமாகக் கூறுகின்றார். இதனை

**“கால் ஏமுற்ற பை தரு காலை,**

**கடல் மரம் கவிழ்ந்தெனக் கலங்கி, உடன் வீழ்பு,**

**பலர் கொள் பலகை போல**

**வாங்கவாங்க நின்று ஊங்கு அஞர் நிலையே”** (நற்.30: 7-10)

என்னும் அடிகள் விளக்கும். தலைவன் பரத்தையர் பலருடன் பழகிய போதும் நிறைவடையாத மனதையுடையவன் என்பதைக் குறிப்பர் மருதன் இளநாகனார். இப்பாடலுள், ஆற்றுநீர் வந்து சேர்ந்த போதும் நிறைவடையாத நெய்தல் பரப்பு குறிக்கப்படுகின்றது. இத்திணை மயக்கத்தை,

**“மண்டுநீர் ஆரா மலிகடல் போலும் நின்**

**தண்டாப் பரத்தை ... ...** ” (கலித்.73:19-20)

என்னும் அடிகள் உணர்த்தும். தலைவனின் பரத்தையொழுக்கத்தால் தலைவி உள்ளம் உருகி அழிவதைக் குறிக்குமிடத்து, நெய்தல் நிலப்பரப்பில் மழையில் நனைந்த உப்பு உருகி அழிவதைத் திணைமயக்கமாகக் குறிக்கின்றார் மருதன் இளநாகனார். இதனை,

**“............. .............. ............. முன்துறை**

**நெடுவெள் உப்பின் நிரம்பாக் குப்பை**

**பெரும் பெயற்கு உருகியாஅங்கு**

**திருந்து இழை நெகிழ்ந்தன...”** (அகநா.206: 13-16)

என்னும் அடிகள் உணர்த்தும். மருதத் திணைப் பாடல்களில் தவறு செய்வோரைத் தெய்வம் தண்டிக்கும் என்ற செய்தியைக் கூறுமிடத்து,

**"தண்பெரும் பௌவம் அணங்குக"** (குறுந்.164: 4)

என்றும், மருத நிலத்தின் நீர் பரப்பைக் குறிக்குமிடத்து,

**"கடல் கண்டன்ன கண் அகன் பரப்பின்"** (அகநா.176: 1)

என்றும் நெய்தல் நிலச் செய்திகள் திணை மயக்கமாகக் கூறப் பெறுவதைக் காண முடிகின்றது.

அலர் மொழிக்கு பசும்பூட் பாண்டியன் கொங்கரை வென்ற போது எழுந்த ஆரவார ஒலியினைக் குறிப்பர் மதுரைப் பேராலவாயார். இக்கூற்றுள் பசும்பூட் பாண்டியனின் கொற்கை நகரைக் குறிக்குமிடத்து நெய்தல் நிலச் செய்தியையும் குறிக்கின்றார். இதனை,

**"........ ........ ........... பரப்பில்**
**பல்மீன் கொள்பவர் முகந்த இப்பி**
**நார் அரி நறவின் மகிழ்நொடைக் கூட்டும்**
**பேர் இசைக் கொற்கை..."** (அகநா.296: 7-10)

என்னும் அடிகள் உணர்த்தும். இவற்றால் மருதப் பாடல்களில் நெய்தல் நிலச் செய்திகள் திணை மயக்கமாக இடம் பெறுவதைக் காணமுடிகின்றது.

மருதத் திணைப் பாடலில் கோசர் என்பாரைக் குறிக்கும் ஐயூர் முடவனார். கோசர் நெய்தல், மருதம், முல்லை எனும் நிலப் பூக்களை அணிந்திருந்த செய்தியைக் குறிக்கின்றார். இதனை,

**"கடல் ஆடு மகளிர் கொய்த ஞாழலும்**
**கழனி உழவர் குற்ற குவளையும்**
**கடிமிளைப் புறவின் பூத்த முல்லையொடு**
**பல் இளங்கோசர் கண்ணி அயரும்"** (அகநா.216: 8-11)

என்னும் அடிகளின் வழிக் காணமுடியும். இதனுள் மருதப் பாடலுள் நெய்தல் மற்றும் முல்லை நிலச் செய்திகள் குறிக்கப்பட்டிருப்பதை உணர முடிகின்றது.

**தொகுப்புரை**

அக இலக்கியப் பாடு நெறியில் ஒவ்வொரு உரிப்பொருளுக்கும் சிறந்துயரிய நிலம் மற்றும் கருப்பொருட்கள் பின்புலமாகப் படைக்கப் பெறும். இவ்வரையறை அமைப்பில் மாறுபட்டு பிற திணையின் நிலம் மற்றும் கருப்பொருட் புனைவுகள் இடம் பெறுதல் உண்டு. இவ்வமைப்பு திணை மயக்கம் எனும் பாடுநெறியாகக் கொள்ளப்படும்.

சங்க இலக்கியத் திணைப்பகுப்பில் அத்திணைக்குரிய உரிப்பொருளுடன் பிற திணையின் நிலம் மற்றும் கருப்பொருட் புனைவுகள் திணை மயக்கமாக இடம்பெறுவதைக் காணமுடிகின்றது.

முல்லைத் திணையின் பகுப்பில் முல்லைத் திணைக்குரிய இருத்தல் எனும் உரிப்பொருளுடன் குறிஞ்சி, பாலை, மருதம், நெய்தல் எனும் திணைகளுக்குரிய நிலம் மற்றும் கருப்பொருட் புனைவுகள் திணை மயக்கமாக இடம்பெறுகின்றன.

முல்லையின் பாடுபொருளுடன் குறிஞ்சியின் நிலம் மற்றும் கருப்பொருள்கள், தலைவன் தலைவியருக்குரிய நிலப் புனைவுகளாகவும், முல்லை நிலப் புனைவுடன் அதன் அருகே இடம் பெற்றிருக்கும் குறிஞ்சி நிலப் புனைவுகளாகவும், குறிஞ்சியின் நிலம் மற்றும் கருப்பொருள்களால் ஆன உவமைகளாகவும் இடம்பெற்று மயங்குகின்றன.

முல்லையின் பாடுபொருளுடன் பாலை மயங்குமிடத்து, கார்கால மழை பெய்யத் தொடங்கிய பாலை நிலமாகவும், தலைவன் வினைமேற்

சென்ற நிலமாகவும், தலைவன் வினைமுற்றி வரும் நிலமாகவும் குறிக்கப்படுகிறது.

முல்லையின் பாடுபொருளுடன் மருதத் திணையின் நிலம் மற்றும். கருப்பொருட் புனைவுகள், தலைவன் தலைவியருக்குரிய நிலப் புனைவாகவும், அற்சிரக் காலத்தின் இயல்பை விளக்கவும், தலைவியின் கூந்தல் சிறப்பை விளக்குதற்குக் கூறப்படும் நிலப் புனைவாகவும் அமைந்து மயங்குகிறது.

முல்லையின் பாடுபொருளுடன் நெய்தல் திணையின் நிலம் மற்றும் கருப்பொருட் புனைவுகள் மயங்குகின்றன. இம்மயக்கம் கார்கால மழை மேகம், நெய்தல் கடலில் நீரை முகந்து கொண்டதாகக் குறிக்கப்படுமிடத்தும், இரவின் மிகுதிப்பாட்டை நெய்தற் பரப்புடன் தொடர்புபடுத்திக் கூறுமிடத்தும் இடம்பெறுகின்றது.

குறிஞ்சித் திணைப் பகுப்பில் காணப்படும் பாடல்களுள் குறிஞ்சியின் உரிப்பொருளுடன் முல்லை, பாலை, மருதம், நெய்தல் எனும் திணைகளுக்குரிய நிலம் மற்றும் கருப்பொருள்கள் மயங்குகின்றன.

குறிஞ்சியின் உரிப்பொருளான புணர்தல் மற்றும் புணர்தல் நிமித்தங்களுடன் முல்லையின் நிலமும் அதன் கருப்பொருள்களும் மயக்கமாகப் புனையப்படுகின்றன. குறிஞ்சியுள் முல்லையின் நிலம், கரு மயக்கமாக இடம்பெறுவதற்குக் குறிஞ்சியைச் சார்ந்த முல்லைப் பகுதிகளின் புனைவும், உவமைகளும், புறச் செய்திகளும் காரணிகளாக அமைகின்றன.

குறிஞ்சியின் பாடுபொருளுடன் பாலையின் நிலமும் கருப்பொருளும் மயங்குமிடத்து, குறிஞ்சி நிலம் வேனிற்கால இயல்பில் கூறப்படுதலும், வரைவிற்கு வந்த மகிழ்வு பாலையில் மழை பெய்த மகிழ்வுடன் கூறப்படுதலும், களவிற்கு வரும் தலைவன் பாலை நிலங்களைக் கடந்து வருவதாகக் குறிக்கப்படுதலும், உடன்போக்கில் செல்லவிருக்கும் பாலை நிலம் குறிக்கப்படுதலும் காரணிகளாக அமைகின்றன.

குறிஞ்சியின் பாடுபொருளுடன், குறிஞ்சி நிலத்தைச் சார்ந்த மருத நிலப்புனைவும், மருத நிலஞ்சார்ந்த உவமைகளும் மயங்குகின்றன.

குறிஞ்சியின் பாடுபொருளுடன் நெய்தலின் நிலமும் கருப்பொருளும் பின்புலமாகவும், உவமையாகவும் குறிக்கப்பட்டு மயங்குகின்றன.

முல்லை நிலத் தலைவன் தலைவியை உடன்போக்கில் கொண்டு செல்லுவதாகப் படைக்கப்படும் பாடலுள் பாலையுள் தலைவன் செல்லவிருக்கும் முல்லை நிலப்புனைவு திணை மயக்கமாக இடம்பெறுகிறது.

குறிஞ்சி நில மக்களின் பாலையொழுக்கம் படைக்கப்படுகிறது. இப்படைப்பு பாலையுள் குறிஞ்சியின் நிலமும் கருப்பொருளும் மயங்கிய திணை மயக்கமாகப் படைக்கப் பெறுகின்றது.

பாலையின் பாடுபொருளுடன் மருதத் திணையின் நிலம் மற்றும். கருப்பொருள்கள் மயங்குமிடத்துத் தலைவியின் மருத நிலப் புனைவு கூறப்படுதலும், மருத நிலஞ்சார்ந்த உவமைகளைக் குறிப்பிடுதலும் காரணங்களாகின்றன.

நெய்தல் நில மக்களின் பாலையொழுக்கமும், நெய்தல் நிலப் புனைவுடனான உவமை விளக்கங்களும் பாலையின் பாடுபொருளுடன் நெய்தல் திணையின் நிலமும் கருப்பொருளும் மயங்குதற்குக் காரணிகளாகின்றன.

மருதப் பாடுபொருளுடன் முல்லைத் திணையின் நிலமும் கருப்பொருளும் மயங்குமிடத்து தலைவனின் முல்லை நிலப்புனைவு திணை மயக்கமாகக் குறிக்கப் பெறுகின்றது.

மருதத்துள் குறிஞ்சி மயங்குமிடத்து, சூளுரைத்த குறிஞ்சித் தெய்வமும், குறிஞ்சி நிலப் புனைவாகக் குறிக்கப்படுகிறது. மருதத்துள் காணப்படும் ஆற்று நீர் தோன்றிய குறிஞ்சி நிலப்பகுதி சுட்டப்படுகிறது. உவமையின் வழியாகவும் இடம்பெறுகிறது.

மருதத்துள் பாலை மயங்குமிடத்து, தலைவன் கூறும் பொய்யுரை விளக்கும் விதமாக பாலை நிலப் புனைவு இடம்பெறுகிறது.

நெய்தல் நில மக்களின் மருதவொழுக்கமும் மருத நிலப் பகுதியுடன் கூடிய நெய்தல் நிலப்பகுதிகளும் நெய்தல் நிலஞ்சார் உவமைகளும் மருதத்துள் நெய்தல் மயங்குதற்குக் காரணங்களாகின்றன.

## சான்றெண் விளக்கம்

1. ஔவை சு. துரைசாமிப்பிள்ளை (உ.ஆ), நற்றிணை மூலமும் விளக்கவுரையும், ப.640.
2. பொ.வே.சோமசுந்தரனார் (உ.ஆ), ஐங்குறுநூறு, ப.568.
3. கு.வெ.பாலசுப்பிரமணியன், சங்க இலக்கியம் (நற்றிணை மூலமும் உரையும்), ப.592.
4. வி.நாகராஜன், சங்க இலக்கியம் குறுந்தொகை, (மூலமும் உரையும்), ப.929.
5. மேலது, ப.659.
6. ஔவை சு. துரைசாமிப்பிள்ளை, நற்றிணை மூலமும் விளக்கவுரையும், ப.1081.
7. அ.தட்சிணாமூர்த்தி, சங்க இலக்கியம், ஐங்குறுநூறு (மூலமும் விளக்கவுரையும்), ப.459.
8. வி.நாகராஜன், சங்க இலக்கியம் குறுந்தொகை, (மூலமும் உரையும்), ப.703.
9. தமிழியல், 2001, ப.7.
10. அ.நாராயணசாமி ஐயர் (உ.ஆ), நற்றிணை நானூறு, ப.6.
11. ந.சுப்புரெட்டியார், அகத்திணைக் கொள்கைகள், ப.546.
12. வ.சுப.மாணிக்கம், தமிழ்க்காதல், ப.234.
13. பொ.வே.சோமசுந்தரனார் (உ.ஆ), குறுந்தொகை, ப.74.
14. வி.நாகராஜன், சங்க இலக்கியம் குறுந்தொகை, (மூலமும் உரையும்), ப.552.
15. ந.மு.வேங்கடசாமி நாட்டார், ரா. வேங்கடாசலம் பிள்ளை (உ.ஆ), அகநானூறு நித்திலக்கோவை, ப.127.

# இயல் - 4

## பொழுது மயக்கம்

திணை இலக்கியப் புலவர்கள் அகமாந்தர்களின் அகத்திணை உணர்வுகளை ஒவ்வொரு பொழுதுகளுக்கும் வரையறை செய்து பாடினர். எனினும் மனித உணர்வுகள் பொழுதுகளின் இயல்பில் அடங்காது அமைதலும் இயற்கை. எனவே திணைப்பாடல் வரையறை அமைப்பில் ஓர் உணர்விற்கென வரையறை செய்யப்பட்ட பொழுதுகள் அன்றிப் பிற பொழுதுகளும் இடம்பெறலாயின. இவ்வமைப்பு பொழுது மயங்கிய திணை மயக்கம் எனும் பாடுநெறியாகக் கொள்ளப்பெறுகிறது. சங்க அகப்பாடல்களில் பொழுதுகள் திணைமயக்கமாக இடம்பெறுவதைக் காணமுடிகின்றது. அகத்திணைப் பகுப்பில் அத்திணைக்குரிய பாடுபொருளுடன் பிற திணைக்குரிய பொழுதுகள் திணைமயக்கமாக இடம்பெறுதல் காணப்படுகிறது. அதனை ஆராய்தல் இவ்வியலின் நோக்கமாகும்.

### பொழுது வகைப்பாடு

பொழுதுகள் பெரும்பொழுது, சிறுபொழுது என இரு வகைப்படுத்தப்படும். பெரும்பொழுதுகள் ஓர் ஆண்டின் ஆறு பகுதிகளாகவும், சிறுபொழுதுகள் ஒரு நாளின் ஆறு பகுதிகளாகவும் அமைகின்றன. இப்பகுப்பானது,

I. **பெரும் பொழுதுகள்,**

| | | |
|---|---|---|
| கார் | - | ஆவணி, புரட்டாசி |
| கூதிர் | - | ஐப்பசி, கார்த்திகை |
| முன்பனி | - | மார்கழி, தை |
| பின்பனி | - | மாசி, பங்குனி |
| இளவேனில் | - | சித்திரை, வைகாசி |
| முதுவேனில் | - | ஆனி, ஆடி |

II. ***சிறு பொழுதுகள்,***

| | | |
|---|---|---|
| வைகறை | - | இராப்பொழுதின் பிற்கூறு |
| விடியல் | - | பகற்பொழுதின் முற்கூறு |
| நண்பகல் | - | பகற்பொழுதின் நடுக்கூறு |
| எற்பாடு | - | பகற்பொழுதின் பிற்கூறு |
| மாலை | - | இரவுப்பொழுதின் முற்கூறு |
| யாமம் | - | இரவுப்பொழுதின் நடுக்கூறு |

என்றமைகிறது. சிறுபொழுதுகள் ஐந்தாகக் குறிக்கப்பெறுவதை இறையனார் களவியல் உரையிலும்,(1) நம்பியகப்பொருளிலும்(2) காணமுடிகின்றது. சிவஞானமுனிவர் தமது தொல்காப்பியச் சூத்திர விருத்தியுள்,(3) சிறுபொழுதுகள் ஐந்தெனக் கூறுகின்றார். "சிறுபொழுது ஐந்தெனக் கொள்வதே ஏற்புடையது என கருத்துத் தெரிவிக்கலாகிறது"(4) என்று குறிப்பர் இரா.செகதீசன்.

சிறுபொழுதுகள் ஆறு என்பதை மு.அருணாச்சலம்பிள்ளை சுட்டுவர். இதனை, "வைகறை என்பது இரவின் கடைக்கூறு, விடியல்

என்பது பகற்பொழுதின் முற்கூறு, எற்பாடு பகலின் கடைக்கூறாகிய (பொழுது) சாயங்காலமாம். இதனால் சிறுபொழுது ஆறென்பதே தேற்றம்"[5] என்னும் உரை விளக்கப்பகுதி உணர்த்தும். "ஆறு சிறுபொழுதுகள் நான்கு நான்கு மணிப்பொழுதுகள் கொண்டன"[6] என்பர் இராம.பெரியகருப்பன். இவற்றால் சிறுபொழுதுகள் ஐந்து எனவும், ஆறு எனவும் குறிக்கப்பெற்றிருப்பது விளங்கும்.

பெரும்பொழுதுகளின் பகுப்பு ஆறு எனக் கொள்ளப்பெறுகின்றது. இவற்றாலும் இரவுப் பொழுது மூன்று கூறுகளாகக் கொள்ளப்பட்டதற்கேற்பவும், பகற்பொழுது மூன்று கூறுகளாகக் கொள்ளப்பெறுதல் சிறப்பு. எனவே, சிறுபொழுதுகள் ஆறு எனப் பகுப்பது பொருத்தமுடையதாகும்.

***அகத்திணைகளும் பொழுதுகளும்***

முல்லை முதலிய அகன் ஐந்திணைகளுக்குப் பொழுதுகள் வரையறைப்படுத்தப்படுகின்றன. இவ்வரையறையானது,

| | | |
|---|---|---|
| முல்லை | - | கார், மாலை |
| குறிஞ்சி | - | கூதிர், யாமம், முன்பனி |
| பாலை | - | வேனில் (இளவேனில், முதுவேனில்) நண்பகல், பின்பனி |
| மருதம் | - | வைகறை, விடியல் (அறுவகைப் பெரும்பொழுதுகள்) |
| நெய்தல் | - | எற்படு (அறுவகைப் பெரும்பொழுதுகள்) |

என்றமைகின்றது. இவ்வரையறை அமைப்பில் மாறுபட்டு ஓர்

அகத்திணையின் பாடுபொருளுடன் குறிக்கப்பெறும் பிற பொழுதுகள் திணை மயக்கத்தின் கீழ் உணரப்படும்.

**முல்லைத்திணையில் பொழுது மயக்கம்**

முல்லை என்னும் திணைப்பகுப்பில் முல்லைத்திணையின் உரிப்பொருளுடன் கூதிர்காலம், வேனிற்காலம், முன்பனி எனும் பெரும்பொழுதுகளும், வைகறை, விடியல், யாமம் எனும் சிறுபொழுதுகளும் திணைமயக்கமாக இடம்பெறுவது அறியப்பெறுகிறது.

**முல்லையுள் கூதிர் காலம்**

முல்லைத்திணைப் பகுப்பில் இருத்தல் எனும் உரிப்பொருளை உடைய பாடல்களில் குறிஞ்சித்திணைக்குரிய கூதிர்காலம் மயங்குதலைக் காணமுடிகின்றது. குறித்த பருவத்தில் தலைமகன் வராது நீட்டிக்கத் தலைவி ஆற்றாது வருந்திக் கூறும் முல்லைத் திணையின் கூற்றில் கூதிர் காலம் மயங்குகின்றது. தலைவன் வினைமுற்றி வருவதாகக் குறித்த காலம் கார்காலம் ஆகும். கார்காலத்தை அடுத்து வரும் காலம் கூதிர்காலம் ஆகும். கார்காலத்தில் வாராது காலம் நீட்டித்த அளவில் கூதிர்காலம் வருதல் இயல்பு. இதன் அடிப்படையில் முல்லைத்திணைப் பாடல்களில் கூதிர்காலம் மயங்குவதைப் பேயனார்,

**"உள்ளார் கொல்லோ – தோழி! வெள் இதழ்ப்**
**பகல்மதி உருவின் பகன்றை மாமலர்**
**வெண்கொடி ஈங்கைப் பைம்புதல் அணியும்**

அரும்பனி அளைஇய கூதிர்

ஒருங்கு இவண் உறைதல், தெளித்து அகன்றோரே" (ஐங்.456)

என்பர். இதில் தனித்துறையும் தலைவியைக் கூதிர் வருத்துவது கூறப்பட்டுள்ளது. இதனை "கூதிர்காலம் யாரும் பொறுத்துக் கொள்ளுதற்கு அரியது தனித்துறைவார்க்கு அதன் கொடுமை பன்மடங்காகப் பல்கும். எனவே அதனை 'அரும்பனி அளைஇய கூதிர்' என்றாள்"(7) என விளக்குவர். முல்லைப் பாடுபொருளில் வாடைக்காற்று கருவிளை மலர்களை அசைத்தும் ஈங்கை அரும்புகளின் நிறத்தைச் சிதைத்தும், மலர்களை உதிர்த்தும் வீசும் காலம் எனக் குறிக்கப்படுகிறது. இதனை,

"நீலப் பைம்போது உளரி, புதல

பீலி ஒண்பொறிக் கருவிளை ஆட்டி,

நுண்முள் ஈங்கைச் செவ்அரும்பு ஊழ்த்த

வண்ணத் துய்ம்மலர் உதிர, தண்ணென்று

இன்னாது எறிதரும் வாடையொடு

என் ஆயினள் கொல் என்னாதோரே?" (குறுந். 110:3-8)

என்று குறிப்பர் கிள்ளிமங்கலங்கிழார். இதில் 'இன்னாது எறிதரும் வாடை' என்பது கூதிர் காலத்தைச் சுட்டும்.

முசுண்டையின் வெண்ணிறப் பூக்கள் மலர்ந்தன. கோவலர்கள் காந்தள் மலரைத் தலையில் சூடினர். இவ்வாறான கூதிர்காலத்தும் தலைவர் வரவில்லையே என வருந்திக் கூறும் தலைவியின் நெஞ்சத்தை, உம்பற்காட்டு இளங்கண்ணனார்,

"மழை இல் வானம் மீன் அணிந்தன்ன
குழை அமல் முசுண்டை வாலிய மலர,
வரிவெண் கோடல் வாங்கு குலை வான்பூப்
பெரிய சூடிய கவர்கோல் கோவலர்,
எல்லுப் பெயல் உழந்த பல்ஆன் நிரையொடு,
நீர்திகழ் கண்ணியர் ஊர்வயின் பெயர்தர,
நனிசேண்பட்ட மாரி தளிசிறந்து,
ஏர்தரு கடுநீர் தெருவுதொறு ஒழுக,
பேர் இசை முழக்கமொடு சிறந்து நனி மயங்கி,
கூதிர் நின்றன்றால் பொழுதே! காதலர்
நம்நிலை அறியார் ஆயினும், தம்நிலை
அறிந்தனர் கொல்லோ தாமே..." (அகநா.264:1-12)

என்று குறிக்கின்றார். இதனுள் தலைவி கூதிர்காலத்தும் ஆற்றியிருப்பது பெறப்படுகிறது. இதனை, "தலைவர் வந்து விடுவார் என்று வற்புறுத்திய தோழிக்கு அவர் வருவதாகக் கூறிச் சென்ற கார்ப்பருவம் போய், கூதிர்ப் பருவம் வந்தும் அவர் இன்னும் வந்திலர் இப்பருவத்தில் யாம் அடையும் துன்பநிலையினை அவர் அறியாராயினும், நாம் இறந்துபட்டால் பின் தாம் அடையும் துன்பநிலை குறித்து அவன் நினைந்து பார்க்கவில்லை போலும் என்று தலைவி எதிரழிந்து கூறினாள்"(8) என விளக்குவர். தலைவி பருவங்கண்டு சொல்லும் முல்லைப் பாடுபொருளில் தலைவி கூதிர் காலத்துள் ஆற்றியிருப்பது கூறப்படுகிறது. இதனை,

**"தளை பிணி அவிழா, சுரி முகப் பகன்றை,**

**சிதரல் அம் துவலை தூவலின் மலரும்**

**தைஇ நின்ற தண் பெயல் கடைநாள்**

.......... ........... ............... ..............

**மங்குல் மாமழை, தென்புலம் படரும்**

**பனி இருங்கங்குலும் தமியள் நீந்தி,**

**தம் ஊரோளே........."** (அகநா.24: 3-5, 8-10)

என்னும் அடிகள் விளக்கும்.இதனுள் தண் பெயற் கடை நாள் என்று கூதிர் காலம் கூறப்படுகிறது

கார்காலம் கடந்துவிட்ட அளவில் துயரமடையும் தலைவனுக்குத் தலைவியின் தூது மொழிகள் இனியவாக அமைகின்றன. அந்நிலையில் தலைவன் பாணனுக்குக் கூறுவதாக அமையும் முல்லைத் திணைப் பாடுபொருளில் கூதிர்காலம் மயங்குகின்றது. இதனை,

**"சொல்லுமதி பாண! சொல்லுதோறு இனிய**

**நாடு இடை விலங்கிய எம்வயின், நாள்தொறும்,**

**அரும்பனி கலந்த அருள்இல் வாடை**

**தனிமை எள்ளும் பொழுதில்,**

**பனிமலர்க் கண்ணி கூறியது எமக்கே"** (ஐங்.479)

என்னும் பாடலுள் காணமுடிகின்றது. இதில் 'அரும்பனி கலந்த அருள்இல் வாடை' என்பது கூதிர்காலத்தைக் குறிக்கும்.

பொருள் முற்றி வந்தான் எனக்கேட்ட தோழி தலைவிக்குச் சொல்லும் முல்லைத் திணைப் பாடுபொருளில் தலைவன் கூதிர்காலத்து

வந்ததும் தலைவன் வந்துவிட்டதால் இதுவரைத் துயரம் செய்த வாடை, இனித் துயரம் செய்யாது என்பதும் குறிக்கப்படுகின்றன. இதனை, இளம்புல்லூர்க்காவிதியார்,

**"கொண்டல் ஆற்றி விண்தலைச் செறீஇயர்,**
**திரைப் பிதிர் கடுப்ப முகடு உகந்து ஏறி,**
**நிரைத்து நிறைகொண்ட கமஞ்சூல் மாமழை**
**அழி துளி கழிப்பிய வழிபெயற் கடைநாள்,**
**இரும்பனிப் பருவத்த மயிர்க்காய் உழுந்தின்**
**அகல் இலை அகல வீசி, அகலாது**
**அல்கலும் அலைக்கும் நல்கா வாடை,**
**பரும யானை அயா உயிர்த்தாஅங்கு,**
**இன்னும் வருமே – தோழி! -வாரா**
**வன்கணாளரோடு இயைந்த**
**புன்கண் மாலையும் புலம்பும் முந்துறுத்தே"** (நற்.89)

என்றமைக்கின்றார். இதனுள் கார்கால மழை பெய்து முடித்து வந்து விட்ட கூதிர் காலம், 'அழி துளி கழிப்பிய வழிபெயற் கடைநாள்' எனக் குறிக்கப்படுகிறது.

தலைவி ஆற்றியிருக்கும் முல்லைப் பாடுபொருளாக அமையும் நெடுநல்வாடை தலைவனின் கால நீட்டிப்பால் வந்த கூதிர்கால வாடையாலே பெயர் பெறுகின்றது. இப்பாடல் முல்லைத் திணைக்குரியதாகும். இதனுள் தலைவியைத் துயரம் செய்யும்

கூதிர்ப்பருவம் திணைமயக்கமாகக் குறிக்கப்பெறுகிறது. இதனுள் இடம்பெறும் கூதிர்கால மயக்கத்தை,

**“மா மேயல் மறப்ப, மந்தி கூர**
**பறவை படிவன வீழ, கறவை**
**கன்று கோள் ஒழியக் கடிய வீசி,**
**குன்று குளிர்ப்பன்ன கூதிர்ப்பானாள்**
**............ ............. ............. .............**
**காதலர் பிரிந்தார் புலம்பப் பெயல்களைந்து**
**கூதிர் நின்றன்றால் போதே”** (நெடுநல்.9-12, 71-72)

என்னும் அடிகள் உணர்த்தும். இதனுள் காணப்படும் திணைமயக்கத்தை “முதற்பொருளில் பொழுது மயங்கும் என்பது தொல்காப்பியச் செய்தி இத்தகைய திணைமயக்கம் நெடுநல் வாடையிலும் காணப்படுகிறது”[9] என்பர் அ.சீநிவாசன். “நெடுநல்வாடையும் முல்லை ஒழுக்கத்திற்கு உரியது. ஆதலின், அதன்கண் கார்காலமும் கூதிர்கால நிகழ்ச்சிகளும் தலைவனைப் பிரிந்த தலைவி ஆற்றியிருத்தலும் விரிவாகக் கூறப்பட்டுள்ளன”[(10)] என்பர் மா.இராசமாணிக்கனார்.

இவற்றால் கார்கால நீட்டிப்பின் காரணமாக முல்லைத்திணைக்குரிய தலைவி, தலைவன், தோழி என்பாரது கூற்றுக்களில் கூதிர்காலம் திணைமயக்கமாக இடம் பெறுகிறதென்பதை உணரமுடியும்.

**முல்லையுள் வேனிற்காலம்**

முல்லைத்திணைப் பகுப்பில் முல்லையின் உரிப்பொருளுடன்

வேனிற்காலம் திணை மயக்கமாக இடம்பெறுவது அறியப்படுகின்றது. வேனிற்காலத்தை அடுத்து வரும் காலமாகக் கார்காலம் அமைகின்றது. கார்காலம் வர வேனிற்கால வெம்மை நீங்கும். முல்லைப் பாடல்களுள் கார்காலம் குறிக்கப்பெறும். வினைமுற்றிய தலைமகன் தேர்ப்பாகற்குக் கூறும் முல்லைத் திணைக் கூற்றில் வேனிற்காலம் நீங்கக் கார்காலம் வந்தது குறிக்கப்படுகிறது. இதனை,

**"வேனில் நீங்கக் கார் மழை தலைஇ**
**காடு கவின் கொண்டன்று பொழுது; பாடுசிறந்து**
**கடிய கடவுமதி பாக!**
**நெடிய நீடினம், நேரிழை மறந்தே."** (ஐங்.484)

என்னும் பாடல் உணர்த்தும். இதனுள் வேனிற்காலம் கார்காலத்துடன் இயைபு படுத்தப்பட்டுத் திணைமயக்கமாக இடம்பெறுவது விளங்கும்.

வினைமுற்றி வருவதாகக் குறிக்கப்பெறும் காலங்களுள் கார்காலமும் இளவேனிலும் அடங்கும். கார்காலம் போன்றே இளவேனிற்காலத்துள் வருவதாகத் தலைவன் குறித்துச் செல்வான். எனவே ஆற்றியிருக்கும் தலைவி கார்கால வரவை எதிர்நோக்குதல் போல, இளவேனிற்கால வரவையும் எதிர்நோக்கி இருப்பாள். இதனை, "கார் கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனில் என்று ஆறு பருவங்கள் இருப்பினும் காரும் இளவேனிலுமே கணவன்மார் வீடு திரும்புவர் என்று மனைவிமார் வரவு பார்த்திருக்கும் பருவங்களாம்"(11) என்பர். ஆயின், புலனெறி வழக்கில் 'வேனில்' பாலைத் திணைக்குரிய காலமாகக் கொள்ளப்பெறும். எனவே இளவேனிற்கால வரவில்

ஆற்றியிருக்கும் தலைவியின் கூற்றில் இடம்பெறும் வேனிற்காலம் முல்லையுள் மயங்கிய பொழுது மயக்கமாகக் கொள்ளப்படுகின்றது.

பருவம் கண்டு ஆற்றாளாய தலைவி தோழிக்குக்கூறும் முல்லைத் திணைக்கூற்றில் தலைவி இளவேனிற்காலத்துள் ஆற்றியிருப்பது பெறப்படுகின்றது. இதனை,

**"பிரிவில புலம்பி நுவலும் குயிலினும்**

**தேறுநீர் கெழீஇய யாறு நனிகொடிதே"** (நற்.97:3-4)

என்னும் அடிகளின் வழி உணர்த்துவர் மாறன் வழுதியார். இப்பாடலுள் இடம்பெறும் இளவேனிற்காலத்தை, "குளிர்ந்த பொழிலின்கண் இருந்து குயில் கூவத் தொடங்கிற்று, அதன் இனிய இசை அவனுடைய மனத்தை வெதுப்பிற்று பொழிலைச் சார்ந்து ஓடிய யாற்றுநீர் கலக்க மின்றித் தெளிந்து வேனில் வரவை வற்புறுத்திற்று"(12) என்று விளக்கியுரைப்பர். இதனால் முல்லையின் பாடுபொருளில் இளவேனில் மயங்குவது உணரப்படும். பருவங்கண்டு ஆற்றாளாய தலைவி கூறுங்கூற்றில் தலைவி வேம்பு பூக்கும் வேனிற் காலத்துள் ஆற்றியிருப்பதை அறிய முடிகின்றது. இதனை,

**"கருங் கால் வேம்பின் ஒண்பூ யாணர்**

**என்னை இன்றியும் கழிவது கொல்லோ?"** (குறுந்.24: 1-2)

என்னும் அடிகள் குறிக்கும். இதனுள் இடம்பெறும் வேனில் வேம்பின் பூவைக் குறிப்பதால் பெறப்படுகின்றது. இதனை, "வேம்பு பூக்கும் இளவேனிற் பருவம் அவர் வரும் என்று சொற்ற போதாதலால் அவரின்றிச்

சூடாது கழிவது கொல் என்றாள்"[13] என விளக்குவர். இவற்றால் முல்லையின் பாடுபொருளுடன் வேனிற்காலம் குறிக்கப்பட்டு மயங்குவது புலப்படும்.

**முல்லையுள் அற்சிரக்காலம்**

தலைவி ஆற்றாது வருந்தும் நிலையில், தோழி தலைவர் வருவர் என வற்புறுத்திக் கூறுதலும் உண்டு. இவ்வாறு, தலைவியை ஆற்றுவிக்கும் தோழியின் கூற்றில், 'அற்சிரக்காலம் ஆனதால் தலைவர் வருவார்' என அற்சிரம் குறிக்கப்பெறுகின்றது. இதனை,

**"கண்எனக் கருவிளை மலர, பொன்என**
**இவர் கொடிப் பீரம் இரும்புதல் மலரும்**
**அற்சிரம் மறக்குநர் அல்லர் - நின்**
**நல்தோள் மருவரற்கு உலமருவோரே"** (ஐங்.464)

என்னும் பாடலிலும்,

**"இருநிலம் குளிர்ப்ப வீசி, அல்கலும்**
**அரும்பனி அளைஇய அற்சிரக் காலை**
**உள்ளார், காதலர், ஆயின், ஒள்ளிழை!**
**சிறப்பொடு விளங்கிய காட்சி**
**மறக்க விடுமோ, நின் மாமைக் கவினே?"** (ஐங்.470)

என்னும் பாடலுள்ளும் காணமுடிகின்றது. இவற்றால் முல்லையின் பாடுபொருளில் அற்சிரம் எனப்பெறும் பனிக்காலம் திணைமயக்கமாக இடம்பெறுவது விளங்கும்.

**முல்லையுள் வைகறை, விடியல்**

மருதத்திணைக்கென வரையறை செய்யப்பெறும் வைகறை, விடியல் எனும் பொழுதுகள் முல்லைத் திணைப்பாடல்களில் முல்லையின் உரிப்பொருளுடன் திணைமயக்கமாகக் குறிக்கப்பெறுகின்றன.

முல்லை நிலத்துள் பெய்த கார்கால மழையினைக் கொண்டு உழவு செய்யத் தொடங்குவோர், வைகறைப் பொழுதில் வினை மேற்கொண்ட செய்தி குறிக்கப்படுகிறது. இத்திணை மயக்கம் வைகறை எனும் பொழுது பருவங்கண்டு ஆற்றாமை மீதூரத் தலைமகள் சொல்லும் முல்லைப் பாடுபொருளில் இடம்பெறுவதை,

**"பேர் உறை தலைஇய பெரும்புலர் வைகறை,**

**ஏர் இடம் படுத்த இரு மறுப் பூழிப்"** (அகநா.194: 1-2)

என்னும் அடிகள் உணர்த்தும். இங்கு மருதத்திணைக்குரிய வைகறை, 'பெரும்புலர் வைகறை' என்று திணைமயக்கமாகக் குறிக்கப்படுகிறது. பாசறைக்கண் தலைமகன் தன்னெஞ்சிற்குக் கூறும் கூற்றில் கார்கால மழை பெய்த பொழுதாக வைகறை குறிக்கப்படுகின்றது. இதனை,

**"குரூஉத்துளி பொழிந்த பெரும்புலர் வைகறை"** (அகநா.304:5)

என்னும் பாடலடி உணர்த்தும். தேர்ப்பாகற்குக் கூறும் தலைவன், 'தேரை விரைந்து ஓட்டுக இன்று கார்கால மழை காலைப்பொழுதிலே தொடங்கிவிட்டது' என்கிறான். இதனுள் காலைப் பொழுது,

**"கார்தொடங்கின்றே காலை;"** (நற்.242:5)

என்று குறிக்கப்படுகிறது. இதனை, "இன்று காலையிலேயே கார் தொடங்கிற்று. . . ஆகையால் நின்தேரை விரைந்து செலுத்துவாயாக"(14) என்று தலைவன் கூறியதென்று விளக்குவர். இதனால் கார்கால மழையுடன் தொடர்புபடுத்தப்பட்டு வைகறை, காலை எனும் பொழுதுகள் முல்லைப்பாடலினுள் திணை மயக்கமாக இடம் பெறுவதைக் காணமுடிகிறது.

வேந்தற்கு உற்றுழிப் பிரிந்த தலைமகன், பருவம் வந்தஇடத்தும் மீளப்பெறாது ஆற்றானாய்க் கூறும் முல்லைத் திணைப் பாடுபொருளில் அரசன் வினையினை முற்றுவிக்காது போரைத் தொடங்கிய காலைப்பொழுது திணைமயக்கமாகக் குறிக்கப்பெறுகிறது. இதனை,

**"தழங்குரல் முரசம் காலை இயம்ப,**
**கடுஞ்சின வேந்தன் தொழில் எதிர்ந்தனனே"** (ஐங்.448: 1-2)

என்னும் பாடலடிகள் உணர்த்தும். பருவ வரவின்கண் ஆற்றாளாய தலைவி கூறும் கூற்றில் விடியல், பகல் எனும் பொழுதுகளும் மாலையினைப் போன்றே துயரம் செய்வன என்பது குறிக்கப்படுகின்றன.

**"குடுமிக்கோழி நெடுநகர் இயம்பும்**
**பெரும்புலர் விடியலும் மாலை;**
**பகலும் மாலை - துணை இலோர்க்கே"** (குறுந்.234: 4-6)

இதனுள் விடியல் எனும் சிறுபொழுது திணைமயக்கமாகக் குறிக்கப்பெறுவது விளங்கும். தேர்ப்பாகற்குக் கூறும் தலைவனின் முல்லைத் திணைக்கூற்றில், மூதாய் குறுகுறு என ஓடிக் காயாவின் பின் மறையும் வைகறைப் பொழுது குறிக்கப்படுகிறது. இதனை,

**“பெயல் பெய்து கழிந்த பூநாறு வைகறை,**

**செறிமணல் நிவந்த களர் தோன்று இயவில்,**

**குறு மோட்டு மூதாய் குறுகுறு ஓடி**

**மணிமண்டு பவளம் போல, காயா**

**அணிமிகு செம்மல் ஒளிப்பன மறைய”** (அகநா.374:10-15)

என்னும் பாடல்அடிகளால் அறியமுடியும். தலைவி ஆற்றியிருக்கும் கூதிர்காலத்து வைகறைப் பொழுது முல்லையுள் வைகறை மயங்கியதாகக் குறிக்கப்பெறுகின்றது. இதனை,

**“வயங்கு கதிர் கரந்த வாடை வைகறை,**

**விசும்பு உரிவதுபோல், வியல் இடத்து ஒழுகி,**

**மங்குல் மாமழை, தென் புலம் படரும்”** (அகநா.24: 6-8)

என்னும் அடிகள் குறிக்கும். இவற்றால் முல்லைப் பாடல்களில் மருதத்திணைக்குரிய வைகறை, விடியல் எனும் பொழுதுகள் கார்கால மழை பெய்த பொழுதாகவும், வேந்தன் போர்செய்யத் தொடங்கிய பொழுதாகவும், மாலை போல் துன்பம் செய்யும் பொழுதாகவும் கார்காலத்துள் மூதாய் விளையாடும் பொழுதாகவும் குறிக்கப்பட்டு மயங்குவது விளங்கும்.

**முல்லையுள் இரவுப்பொழுது**

முல்லைத்திணைப் பகுப்பில் முல்லை உரியுடன் இரவுப் பொழுது திணைமயக்கமாகக் குறிக்கப்பெறுகிறது. தலைவனின் வருகையை எதிர்நோக்கி ஆற்றியிருக்கும் தலைவி இரவுப் பொழுதில் துயரப்படுகின்றாள். இதனை,

**"அறிவர் கொல் வாழி - தோழி! - பொறிவரி**
**வெஞ்சின அரவின் பைந்தலை துமிய**
**நரை உரும் உரறும் அரை இருள் நடுநாள்,**
**நல் ஏறு இயங்குதொறு இயம்பும்**
**பல் ஆன் தொழுவத்து ஒரு மணிக்குரலே?"** (குறுந்.190: 3-7)

என்னும் அடிகள் விளக்கும். இதனுள் 'அரை இருள் நடுநாள்' எனக் குறிஞ்சித் திணைக்குரிய இரவுப் பொழுது குறிக்கப்படுகின்றது. தலைவி இரவுப் பொழுதுள் துன்புற்று ஆற்றியிருப்பதைத் தலைவன் கூற்றாலும் உணரமுடிகின்றது. தேர்ப்பாகற்குத் தலைவன் கூறும் கூற்றில் தலைவியாற்றியிருக்கும் வன்புலக்காட்டு நாட்டில் இடையனின் குழலும், தினைக்காவலரின் ஊதுகொம்பும் ஒருங்கு ஒலிக்கும் இரவுப்பொழுது குறிக்கப்படுகின்றது. இதனை,

**"வான் எனப் பூத்த பானாட் கங்குல்,**
**மறித் துரூஉத் தொகுத்த பறிப் புற இடையன்**
**தண் கமழ் முல்லை தோன்றியொடு விரைஇ,**
**வண்டு படத் தொடுத்த நீர் வார் கண்ணியன்**
**ஐது படு கொள்ளி அங்கை காய,**
**குறுநரி உளம்பும் கூர் இருள் நெடு விளி**
**சிறுகட் பன்றிப் பெரு நிரை கடிய**
**முதைப் புனம் காவலர் நினைத்திருந்து ஊதும்"**

(அகநா.94: 4-11)

என்னும் அடிகள் விளக்கும். இதனுள் திணை மயக்கமாக இடம்பெறுவது இரவுப் பொழுது, 'பானாட் கங்குல்' என்று குறிக்கப் பெறுகின்றது.

தலைமகன் தேர்ப்பாகற்குச் சொல்லுவதான பாடுபொருளில் இரவுப் பொழுது இடம்பெறும் திணைமயக்கத்தை இடைக்காடனார்,

**"இரு விசும்பு அதிர முழங்கி அர நலிந்து,**

**இகு பெயல் அழி துளி தலைஇ, வானம்**

**பருவம் செய்த பானாட் கங்குல்"** (அகநா.274: 1-3)

என்று குறிக்கின்றார். இவ்விரவு தலைவி ஆற்றியிருக்கும் பொழுதாகக் குறிக்கப்படுகிறது. தலைவி வன்புறை எதிரழிந்து கூறும் கூற்றில் தலைவன் பாசறையில் தங்கியிருக்கும் இரவுப்பொழுது,

**"காய்சின யானை கங்குல் சூழ,**

**அஞ்சுவர இறுத்த தானை**

**வெஞ்சின வேந்தன் பாசறையோரே"** (அகநா.264: 13-15)

என்று குறிக்கப்படுகிறது. தலைவன் கூற்றாக அமையும் முல்லையின் பாடுபொருளில் தலைவன் இரவில் துயரப்படுவது கூறப்படுகின்றது. இதனை,

**"தழங்குகுரல் முரசமொடு முழங்கும் யாமத்து,**

**கழித்து உறை செறியா வாளுடை எறுழ்த் தோள்,**

**இரவுத் துயில் மடிந்த தானை**

**உரவுச் சின வேந்தன் பாசறையேமே"** (அகநா.24: 15-18)

என்னும் அடிகள் குறிக்கும். வற்புறுத்தும் தோழிக்குத் தலைமகள் கூறும் கூற்றில் தலைவன் இரவுப்பொழுதான நிலையிலும் வரவில்லை என்பது குறிக்கப்படுகிறது. இதனை,

**"திரிமருப்பு எருமை இருள்நிற மைஆன்**

**வருமிடறு யாத்த பகுவாய்த் தெண்மணி,**

**புலம்புகொள் யாமத்து, இயங்குதொறு இசைக்கும்**

**இது பொழுது ஆகவும் வாரார் கொல்லோ"** (குறுந்.279: 1-4)

என்பது உணர்த்தும். இங்கு தலைவி ஆற்றியிருக்கும் இரவுப்பொழுது 'புலம்புகொள் யாமம்' எனக் குறிக்கப்படுகிறது.

ஆற்றியிருக்கும் தலைவி கார்கால மழையின் இடி முழக்கத்தை இரவில் கேட்டு வருந்துகின்றாள். இக்கூற்றுள் இரவு குறிக்கப்படுவதை,

**"............ ................ ................ பானாள்**

**இன்னும் தமியர் கேட்பின், பெயர்த்தும்**

**என் ஆகுவர் கொல், பிரிந்திசினோரே?"** (குறுந்.94: 3-5)

என்னும் அடிகள் உணர்த்தும். தலைவன் தலைவியின் ஊரைத் தேர்ப்பாகனுக்குக் கூறுமிடத்து அவ்வூர் இரவுப் பொழுதின் பின்புலத்துடன் கூறப்படுகிறது. இதனை,

**"யாமம் கொள்பவர் நாட்டிய நளிசுடர்**

**வானக மீனின் விளங்கித் தோன்றும்"** (அகநா.114: 11-12)

என்னும் அடிகள் உணர்த்தும். இவற்றால் முல்லைத்திணைப் பாடல்களில் இரவுப்பொழுது, திணைமயக்கமாகக் குறிக்கப்பெறுவது பெறப்படும்.

**குறிஞ்சித்திணையில் பொழுதுமயக்கம்**

குறிஞ்சித்திணைப் பகுப்பில் குறிஞ்சியின் உரிப்பொருளுடன்

கார்காலம், வேனிற்காலம், வைகறை, விடியல், நண்பகல் எனும் பொழுதுகள் திணைமயக்கமாக இடம்பெறுகின்றன.

**குறிஞ்சியுள் கார்காலம்**

குறிஞ்சித்திணைப் பகுப்பில் குறிஞ்சித்திணையின் பாடுபொருளுடன் கார்காலம் மயங்குவது பெறப்படுகின்றது. களவில் தலைவன் வரும் காலம் கார்காலமாகக் குறிக்கப்படுவதைக் காணமுடிகின்றது. இரவுக்குறி முகம்புக்க கூற்றில் தலைவன் கார் காலத்தில் வருவதும், கார்கால மின்னல் அவனுக்கு விளக்காகப் பயன்படுவதும் குறிக்கப்படுகிறது. இதனை,

***"மாரிநின்ற ஆர்இருள் நடுநாள்,***
***அருவி அடுக்கத்து, ஒருவேல் ஏந்தி,***
***மின்னுவசி விளக்கத்து வரும்..."*** (நற்.334:6-8)

என்பதால் அறியமுடியும். கார்கால இரவில் வருவதனால் அவனது காலில் நீர்ப்பாசிகள் சுற்றிக்கிடப்பதை,

***"மாரிக் குன்றத்துக் காப்பாள் அன்னன்;***
***தூவலின் நனைந்த தொடலை ஒள்வாள்,***
***பாசி சூழ்ந்த பெருங்கழல்,***
***தண்பனி வைகிய வரிக் கச்சினனே"*** (ஐங்.206:2-5)

என்னும் பாடல் உணர்த்துகின்றது. இதனை, "மாரிக்காலமாதலின் அவன் வரும் வழியில் இருந்த நீர்நிலைகளில் படர்ந்திருந்த நீர்ப்பாசி அவன் கழலைச் சுற்றிக் கிடந்தது"[15] என்று விளக்குவர். தலைவனின் குறியிட வரவு, கார்காலத்தில் அமைதலின், அவன் கார்காலத்தே மலரும் மலர்களை

அணிந்து வருவதாகக் குறிக்கப்படுகின்றான். இதனை,

**"நீர் இழி மருங்கின் ஆர் இடத்து அமன்ற**
**குளவியொடு மிடைந்த கூதளங் கண்ணி**
**அசையா நாற்றம் அசைவளி பகர,**
**துறுகல் நண்ணிய கறிஇவர் படப்பைக்**
**குறிஇறைக் குரம்பை நம் மனைவயின் புகுதரும்"**

(அகநா.272: 7-11)

என்னும் அடிகள் உணர்த்தும். கார்காலத்தே மலரும் வேங்கை மலரைத் தலைவன் அணிந்து வருவதை,

**"சாரல் வேங்கைப் படுசினைப் புதுப்பூ**
**முருகு முரண் கொள்ளும் உருவக் கண்ணியை"**

(அகநா.288: 3-4)

**"மணி மருள்மாலை, மலர்ந்த வேங்கை**
**ஒண்தளிர் அவிர்வரும் ஒலிகெழு பெருஞ்சினைத்**
**தண்துளி அசைவளி தைவரும் நாட"** (அகநா.298: 4-6)

என்னும் பாடலடிகள் உணர்த்தும். இரவுக்குறி கார்காலத்தில் நிகழ்வதால் குறியிடத்திற்கு வந்து செல்லும் தலைவி கார்கால மலர்களைச் சூடிச் செல்வதைக் காணமுடிகின்றது. இதனை,

**"அரைநாள் யாமத்து விழுமழை கரந்து,**
**கார்விரை கமழும் கூந்தல்"** (அகநா.198: 4-5)

**"கார் மலர் கடுப்ப நாறும்**
**ஏர் நுண் ஓதி மாஅயோளே!"** (அகநா.208: 23-24)

என்னும் அடிகள் விளக்கும். தலைவன் கார்கால மழையில் நனைந்து வருவதால், அவன் கார்கால மழையில் நனைந்த யானையுடன் ஒப்புமை செய்யப்படுகிறான். இதனை,

**"மாரி யானையின் வந்து நின்றனனே"** (குறுந்.161: 7)

என்னும் அடியுணர்த்தும். தலைவன் இரவுக்குறியிடத்திற்கு வரும் காலம் கார்காலமாக அமைதலின் இரவுக் குறியிடையீட்டிற்கு கார்காலம் காரணமாக உரைக்கப்படுகிறது. கார்காலத்தால் வழியிடையே தலைவனுக்கு ஏற்படும் ஏதங்கள் குறிக்கப்படுகின்றன. இதனை

**"கல் அதர் மன்னும் கால் கொல்லும்மே;**
**கனை இருள் மன்னும் கண் கொள்ளும்மே**
........... ........... ............. .............
**ஓங்கு மலைநாடன் வரூஉம் ஆறே"** (நற்.158: 3-4, 9)

என்னும் அடிகள் உணர்த்தும். இதனுள் குறிக்கப்படும் 'கனையிருள்' கார்காலத்தைக் குறித்து நிற்கிறது. இதனை, "கனையிருள் பேரிருள் அஃதாவது மாரிக்காலத்துக் காரிருள் ஏனைக் காலத்த இருள் விண்மீன்களின் ஒளியால் செறிவின்றி இருத்தல் அறிக"(16) என்பர். கார்காலத்தால் தலைவனுக்கு வரும் ஏதத்தை,

**"இருள் கிழிப்பது போல் மின்னி, வானம்**
**துளி தலைக் கொண்ட நளிபெயல் நடுநாள்,**
............. ............... ............... ...............

**ஆறே அரு மரபினவே; யாறே**

**சுட்டுநர்ப் பனிக்கும் சூருடை முதலைய;"** (அகநா.72: 1-2, 7-8)

என்னும் பாடல் அடிகளும்,

**"மாரி வானம் தலைஇ நீர் வார்பு**
**இட்டு அருங்கண்ண படுகுழி இயவின்,**
**இருளிடை மிதிப்புழி நோக்கி, அவர்**
**தளர்அடி தாங்கிய சென்றது, இன்றே?"** (அகநா.128: 12-15)

என்னும் அடிகளும்,

**"யானே அன்றியும், உளர்கொல் – பானாள்,**
**பாம்புடை விடர ஓங்கு மலை மிளிர,**
**உருமுச் சிவந்து எறியும் பொழுதொடு, பெருநீர்**
**போக்கு அற விலங்கிய சாரல்,**
**நோக்கு அருஞ்சிறு நெறி நினையுமோரே?"** (நற்.104: 8-12)

என்னும் அடிகளும் உணர்த்துகின்றன. இதனுள் தலைவனுக்குக் கார்காலத்தால் வரும் இரவுக்குறி ஏதம் எண்ணித் தலைவி வருந்துவது புலப்படும். இதனை, "கார்காலத்தே இக்களவு நிகழ்தலின் அப்போது பகற் காலத்தும் கார் மழை பரந்து கதிரவனை மறைத்தலின் இரவுப்போது போல இருண்டு தோன்றுமாக நள்ளிரவில் பேரிருளும் பெருமுழக்கொடு கூடிய இடியும் மழையும் கலந்து இயங்குவோர்க்கு மிக்க இடுக்கண் செய்யும் என்பதை நெஞ்சால் நினைத்துக் கலங்குகின்றாள்"(17) என்று விளக்குவர். தலைமக்களின் சந்திப்பு கார்காலத்தில் நிகழ்தலின் தலைவனை வரைவுகடாவும் தோழி தனது கூற்றைத் தலைமகன்

சிறைப்புறமாகக் கார்கால மழைக்குக் கூறுவதாக அமைக்கின்றாள். இவ்வமைப்பில் கார்காலம் திணைமயக்கமாகக் குறிக்கப்படுவதை,

**"மின்னுடைக் கருவியை ஆகி, நாளும்**
**கொன்னே செய்தியோ, அரவம்? பொன்என**
**மலர்ந்த வேங்கை மலிதொடர் அடைச்சி,**
**பொலிந்த ஆயமொடு காண்தக இயலி,**
............ ................ ................ ................
**குறமகள் காக்கும் ஏனல்**
**புறமும் தருதியோ வாழிய, மழையே"** (அகநா.188: 7-10, 13-14)

என்னும் அடிகளின் வழிப்பெறமுடியும். கார்காலத்தால் தலைவனுக்கு, வரும் ஏதத்துக்கு வருந்தியும், தலைவன் ஏதங்களைக் கடந்து வருதற்கு வியந்தும் கூறும் தோழியின் கூற்றில் கார்காலம்,

**"பெயல்கால் மறைத்தலின், விசும்பு காணலரே;**
**நீர் பரந்து ஒழுகலின், நிலம் காணலரே;**
............ ................ ................ ................
**வேங்கை கமழும் எம் சிறுகுடி**
**யாங்கு அறிந்தனையோ? நோகோ யானே."**(குறுந்.355: 1-2, 6-7)

என்னும் பாடல் உணர்த்துகின்றது. பகற்குறி வருக எனக் கூறும் தோழி, கார்கால மழையால் தலைவனுக்கு வரும் ஏதங்களுக்குத் தலைவி அஞ்சுவதைக் குறிக்கின்றாள். இதனை,

**"படுமழை பொழிந்த பானாட் கங்குல்,**
**ஆர் உயிர்த் துப்பின் கோள் மா வழங்கும்**

**இருளிடைத் தமியன் வருதல் யாவதும்**

**அருளான் – வாழி, தோழி!"** (அகநா.108:8-12)

என்னும் பாடல் அடிகள் உணர்த்தும். வரைவுகடாவும் தோழி கார்காலத்தால் தலைவனுக்கு வழியிடையே நிகழும் ஏதங்களைக் குறிக்கின்றாள். இதனை,

**"............ ................ ............. மின்னு வசிபு**

**இருள் தூங்கு விசும்பின் அதிரும் ஏறொடு**

**வெஞ்சுடர் கரந்த கமஞ்சூல் வானம்,**

**நெடும்பல் குன்றத்துக் குறும்பல மறுகி,**

**தாஇல் பெரும் பெயல் தலைஇய யாமத்து,**

**................ .............. ............... .................**

**பெருவரைச் சிறுநெறி வருதலானே"** (நற்.261: 1-5, 10)

என்னும் பாடல்அடிகளும்,

**"கானமும் கம்மென்றன்றே, வானமும்**

**வரை கிழிப்பன்ன மைஇருள் பரப்பி,**

**பல்குரல் எழிலி பாடு ஓவாதே,**

**................ ................ ................. ................**

**வாரார் ஆயினோ நன்றே..........."** (நற்.154: 1-3..., 10)

என்னும் பாடலடிகளும் உணர்த்தும். இதனுள் 'கார்காலம் மைஇருள் பல்குரல் எழிலி' என்னும் சொற்களால் குறிக்கப்படுகின்றது. இதனை, "கார்காலத்துப் படரும் முகிற் கூட்டம் செறிந்து வானமுற்றும் பரந்து நிற்ப நிலவும் இருள் கண்ணுக்குத் தீட்டும் கண் மையினும் கரிதாய்த் தோன்றுதலின் மையிருள் என்றல் வழக்காயிற்று. ஒரு பால் குமுறலும்

ஒருபால் உரட்டலும் ஒருபால் வெடித்தலும் எனப் பல்வேறு வகையில் முழங்குவது பற்றிப் பல்குரல் எழிலி என்றார்""[18] என்று விளக்குவர்.

பகற்குறி நேர்வாள் போன்று வரைவு கடாவும் தோழியின் கூற்றில் கார்காலம் குறிக்கப்படுகிறது. தோழி தோன்றிப் பூவுடன் வேங்கை மணக்கும் மலைச்சாரலின் கண்ணே வருக எனக் குறிக்கின்றாள்.

**"வண்டு இறை கொண்ட எரி மருள் தோன்றியொடு,**

**ஒண்பூ வேங்கை கமழும்**

**தண்பெருஞ் சாரல் பகல் வந்தீமே!"** (அகநா.218: 20-22)

இதனுள் கார்காலம் பகற்குறிக்குரிய காலமாகக் குறிக்கப்படுகிறது. பகற்குறி இயலா என்பதைக் கூறி வரைவுகடாவும் தோழியின் கூற்றில் கார்காலத்தால் பகற்குறிக்கு வரும் இடையூறு குறிக்கப்படுகிறது. இதனை,

**"கருங் காற் செந்தினை கடியுமுண்டன;**

**கல்லக வரைப்பில் கான்கெழு சிறுகுடி**

**மெல் அவல் மருங்கின் மௌவலும் அரும்பின;"** (நற்.122:2-4)

என்னும் அடிகளின் வழி உணரமுடியும். இதனுள் 'மௌவல் அரும்பின' என்பதால் கார்காலம் குறிக்கப்படுகின்றது. இதனை, "கூடுவார்க்கு இனிமை தரும் கார்காலம் வந்தமையை மௌவலும் அரும்பின எனக் குறித்தாள்"[19] என விளக்குவர். இவற்றால் கார்காலத்தால் பகற்குறிக்கு இடையீடு தோன்றியதைப் பாடுமளவில் குறிஞ்சியுள் முல்லை மயங்குவதை உணரமுடிகின்றது.

தலைமகனை வரைவுகடாவும் தோழி, பகற்குறியும் இரவுக்குறியும் நிகழ்தற்கு இயலா என்பதைக் குறிக்கின்றாள். இக்கூற்றுள் பகல் இரவுக்குறியின் இடையீட்டிற்குக் கார்கால இயல்பு காரணமாகக் குறிக்கப்படுகிறது. இதனை,

**"ஏனலும் இறங்குபொறை உயிர்த்தன ; பானாள்**
**நீ வந்து அளிக்குவை எனினே மால்வரை**
**மைபடு விடரகம் துழைஇ, ஒய்யென**
**அருவி தந்த அரவு உமிழ், திருமணி**
**பெருவரைச் சிறுகுடி மறுகு விளக்குறுத்தலின்,**
**இரவும் இழந்தனள்..."** (அகநா.192: 8-13)

என்னும் பாடலுள் காணமுடியும்

குறிஞ்சித்திணைப் பாடல்களில் குறிஞ்சிநிலம் கார்கால இயல்புடன் கூறப்படுவதைக் காணமுடிகின்றது. இதனை வரைவு நீட்டிப்பில் தலைவி கூறுவதாக அமையும் குறிஞ்சியின் பாடுபொருளில் பெருங்குன்றூர்க்கிழார்,

**"முழங்கு கடல் முகந்த கமஞ்சூல் மா மழை**
**மாதிர நனந்தலை புதையப் பாஅய்**
**ஓங்குவரை மிளிர ஆட்டி பாம்பு எறிபு,**
**வான்புகு தலைய குன்றம் முற்றி,**
**அழிதுளி தலைஇய பொழுதில், புலையன்**
**பேழ் வாய்த் தண்ணுமை இடம் தொட்டன்ன**
**அருவி இழிதரும் பெருவரை நாடன்"** (நற்.347: 1-7)

என்றுரைப்பர். இத்தகைய அமைப்பில்,

**“கலிமழை கெழீஇய கான்யாற்று இகுகரை,**

**ஒலிநெடும் பீலி துயல்வர இயலி,**

**ஆடுமயில் அகவும் நாடன்...”** (குறுந்.264:1-3)

என்றும்,

**“உயர்முகை நறுங்காந்தள் நாள்தோறும் புதிதுஊன,**

**அயன் நந்தி அணிபெற அருவி ஆர்த்து இழிதரும்**

**பயமழை தலைஇய பாடுசால் விறல் வெற்ப!”** (கலித் .53:5-7)

என்றும் குறிப்பர் கபிலர். வரைவுகடாவும் தோழி தலைவனிடம், தலைவியை ‘நின் ஊருக்குக் கொண்டு செல்க’ என்கிறாள். இக்கூற்றுள் குறிஞ்சி நிலம் கார்கால இயல்புடன் கூறப்படுகிறது. இதனை,

**“கொண்டனை சென்மோ – நுண்பூண் மார்ப!**

**துளிதலைத் தலைஇய சாரல் நளி சுனைக்**

**கூம்புமுகை அவிழ்த்த குறுஞ்சிறைப் பறவை**

**வேங்கை விரிஇணர் ஊதி, காந்தள்**

**தேனுடைக் குவிகுலைத் துஞ்சி, யானை**

**இருங்கவுட் கடாஅம் கனவும்,**

**பெருங்கல் வேலி, நும் உறைவு இன் ஊர்க்கே”**(அகநா.132:8-14)

என்னும் அடிகள் உணர்த்தும். தலைவன், ‘இத்தினைப்புனக் காவலும் உமதோ’ என வினவும் குறிஞ்சித்திணைக் கூற்றில் கார்காலம்,

**“கருவி மாமழை வீழ்ந்தென, எழுந்த**

**செங்கேழ் ஆடிய செழுங்குரற் சிறுதினை”** (நற்.213:8-9)

என்று குறிக்கப்பெறுகிறது.

தலைவன் வரையும்பொருட்டு, ‘கார்காலத்தே வருவேன்’ எனக் கூறிச் சென்றது பெறப்படுகின்றது. தலைவன் வரைதற்கு வரவில்லையே என வருந்தும் தலைவிக்கு கார்காலம் வரின் தலைவர் வருவர் என ஆற்றுவிக்கிறாள் தோழி. இதனை,

**“சிறுபல் கருவித்து ஆகி, வலன் ஏர்பு,**

**பெரும்பெயல் தலைக புனனே!...”** (நற்.328:6-7)

என்பதால் உணரமுடிகின்றது. தலைவன் வரைவிற்கு வந்த மகிழ்ச்சியைக் குறிக்கும் குறிஞ்சித் திணைப்பாடலில் கார்கால மழை கூறப்படுகிறது. இதனை,

**“பெரும் பெயல் பொழிந்த ஏம வைகறை,**

**பல்லோர் உவந்த உவகை எல்லாம்**

**என்னுள் பெய் தந்தற்றே - சேண் இடை**

**ஓங்கித் தோன்றும் உயர்வரை**

**வான்தோய் வெற்பன் வந்த மாறே!”** (அகநா.42: 10-14)

என்பதால் பெறமுடிகின்றது. தலைவியின் நெற்றி நறுமணத்திற்கு கார்கால மலர்கள் கூறப்படுவதைக் காணமுடிகிறது. இதனை,

**“நளிமுகை உடைந்த நறுங் கார் அடுக்கத்து,**

**போந்தை முழுமுதல் நிலைஇய காந்தள்**

**மென்பிணி முகை அவிழ்ந்து அலர்ந்த**

**தண்கமழ் புதுமலர் நாறும் நறு நுதற்கே”** (அகநா.238: 15-18)

என்ற அடிகளும்,

**"மழை சேர்ந்து எழுதரு மாரிக் குன்றத்து,**

**அருவி ஆர்ந்த தன்நறுங் காந்தள்**

**முகை அவிழ்ந்து, ஆனா நாறும் நறுநுதல்,"** (குறுந். 259:1-3)

என்னும் பாடலடிகளும் விளக்கும். பிச்சி எனப்படும் பித்திகம் புறப்பகுதியில் சிவப்பாய் இருக்கும் தன்மையின் அடிப்படையில் தலைவியின் கண்ணிற்கு உவமையாகக் கூறப்படும். இவ்வுவமை குறிஞ்சிப் பாடுபொருளுடன் அமையும் நிலையில் பித்திகம் பூக்கும் கார்காலமும் திணை மயக்கமாகக் குறிக்கப்பெறுகிறது. இதனை,

**"மலிபெயல் கலித்த மாரிப் பித்திகத்துக்**

**கொயல் அருநிலைஇய பெயல் ஏர் மணமுகைச்**

**செவ்வெரிந் உறழும் கொழுங் கடை மழைக்கண்"**(அகநா.42: 1-3)

என்னும் அடிகளின் வழி அறியமுடிகின்றது. இதனுள் மாரி என்பது கார்காலத்தைக் குறித்து நிற்கின்றது. இதனை, "பித்திகம் மாரிக்காலத்தே தழைத்து அக்காலத்து அந்தியில் மலர்வது"[20] என்பர்.

தலைவியின் மென்மையான விரல்களைக் கூறுமிடத்து கார்காலம்,

**"ஆடுமழை தவழும் கோடு உயர் பொதியில்**

**ஓங்கு இருஞ் சிலம்பில் பூத்த**

**காந்தள் அம் கொழுமுகை போன்றன, சிவந்தே."**(நற்.379: 11-13)

என்றும், தலைவியின் உள்ளம் வருந்துவதைக் கூறுமிடத்து

**"ஏறுடை மழையின் கலுழும், என் நெஞ்சே"** (குறுந்.176: 7)

என்றும்,

தலைவியின் கூந்தலில் தடவப்பெற்றுள்ள குழம்பினுள் உள்ள சந்தனத்தைக் குறிக்குமிடத்து,

**"கொண்டல் மாமழை குடக்கு ஏர்பு குழைத்த**

***சிறுகோல் இணர பெருந்தண் சாந்தம்"*** (நற்.140: 1-2)

என்றும் கார்காலம் குறிக்கப்படுகிறது. இவற்றால் குறிஞ்சித்திணைப் பாடல்களில் கார்காலம் குறிக்கப்பெறுவதை உணரமுடியும். தினைப்புனக் காவலர்களால் விரட்டப்பட்ட யானை ஏற்படுத்தும் முழக்கத்தைக் குறிக்குமிடத்து கார்காலத்து இடிமுழக்கம் கூறப்படுகிறது. இவ்வாறு குறிஞ்சிப் பாடலில் முல்லை குறிக்கப்படுவதை,

***"கார்ப்பெயல் உரமின் பிளிறி"*** (குறிஞ்சிப். 162)

என்னும் அடிகள் கொண்டு விளங்கமுடியும்.

**குறிஞ்சியுள் வேனிற்காலம்**

குறிஞ்சியின் பாடுபொருளுடன் வேனிற்காலம் மயங்குவதைக் குறிஞ்சித் திணைப்பகுப்பில் அறியமுடிகின்றது. இரவு வந்து ஒழுகுங்காலை முன்னிலைப் புறமொழியாக நிலாவிற்கு உரைப்பாளாகத் தோழி கூறும் குறிஞ்சித்திணைக் கூற்றில், தலைவன் வேனிற்காலத்து இரவில் வந்தான் என்பது அறியப்படுகிறது. இதனை,

**"கருங்கால் வேங்கை வீஉகு துறுகல்**

**இரும்புலிக் குருளையின் தோன்றும் காட்டிடை**

**எல்லி வருநர் களவிற்கு**

**நல்லை அல்லை-நெடு வெண்ணிலவே!"** (குறுந்.47)

என்னும் பாடலால் அறியமுடியும். இதனுள் தலைவன் இரவுக்குறியிடத்திற்கு வந்த வேனிற்காலம் 'வேங்கை வீயுகு' என்பதால் அறியப்படும். இதனுள் இடம் பெறும் பொழுது மயக்கத்தை, "இது காலமயக்கம் குறிஞ்சியில் வரவேண்டிய கூதிர் காலத்திற்குப் பதிலாக வேனில் வந்தது. வேங்கை பூத்து உதிருங்காலம் வேனிலாதலின் இங்ஙனம் உரைத்தார்"(21) என்பர். இதனால் வேனிற் காலத்துக் களவு வாழ்க்கை திணையிலக்கிய மரபில் குறிஞ்சியுள் வேனில் மயங்கிய திணைமயக்கப் பாடலாகப் பாடப்பெறும் என்பது விளங்கும்.

குறிஞ்சித் திணைப்பாடலில் திணைக் காவலர் கள்ளுண்டு மயங்கிய செய்தி கூறப்படுகிறது. அக்கள்ளானது மா, பலா, தேன் முதலியன கலந்ததாகும். கள்ளுள் கலக்கப்பட்டிருக்கும் மாவினைக் குறிக்குமிடத்து மாங்கனி கிடைக்கும் கோடைகாலமும் திணை மயக்காகக் கூறப்படுகிறது. இதனை,

**"கோடைக்கு ஊழ்த்த கமழ் நறுந் தீம்கனி,**
**பயிர்ப்புறப் பலவின் எதிர்ச்சுளை அளைஇ,**
**இறாலொடு கலந்த, வண்டு மூசு, அரியல்"** (அகநா.348: 3-5)

என்னும் பாடல் வழிக் காணமுடிகின்றது. இதனுள் இடம்பெறும் பொழுதுமயக்கம் 'கோடைக்கு ஊழ்த்த' என்பதால் உணரப்படும்.

களவில் தலைவன் தலைவியை நினைந்து மெலிகின்றான் என்பதைக் கூறுமிடத்து,

**"வேனில் ஆனேறு போலச்**

**சாயினன் என்ப- நம் மாண் நலம் நயந்தே"** (குறுந். 74: 4-5)

என்று வேனிற்காலம் கூறப்படுகிறது. இது உவமையின் வழி மயங்கும் திணைமயக்கமாகிறது. இதனை, "வேனிற் காலத்தில் பசு விடையை நினைத்து மெலிதலும், பசுவை நினைத்து விடைமெலிதலும் உலகியலாகும். இவ்வுவமை களவுக் காலத்தில் காப்புக் கைம் மிகுதியால் தலைவனைப் பெற முடியாது வருந்தும் தலைவிக்கும் தலைவியை அடையப் பெறாது வருந்தும் தலைவனுக்கும் ஏற்ப அமைந்துள்ளது"[22] என்பர்.

தலைவியின் அழகு பசலையால் மறைக்கப்பட்டு உள்ளிருப்பதைக் குறிக்கும் போது, வேனிற் காலத்தில் தவளை மணலுள் புதைந்திருப்பது கூறப்படுகின்றது. இதனை,

**"வேனில் தேரையின் அளிய**

**காண விடுமோ – தோழி என்நலனே?"** (நற்.347:10-11)

என்னும் அடிகள் உணர்த்தும். இவற்றால் குறிஞ்சித் திணைப் பாடல்களில் வேனிற்காலம் பொழுது மயக்கமாகக் குறிக்கப்பெறுவது விளங்கும்.

**குறிஞ்சியுள் வைகறை விடியல்**

இரவுக்குறி வந்து நீங்கும் தலைமகனின் கூற்றாக அமையும் குறிஞ்சியின் பாடுபொருளில், தலைவி இரவுக்குறியில் அணிந்த மலர்களை உதிர்த்து, தமது கூந்தலுக்கு எண்ணெய் தடவி முகக் குறிப்புக்களையும் மாற்றிக் கொண்டு, தனது சுற்றத்தாருடன் இருக்கும் வைகறைப் பொழுது கூறப்படுகின்றது. இதனை,

**"நன்னென் கங்குல் நம் ஓரன்னள்**

**கூந்தல் வேய்ந்த விரவுமலர் உதிர்த்து**

**சாந்து உளர் நறுங் கதுப்பு எண்ணெய் நீவி,**

**அமரா முகத்தள் ஆகித்**

**தமர் ஓரன்னள் வைகறையானே"** (குறுந்.312: 4-8)

என்னும் அடிகளின் வழிப் பெறமுடிகின்றது. இதனால் குறிஞ்சியின் பாடுபொருளுடன் மருதத் திணைக்குச் சிறந்துரிய வைகறை திணை மயக்கமாகக் குறிக்கப்பெறுவது உணரப்படும். தலைவனை வரைவுகடாவும் தோழி வைகறைக் காலத்தே வந்து வரைக எனக் குறிக்கின்றாள். இதனை,

**"........பொதி அவிழ் வைகறை வந்து, நீ குறை கூறி,**

**வதுவை அயர்தல் வேண்டுவல்..."** (கலித்.52: 22-23)

என்னும் அடிகள் உணர்த்தும். இதில் பொதி அவிழ் வைகறை என்பது மலர்கள் பொதி அவிழும் வைகறை என்று மருதப் பொழுதைக் குறிக்கிறது. தோழி வரைவு மலிந்து சொல்வதாக அமையும் குறிஞ்சியின் பாடுபொருளுடன் அற்சிரக் காலத்துள் மழை பெய்த வைகறைப் பொழுது குறிக்கப்படுகிறது. இது,

**"கொண்டல் வான்மழை பொழிந்த வைகறைத்**

***தண் பனி அற்சிரம்..........."*** (அகநா. 178: 18-19)

என்பதால் உணரப்படும். இப்பாடுபொருளில், வைகறை திணைமயக்கமாக இடம்பெறுகிறது. காந்தள் மலர்கள் சுனைப் பாறைகளில் அழகுடன் காணப்படும் விடியல் காலம் குறிஞ்சியின் கூறப்படுவதை,

**"விடியல் வெங்கதிர் காயும் வேய் அமல் அகல் அறை**

**கடிசுனைக் கவினிய காந்தளங் குலையினை"**(கலித்.45: 1-2)

என்னும் அடிகளில் காணமுடிகின்றது.

குறிஞ்சிப் பாடலில், குறிஞ்சி நிலத்து அருவி விடியற்காலையில் பெய்த மழையால் தோற்றம் பெற்று வருவதாகக் குறிக்கப்படுகிறது. இதனை,

**"நாள் மழை தலைஇய நல் நெடுங்குன்றத்து**

**மால்கடல் திரையின் இழிதரும் அருவி"** (நற்.17:1-2)

என்பது உணர்த்தும். மாலையில் பெய்த மழையால் குறிஞ்சி நிலத்துள் அருவி விடியற்காலையில் வருவதாகக் குறிக்கப்பட்டு குறிஞ்சியுள் மருதம் மயங்குவதை,

**"மாலைப் பெய்த மணம்கமழ் உந்தியொடு**

**காலைவந்த முழுமுதற் காந்தள்"** (குறுந். 361:3-4)

**"ஆலி அழி துளி பொழிந்த வைகறை,**

**வால்வெள் அருவிப் புனல் மலிந்து ஒழுகலின்,"**(அகநா. 308:3-4)

என்பன உணர்த்தும். குறிஞ்சிக் கருப்பொருளான யானை முதலியன, உணவு உண்ணும் விடியற்காலப்பொழுது குறிஞ்சிப் பாடுபொருளுடன் குறிக்கப்படுகிறது. இதனை,

**"சூல்முதிர் மடப்பிடி, நாள்மேயல் ஆரும்"** (நற்.116:5)

**"உருவத் துருவின், நாள்மேயல் ஆரும்"** (நற்.192:4)

என்னும் அடிகள் விளக்கும். மயில் ஆடும் விடியற்கால இளவெயில் குறிஞ்சியின் பாடுபொருளுடன் குறிக்கப்படுகிறது. இதனை,

**"......... ........... இளவெயில் உணீஇய, ஓங்குசினைப்**

**பீலி மஞ்ஞை பெடையோடு ஆலும்"** (நற்.288: 2-3)

என்னும் பாடலடிகளும்,

**"கமழ்தாது ஆடிய கவின்பெறு தோகை**

**பாசறை மீமிசைக் கணம் கொள்பு, ஞாயிற்று**

**உறுகதிர் இளவெயில் உண்ணும்..."** (நற்.396: 5-7)

என்னும் பாடலடிகள் விளக்கும். தலைவியின் மேனியழகிற்கு ஒப்புமை செய்யப்படும். மலர், விடியற்காலையில் மலர்ந்ததாகக் கூறப்பெறுகிறது. இதனை,

**"நீள்மலைக் கலித்த பெருங்கோற் குறிஞ்சி**

**நாள்மலர் புரையும் மேனி..."** (நற்.301: 1-2)

என்பதால் அறியமுடிகின்றது. தலைவன் வரைவிற்கு வந்தவிடத்து தலைவி எய்திய மகிழ்ச்சிக்கு, வைகறையில் அருள் பெற்றவன் உவமையாகக் கூறப்படுகிறான். இங்கு குறிஞ்சியுள் வைகறை குறிக்கப்படுகிறது. இதனை,

**"........... ........... ........... வைகறை**

**அருள் வல்லான் ஆக்கம் போல் அணிபெறும்**

**............ ............ ............ .............**

**........... ............... .............. வைகறை**

**திறம் சேர்ந்தான் ஆக்கம்போல திருத்தகும்"**(கலித்.38:15-16,19-20)

என்பது உணர்த்தும்.

**குறிஞ்சியுள் பகற்பொழுது**

தலைவனைப் பகற்குறியிடத்துக்கு வருக எனக் கூறும் கூற்றில் பகற்பொழுது குறிக்கப்படுகிறது.

**"தினைகிளி கடிதலின் பகலும் ஒல்லும்"** (குறுந்.217: 1)

**"பகல் நீ வரினும் புணர்குவை"** (அகநா.18: 16)

**"கடும்பகல் வருதல் வேண்டும்"** (அகநா.182: 13)

**"பகலும் பெறுவை இவள் தடமென் தோளே"** (கலித்.49:25)

**" .............. ................ .............. பகலே**

**பாடுஇன் அருவி ஆடுதல் இனிதே"** (குறுந்.353:2-3)

பகற்குறி மறுத்துரைக்கும் கூற்றிலும் பகற்பொழுது குறிக்கப்படுகிறது.

**"பகல்வரின் கவ்வை அஞ்சுதும்"** (அகநா.118: 6)

**"கடும்பகல் வழங்காதாஅங்கு, இடும்பை**
**பெரிதால் அம்ம இவட்கே"** (அகநா.148: 10-11)

இவற்றால் குறிஞ்சித்திணைப் பாடல்களில் பகற்பொழுது குறிக்கப்பெறுவதைக் காணமுடியும்.

**குறிஞ்சியுள் எற்படு**

பகல் வருவானை இரவுக்குறி நேர்ந்தாள் போன்று வரைவுகடாவும் தோழி பகற் குறியின் முடிவுப் பொழுதான எற்படு பொழுதில் கூற்று நிகழ்த்துவதை அறிய முடிகின்றது. இதனை,

**"கல்லென் கானத்துக் கடமா ஆட்டி**

**எல்லும் எல்லின்று ஞமலியும் இளைத்தன**

**செல்லல்- ஐஇய!-உது எம் ஊரே"** (குறுந்.179:1-3)

என்னும் அடிகள் உணர்த்தும். இதனால் குறிஞ்சியின் பாடுபொருளுடன் எற்படு இயைபுபடுதல் உணரப்படுகிறது. தோழி அறத்தோடு நிற்கும் குறிஞ்சியின் பாடுபொருளில் தலைவி எற்படு பொழுதில் தலைவனின் ஊரை நோக்கி வருந்துவாள் என்பது கூறப்படுகிறது. இதனை,

**"பகல் மாய் அந்திப் படுசுடர் அமையத்து**

**அவன் மறை தேஎம் நோக்கி மற்று இவன்**

**மகனே தோழி! என்றனள்"** (அகநா.48: 23-25)

என்பது உணர்த்தும். குறிஞ்சியில் தினைப்புனக்காவல் செய்யும் பொருட்டுச் செல்வோர் எற்படு பொழுதில் வருவர் எனக் குறிக்கப்படுகிறது. இதனை,

**"நல்கோட் சிறுதினைப் படுபுள் ஓப்பி,**

**எல்பட வருதியர் .......... ............."** (குறிஞ்சிப்.38-39)

என்னும் அடிகளின் வழி உணரமுடியும்.

**குறிஞ்சியுள் மாலை**

தலைவன் சிறைப்புறமாகத் தோழி சொல் எடுக்குமிடத்து, களவில் மாலைக் காலத் துயரம் தலைவியால் ஆற்றுதற்கு அரிது என்பது குறிக்கப்பெறுகிறது. இதனை,

**"சுடர் கெழு மண்டிலம் அழுங்க, ஞாயிறு**

**குடகடல் சேரும் படர் கூர் மாலையும்,**

***அனைத்தும், அடூஉ நின்று நலிய உஞற்றி***

***யாங்ஙனம் வாழ்தி? - - - -"*** (அகநா.378:14-17)

என்னும் அடிகளால் உணரமுடியும். பகற்குறி வந்து நீங்கும் தலைமகன் மாலையில் செல்வதாகவும், அந்நிலையில் தலைவி மாலைப் பொழுதால் ஆற்றாது துயரமடைவதாகவும் பாடப்பெறுகின்றது. இங்கு குறிஞ்சியுள் மாலை எனும் முல்லைத் திணைக்குரிய பொழுது மயங்குகிறது. இம்மயக்கம்,

***"புதல் மலர் மாலையும் பிரிவோர்***

***அதனினும் கொடிய செய்குவர்..."*** (ஐங்.215: 5-6)

என்னும் அடிகளால் விளங்கும். தோழி அறத்தொடுநிற்கும் பாடுபொருளை உடைய குறிஞ்சிப் பாட்டுள் இயற்கைப் புணர்ச்சியின் பின் தலைவன் யாவரும் அறியும்படித் திருமணம் நிகழ்த்துவோம்; வருந்தாதே என்று கூறிப் பிரியும் மாலைக் காலம் கூறப்படுகின்றது. இத்திணைமயக்கத்தைக் குறிக்கும் கபிலர் மாலைக் கால நிகழ்வுகளைப் பட்டியலாக அமைக்கின்றார். மான் கூட்டங்கள் மரங்களின் கீழ் கூடும். பசுக் கூட்டங்கள் மன்றுகளில் புகும். அன்றில் தம் பேடுகளை அழைக்கும். பாம்புகள் மாணிக்க மணிகளை உமிழும். கோவலர் ஆம்பல் குழலை எழுப்புவர். ஆம்பல் மலர் தளையவிழ்ந்து மலரும். அந்தணர் அந்திக் காலக் கடன்களைச் செய்வர். மகளிர் மனைகளில் விளக்கேற்றி அந்தியில் செய்யும் செயல்களைச் செய்வர். காட்டில் வாழ்பவர் பரண்களின் மேல் நெருப்பை உண்டாக்கி எரிப்பர். பெரிய மேகம் முழங்கும். காட்டில் உள்ள விலங்குகள் ஒன்றை ஒன்று அழைக்கும். பறவைகள் தம் கூடுகளில்

ஆரவாரம் செய்யும். என்று மாலைக்கால இயல்புகள் கூறப்படுவதைக் குறிஞ்சிப் பாட்டினுள் காணமுடிகின்றது."(23)

இம்மாலைக் காலத்தில் தலைவன் தலைவியிடம் இருந்து பெயரும் குறிஞ்சியின் நிகழ்வை,

**"சினைஇய வேந்தன் செல்சமம் கடுப்பத்**
**துனைஇய மாலை துன்னுதல் காணூஉ**
**நேர் இறை முன்கை பற்றி, நுமர்தர**
**நாடு அறி நல்மணம் அயர்கம்; சில்நாள்**
**கலங்கல் ஓம்புமின், இலங்கு இழையீர்! என**
**............ .............. ............... ................**
**உண்துறை நிறுத்துப் பெயர்ந்தனன்"** (குறிஞ்சிப். 229-233, 237)

என்னும் அடிகள் உணர்த்தும். இங்கு குறிஞ்சியின் பாடுபொருளுடன் முல்லைத் திணையின் மாலைக் காலம் மயங்குகின்றது. இதனுள் காணப்படும் திணைமயக்கத்தை, "இப்பகுதி குறிஞ்சியில் முல்லைக்குரிய மாலைக் காலத்தின் மயக்கம் உணர்த்துவதாகும். யாமத்திற்குரிய சூழலை உருவாக்கித் தருவதால், மாலைப் பொழுதின் இயல்புகளும் ஈண்டு உரைக்கப்பட்டன. அன்றியும் தோழியிற் கூட்டத்தின் பின் நாடறி நன்மணம் கருதி, தலைவி கற்பு நெறிப்படரும் முல்லை சான்ற இயல்புடையவளாய் விளங்குதல் குறித்து, அத்திணைக்குரிய மாலைப் பொழுது சுட்டப்பட்டதாகவும் கொள்ளலாம்"(24) என்பர்.

குறிஞ்சியின் பாடுபொருளில் குறிஞ்சி நிலத்துள் பெய்யும் மழையானது மாலைப் பொழுதில் பெய்ததாகக் குறிஞ்சியுள் மாலை

குறிக்கப்பெறுவதை,

**"............ .............. ............. அவர் மலை**

**மாலைப் பெய்த மணம் கமழ் உந்தியொடு"** (குறுந். 361: 2-3)

என்னும் அடிகள் குறிக்கும். குறிஞ்சிப் பாடுபொருளில் காலை, பகல், மாலை (யாமம்), விடியல் எனும் பொழுதுகள் குறிக்கப்பெறுவதை,

**"காலையும், பகலும் கையறு மாலையும்**

**ஊர் துஞ்சு யாமமும், விடியலும் என்று இப்**

**பொழுது இடை தெரியின், பொய்யே காமம்"** (குறுந்.32:1-3)

என்பதால் பெறமுடிகின்றது.

**பாலையில் பொழுதுமயக்கம்**

பாலை எனும் குறிப்பை உடைய பாடல்களில் பிறதிணையின் பொழுதுகளைக் காணமுடிகின்றது. அவ்வாறு காணப்படும் பிற திணைகளுக்குரிய பொழுதுகள் பாலைத்திணையில் பொழுது மயங்கிய திணைமயக்கமாகும்.

**பாலையில் கார்காலம்**

பாலை எனும் திணைப்பகுப்பில் பாலையின் பாடுபொருளுடன் கார்காலம் மயங்குவது உணரப்படுகின்றது. தலைவன் கார்காலத்தில் பிரிய எண்ணினான் என்பதை அறிந்து கூறும் தலைவி கூற்றில், 'பிரிவதற்கு இயலாக் கார்காலத்தில் நாம் தனித்திருக்கத் தலைவர் நம்மைப்பிரிந்து செல்வர் என்பர். அவ்வாறாயின் நம் நிலை என்னாவது'

என்று வருந்துகின்றாள். இவ்வமைப்பில் பாலைப் பாடுபொருளுடன் கார்காலம் மயங்குவதை,

**"என் ஆவது கொல்? தோழி மன்னர்**
**............ ................ .............. ..............**
**புழற் காய்க் கொன்றைக்கோடு அணிகொடி இணர்**
**ஏகல் மீமிசை மேதக மலரும்,**
**பிரிந்தோர் இரங்கும் அரும்பெறல் கலையும்,**
**வினையே நினைந்த உள்ளமொடு துனைஇச்**
**செல்ப என்ப, காதலர்;**
**ஒழிதும் என்ப நாம் வருந்து படர் உழந்தே."** (நற்.296: 1, 4-9)

என்னும் அடிகள் உணர்த்தும். இதனுள் இடம் பெறும் கார்காலம் கொன்றை மலரும் எனக்குறிப்பதால் உணரப்படும். கொன்றை கார்காலத்தில் மலரும் என்பதை, "குறும்பல் கோதை கொன்றை மலர... கார் தொடங்கின்றே" (ஐங்.497: 1-3) என்னும் அடிகள் விளக்கும். இக்கார்காலம் தலைவி கூற்றான பாலையின் பாடுபொருளைச் சிறப்பிக்கின்றது. இதனை, "யானையின் நெற்றிப் பட்டம் போல, கொன்றை கார் காலத்து மலருமென்றது, யான் தலைமகற்கு உரிமை பூண்டொழுகும் இல்லறக் கிழத்தி போல அவரை நோக்கி மகிழ்ந்துறைந்தேன். கார் நீக்கத்துக்கண் அம்மலர் உதிர்ந்தொழிதல் போல அவர் பிரிவினால் யான் இறந்து ஒழிதல் திண்ணமென்றாளென்பதாம்"[25] என்று குறிப்பர் அ.நாராயணசாமி ஐயர். இங்கு, கார்காலம் தலைவன் பிரியக் கருதிய காலமாகவும், பிரிவை

எண்ணி வருந்தும் தலைவியின் துயரை மிகுதிப்படுத்தும் காலமாகவும் அமைந்து பாலை உரியுடன் இயைபுபடுதல் விளங்கும்.

தோழி தலைவியை உடன் கொண்டு செல்க என வேண்டுமிடத்து 'கானம் இனியவாகட்டும்' என்று கூறுகின்றாள் தோழி. இப்பாலைப் பாடுபொருளுடன்,

**"............. ........... வெம்மை நீங்க,**

**பசுங்கண் வானம் பாய்தளி பொழிந்தென,**

**........... ............... ............. ..............**

**வண்ண முதாய் தண்நிலம் வரிப்ப,**

**இனிய ஆகுக .......... ........... .........."** (அகநா. 283: 11-12,15-16)

என்று கார்காலம் மயக்கமாகக் கூறப்படுகிறது. இதனுள் கூறப்படும் கார்காலம் வெம்மை நீங்கப் பொழிந்தன என்பதால் உணரப்படும். வேனிற் காலத்தைய வெம்மை நீங்கப் பெய்யும் மழை கார்கால மழையாகும். இதனை "வேனில் நீங்கா கார் மழை தலைஇ" (ஐங்.484: 1) என்பதாலும் உணரமுடியும்.

தலைவனின், கார்காலத்தின் இயல்பு கூறப்படுகின்றது. பிரிவறிந்து துயரமடைந்த தலைவிக்குக் கூறும் தலைமகன், 'கார்காலத்தும் நின்னைப் பிரியோம்' என்றுரைக்கின்றான். இந்நிலையில் பாலையின் பாடுபொருளுடன் கார்காலம் மயங்குவதை,

**"இந்நிலை தவிர்ந்தனம் செலவே; வைந்நுதிக்**

**களவுடன் கமழ, பிடவுத் தளை அவிழ,**

**கார் பெயல் செய்த காமர் காலை,**

**மடப் பிணை தழீஇய மா எருத்து இரலை**

**காழ் கொள் வேலத்து ஆழ் சினை பயந்த**

**கண்கவர் வரி நிழல் வதியும்**

**தண்படு கானமும் தவிர்ந்தனம் செலவே"** (நற். 256:5-11)

என்னும் பாடல்வழிக் காணமுடியும். கார்காலம் இன்ப நுகர்தற்குரியது. அதன் பொருட்டே தலைவன் செலவு தவிர்த்தனம் என்கின்றான். இதனை "காதலர்க்கு இனிமை செய்யும் கார்காலத்தில் தலைவியைப் பிரிந்துறைதல் இயலாது என்பதால் கார்காலத்தில் பிரியாது தலைவியுடன் கூடி இன்பம் துய்க்கும் கருத்தினனாய்த் தவிர்த்தனம் செலவே என்றான்"[26] என்பர்.

செலவழுங்கும் தலைமகன், 'தலைவியின் மேனி மாரிக்காலத்தில் மலரும் செம் முல்லையைப் பசிய ஓலையால் ஆகிய குடையில் மூடி பெருமழை பெய்யும் விடியற்காலத்தில் விரித்து விட்டாற்போல நறுமணம் உடையது' என்று கூறுகின்றான். இதனை,

**"மாரிப் பித்திகத்து நீர்வார் கொழுமுகை**

**இரும்பனம் பசுங்குடைப் பலவுடன் பொதிந்து**

**பெரும் பெயல் விடியல் விரித்து விட்டன்ன**

**நறுந் தண்ணியளே..."** (குறுந்.168: 1-4)

என்னும் அடிகள் விளக்கும். இங்கு பித்திகம் மலரும் கார்காலம் மயங்குகிறது. மாரி என்பது கார்காலத்தைக் குறிக்கும். தலைவியை உடன்போக்கில் கொண்டு செல்லும் தலைமகன் தலைவியின் கூந்தலைக்

கார்காலத்து நடனமிடும் மயிலுடன் ஒப்புமைப்படுத்திக் கூறுகின்றான். இதனை,

**"பாம்பு அளைச் செறிய முழங்கி, வலன் ஏர்பு,**
**வான்தளி பொழிந்த காண்புஇன் காலை,**
**அணிகிளர் கலாவம் ஐது விரித்து இயலும்**
**மணிபுரை எருத்தின் மஞ்ஞை போல, நின்**
**வீபெய் கூந்தல் வீசு வளி உளர**
**ஏகுதி - மடந்தை!"** (நற்.264: 1-6)

என்னும் அடிகளின் வழிப் பெறமுடிகின்றது. பொருள்வயிற் பிரிந்த தலைமகன் ஆற்றானாய்த் தன்னெஞ்சிற்குக் கூறுவதாகப் படைக்கப்பெறும் பாலைப் பாடுபொருளுடன் கார்காலம் கூறப்படுகின்றது. பொருள்வயிற் பிரிந்த தலைவன் இடைச்சுரத்தில் ஆள் இல்லாத பொது மன்றத்தில் இருக்கின்றான். இப்பொது மன்றம் கார்காலத்தில் அரசனால் அழிக்கப்பட்ட ஊர்களை உடையது எனக் கூறப்படுகின்றது. இது,

**"குணகடல் முகந்து, குடக்கு ஏற்பு இருளி,**
**தண் கார் தலைஇய நிலம் தணி காலை,**
**அரசு பகை நுவலும் அரு முனை இயவின்,**
**அழிந்த வேலி அம் குடிச் சீறூர்**
**ஆள் இல் மன்றத்து, அல்கு வளி ஆட்ட,**
**தாள் வலி ஆகிய வன்கண் இருக்கை"** (நற்.346: 1-6)

என்னும் அடிகளால் பெறப்படும். இதனால் பாலையுள் கார்காலம் இடம்பெறுவது உணரப்படும். இக்கூற்றில் கார்கால இயல்பு பாலைப் பாடலில் மயங்குவது விளங்கும்.

**பாலையில் கூதிர்காலம்**

பாலைத்திணைப் பாடல்களில் பாலையின் பாடுபொருளுடன் கூதிர்காலம் மயக்கம் இடம்பெறுவதைக் காணமுடிகின்றது. பொருள் கடை கூட்டிய நெஞ்சிற்குக் கூறும் தலைமகன், முன்பு பொருள்வயிற் பிரிந்து சென்று இடைச்சுரத்தில், தலைவி கூதிர்கால இயல்பில் வருந்தியிருப்பாள் என வருந்திய செய்தி,

**"மழைகண் மாறிய வெங்காட்டு ஆர்இடை**
**எமியம் கழி தந்தோயே –பனி இருள்**
**பெருங்கலி வானம் தலைஇய**
**இருங்குளிர் வாடையொடு வருந்துவள் எனவே!"**(அகநா.337: 18-21)

என்பதால் பெறப்படுகிறது. இதனால் கார்காலம் நீட்டித்து வினைமுற்றுப்பெறாது, கூதிர் காலத்தில் வருந்திய தலைமகன் அதனை மீண்டும் பொருள் கடை கூட்டிய நெஞ்சிற்குக் கூறுமிடத்து கூதிர் காலம் பாலைப் பாடலில் இடம்பெறும் என்பது விளங்கும். கூதிர்கால நிலையை எண்ணிச் செலவழுங்கும் தலைமகனின் கூற்றை நற்றிணை,

**"........... ............ ............ கரும்பின்**
**வேல்போல் வெண்முகை விரியத் தீண்டி**
**முதுக்குறைக் குரீஇ முயன்று செய் குடம்பை**
**மூங்கில் அம் கழைத் தூங்க ஒற்றும்**
**வடபுல வாடைக்குப் பிரிவோர்**
**மடவர் வாழி இவ் உலகத்தானே"** (நற்.366: 7-12)

**“தண்புனக் கருவிளைக் கண்போல் மாமலர்,**

**ஆடு மயிற் பீலியின் வாடையொடு துயல்வர,**

**உறை மயக்குற்ற ஊர் துஞ்சு யாமத்து,**

**நடுங்கு பிணி நலிய நல் எழில் சாஅய்,**

**துனி கூர் மனத்தள்”** (நற்.262: 1-5)

என்று சுட்டுகின்றது. இவற்றால் கூதிர் கால இயல்பு செலவழுங்கும் தலைமகனால் நினைக்கப்படும் என்பது விளங்கும்.

தலைவனின் பிரிவை உணர்த்திய தோழிக்குத் தலைவி ‘துன்பம் செய்யும் வாடைக்காலத்தில் பிரியாதீர் எனக் கூறுக, நீ அவ்வாறு கூறியவிடத்தும் தலைவர் பிரிந்து சென்றால் நாம் பற்களைக் கடித்து நடுக்கம் கொள்வோம்’, என்கின்றாள்.

**“பெய்து புறந்தந்த பொங்கல் வெண்மழை**

**............... ............... ............... ...............**

**அற்சிரம் வந்தன்று; அமைந்தன்று இது என,**

**எப்பொருள் பெறினும், பிரியன்மினோ எனச்**

**செப்புவல் வாழியோ”** (அகநா.217: 1-15)

இதனுள் கூதிர் காலம் இடம் பெறுகின்றது.

தலைவனின் பிரிவில் தோழி, ‘தலைவி கூதிர்கால இயல்பைத் தாங்கும் இயல்புடையவள் அல்லள்’ என்பதைக் குறிப்பிடுகின்றாள். இக்கூற்றில் கூறப்படும் கூதிர்கால வாடை மருத நிலங்களைக் கடந்து வந்த வாடை என மருதநில இயல்புடன் கூறப்படுகின்றது.

**"விழுமிது நிகழ்வது ஆயினும் – தெற்கு ஏர்பு**
**கழி மழை பொழிந்த பொழுது கொள் அமையத்து**
**சாயல் இன்துணை இவட் பிரிந்து உறையின்**
**நோய் இன்றாக செய்பொருள்! வயிற்பட**
**மாசு இல் தூமடி விரிந்த சேக்கை,**
**கவவு இன்புறாமைக் கழிக – வளவயல்**
**அழல்நுதி அன்ன தோகை ஈன்ற**
**கழனி நெல் ஈன் கவை முதல் அலங்கல்**
**நிரம்பு அகன் செறுவில் வரம்பு அணையாத் துயல்வர**
**புலம்போடு வந்த பொழுது கொள் வாடை**
**இலங்கு பூங்கரும்பின் ஏர் கழை இருந்த**
**வெண் குருகு நரல வீசும்**
**நுண்பல் துவலைய தண்பனிநாளே"** (அகநா.13: 12-24)

இக்கூற்றுள், கூதிர்காலம் துயரம் செய்யும் என்பது தோழியால் கூறப்படுவதும், அத்துயர வாடை இனிய நிலமான மருதத்தைக் கடந்து வந்தது என வாடையின் இயல்பு சிறப்பிக்கப்பெறுவதும் விளங்கும்.

பிரிவில் வருந்திக்கூறும் தலைவியின் கூற்றில், தலைவனுடன் தலைவியின் நெஞ்சும் சென்றுவிட்டது சுட்டப்பெறுகிறது. இங்கு கார்காலத்துள் மழை பெய்த மேகங்கள் கூதிர்காலத்தில் தெற்கு நோக்கிச் சென்றுவிடும் தன்மையும் திணைமயக்கமாகக் குறிக்கப்படுகிறது. இதனை,

**"குணகடல் முகந்து, குடக்கு ஏர்பு இருளி,**
**மண்திணி ஞாலம் விளங்க, கம்மியர்**

**செம்பு சொரி பானையின் மின்னி, எவ்வாயும்**

**தன் தொழில் வாய்த்த இன்குரல் எழிலி**

**தென்புல மருங்கில் சென்று அற்றாங்கு**

**நெஞ்சம் அவர்வயின் சென்றென...''** (நற்.153: 1-6)

என்பது விளக்கும்.

**பாலையில் வைகறை விடியல்**

வைகறை எனும்பொழுது மருதத் திணைக்குரியது. இதனைப் பாலைத்திணையில் காணமுடிகின்றது. தோழி உடன்போக்கு அஞ்சுவித்த பாலைத்திணைப் பாடலில், உடன்போக்கு செல்வதற்காகத் தலைவி தனது சிலம்புகளைக் கழற்றி வைத்த விடியற்காலம் கூறப்படுகின்றது. இதனை, நற்றிணை,

**"நெய்தெரி இயக்கம் வெளில்முதல் முழங்கும்**

**வைகுபுலர் விடியல் மெய்கரந்து, தன்கால்**

**அரிஅமை சிலம்பு கழீஇ** ............ ............

.............. ........... .............. ............

**நும்மொடு வரவுதான் அயரவும்,**

**தன் வரைத்து அன்றியும் கலுழ்ந்தன கண்ணே''**(நற்.12:3-5,9-10)

என்றுரைக்கின்றது. பாலைவழியே செல்லும் தலைமகன் தனது செலவினைத் தொடங்கும் விடியற்காலம் கூறப்படுகின்றது. இதனைச் செலவழுங்கும் தலைமகன் கூற்று,

**"அருமுனைப் பாக்கத்து அல்கி, வைகுற,**

**நிழல்படக் கவின்ற நீள் அரை இலவத்து**

............... ................ ............... ...............

**சென்மோ – நெஞ்சம்! வாரலென் யானே"** (அகநா.245:13-14,21)

என்றுரைக்கின்றது.

செலவழுங்கும் தலைமகனின் கூற்றில் பாலையின் கொடுமை விடியற்கால இயல்புடன் கூறப்படுகின்றது. பாலையில் வெட்சி மறவர்கள் ஆக்களைக் கவரும் விடியற்காலம்,

**"வீளை அம்பின் விழுத்தொடை மழவர்**

**நாள் ஆ உய்த்த நாம வெஞ்சுரத்து"** (அகநா.131: 6-7)

என்று சுட்டப்பட்டுள்ளது, பிரிவுணர்த்தப்பட்ட தலைவி கூறும் பாலையின் இயல்பு விடியற்கால இயல்புடன் அமைவதை அகநானூற்றில் காணமுடிகின்றது. இதனை,

**"எல்லி மலர்ந்த பைங்கொடி அதிரல்**

**பெரும்புலர் வைகறை அரும்பொடு வாங்கி,**

**கானயானை கவளம் கொள்ளும்"** (அகநா. 157: 6-8)

என்னும் அடிகள் விளக்கும்.

செலவுணர்த்திய தலைமகனுக்குத் தலைமகளின் குறிப்பறிந்து வந்து கூறும் தோழி பாலையின் இயல்பை விடியற்காலப் பொழுதுடன் கூறுகின்றாள். இக்கூற்றுள் பாலையில் கரடி தனது இரையினைத் தேடியுண்ணும் விடியற்காலம் கூறப்படுகின்றது. இது,

**“நாள் உலா எழுந்த கோள்வல் உளியம்**

**ஓங்குசினை இருப்பைத் தீம்பழம் முனையின்,**

**புல் அளைப் புற்றின் பல் கிளைச் சிதலை**

**ஒருங்கு முயன்று எடுத்த நனைவாய் நெடுங்கோடு,**

**இரும்பு ஊது குருகின், இடந்து, இரை தேரும்”** (அகநா.81:1-6)

என்பதால் விளங்கும். தலைவி உடன்போக்கில் சென்றுவிட, செவிலி கூறும் கூற்றில் பாலைப் புனைவு விடியற்கால இயல்புடன் கூறப்படுகின்றது. இக்கூற்றில் விடியற்காலத்தில் வெயில் மிகுதியும் அடிக்க, யானை கிளப்பிய புழுதியில் குறும்பூழ்ப் பறவை விளையாடுவது குறிக்கப்படுகிறது. இத்திணை மயக்கம்,

**“பெருமலை இறந்தது நோவேன்; நோவல்**

**கடுங்கண் யானை நெடுங்கை சேர்த்தி,**

**முடங்குதாள் உதைத்த பொலங்கெழு பூழி**

**பெரும்புலர் விடியல் விரிந்து, வெயில் எறிப்ப,**

**கருந்தாள் மிடற்ற செம்பூழ்ச் சேவல்**

**சிறுபுன் பெடையொடு குடையும் ஆங்கண்”** (அகநா.63:3-8)

என்றுரைக்கப்படுகின்றது.

பாலைத் திணையில் விடியற்கால இயல்புகள் உவமையின் வழியும் இடம்பெறுவது காணப்படுகின்றது. தலைவனால் பிரிவுணர்த்தப்பட்டுப் பொலிவிழந்த தலைவியின் முகத்திற்கு வைகுறுமதியம் உவமையாகக் கூறப்படுவது அகநானூற்றில் அறியப்படுகிறது. பாலைத் திணைக்குரிய

தோழியின் கூற்றில் கோங்கமரத்தின் பூக்கள் வைகுறு விண்மீனுடன் உவமிக்கப்படுகின்றது. இதனை நற்றிணை,

**"புல் இதழ்க் கோங்கின் மெல் இதழ்க் குடைப்பூ**
**வைகுறு மீனின் நினையத் தோன்றி,"** (நற்.48:3-4)

என்றுரைக்கின்றது. இலவமரத்தின் பூக்களைக் கூறும் அகநானூறு,

**"நீள் அரை இலவத்து ஊழ் கழி பல்மலர்,**
**விழவுத் தலைக் கொண்ட பழவிறல் மூதூர்,**
**நெய் உமிழ் சுடரின் கால்பொரச் சில்கி,**
**வைகுறு மீனின் தோன்றும்"** (அகநா.17:18-21)

என்று வைகறைப் பொழுதையும் கூறுகின்றது. பொருள் வலிக்கும் நெஞ்சிற்குத் தலைவன் கூறும் கூற்றில், தலைவியின் நறுந்தண்ணிய மேனியைக் குறிக்குமிடத்து விடியற் காலம் குறிக்கப்படுவதைக் குறுந்தொகை குறிக்கின்றது."[28]

**பாலையில் மாலை**

உடன்போக்கு நேர்ந்த தோழி அதனைத் தலைமகட்குக் கூறுங்கூற்றில் உடன்போக்கிற்கு ஏற்ற பொழுது மாலை என்கின்றாள் இதனை,

**"பால் எனப் பரத்தரும் நிலவின் மாலைப்**
**போது வந்தன்று, தூதே; நீயும்**
**கலங்கா மனத்தை ஆகி, என்சொல்**
**நயந்தனை கொண்மோ..."** (அகநா.259: 9-12)

என்பது சுட்டும். இக்கூற்றுள் உடன்போக்கில் செல்வதற்குரிய பொழுதாக மாலை கூறப்படுகின்றது. தலைவி தலைவனுடன் உடன்போக்கில் செல்ல, தலைவன் மாலையில் வருந்துவதன்றி மகிழ்வான். அவனுக்குத் தலைவி மாலைப் பொழுதில் துணையாக இருப்பாள் என்பதைத் தோழி,

**"மரை கடிந்து ஊட்டும் வரையகச் சீறூர்**
**மாலை இன் துணை ஆகி காலைப்**
**பசு நனை நறுவீப் பரூஉப் பரல் உறைப்ப,**
**மணமனை கமழும் கானம்**
**துணைஎர் ஓதி என் தோழியும் வருமே"** (அகநா.107: 18-22)

என்றுரைக்கின்றாள். உடன்போக்கில் தலைவியைக் கொண்டு செல்லும் தலைமகன் தனது ஊரை மாலைப் பொழுதில் அடைதல் கூறப்படுகின்றது. இதனை,

**"............... ................. ............... எல்லின்று பொழுதே**
**............... .................. .................**
**எகாண் தோன்றும், எம்சிறு நல் ஊரே"** (நற். 264: 6,9)

என்னும் அடிகள் உணர்த்தும். இதனுள் மாலைப் பொழுது எல்லின்று பொழுதே என்பதால் குறிக்கப்படுகின்றது. இவ்வாறு மாலைப் பொழுது சுட்டப்பெறுதலை,

**"எல்லுறும் மௌவல் நாறும்"** (குறுந்.19: 4)
**"எல்லுறு பொழுதின் முல்லை மலரும்**
**மாலை என்மனார்"** (குறுந்.234: 2-3)

என்பதால் உணரப்படும்.

செவிலி, உடன்போக்கில் சென்றவர்களைத் தேடிச் சென்ற பொழுது மாலையாக அமைவதையும், மாலைப் பொழுதில் தேடிச்செல்ல நேர்ந்தமைக்காகத் தன்னைக் கூற்றுவன் கொண்டு செல்லவில்லையே என வருந்திக் கூறுவதையும் நற்றிணை குறிக்கின்றது. இது,

**"செய் போழ் வெட்டிய பொய்தல் ஆயம்,**

**மாலை விரி நிலவில் பெயர்பு புறங்காண்டற்கு,**

**மா இருந்தாழி கவிப்ப,**

**தா இன்று கழிக, எற் கொள்ளாக் கூற்றே."** (நற்.271: 9-12)

என்பதால் அறியப்படும். இங்கு பாலையுள் மாலை மயங்குகிறது. நற்றாய் தன் மகள் உடன்போக்கில் சென்றுவிட்ட பிரிவுத் துயரை, பகலில் வினைசெய்தலின் வழி மறந்திருக்க மாலையில் அத்துயரம் மிகுந்து வருந்துகின்றாள். இவ்வாறு துயரமடையும் நாற்றாயின் இக்கூற்றை,

**"செல்லிய முயலிப் பாஅய சிறகர்**

**வாவல் உகக்கும் மாலை, யாம் புலம்பப்**

**போகிய அவட்கோ நோவேன்..."** (ஐங்.378:1-3)

என்பது உணர்த்தும். இதனுள் வாவல் உகக்கும் மாலை என்பது மயங்குகிறது. இதனை, "மன்னுயிர்கட்கு வினையினின்று மீண்டு மனம் ஒருமைப்படும் காலம் மாலைப்பொழுதாதலின், இன்புறுதற்கோ துன்புறுதற்கோ அது சிறந்த பொழுதாகும். ஈண்டுப் பகற்பொழுதெல்லாம் வினைகளிலீடுபட்டுக் கிடந்த தாம் மாலைதோறும் மகள் நினைவு விஞ்சியழுகின்றோம் என்பாள் மாலையாம் புலம்ப என்றாள்"[29] என்பர்.

பொருள் கடைகூட்டிய நெஞ்சிற்குக் கூறும் தலைமகன் முன்பு இடைச்சுரத்தில் வருந்தியதைக் குறிப்பிடுகின்றான். பிரிந்து சென்ற தலைமகன், மாலை வேளையில் தலைவி இல்லில் விளக்கேற்றி இன்னும் வரவில்லையே என வருந்தியிருப்பாள் என நினைந்து துயரடைகின்றான். இதனை,

**"சுரன்முதல் வந்த உரன்மாய் மாலை**
**உள்ளினென் அல்லெனோ, யானே-உள்ளிய**
**வினைமுடித்தன்ன இனியோள்**
**மனைமாண் சுடரொடு படர்பொழுது எனவே?"** (நற்.3: 6-9)

என்பது உணர்த்தும். பிரிந்து சென்ற தலைமகன் இடைச்சுரத்தில் தலைவியை நினைந்து வருந்துகின்றான். ஆபரணங்களை அணிந்த தலைவி, பசலைபடர்ந்த மேனியளாய், தனது விரல்களை நெற்றியில் சேர்த்திய வண்ணம் கண்கள் நீர் சொரிய, தோள்கள் மெலிய தன்னை நினைந்திருக்கும் மாலைப் பொழுதைக் குறிக்கின்றான். இவ்வாறு மாலை மயங்குவதை,

**"சுரம்பல கடந்த நம்வயின் படர்ந்து; நனி**
**பசலை பாய்ந்த மேனியள், நெடிது நினைந்து**
**செல்கதிர் மழுகிய புலம்பு கொள் மாலை**
**மெல்விரல் சேர்த்திய நுதலள், மல்கிக்**
**கயல் உமிழ் நீரின் கண்பனி வார,**
**பெருந்தோள் நெகிழ்ந்த செல்லலொடு**
**வருந்துமால், அளியள், திருந்திழை தானே!"** (அகநா.169: 8-14)

என்பது விளக்கும். 'ஞாயிறு மறைந்த மாலையில், புறாவின் சேவல் தன் அன்புப் பெடையை அழைக்கும் நிலையில் நம் தலைவி எவ்வாறு உள்ளாளோ', எனத் தலைவி மாலைப் பொழுது கண்டு வருந்துவதைத் தலைவன் இடைச்சுரத்தில் கூறுகின்றான். இதனை ஆலம்பேரி சாத்தனார்,

**"அகன்சுடர் கல்சேர்பு மறைய, மனைவயின்**
**ஒண்தொடி மகளிர் வெண் திரிக் கொளாஅலின்,**
**குறுநடைப் புறவின் செங்காற் சேவல்**
**நெடுநிலை வியல்நகர் வீழ் துணைப்பயிரும்**
**புலம்பொடு வந்த புன்கண் மாலை,**
**'யாண்டு உளர் கொல்?' எனக் கலிழ்வோள்..."** (அகநா. 47:9-14)

என்றுரைக்கின்றார். இதனுள் தலைவன் வருந்தும் மாலைப் பொழுது, 'அகன் சுடர் கல் சேர்பு' மறைய என்பதாலும் தலைவி துயரப்படும் மாலைப் பொழுது 'புலம்பொடு வந்த புன்கண் மாலை' என்பதாலும் பெறப்படுகின்றது.

இடைச்சுரத்தில் தலைவியை நினைந்து வருந்திய நெஞ்சிற்குக் கூறும் தலைவன், 'நீயே தலைவியைப் பிரிந்து பாலையில் அழைத்து வந்து இப்போது மாலையில் தலைவியின் துயர் எண்ணி வருந்துகின்றாய்' என்கின்றான். இதனை,

**"அகல்வாய் வானம் மால் இருள் பரப்ப,**
**பகல் ஆற்றுப்படுத்த பையென் தோற்றமொடு**
**சினவல் போகிய புன்கண் மாலை**
**............ ............... .............. .............**

**என்றூழ் வெஞ்சுரம் தந்த நீயே**

**துயர் செய்து ஆற்றாயாகி, பெயர்பு ஆங்கு**

**உள்ளினை – வாழிய, நெஞ்சே!...''** (அகநா.365:1-3, 9-11)

என்பது சுட்டும். இதனுள் இடைச்சுரத்தில் தலைவன் துயரப்படும் மாலைப் பொழுது மயக்கமாகக் கூறப்படுவது விளங்கும்.

தலைவி, மாலைப் பொழுதில் பல்லி ஒலிக்கும் பொழுதெல்லாம் தெய்வத்தைத் தொழுது, 'நற்சொல் கூறுக' என வேண்டி மனம் நடுங்கியிருக்கும் மாலைப் பொழுதை இடைச்சுரத்தில் எண்ணி வருந்துகின்றான் தலைவன். இதனை,

**"மையல் கொண்ட மதன் அழி இருக்கையள்**

**பகுவாய்ப் பல்லி படுதொறும் பரவி,**

**நல்ல கூறு என நடுங்கி**

**புல்லென் மாலையொடு பொரும்கொல் தானே''** (அகநா.289:14-17)

என்னும் அடிகள் வழி உணரமுடியும். தலைவி மாலைப் பொழுதில் துயரம் அடைதற்குத் தானே காரணம் என்பதை உணரும் தலைவன், 'தனக்கு என்ன தீங்கு நேருமோ' என்றுரைப்பதை,

**"பானாட் கங்குலும், பெரும்புன் மாலையும்,**

**ஆனா நோயொடு அழிபடர்க் கலங்கி,**

**நம்வயின் இனையும் இடும்பை கைம்மிக,**

**என்னை ஆகுமோ, நெஞ்சே!...''** (அகநா.297:1-4)

எனும் அடிகள் உணர்த்தும். தலைவன் பாலை வழியைக் கடந்து வந்த

வருத்த மிகுதியுடன் மாலையின் துயரமும் அவனுக்கு வந்து சேர்கின்றது. இடைச்சுரத்தில் துயரப்படும் தலைவன், தலைவி மாலையில் தனியே வருந்துவாள். இதனை,

**“அருஞ்சுரம் நீந்திய வருத்தமொடு கையற்று,**

**பெரும்புன் மாலை புலம்பு வந்து உறுதர,**

**மீளி உள்ளம் செலவு வலியுறுப்ப,**

**தாழ்கை பூட்டிய தனிநிலை இருக்கையொடு,**

**தன்நிலை உள்ளும் நம்நிலை உணரான்;”** (அகநா.373: 5-9)

என்பது குறிக்கும். இதனால் பாலைப் பாடலில் தலைவனும் தலைவியும் துயரம் எய்தும் மாலைப் பொழுது திணை மயக்கமாகக் குறிக்கப்படுவது உணரப்படும். தலைவன் இடைச்சுரத்து வருந்தும் மாலைப்பொழுதை,

**“அல்குறு வரிநிழல் அசையினம் நோக்க,**

**அரம்பு வந்து அலைக்கும் மாலை,**

**நிரம்பா நீள் இடை வருந்துதும், யாமே”** (அகநா.287: 12-14)

எனும் அடிகளின் வழிப் பெறமுடிகின்றது. இவற்றால் பாலைத் திணையில் மாலைப் பொழுது மயங்குவது பெறப்படும்.

பிரிவுணர்ந்த தலைவி, ‘பேய்கள் எழுந்து வருகின்ற மாலைப்பொழுதைத் தலைவருடன் இருக்கும் காலத்தே தாங்குதற்கு இயலோம். பிரிந்து சென்றால் அம்மாலையில் பிரிவாற்றியிருத்தல் இயலாது’ என்பதைக் குறிக்கின்றாள். இது,

**"வேனில் முருக்கின் விளை துணர் அன்ன**

**மாணா விரல வல்வாய்ப் பேஎய்**

**மல்லல் மூதூர் மலர்ப்பலி உணீஇய,**

**மன்றம் போழும் புன்கண் மாலை,**

**தம் மொடும் அஞ்சும் நம் இவண் ஒழியச்**

**செல்ப என்ப தாமே..."** (நற்.73: 1-6)

என்னும் பாலைப் பாடுபொருளுடைய பாடலடியால் உணரப்படும். இங்கு மாலையின் துயரம் எதிர்கால நோக்கில் குறிக்கப்பட்டு தலைவன் பிரிவுக் குறிப்புணர்ந்து தலைவி வருந்தும் பாலைத்திணைப் பாடுபொருளில் இடம்பெறுவது விளங்கும்.

தலைவன் பிரியும் நிலையில் தலைவி, 'நான் மாலையில் துயரம் எய்தியிருக்க காலம் நீட்டித்து விடமாட்டீரே' என வினவுகின்றாள். இதனைத் தலைவன் இடைச்சுரத்தில் நினைந்து கூறும் கூற்றால் பெறமுடியும். இதனை,

**"புள்ளித்தொய்யில், பொறிபடு சுணங்கின்,**

**ஒள் இழை மகளிர் உயர்பிறை தொழூஉம்**

**புல்லென்மாலை, யாம் இவண் ஒழிய,**

**ஈட்டு அருங்குரைய பொருள்வயிற் செலினே,**

**நீட்டுவிர் அல்லிரோ, நெடுந்தகையீர்?..."** (அகநா.239:8-12)

என்பது உணர்த்தும். இங்கு 'புல்லென் மாலை' என மாலைப் பொழுது திணை மயக்கமாகக் குறிக்கப்பெறுகிறது.

தலைவன் பிரிந்து சென்றால், மாலைப் பொழுது துயரம் செய்யும் என்பதால் தலைவி பிரியக்கருதும் தலைமகனிடம், 'உடன் வருவேன்' என்றுரைக்கின்றாள். இதனைத் தலைமகன் கூற்றில் காணமுடிகின்றது. இது,

**"'மனை உறை புறவின் செங்காற்பேடைக்**
**காமர் துணையொடு சேவல் சேர,**
**புலம்பின்று எழுதரு புன்கண் மாலைத்**
**தனியே இருத்தல் ஆற்றேன்' என்று, நின்**
**பனிவார் உண்கண் பைதல கலுழ,**
**'நும்மொடு வருவல்' என்றி; ......... ........."** (நற்.162:1-6)

என்பதால் விளங்கும். செலவுமேற்கொள்ளும் தலைமகனிடம், தோழி, 'நீ பிரிந்து சென்றால் மாலை நேரத்தில் துயரந்தாங்காது இவள் கண்ணீர் சிந்துவாள். கண்ணீர் உனக்குத் துயரைச் செய்யும்' எனக் கூறிச் செலவழுங்குவிக்கின்றாள். இதனை,

**"கல் அதர்க் கவலை போகின், சீறூர்ப்**
**புல் அரை இத்திப் புகர் படு நீழல்**
**எல்வளி அலைக்கும், இருள்கூர் மாலை,**
**வானவன் மறவன், வணங்குவில் தடக்கை**
**ஆனா நறவின் வண் மகிழ் பிட்டன்**
**பொருந்தா மன்னர் அருஞ்சமத்து உயர்த்த**
**திருந்து இலை எஃகம் போல**
**அருந்துயர் தரும் இவள் பனிவார் கண்ணே"** (அகநா.77: 12-19)

எனும் பாடல் அடிகள் உணர்த்தும். இதனுள் 'இருள்கூர் மாலை' என்பது திணைமயக்கமாக இடம்பெறுகிறது.

தலைவன் பொருள் கடைகூட்டிய நெஞ்சிற்குக் கூறும் கூற்றில், மரலை உண்டு செயலற்று இருந்த மான் கூட்டத்தைச் செந்நாய் தாக்க மான்கள் சிதறி ஓடின என்பதும் சிதறி ஓடிய மான்களைக் கூட்டமாகச் சேர்க்கும் பொருட்டு ஆண்மான் தன் குரலை மாலைப் பொழுதில் எழுப்பும் என்பதும் கூறப்படுகின்றன. இதனை,

***"அலங்கல் உலவை அரிநிழல் அசைஇ,***
***திரங்குமரல் கவ்விய கையறு தொகுநிலை,***
***அரம் தின் ஊசித் திரள்நுதி அன்ன,***
***திண்நிலை எயிற்ற செந்நாய் எடுத்தலின்,***
***வளிமுனைப் பூளையின் ஒய்யென்று அலறிய***
***கெடுமான் இனநிரை தரீஇய, கலையே***
***கதிர்மாய் மாலை ஆண்குரல் விளிக்கும்"*** (அகநா.199:6-12)

என்பது உணர்த்தும். இங்கு, கதிர்மாய் மாலை என்பது மயங்குகின்றது. பிரிவுணர்த்திய தலைவனுக்குத் தலைவியின் நிலைகண்டு கூறும் தோழியின் கூற்றில் தலைவி தலைவன் செல்லும் பாலைவழி குறித்து வருந்துவது கூறப்படுகிறது. இப்பாலை வழியில் மறவர்கள் வழிச் செல்வோரைத் தாக்கும் பொருட்டு மாலைப் பொழுதில் பார்த்திருப்பர் என்பது சுட்டப்பெறுகின்றது. இதனை,

***"படுசுடர் அடைந்த பகுவாய் நெடுவரை,***
***முரம்புசேர் சிறுகுடி பரந்த மாலை,***

***புலம்பு கூட்டுண்ணும் புல்லென் மன்றத்து,***

***............ ............. ................ ............***

***............ .............. .............மறவர்***

***அதர் பார்த்து அல்கும் அஞ்சுவரு நெறியிடை,***

***இறப்ப எண்ணுவர் அவர் எனின், மறுத்தல்***

***வல்லுவம் கொல்லோ, மெல்லியல்! நாம்? என***

***விம்முறு கிளவியள்...''*** (நற்.33: 1-3, 6-10)

எனும் பாடல்அடிகள் உணர்த்தும். இங்கு 'படுசுடர் அடைந்த...பரந்த மாலை' என்பது திணை மயக்கமாகக் கூறப்படுகிறது.

உடன்போன தலைமகள் செல்லும் வழியின் கொடுமையைக் கூறும் பாலைப் பாடலில், பாலையில் குட்டிகளை ஈன்று பசியுடைய பெண்புலி வழியிடைச் செல்வோரைக் கொன்று பசியைப் போக்குவதற்காக வழியைப் பார்த்திருக்கும் மாலைப் பொழுது குறிக்கப்படுகின்றது. இவ்வாறு பாலையுள் மாலைப் பொழுது மயங்குவதை,

***''ஈன்று கான் மடிந்த பிணவுப் பசி கூர்ந்தென,***

***மான்ற மாலை, வழங்குநர்ச் செகீஇய,***

***புலி பார்த்து உறையும் புல் அதர்ச்சிறு நெறி''*** (நற்.29:3-5)

என்பது விளக்கும். உடன் போக்கில் செல்லும் தலைமக்களை இடைச்சுரத்தில் கண்டோர், தலைமக்கள் செல்லும் வழியின் கொடுமையினைக் குறித்து வருந்துகின்றனர். இக்கண்டோர் கூற்றில் பாலைவழியில் புலிக்குட்டிகள் தாம் பதுங்கியிருக்கும் புதர்களில் இருந்து, எட்டிப் பார்க்கும் மாலைப் பொழுது கூறப்படுகின்றது. இதனை,

**“வல்லியப் பெருந்தலைக் குருளை, மாலை**

**மான்நோக்கு இண்டு இவர் ஈங்கைய சுரனே;”** (நற்.2: 6-7)

என்னும் அடிகள் புலப்படுத்தும். இவற்றால் பாலை நிலத்தின் இயல்பு மாலைப் பொழுதுடன் கூறப்பட்டு பாலையுள் மயங்குவது பெறப்படும். இவற்றால் பாலைத்திணைப் பாடல்களில் மாலைப்பொழுது பாலையின் உரிப்பொருள் நிகழ்விற்குரியதாகவும், பாலையின் துயருக்குரியதாகவும், இடைச்சுரத்தில் தலைவன் வருந்தும் துயருக்குரியதாகவும், பிரிவில் தன் துயரை உணர்த்திச் செலவழுங்கு வித்தற்குரியதாகவும், மகளைப் பிரிந்த தாய் வருந்துதற்குரியதாகவும் அமைவது விளங்கும்.

**பாலையில் இரவுப்பொழுது**

தலைவனால் பிரிவுணர்த்தப்பட்ட தோழி தலைமகளுக்கு அச்செய்தியினை வருந்திக் கூறுகின்றாள். தோழியின் இக்கூற்றில் தலைவனுடன் துயின்ற இரவுப்பொழுது இனி எவ்வாறு கழியுமோ என்று வருந்துகின்றாள். இக்கூற்றுள் புணர்ச்சிக்குரிய இரவு பிரிவில் துயரம் தருவதாகக் கூறப்பட்டுள்ளது. இதனை,

**“யாங்கு வல்லுந மற்றே - ஞாங்கர்**
**வினைப்பூண் தெண்மணி வீழ்ந்தன நிகர்ப்பக்**
**கழுது கால் கொள்ளும் பொழுதுகொள் பானாள்**
**ஆர்வ நெஞ்சமொடு அளைஇ,**
**மார்பு உறப் படுத்தல் மரீஇய கண்ணே?”** (நற்.171: 7-11)

என்பது உணர்த்தும். தலைவனின் பிரிவில் தலைவி பசலையைத் துணையாகக் கொண்டு துயரப்படும் இரவுப் பொழுது கூறப்படுகிறது. இதனை,

**"நள்ளென் யாமத்து உயவுத் துணை ஆக**

**நம்மொடு பசலை நோன்று,..."** (அகநா. 103:12-13)

என்னும் அடிகள் சுட்டும். உடன்போக்கில் சென்ற மகள் 'பாலை நிலத்துள் இரவில் தலைவனுடன் தங்கினாளோ, இல்லை அக்கொடிய வழியில் தலைவன் காணுமாறு முன் நடந்து சென்றாளோ, அவள் எதனைச் செய்திருப்பினும் என் மனம் வருந்துகின்றது' என்கிறாள் செவிலி. இதனை,

**"புன்தலை மன்றத்து அம்குடிச் சீறூர்,**

**துணையொடு துச்சில் இருக்கும் கொல்லோ?**

**கணையோர் அஞ்சாக் கடுங்கண் காளையொடு**

**எல்லி முன்னுறச் செல்லும் கொல்லோ?**

**எவ்வினை செயுங்கொல் நோகோ யானே!"** (அகநா.321: 10-14)

என்னும் அடிகள் உணர்த்தும். இதனுள் இரவு பாலை உரியைச் சிறப்பிப்பதாக அமைகின்றது. இவ்வாறு உடன்போக்கில் சென்ற தலைமகள், 'இரவில் தலைவன் துயிலச் செய்தபோதும் உறங்கமாட்டாள்; பாலையில் இரவு நேரத்தில் ஒலிக்கும் பறை ஒலியினைக்கேட்டு அஞ்சுவாள்' என்று பலவாறு செவிலி வருந்திக் கூறுவதை,

**"கல்லென் சீறூர் எல்லியின் அசைஇ,**

................ ................ ............. .............

**தோள் துணையாகத் துயிற்றத் துஞ்சாள்**

**வேட்டக் கள்வர் விசியுறு கடுங்கண்**

**சேக்கோள் அறையும் தண்ணுமை**

**கேட்குநள் கொல்? எனக் கழுலும் என் நெஞ்சே"**

(அகநா.63:13,16-19)

என்பது சுட்டும்.

தலைமகளை உடன்கொண்டு செல்லும் தலைமகன் கூற்றில் பாலைநிலம் இரவுப்பொழுதின் இயல்புடன் கூறப்படுகின்றது. பாலையில் இரவு வேளையில் கரடி இரைதேடி உண்ணும் என்று பாலை குறிக்கப்படுவதை,

**"அரில் இவர் புற்றத்து அல்குஇரை நசைஇ,**

**வெள்அரா மிளிர வாங்கும்**

**பிள்ளை எண்கின் மலைவயினானே"** (அகநா.257:19-21)

என்னும் அடிகள் உணர்த்தும். தலைவியின் கூற்றில் பாலையில் மறவர்கள் தீக்கொள்ளியையும் அம்புகளையும் கையில் கொண்டு ஆனிரை கவர்ந்து வரும் இரவுப் பொழுது குறிக்கப்படுகிறது. இதனை இடைச்சுரத்தில் தலைவன் கூற்றாக அமையும் பாடல்,

**"ஞெலியொடு பிடித்த வார்கோல் அம்பினர்,**

**எல்ஊர் எறிந்து, பல்ஆத் தழீஇய**

**விளிபடு பூசல் வெஞ்சுரத்து இரட்டும்"** (அகநா.239:4-6)

என்று உணர்த்துகின்றது. தலைவனைச் செலவழுங்குவிக்கும் தோழி பாலையில் கரடி இரைதேடியுண்ணும் இரவுப்பொழுதைக் குறிக்கின்றாள்.

இங்கு பாலை இரவுப் பொழுதின் இயல்புடன் அமைவதை நற்றிணை,

**"கவிதலை எண்கின் பரூஉ மயிர் ஏற்றை**
**இரைதேர் வேட்கையின் இரவில் போகி**
**நீடு செயல் சிதலைத் தோடு புனைந்து எடுத்த**
**அரவாழ் புற்றம் ஒழிய, ஒய்யென**
**முரவாய் வள் உகிர் இடப்ப வாங்கும்**
**ஊக்கு அருங்கவலை"** (நற்.325:1-6)

என்றுரைக்கின்றது. பாலையில் உள்ள கோங்குமரம் பூத்திருக்கும் தன்மை விண்மீன்கள் காட்சி தரும் வானத்துடன் ஒப்புமை செய்யப்படும் நிலையில் இரவுப் பொழுது குறிக்கப்படுகின்றது. இதனை,

**............ .............. .............. ............எல்லி**
**ஓங்குவரை அடுக்கத்து உயர்ந்த சென்னி**
**மீனொடு பொலிந்த வானின் தோன்றி**
**தேம்பாய்ந்து ஆர்க்கும் தெரிஇணர்க் கோங்கு** (அகநா. 153:13-16)

என்பது உணர்த்தும். இவற்றால் பாலைநிலம் இரவுப்பொழுதின் இயல்புடன் கூறப்படும் என்பதும் அவ்வாறான நிலையில் இடம்பெறும் இரவுப் பொழுது, திணைமயக்கமாகும் என்பதும் விளங்கும்.

**மருதத்திணையில் நண்பகற்பொழுது**

மருதத்திணைப் பாடல்களில் பகற்பொழுது பற்றிய குறிப்புக்களைக் காணமுடிகின்றது. வாயில் மறுக்கும் தோழியின் கூற்றில், பரத்தை தலைவியைப் பகற்பொழுதில் சந்தித்து, 'நான் உன் சேரியைச் சேர்ந்தவள்,

அயல் வீட்டில் உள்ளேன் உனக்குத் தங்கை முறையாவேன்' என்று தலைவியின் நெற்றியையும் கூந்தலையும் தடவிக் கூறுகின்ற செய்தி காணப்படுகிறது. இதனை,

**“மெல்ல வந்து, நல்ல கூறி,**

**'மைஈர் ஓதி மடவோய்! யானும் நின்**

**சேரியேனே; அயல்இலாட்டியேன்;**

**நுங்கை ஆகுவென் நினக்கு' என, தன்கைத்**

**தொடுமணி மெல்விரல் தண்ணெனத் தைவர**

**நுதலும் கூந்தலும் நீவி,**

**பகல்வந்து பெயர்ந்த வாணுதற் கண்டே”** (அகநா.386: 9-15)

என்பது உணர்த்தும். பகற்பொழுதில் தலைவன் பரத்தையர் இல்லத்தில் தங்குவதை மருதக்கலி,

**“பகல் ஆண்டு அல்கினை பரத்த”** (கலித்.75: 24)

என்று கூறுகின்றது. இரவில் பரத்தை வீட்டில் தங்கிப் பகலில் தலைவியுடன் இருந்து வந்த தலைவன் பிறகு பகற்பொழுதிலும் பரத்தையர் வீட்டில் தங்கியதால் தலைவி துன்பம் அடைகின்றாள். தலைவன் பகலில் பரத்தையர் இல்லத்தில் தங்கி நோய் செய்வதைச் சுட்டிக் கூறும் தலைவி கூற்றில்,

**“......... ........... ..........பகலும்**

**படர்மலி அருநோய் செய்தனன், எமக்கே.”** (ஐங்.95: 3-4)

என்று பகற்பொழுது கூறப்படுகிறது. இதனுள், இடம்பெறும் மருதப் பாடுபொருளையும் பகற்பொழுதுப் புனைவையும், "இரவுப் பொழுதெல்லாம் பரத்தையரை நுகர்ந்து, அதனால் தனக்குத் துயர் செய்தலின் பகற்பொழுதில் சிலபோது வந்தான் என்பதும், பின்னர் அவ்வரவினையும் விடுத்து, இப்பொழுது இரவிலன்றிப் பகலிலேயும் துயர் செய்தான் என்றும் இரங்கினாளாயிற்று"(30) என்று விளக்குவர்.

தலைவன் பரத்தைமை ஒழுக்கம் மிகுதியும் உடையவன் என்பதைக் கூறும் காமக்கிழத்தி தலைவன் முற்பகலில் ஒருத்தியையும், நண்பகலில் மற்றொருத்தியையும், பிற்பகலில் வேறொருத்தியையும் கூடும் இயல்புடையவன் என்பதைக் குறிக்கின்றாள். இவ்வாறு மருதத்துள் பகற்பொழுது குறிக்கப்படுவதை,

**"முன்பகல் தலைக்கூடி, நண்பகல் அவள்நீத்து**
**பின்பகல் பிறர்த்தேரும்..."** (கலித்.74:10-11)

என்பதால் விளங்கும். தலைவன் பரத்தை இல்லத்தில் பலநாள் தங்கி வராதிருப்பதைக் கூறி வாயில் மறுக்கும் தோழி, தனது கருத்தை, எருமை பகலில் பொய்கையில் கிடந்து பின்பு இளஎருமையைத் தழுவி பழனத்தில் தங்கும் என்ற உள்ளுறையால் குறிக்கின்றாள். இவ்வாறு பகல் மருதத்துள் இடம்பெறுவதை,

**"வலி மிகு முன்பின் அண்ணல் ஏஎறு**
**பனிமலர்ப் பொய்கைப் பகல் செல மறுகி,**
**மடக்கண் எருமை மாண்நாகு தழீஇ**

**படப்பை நண்ணி, பழனத்து அல்கும்**

**கலிமகிழ் ஊரன்..."** (அகநா.146: 1-5)

என்னும் அடிகள் சுட்டும். தலைவியின் அழகைத் தேனூர் என்னும் வளம் பெற்ற ஊருடன் கூறும் மருதத்திணைப் பாடலில் தேனூரில் நிகழும் வேள்வி பகலில் தோன்றும் பல் கதிர் என்று கூறப்படுகிறது. இவ்வாறு பகற்பொழுது சுட்டப்படுவதை,

**"பகலில் தோன்றும் பல்கதிர்த் தீயின்"** (ஐங்.57:1)

என்பது குறிக்கும். இவற்றால் மருதத்திணைப் பாடல்களில் பகற்பொழுது மயங்குவது பெறப்படும்.

பரத்தை தலைவியைப் பகலில் சந்தித்துப் பேசுதலும், தலைவன் பரத்தையர் இல்லத்தில் பகலில் தங்குதலும், தலைவன் மிகுதியான பரத்தையர் ஒழுக்கம் உடையவன், பல நாள் பரத்தையுடன் தங்கும் இயல்புடையவன் என்பதை விளக்குதலும், வேள்வித் தீயைப் பகற்பொழுதின் ஞாயிற்றுக் கதிருடன் ஒப்பிட்டுக் கூறுதலும், விளக்கொளியின் மிகுதியைக் கூறப் பகற்பொழுது குறிப்பிடுதலும் ஆகிய சூழல்கள் பகற்பொழுது மருதத்திணைப் பாடல்களில் மயங்குதற்குக் காரணிகளாகின்றன.

### மருதத்திணையில் மாலைக்காலம்

மருதத் திணைப் பாடல்களில் முல்லைத் திணைக்குரிய மாலைக்காலம் குறித்த செய்திகளைக் காணமுடிகின்றது. பரத்தையிற் பிரிந்து வந்து தலைவன் ஆற்றாமையே வாயிலாகச் சென்றான்.

அவனிடம், நீ காலந் தாழ்த்தக் காரணம் ஏன்? என வினவினாள் தலைவி. அத்தலைவிக்குப் புதுப்புனல் ஆடித் தாழ்ந்தது என்றான் தலைவன். அத்தலைவனுக்குத் தலைவி கூறுவதாகப் படைக்கப்பெறும். மருதப் பாடுபொருளுடன் தலைவன் புதுப்புனல் ஆடிய மாலைக் காலம் கூறப்படுகின்றது. இது,

**"யாணர்ப் புதுப்புனல் ஆடினாய், முன்மாலை,**
**பாணன் புணையாகப் புக்கு"** (கலித்.98: 18-19)

என்னும் அடிகளால் விளங்கும். இதனால் மாலைப் பொழுது திணை மயக்கமாக மயங்குவது விளங்கும்.

பரத்தையிடம் இருந்து பிரிந்து வந்த தலைவன் மாலைக்காலத்தில் தனது இல்லத்தில் புதல்வனைத் தழுவிக்கிடக்கின்ற செய்தியைக் குறுந்தொகை,

**"மாலை விரிந்த பசுவெண் நிலவின்**
**குறுங்காற் கட்டில் நறும் பூஞ்சேக்கை,**
**பள்ளியானையின் உயிர்த்தனன் நசைஇ,**
**புதல்வற் தழீஇயினன் விறலவன்"** (குறுந். 359:2-5)

என்றுரைக்கின்றது. இங்கு மாலை என்பது திணைமயக்கமாக இடம்பெறுகிறது. வாயில் மறுக்கும் தோழியின் கூற்றில், பரத்தையர் தொடர்பால் எழுந்த அம்பல் மொழி குறிக்கப்படுமிடத்து, மாலைக் காலத்தில் வெருகிற்கு அஞ்சிய கோழி, தனது குஞ்சுகளை அழைக்கும் மாலைக்காலம் கூறப்படுகிறது. இதனை,

**“மனை உறை கோழிக் குறுங்காற் பேடை,**

**வேலி வெருகினம் மாலை உற்றென,**

**புகும் இடன் அறியாது தொகுபு உடன்குழீஇய**

**பைதற் பிள்ளைக் கிளை பயிர்ந்தாஅங்கு**

**இன்னாது இசைக்கும் அம்பலொடு”** (குறுந்.139:1-5)

என்னும் அடிகள் விளக்கும். இங்கு, ‘மாலை’ மருதத்துள் மயங்குகிறது. இவற்றால் மருதத் திணைப் பாடல்களில் மாலைக்காலம் மயங்கியமைவதைக் காணமுடிகின்றது. மருதத்திணைப் பாடல்களில் மாலைக் காலம் இடம் பெறுதற்கு பரத்தையரிடம் பிரிந்த தலைவன் மாலையில் வருதலும், அம்பல் மொழிக்கு வெருகிற்குப் பயந்து தன் குஞ்சுகளைக் கோழி அழைக்கும் மாலைப் பொழுது உவமித்தலும் காரணிகளாகும்.

**மருதத்திணையில் யாமப்பொழுது**

மருதத் திணைப் பாடல்களில் குறிஞ்சித் திணைக்குரிய யாமப் பொழுது பற்றிய செய்திகளைக் காணமுடிகின்றது. பரத்தையர் இரவில் தங்கிச் செல்க, என்று வேண்டுவதைக் கலித்தொகை,

**“கண்ணும் நுதலும் கவுளும் கவவியார்க்கு,**

**ஒண்மை எதிரிய அங்கையும், தண்ணெனச்**

**செய்வன சிறப்பின் சிறப்புச் செய்து, இவ்இரா**

**எம்மொடு சேர்ந்து சென்றீவாயால்”** (கலித்.83: 17-20)

என்றுரைக்கின்றது. பரத்தை தலைவனின் இல்லத்திற்கு இரவில் வருவதும்,

வந்து கதவைத் தட்டித் தலைவனை அழைப்பதும், தலைவன் அப் பானாள் இரவில் உடனே எழுந்து பரத்தையுடன் செல்வதும் காணப்படுகிறது. இது,

**"கண்டது நோயும் வடுவும் கரந்து, மகிழ்செருக்கிப்**
**பாடுபெயல் நின்ற பானாள் இரவில்**
**தொடி பொலி தோளும் முலையும் கதுப்பும்**
**வடிவு ஆர் குழையும் இழையும் பொறையா**
**ஒடிவது போலும் நுசுப்போடு, அடிதளரா**
**ஆராக் கவவின் ஒருத்தி வந்து - அல்கல்தன்**
**சீர்ஆர் ஞெகிழம் சிலம்பச் சிவந்து, நின்**
**போர் ஆர் கதவம் மிதித்தது அமையுமோ?**
**ஆய் இழை ஆர்க்கும் ஒலிகேளா அவ்எதிர்**
**தாழாது எழுந்து நீ சென்றது அமையுமோ"**(கலித். 90: 5-14)

என்பதால் விளங்கும். வாயில் மறுக்கும் தோழி கூற்றில் தலைவன் இரவுப் பொழுதில் பரத்தையரை நாடிச் செல்வான் என்பதை, எருமை இரவில் கயிற்றை அறுத்துச் செல்லும் என்ற உள்ளுறையால் குறிக்கின்றாள். இது,

**"சேற்றுநிலை முனைஇய செங்கட் காரான்**
**ஊர்மடி கங்குலில், நோன் தளை பரிந்து,**
**கூர்முள் வேலி கோட்டின் நீக்கி,**
**நீர் முதிர் பழனத்து மீன் உடன் இரிய,**

**அம்தூம்பு வள்ளை மயக்கி, தாமரை**

**வண்டு ஊது பனிமலர் ஆரும் ஊர!"** (அகநா.46:1-6)

என்பதால் சுட்டப்படும். தலைவனின் பரத்தமை வொழுக்கத்தால், அவனை இரவு நேரத்தில் மலர் ஊதும் வண்டு என்பரே அன்றி மகன் எனக் கூறப்படமாட்டார் என்பதை,

**"'நெடுநீர்ப் பொய்கை நடுநாள் எய்தி,**

**தண்கமழ் புதுமலர் ஊதும்**

**வண்டு' என மொழிப, 'மகன்' என்னாரே"** (நற்.290:7-9)

என்னும் அடிகள் குறிக்கும். இத்திணை மயக்கத்தினை,

**"சேற்று நிலை முனைஇய செங் கட் காரான்**

**ஊர் மடி கங்குல், நோன் தளை பரிந்து**

................ ................ ................ ................

**வண்டு ஊது பனி மலர் ஆரும் ஊர!"** (அகநா.46: 1-2, 6)

என்னும் அடிகளாலும் உணரப்படும். வாயிலாகப் புக்கார்க்குத் தலைமகள் கூறும் கூற்றில், தலைவன் பரத்தையிடமிருந்து யாமப் பொழுதிலும் வரமுடியாது தவிப்பது கூறப்படுகின்றது. இந்நிலையில், குறிஞ்சியின் யாமம் மருதப் பாடுபொருளுடன் குறிக்கப்படுவதை,

**"தண் துறை ஊரன் பெண்டிர்,**

**துஞ்சு ஊர் யாமத்தும், துயில் அறியலரே"** (ஐங்.13: 3-4)

என்னும் அடிகளின் வழிப் பெறமுடிகின்றது. இதனால் தலைவன் பரத்தமை ஒழுக்கம் மேற்கொள்ளும் இரவுப்பொழுது திணைமயக்கமாகக்

குறிக்கப்படுவது புலப்படும். பரத்தையிடம் இருந்து பிரிந்து தலைவியை நாடிவரும் தலைவன் இரவுப் பொழுதில் வருகின்றான் இதனை மருதக்கலி,

**"வண்டு ஊது சாந்தம் வடுக்கொள நீவிய,**

**தண்டாத் தீம் சாயற் பரத்தை வியல் மார்ப!**

**பண்டு இன்னை அல்லைமன்; ஈங்கு எல்லி வந்தீய"**(கலித்.93:1-3)

என்றுரைக்கின்றது. பரத்தையரின் இல்லத்திருந்து தனது இல்லிற்குத் தலைவன் இரவில் வருவது குறிக்கப்படுகிறது. இது,

**"நள்ளென் கங்குல், கள்வன் போல,**

**அகன்துறை ஊரனும் வந்தனன்**

**சிறந்தோன் பெயரன் பிறந்தமாறே"** (நற்.40: 10-12)

என்பதால் பெறப்படுகின்றது. இதனுள் குறிஞ்சியின் பொழுது 'நள்ளென் கங்குல்' எனக் குறிக்கப்பட்டு மயங்குகிறது. தலைவன் இரவில் வருவதைக் குறிக்குமிடத்து, "பரத்தையர் காணிற் பலர்கொள் பலகை போலப் பற்றி யீர்த்தலும் ஈர்ப்பரென அவர் காணாமை நள்ளிருளிற் கள்வன் போல வந்தனனென்றதாம்"[31] என்பர். வாயில் வேண்டும் தலைமகன் திருமணநாள் இரவில் தலைவியுடன் கூடி மகிழ்ந்ததைக் கூறுகின்றான்.[32] உணர்ப்புவயின் வாரா ஊடற்கண் தலைமகன் தன் நெஞ்சிற்குக் கூறும் கூற்றில் திருமணநாள் இரவில் நிகழ்ந்ததைக் கூறுகின்றான்.[33] பரத்தையர் மாட்டுப் பிரிந்த தலைமகன் வாயில் வேண்டிப் புக்கவழி தன் வரைத்தன்றி அவன் வரைத்தாகித் தன் நெஞ்சு நெகிழ்ந்துழி தலைமகள் அதனை நெருங்கிச் சொல்லிய கூற்றில் 'நெஞ்சே நீ துயிலும் நாட்கள் சிலவாக அமைக' என்கின்றாள். இதற்கு அஞ்சியின்

போர்க்களத்தில் உள்ள இரவை உடைய ஊரில் உள்ளார் போல் துயிலும் நாட்கள் சிலவாகுக என்கின்றாள். இது,

"கடும் பகட்டு யானை, நெடுந்தேர், அஞ்சி
கொன்முனை இரவு ஊர் போலச்
சில ஆகுக, நீ துஞ்சும் நாளே" (குறுந். 91:6-8)

என்பதால் பெறப்படும். ஆற்றாமையே வாயிலாகப் புக்க தலைவனுக்கு வாயில் நேர்ந்த சூழலைத் தலைவி கூறும், கூற்றில், தலைவன் இரவில் வந்து தலைவியை அணைப்பது கூறப்படுகிறது. இது,

"புலத்தல் கூடுமோ - தோழி! அல்கல்
............ ................ ............. .............
சிறுபுறம் கவையினனாக உறுபெயல்
தண்துளிக்கு ஏற்ற பல உழு செஞ்செய்
மண்போல் நெகிழ்ந்து, அவற் கலுழ்ந்தே
நெஞ்சு அறைபோகிய அறிவி னேற்கே" (அகநா.26: 5, 23-26)

என்பதால் விளங்கும். தலைவியின் அழகிற்குக் கூறப்படும் ஆமூர் என்னும் ஊரில் விளக்குகளின் ஒளி மிகுதியால் இரவை அறிய இயலாது என்பது கூறப்படுகிறது. இதனை,

"பகல் கொள் விளக்கோடு இராநாள் அறியா
வெல்போர்ச் சோழர், ஆமூர் அன்ன" (ஐங்.56:1-2)

எனும் அடிகள் சுட்டும். தோழி இவ்வாறு கூறுவதன்மூலம் 'பரத்தையின் தொடர்பை நீ மறைத்துத் தெரிவிக்கின்றாய்' என்ற கருத்தைத்

தலைவனுக்குக் கூறுகின்றாள். "இராநாள் உரியதாகவும் விளக்கங்கள் தம் ஒளியால் அதனை அறியா வண்ணம் மறைப்பது போல நின்பால் பரத்தைமை உளதாகவும் அதனை இப்பொய்மொழிகளால் மறைத்துத் தெளிவிக்கின்றாய் எனத் தலைவனது தெளிப்புரையின் இயல்பு கூறினாள்"[34] என்பர்.

எவ்வி என்பானது நாட்டில் பாண்மகளின் அண்ணன்மார் இரவில் மீன்பிடிக்கச் செல்வர் என்பது மருதத் திணைப்பாடலில் குறிக்கப்படுகிறது. இதனை,

**மால் இருள் நடுநாட் போகி, தன்ஐயர்**

**காலைத் தந்த கணைக்கோட்டு வாளை"** (அகநா.126:7-8)

என்னும் அடிகளின் வழிப் பெறமுடிகின்றது.

இவற்றால் மருதத்திணைப்பாடல்களில் இரவுப் பொழுது மயங்கும் திணைமயக்கத்தை உணர முடிகிறது. பரத்தை, 'இரவுதங்குக' என்று கூறுதலும், பரத்தை தலைவனை இரவில் அழைத்தலும், தலைவன் பரத்தையை நாடி இரவில் செல்லுதலும், தலைவன் பரத்தையின் தொடர்பால் காலந்தாழ்த்தி இரவு வருதலும், தலைமகன் வாயில் வேண்டுதலும், உணர்ப்புவயின் வாரா ஊடற்கண் தலைவன் நெஞ்சிற்குக் கூறுதலும், திருமண நாளின் இரவில் நிகழ்ந்த நிகழ்வு கூறப்படுதலும், துயிலாது துன்பப்படும் தலைவியின் நெஞ்சினைக் குறிக்கும் போர்க்களத்து ஊரின் இரவு நிலையைக் கூறுதலும், பரத்தமை ஒழுக்கத்தை மறைக்கும் தலைவனின் இயல்பிற்கு விளக்கு ஒளி இரவை மறைக்கும் தன்மை

கூறப்படுதலும், எவ்வி என்பானைக் கூறுமிடத்து அவனது நாட்டில் மீன்பிடிப்போர் இரவில் செல்லுதலைக் குறித்தலும் மருதத்திணைப் பாடல்களில் இரவுப் பொழுது மயங்குவதற்குரிய காரணங்களாகும்.

**தொகுப்புரை**

திணை இலக்கியப் பாடுநெறியில் பெரும்பொழுதும் சிறுபொழுதும் ஒவ்வொரு திணைக்கும் உரியன இவை என வரையறை செய்யப்பெற்றுள்ளன. இப்பொழுதுகள் வரையறை நெறியில் இருந்து மாறுபட்டுப் பிற திணைக்குரிய உரிப்பொருளுடன் குறிக்கப்படுதல் திணை மயக்கம் என வகுக்கப்பெறுகிறது.

முல்லைத் திணைப் பகுப்பில் முல்லையின் உரிப்பொருளுடன் கூதிர்காலம், வேனிற்காலம், அற்சிரக்காலம் எனும் பொழுதுகளும், வைகறை, விடியல், யாமம் எனும் பொழுதுகளும் திணை மயக்கமாகக் குறிக்கப்பெறுகின்றன.

ஆற்றியிருக்கும் தலைவியின் துயரம் தலைவனின் கால நீட்டிப்பால் கூதிர்காலம் வரையிலும் தொடர்வதாகப் பாடும்போது முல்லையின் பாடுபொருளுடன் கூதிர் காலம் மயங்குகின்றது.

முல்லைத் திணையுள் குறிக்கப்படும் கார்கால மழை பாலைத்திணைக்குரிய பாலை நிலத்துள் வேனிற்கால வெம்மை நீங்கும் பொருட்டுப் பெய்ததாகக் கூறப்படும்போது முல்லையுள் வேனில் மயங்குகிறது. தலைவன் வரவு குறித்த பொழுதாகவும் அப்பொழுதுகண்டு

ஆற்றியிருப்பதும், ஆற்றுவிப்பதாகவும் குறிக்கப்பட்டு வேனில் முல்லையுள் மயங்குகின்றது.

தலைவன் வருவதாகக் குறித்த அற்சிரம் என்னும் அக்காலத்தை நோக்கித் தலைவி ஆற்றியிருக்கிறாள் என்றும், அக்காலத்தின் வரைவைக் காட்டி தோழி ஆற்றுவிக்கிறாள் என்றும் கூறப்படும் பாடல்களுள் அற்சிரம் திணை மயக்கமாக முல்லைப் பாடுபொருளுடன் மயங்குகின்றது.

முல்லையுள் வைகறை, விடியல் எனும் மருதத்திணையின் பொழுதுகள் மயங்குமிடத்து முல்லை நிலத்தவர் உழவு செய்யத் தொடங்குதல் கார்கால மழை பெய்தல், அரசன் போரைத் தொடங்குதல், மாலையினைப் போன்று துயரம் செய்தல், மூதாய் குறுகுறு என ஓடி விளையாடல் என்பனவற்றுடன் இயைபுபடுத்தப்பட்டு திணை மயக்கமாகக் கூறப்படுகிறது.

முல்லையின் பாடுபொருளுடன் குறிஞ்சித் திணைக்குரிய இரவுப் பொழுது மயக்கமாக இடம்பெறுகிறது. தலைவி இரவுப்பொழுதில் துயருடன் ஆற்றியிருத்தல், தலைவி ஆற்றியிருக்க ஊர் இரவுப் பொழுதின் இயல்புடன் கூறப்படுதல் என்பன முல்லையுள் இரவு மயங்குதற்குரிய வழிகளாக அமைகின்றன.

குறிஞ்சித்திணைக்குரிய பகுப்பில் குறிஞ்சியின் பாடுபொருளுடன் கார்காலம், வேனிற்காலம், வைகறை, விடியல், பகற்பொழுது, எற்பாடு, மாலை எனும் பொழுதுகளும் திணை மயக்கமாக இடம்பெறுகின்றன.

குறிஞ்சியின் பாடுபொருளுடன் கார்காலம் மயங்குமிடத்து களவு கார்காலத்தில் நிகழ்வதாகக் குறிக்கப்படுகிறது. இதனால் தலைவன் கார்கால மழையில் நனைந்து நீர்ப் பரப்புகளைக் கடந்து கார்காலப் பூக்களின் வருடலும் தலைவி களவுப் புணர்வில் கார்கால மலர்களைச் சூடுவதும், தலைவனுக்கு, கார்காலத்தால் வரும் ஏதங் குறித்துத் தோழி வரைவுகடாவுவதும் பாடப்பெறுகின்றன. குறிஞ்சியில் குறிக்கப்பெறும் குறிஞ்சி நிலம் கார்கால இயல்புடன் கூறப்படுமிடத்தும், திணைக்காவலின் இறுதியாகக் கார்காலம் வருவதும், தலைவன் வரைதற்கு கார்காலத்தே வருவேன் எனக் குறிப்பதும் மகிழ்ச்சி, நறுமணம், மென்மை முதலியவற்றைக் குறிக்குமிடத்தும் கார்காலச் செய்திகள் திணை மயக்கமாகக் கூறப்படுகின்றன.

குறிஞ்சித்திணையின் பாடுபொருளுடன் வேனிற்காலம் மயங்குமிடத்து களவு வேனிற் காலத்துள் நிகழ்வதாகக் குறிக்கப்படுகிறது. வேனிற்கால நிகழ்வுகளும், வேனிற் காலப்பொருட்களும் சுட்டப்படுமிடத்தும் குறிஞ்சியுள் வேனில் திணை மயக்கமாகச் சுட்டப்பெறுகின்றது.

குறிஞ்சித்திணையுள் மருதத்தின் வைகறை விடியல் மயங்குதலைக் காணமுடிகின்றது. குறிஞ்சியுள் வைகறை விடியல் மயங்குமிடத்து களவுக் காலத்தில் இரவில் தலைவன் தந்த பூவைத் தலைவி உதிர்த்துவிட்டு எண்ணெய் தடவிக் கொள்ளும் வைகறையும் தலைவன் வரைவிற்கு வரவேண்டிய வைகறைப் பொழுதும் குறிக்கப்பெறுகிறது. மழை பெய்தல்,

யானை உணவு உண்ணுதல், மயில் ஆடுதல், மலர்கள் மலருதல் எனும் விடியற் பொழுதும் சுட்டப்பெறுகின்றது.

குறிஞ்சித் திணைப் பாடுபொருளுடன் பகற் பொழுதானது பகற்குறி தொடர்பாக இடம் பெறுவது அறியப்படுகின்றது. பாலைத் திணைப்பகுப்பில் பாலையின் பாடுபொருளுடன் கார்காலம் மயங்குகின்றது. தலைவன் பிரிந்து செல்லக் கருதிய காலம் கார்காலமாகக் குறிக்கப்பெறுகின்றது. இதனால் கார்காலத்தே பிரிய எண்ணினார் எனத் தலைவி வருந்துவதும், 'கார்காலமாதலால் நின்னைப் பிரியேன்' எனத் தலைவன் கூறுதலுமாகிய சூழலில் கார்காலம் மயங்குகின்றது. கார்கால நிகழ்வுகள் உவமையின் வழியாகக் குறிக்கப்படுமிடத்து பாலையுள் கார்காலம் மயங்குகின்றது.

பொருள்கடைக் கூட்டிய நெஞ்சிற்குத் தலைவன் கூறும் கூற்றில் முன்பு கூதிர்காலத்தில் தலைவி வருந்துவாள் என எண்ணி இடைச்சுரத்தில் வருந்தியது கூறப்படுகின்றது. தலைவன் கூதிர்கால நிலையை எண்ணிச் செலவழுங்குமிடத்தும், கூதிர்கால இயல்பை எடுத்துரைப்பாயாக எனத் தலைவி தோழியிடம் கூறுமிடத்தும் பாலையுள் கூதிர் காலம் இடம் பெறுவதைக் காணமுடிகின்றது.

பாலையுள் வைகறை, விடியல் மயங்குகின்றது. தலைவி உடன்போக்கில் செல்வதற்குச் சிலம்புகளைக் கழற்றி வைக்கும் காலமாகவும், பாலை வழியே செல்லும் தலைமகன் தனது செலவினைத் தொடங்கும் பொழுதாகவும் கூறப்படுகின்றது. பாலை நிலத்தின் கொடுமை

வைகறை விடியற் கால இயல்புடன் கூறப்படுமிடத்தும் பாலையுள் வைகறை விடியல் எனும் பொழுதுகள் மயங்குகின்றன.

பாலையுள் மாலை மயங்குமிடத்து உடன் போக்கிற்கு ஏற்ற பொழுதாக மாலை கூறப்படுகின்றது. தலைவியை உடன் போக்கில் கொண்டு செல்லும் தலைவன் மாலையில் தனது ஊரை அடைதல் சுட்டப்பெறுகின்றது. மகட்போக்கிய தாய் மாலையில் துயரடைதல் குறிக்கப்படுகின்றது. தலைவன் பிரிந்தால் மாலை துயர் செய்யும் எனத் தலைவி கூறுகின்றாள். தலைவன் இடைச்சுரத்தில் தலைவி வருந்தும் மாலைப் பொழுதைத் தலைவன் குறிப்பது பாலைப் பாடலுள் காணமுடிகின்றது. பாலையின் புனைவுகள் மாலைக்கால இயல்புடன் கூறப்படுமிடத்தும் பாலையுள் பாலை மயங்குகின்றது.

பாலையுள் இரவுப்பொழுது மயங்குமிடத்து தலைவன் பிரிந்து சென்ற நிலையில் துணையின்றி வருத்தப்பட வேண்டிய பொழுதாகக் கூறப்படுகின்றது.

மகட்போக்கிய தாய் தனது மகள் இரவில் என்ன செய்தாளோ என்று வருந்துமிடத்தும், பாலைப்புனைவு இரவுப் பொழுதின் இயல்புடன் கூறப்படுமிடத்தும் பாலையுள் இரவு மயங்குகிறது.

மருதப்பகுப்பில் மருதத் திணையின் பாடுபொருளுடன் பகற்பொழுது குறிக்கப்படுகின்றது. பரத்தை தலைவியைச் சந்தித்துப் பேசுதல், தலைவன் பரத்தையுடன் தங்குதல் எனும் நிகழ்வுகள் பகற்பொழுதில் நிகழ்ந்ததாகக் குறிக்கப்பட்டு, மருதத்துள் பகற்பொழுது

மயங்குவதும் பகற்பொழுதின் நிகழ்வுகள் குறிக்கப்பட்டு பொழுது மயங்குவதும் காணப்படுகின்றது.

மருதத் திணையின் பாடுபொருளுடன் தலைவன் புனலாடிய மாலைக் காலமும் பரத்தையிடம் இருந்து வந்த தலைவன் தலைவியுடன் இருக்கும் மாலைக் காலமும் மாலைக்கால இயல்புடன் கூறப்படும் நிகழ்வுகளும் மயங்குகின்றன.

மருதத் திணையில் யாமப் பொழுது குறிக்கப்படுமிடத்து பரத்தையொழுக்கத்துடன் இரவுப் பொழுது சுட்டப்படுகின்றது. பரத்தையிடமிருந்து வரும் தலைவன் இரவில் வருவதாகக் குறிக்கப்படும் இரவுக்கால நிகழ்வுகள் திணைமயக்கமாகக் குறிக்கப்பெறுகின்றன.

நெய்தல் பகுப்பில் காணப்படும் பாடல்களில் நெய்தல் உரிப்பொருளைக் காணமுடியவில்லை. எனவே நெய்தலுள் பொழுது மயங்குதலை உணர இயலவில்லை.

## சான்றெண் விளக்கம்


1. இறையனார் அகப்பொருள், நூ.1.
2. நம்பியகப் பொருள், நூ.12.
3. சிவஞானமுனிவர், தொல்காப்பியச் சூத்திரவிருத்தி, ப.52.
4. இரா.செகதீசன், தொல்காப்பியர் பொருளதிகார வழி அகநாநூறு- ஓர் ஆய்வு ப.128.
5. மு.அருணாச்சலம், அகத்திணையியல், ப.107, 108.
6. Rm. Periyakaruppan, Tration and Talent in cankam Poetry p.81.
7. அ.தட்சிணாமூர்த்தி, சங்க இலக்கியம் ஐங்குறுநூறு (மூலமும் உரையும்) ப.988.
8. இரா.செயபால், சங்க இலக்கியம் அகநானூறு (மூலமும் உரையும்) ப.791.
9. அ.சீனிவாசன், பழசும் புதுசும், ப.62.
10. மா.இராசமாணிக்கம், பத்துப்பாட்டு ஆராய்ச்சி, ப.639.
11. வ.சுப. மாணிக்கம், தமிழ்க்காதல், ப.84.
12. ஔவை சு.துரைசாமிபிள்ளை , நற்றிணை மூலம் விளக்கவுரையும் ப.378.
13. ரா.இராகவய்யங்கார், குறுந்தொகை விளக்கம், ப.65.
14. எச்.வேங்கடராமன், (ப.ஆ), நற்றிணை மூலமும் உரையும், ப.440.
15. அ. தட்சிணாமூர்த்தி, சங்க இலக்கியம் ஐங்குறுநூறு, (மூலமும் உரையும்) ப.436.
16. ஔவை.சு.துரைச்சாமிப்பிள்ளை (உ.ஆ), நற்றிணை மூலமும் விளக்கவுரையும் ப.626.
17. மேலது, ப.405.
18. மேலது, ப.609.

19. கு.வெ.பாலசுப்பிரமணியன் (உ.ஆ), சங்க இலக்கியம் நற்றிணை, ப.224.

20. ந.மு.வேங்கடசாமி நாட்டார், ரா.வேங்கடாசலம்பிள்ளை, அகநானூறு-களிற்றியானை நிரை, ப.106.

21. ந.சுப்புரெட்டியார், அகத்திணைக் கொள்கைகள், ப.33.

22. வி.நாகராசன், சங்க இலக்கியம் குறுந்தொகை, (மூலமும் உரையும்) ப.184.

23. குறிஞ்சிப். 217 முதல் 230 வரை.

24. வி.நாகராசன் (உ.ஆ), சங்க இலக்கியம் பத்துப்பாட்டு, (மூலமும் உரையும்) ப.291.

25. அ.நாராயணசாமி ஐயர் (உ.ஆ) நற்றிணை நானூறு, பக்.365,366.

26. கு.வெ.பாலசுப்பிரமணியன் (உ.ஆ), சங்க இலக்கியம் நற்றிணை (மூலமும் உரையும்) ப.472.

27. அகநா. 299: 11.

28. குறுந். 168: 1-4.

29. பொ.வே. சோமசுந்தரனார் (உ.ஆ), ஐங்குறுநூறு, ப.525.

30. அ.தட்சிணாமூர்த்தி (உ.ஆ), சங்க இலக்கியம் ஐங்குறுநூறு, (மூலமும் உரையும்) ப.210.

31. அ. நாராயணசாமி (உ.ஆ), நற்றிணை நானூறு, ப.53.

32. அகநா. 86.

33. மேலது, 136.

34. அ.தட்சிணாமூர்த்தி (உ.ஆ), சங்க இலக்கியம் ஐங்குறுநூறு, (மூலமும் உரையும்) ப.124.

# முடிவுரை

'திணை' என்பது 'திண்' என்பதன் அடியாகத் தோன்றிய சொல்லாகிறது. இச்சொல் நிலம், திண்ணை, இல்லம், மேடை, உயர்குடி, ஒழுக்கம், இனம் (பகுப்பு) எனும் பொருளைக் குறித்தமைகின்றது. அஃறிணை, உயர்திணை என்று வகைப்படுத்தும் போது திணை என்பது ஓர் இலக்கணக் கலைச்சொல்லாக அமைகின்றது. 'திணை மயக்கம்' எனும் சொல்லில் 'திணை' என்பது ஓர் இலக்கியக் கலைச் சொல்லாகவும் முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் என்பனவற்றை ஒருங்கே குறிப்பதாகவும் அமைகிறது.

'திணை மயக்கம்' என்பதனுள் 'மயக்கம்' எனும் சொல் இரண்டும் கலந்து நிற்றல் எனும் பொருளில் இடம்பெறுகிறது. எனவே திணை மயக்கம் என்பதற்கு ஒரு திணையின் முதல், கரு, உரி எனும் கூறுகள் மற்றொரு திணைக் கூறுகளுடன் மயங்குதல் என்பது பொருளாகின்றது.

அத்திணைப் பாடல்களின் நோக்கம் உரியினைப்பாடுவதாகின்றது. எனவே திணை மயக்கத்துள் உரிப்பொருள் மயங்குதல் இல்லை எனும் வரையறை செய்யப்படுகின்றது. உரிப்பொருளுடன் முதற்பொருளும் கருப்பொருளும் மயங்கும். உரிப்பொருள் எதனுடனும் மயங்காது.

ஒரு திணைப்பாடலில் பிற திணைக்குரிய நிலச் செய்திகள் உவமை, புறச்செய்திகள் என்பனவாகக் கூறப்படும். இவ்வாறு அமையும் நிலச் செய்திகளை, நில மயக்கம் எனக் கொள்வதில் தவறில்லை. புலவர்கள் உலக இயல்பின்படி பிற நிலத்துள் நிகழும் உரியைப் படைக்கின்றனர்.

உலக இயல்பினைத் தழுவி அமையும் இப்பாடல்களை, உரிப்பொருள் மயங்காதென்பதால் நிலம் மயங்கிய திணைமயக்கப் பாடல்களாகக் கொள்ள வேண்டியுள்ளது. எனவே திணை மயக்கத்துள் நிலம் மயங்கும் என்பது ஏற்புடைய கருத்தாகின்றது.

திணை மயக்கத்துள் பொழுது மயக்கம் சிறப்பிடம் பெறுகின்றது. பொழுதுகள் மயங்கும் என்ற கருத்து இலக்கணிகளாலும், உரையாசிரியர்களாலும், ஆய்வறிஞர்களாலும் கருத்து வேறுபாடின்றி ஏற்கப்படுகின்றது. உவமை, உள்ளுறை போன்றமையும் கூறுகளின் வழி பொழுதுகள் பிற திணையின் உரியுடன் கூறப்பட்ட போதும் அது திணைப் பாடல் மரபு நோக்கி திணைமயக்கமாகும்.

கருப்பொருள்கள் திணை மயக்கமாக மயங்கும் பூவும் புள்ளும் மயங்கிய போதும் அம்மயக்கம் திணை மயக்கம் எனக் கொள்ளப்பெறாது.

திணை மயக்க வரையறையில், உரிப்பொருளுடன் உரிப்பொருள் மயங்கும், உரிப்பொருள் அல்லாத கைக்கிளை, பெருந்திணை, கொண்டுதலைக் கழிதல், பிரிந்தவண் இரங்கல், கலந்தபொழுது, காட்சி, இன்பம், இடும்பை, புணர்வு, பிரிவு என்பன மயங்கும். நிலனொருங்கு மயங்கும். அகமும் புறமும் மயங்கும் என்பன கருத்து வளர்ச்சியாக அறியப்படுகின்றன.

சங்க அக இலக்கியப் பாக்களுள் திணைமயங்காப் பாடல்களும், திணை மயக்கப்பாடல்களும் காணப்படுகின்றன. உரிப்பொருளுடன் முதல், கருப்பொருள் மயங்கிய திணை மயக்கப்பாடல்கள் முதல், கருவிற்குரிய

திணைப்பெயரால் பாகுபடுத்தப்பட்டுள்ளன. இவற்றுள் திணை மயக்கப் பாடல்கள் ‘முல்லையுள் குறிஞ்சி’, ‘குறிஞ்சியுள் முல்லை’ எனும் முறையில் அடையாளப்படுத்த வேண்டும்.

முல்லைத் திணைப்பகுப்பில் 234 பாடல்கள் உள்ளன. இவற்றுள் 136 பாடல்கள் முல்லைக்குரிய திணைமயங்காப் பாடல்களாகவும், 7 பாடல்கள் பிற திணைக்குரிய திணைமயங்காப் பாடல்களாகவும் காணப்படுகின்றன. இவற்றால் முல்லைத் திணைப் பகுப்பில் காணப்படும் திணைமயங்காப் பாடல்களின் எண்ணிக்கை 143 ஆகின்றன. இப்பாடல்களைத் தவிர்த்து காணப்படும் 91 பாடல்கள் திணைமயக்கப் பாடல்களாகக் காணப்படுகின்றன. இவற்றுள் முல்லைக்குரிய உரிப்பொருளுடன் பிற திணையின் முதல் கருப்பொருள்கள் மயங்கிய திணைமயக்கப் பாடல்கள் 58 ஆகவும், பிறதிணையின் உரிப்பொருளுடன் முல்லைத் திணையின் முதல் கருப்பொருள்கள் மயங்கிய திணைமயக்கப் பாடல்கள் 33 ஆகவும் காணப்படுகின்றன.

முல்லைப் பகுப்பில் குறிஞ்சி உரியுடன் முல்லையும், பாலை உரியுடன் முல்லையும் மயங்கியுள்ளது. குறிஞ்சித் திணையின் பாடுபொருளுடன் முல்லையின் முதல் கரு மயங்கிய பாடல்கள் 17, பாலைத் திணையின் பாடுபொருளுடன் முல்லையின் முதல் கரு மயங்கிய பாடல்கள் 16 ஆகும்.

குறிஞ்சித் திணையின் பாடுபொருளில் முல்லைத் திணையின் முதல், கரு மயங்கிய திணைமயக்கப் பாடல்கள் குறிஞ்சியுள் முல்லை எனக் குறிக்கப்பெறுகின்றன.

குறிஞ்சியின் பாடுபொருளில் முல்லையின் முதல் கருப்பொருள் மயங்குமிடத்து முல்லையின் கூறுகள் குறிஞ்சிக்குரிய குறியிடமாகவும், களவைச் சிறப்பிக்கும் ஏறுதழுவல் நிகழும் இடமாகவும் தலைவன் தலைவியருக்குரிய இடமாகவும் அமைவதுடன், முல்லைத் திணைக்குரிய மாலைப்பொழுது களவுக்காலத்தில் தலைவியைக் கண்ட தலைவனின் அறிவை மயங்கச் செய்யும் பொழுதாகவும், களவில் தலைவனின் வரைவை எதிர் நோக்கியிருக்கும் தலைவியின் துயரை மிகுதிப்படுத்தும் பொழுதாகவும் அமைகின்றன.

பாலையுள் முல்லையின் முதல் கருப்பொருள்கள் மயங்குமிடத்து முல்லைத் திணையின் கார்காலம் தலைவன் செலவு மேற்கொண்ட பொழுதாகக் குறிக்கப்படுகின்றது. தலைவனைச் செலவழுங்குவிக்குமிடத்து முல்லைத் திணையின் கார்கால இயல்பு ஆற்ற இயலாது என்பதற்குக் காரணமாகக் காட்டப்படுகிறது. தலைவன் செலவழுங்கும் சூழலில் கார்காலத்தே வேந்தன் போர்வினையைத் தவிர்த்ததனைக் குறிப்பிடுகின்றான். தலைவனின் பிரிவிற்கு வருந்தும் தலைவியைத் தோழி அவர் சென்ற வழி கார்காலத்தால் இனியனவாகின எனக் குறிப்பிடுகின்றாள். பாலையுள் முல்லை மற்றும் குறிஞ்சியின் முதல் கருப்பொருள் மயங்கும் பாடல்களில் தலைவன் கார்காலத்தே பிரிந்து சென்றதால் அவன் செல்லும் வழியானது முல்லை மற்றும் குறிஞ்சியாக அமைவது குறிக்கப்படுகின்றது.

குறிஞ்சித்திணைப் பகுப்பில் 488 பாடல்கள் காணப்படுகின்றன. இவற்றுள் 372 பாடல்கள் திணை மயங்காப் பாடல்களாகவும், 116 பாடல்கள் திணை மயக்கப் பாடல்களாகவும் உள்ளன.

குறிஞ்சித்திணைப் பகுப்பில் முல்லை, பாலை, மருதம், நெய்தல் எனும் திணைகளின் உரியுடன் குறிஞ்சியின் முதல் கரு மயங்கியமை அறியப்படுகிறது. குறிஞ்சித் திணைப்பகுப்பில் முல்லைத் திணைக்குரிய பாடுபொருளுடன் குறிஞ்சியின் முதல் கருப்பொருள் மயங்கிய திணைமயக்கப் பாடல்கள் 12 காணப்படுகின்றன.

முல்லையின் பாடுபொருளில் குறிஞ்சியின் முதல் கருப்பொருள் மயங்கும் நிலையில் கூதிர்காலமும் யாமப் பொழுதும் குறிப்பிடத்தக்க அளவில் திணைமயக்கமாக இடம்பெறுகின்றன. கார்கால வரவை நோக்கி ஆற்றியிருக்கும் தலைவி கார்காலம் கடந்துவிட்ட நிலையிலும் துயரப்பட்டு ஆற்றியிருக்கும் நிலையில் கூதிர்காலமும் யாமப் பொழுதும் முல்லையின் பாடுபொருளில் மயங்கியுள்ளன.

முல்லைத் திணைப் பாடல்களைச் சிறப்பிக்கும் கார்கால மேகங்கள் குறிஞ்சி நிலத்தைச் சூழ்ந்து பெய்யத் தொடங்குவதாகக் குறிக்கப்படும் நிலையில் முல்லையின் பாடுபொருளில் குறிஞ்சியின் முதல் கருப்பொருள்கள் மயங்குகின்றன.

குறிஞ்சி நில மக்களின் முல்லையொழுக்கம் படைக்கப்படும் பொழுது முல்லையின் பாடுபொருளுடன் குறிஞ்சியின் முதல், கரு மயங்குவதைக் காணமுடிகின்றது.

குறிஞ்சித் திணைப் பகுப்பில் பாலைத்திணையின் பாடுபொருளுடன் குறிஞ்சித் திணையின் முதல், கருப் பொருள் மயங்கிய திணைமயக்கப் பாடல்களாக 5 பாடல்கள் காணப்படுகின்றன.

தலைவன் பிரிந்து செல்லக்கருதிய நிலம் குறிஞ்சியாகக் குறிக்கப்படும் நிலையில் பாலையின் பாடுபொருளில் குறிஞ்சி மயங்குகின்றது. பிரிவை மையமிட்டுப் பாலைப்பாடுபொருளில் குறிஞ்சித் திணையின் கூதிர் மற்றும் யாமப் பொழுதுகள் தலைவன் பிரிந்தால் தலைவியைத் துயரப்படுத்தும் பொழுதாகவும், பிரிதற்கு இயலாப் பொழுதாகவும், உடன்போக்கில் கொண்டுசெல்ல, தலைவன் வரும் பொழுதாகவும் குறிக்கப்படுகின்றன.

பாலையின் பாடுபொருளைச் சிறக்கச் செய்யும் உவமைக் குறிப்புக்களாகவும் குறிஞ்சியின் முதல், கருப்பொருட்கள் பாலையின் பாடுபொருளுடன் மயங்குவதைக் காணமுடிகின்றது.

மருதத் திணைக்குரிய பாடுபொருளுடன் குறிஞ்சித் திணையின் முதல், கருப்பொருள்கள் மயங்கிய பாடல்கள் 9 காணப்படுகின்றன. இப்பாடல்கள் குறிஞ்சி எனும் பகுப்பில் குறிக்கப்படுகின்றன. மருதத் திணையின் பாடுபொருளுடன் குறிஞ்சியின் முதல், கரு மயங்கும்போது குறிஞ்சி நிலப்புனைவுகள் தலைமக்களுக்குரிய நிலப் புனைவாகக் குறிக்கப்படுகின்றன. இவற்றுடன் குறிஞ்சி நிலப்புனைவைக் கொண்ட உவமைகளும் இத்திணைமயக்கத்திற்கு அடிப்படையாக அமைகின்றன.

குறிஞ்சித் திணைப்பகுப்பில் நெய்தல் திணையின் பாடுபொருளுடன் குறிஞ்சித் திணையின் முதல், கருப்பொருள்கள் மயங்கிய நிலையில் ஒரு பாடல் காணப்பெறுகின்றது. இதனுள் தலைவியின் இரங்கல் உணர்வைச் சிறப்பிக்கும் விதமாகக் குறிஞ்சித் திணையின் கூறுகள் உவமையின் வழியாக இடம்பெறுகின்றன.

சங்க இலக்கியத்துள் பாலை எனும் திணைப்பகுப்பில் 530 பாடல்கள் கொள்ளப்படுகின்றன. இவற்றுள் 129 பாடல்கள் பிற திணையின் பாடுபொருளுடன் காணப்படுகின்றன. பிற திணையின் உரியுடன் பாலையின் முதல், கரு மயங்கியப் பாடல்கள் 109 ஆகும். பிற திணைக்குரிய திணைமயங்காப் பாடல்கள் 20 ஆகும்.

பாலைப் பகுப்பில் முல்லை, குறிஞ்சி, மருதம் எனும் திணைக்குரிய உரிப்பொருளுடன் பாலை மயங்குகின்றது.

பாலைப் பகுப்பில் முல்லையின் பாடுபொருளுடன் 92 பாடல்களும், குறிஞ்சியின் பாடுபொருளுடன் 13 பாடல்களும், மருதப் பாடுபொருளுடன் 4 பாடல்களும் அமைந்து அவற்றுள் பாலையின் முதல், கருப்பொருள்கள் மயங்குவதைக் காணமுடிகிறது.

முல்லையின் பாடுபொருளுடன் பாலையின் முதல், கரு மயங்குமிடத்து முல்லைத்திணைக்குரியதான பருவ வரவு இளவேனிலாக அமைவதைக் காணமுடிகிறது. வினைமுற்றி வரும் தலைமகன் முல்லையுள் பாலை மயங்கிய பாடலுள், பாலை நிலத்தைக் கடந்து வருவதாகக் குறிக்கப்பெறுகிறான். முல்லைப் பாடுபொருளில் தலைவனைக் குறிக்குமிடத்து அவன் சென்ற பாலை நிலமும் திணைமயக்கமாகக் குறிக்கப்பெறுகின்றது. தலைமகன் வினைமுற்றி வந்த நிலையில் இடம்பெறும் முல்லைக்குரிய கூற்றுக்களுள், முன்பு பாலை நிலத்துள் நிகழ்ந்த நிகழ்வுகள் உரைக்கப்பட்டு, முல்லையுள் பாலை மயங்குகின்றது. முல்லையுள் பாலை மயங்குமிடத்து பாலையின் கூறுகள் உவமையின் வழியாகவும் இடம்பெறுகிறது.

குறிஞ்சியின் பாடுபொருளுடன் பாலையின் முதல், கருப்பொருள்கள் மயங்குமிடத்துப் பாடப்பெறும் தலைமக்கள் பாலை நிலத்துள் வாழ்பவராகக் குறிக்கப்பெறுகின்றனர். குறிஞ்சியின் பாடுபொருளுடன் குறிக்கப்படும் குறிஞ்சி நிலம், வேனிற்கால இயல்புடன் கூறப்படும் போது குறிஞ்சியுள் பாலை மயங்குகிறது. குறிஞ்சியின் பாடுபொருளைச் சிறப்பிக்கும் களவு, வேனிற்காலத்துள் நிகழ்ந்ததாகக் குறிக்கப்பட்டு குறிஞ்சியுள் பாலை மயங்குகிறது. தலைவன் களவிற்கு வரும் வழியின் ஏதம் பாலை நிலத்து ஏதமாகக் குறிக்கப்படும் போது குறிஞ்சியுள் பாலை மயங்குவது பெறப்படுகிறது.

மருதப் பாடுபொருளுடன் பாலை மயங்குமிடத்து, பொருள்முற்றி வந்த அண்மைக்காலத்தில் நிகழும் மருத ஒழுக்கம் பாடப்பெற்று மயங்குகிறது.

பொருள்வயிற் பிரிவு பரத்தையிற் பிரிவுடன் உறழ்ந்து நோக்கப்படும் நிலையிலும், மருதப் பாடுபொருளுடன் பாலையின் கூறுகள் உவமையின் வழி குறிக்கப்படும் நிலையிலும் மருதத்துள் பாலை மயங்குகிறது.

சங்க இலக்கியத்துள் மருதப் பகுப்பில் 263 பாடல்கள் காணப்படுகின்றன. இவற்றுள் 39 பாடல்கள் பிற திணையின் உரிப்பொருளுடன் மருதத்தின் முதல், கரு மயங்கிய திணைமயக்கப் பாடல்களாகும். பிற திணைக்குரிய திணைமயங்காப் பாடல்கள் 10 ஆகும். மருதத்தின் கூறுகள் எவையும் இல்லாத் திணைமயக்கப் பாடல் ஒன்றும் அறியப்படுகின்றது.

மருதப் பகுப்பில் முல்லை, குறிஞ்சியின் உரியுடன் மருதத்தின் முதல், கரு மயங்குகின்றன.

மருதப் பகுப்பில் முல்லையின் பாடுபொருளுடன் 10 பாடல்களும், குறிஞ்சியின் பாடுபொருளுடன் 22 பாடல்களும் அமைந்து அவற்றுள் பாலையின் முதல், கரு மயங்குவதைக் காணமுடிகின்றது.

மருதப் பாடுபொருளில் தலைமக்கள் முல்லை நிலத்தவர்களாகக் குறிக்கப்படும் போதும், மாலை, வாடை எனும் பொழுதுகளின் இயல்புகள் மருத நிலப் புனைவின் வழி விளக்குமிடத்தும், மருதப்புனைவுடன் கூடிய உவமைகளைக் குறிக்கும் நிலையிலும், முல்லையுடன் மருதம் மயங்குகிறது.

குறிஞ்சியின் பாடுபொருளுடன் மருதத்தின் முதல், கருப்பொருள்கள் மயங்குமிடத்து, மருத நில மக்களின் குறிஞ்சி ஒழுக்கம் பாடப்பெறுவதும், குறிஞ்சியின் குறியிடங்களாக மருதப் புனைவு குறிக்கப்பெறுவதும், மருதப் புனைவுடனான உவமை இடம்பெறுவதும் காரணங்களாக அமைகின்றன.

குறிஞ்சியுள் நெய்தல் மயங்கிய பாடல் ஒன்று மருதம் எனக் குறிக்கப் பெற்றுள்ளது. இப்பாடலுள் குறிஞ்சியின் பாடுபொருளுடன் நெய்தல் புனைவுகள் புறச் செய்தியின் வழியாகக் குறிக்கப் பெறுகின்றன.

சங்க இலக்கியத்தில் நெய்தல் எனும் பகுப்பில் 343 பாடல்கள் அறியப்படுகின்றன. அவற்றுள் முல்லை, குறிஞ்சி, பாலை, மருதம் எனும் திணைகளுக்கான பாடுபொருளைக் காணமுடிகிறது. நெய்தல்திணைப் பகுப்பில் காணப்படும் அனைத்துப் பாக்களும் திணை மயக்கப்

பாடல்களாக அமைகின்றன. குறிஞ்சியின் உரியுடன் முல்லை மயங்கிய திணைமயக்கம் ஒரு பாடலுள் காணப்படுவதை நெய்தல் பகுப்பால் உணரமுடிகின்றது.

முல்லை, குறிஞ்சி, பாலை, மருதம் எனும் திணைகளின் உரிப்பொருளுடன் நெய்தலின் முதல், கரு மயங்கிய திணை மயக்கங்கள் காணப்படுகின்றன.

முல்லையின் பாடுபொருளுடன் நெய்தல் திணையின் முதல், கரு மயங்கிய நிலையில் 12 பாடல்கள் காணப்படுகின்றன.

நெய்தல் நில மக்களின் முல்லை ஒழுக்கமும், முல்லையுள் இடம்பெறும் நெய்தல் திணையின் உவமையும், முல்லையுள் நெய்தல் மயங்குவதற்குக் காரணிகள் ஆகின்றன.

குறிஞ்சியுள் நெய்தல் மயங்குதலை 244 பாடல்களில் காணமுடிகின்றது. குறிஞ்சியுள் நெய்தல் மயங்குமிடத்து நெய்தல் நில மக்களின் குறிஞ்சி ஒழுக்கம் படைக்கப்படுவதும், குறியிடங்கள் நெய்தலாகக் குறிக்கப்படுவதும், உவமை மற்றும் சிறப்புக்களைப் புனைந்துரைக்கும் கூறுகளாக நெய்தல் திணைக்குரிய முதல், கருப்பொருள்கள் குறிக்கப்படுவதும் காரணங்களாகின்றன.

நெய்தல் நில மக்களின் பாலை ஒழுக்கம் பாடப்பெறுவதும், பாலைப் பாடுபொருளுடன் நெய்தல் புனைவிலான உவமை இடம்பெறுவதும் பாலையுள் நெய்தல் மயங்குதற்கு அடிப்படையாகின்றன. பாலையுள் நெய்தல் மயங்கிய நிலையில் 11 பாடல்கள் அறியப்படுகின்றன.

நெய்தல் நிலத்துள் நிகழும் மருதவொழுக்கம் மருதத்துள் நெய்தல் மயங்குதற்கு வாய்ப்பாக அமைகின்றது. 47 பாடல்களில் மருதத்துள் நெய்தல் மயங்குவது பெறப்படுகிறது.

சங்க இலக்கியத் திணைப்பகுப்பில் அத்திணைக்குரிய உரிப்பொருளுடன் பிற திணையின் நிலம் மற்றும் கருப்பொருட் புனைவுகள் திணை மயக்கமாக இடம்பெறுவதைக் காணமுடிகின்றது.

முல்லைத் திணையின் பகுப்பில் முல்லைத் திணைக்குரிய இருத்தல் எனும் உரிப்பொருளுடன் குறிஞ்சி, பாலை, மருதம், நெய்தல் எனும் திணைகளுக்குரிய நிலம் மற்றும் கருப்பொருட் புனைவுகள் திணை மயக்கமாக இடம்பெறுகின்றன.

முல்லையின் பாடுபொருளுடன் குறிஞ்சியின் நிலம் மற்றும் கருப்பொருள்கள், தலைவன் தலைவியருக்குரிய நிலப் புனைவுகளாகவும், முல்லை நிலப் புனைவுடன் அதன் அருகே இடம் பெற்றிருக்கும் குறிஞ்சி நிலப் புனைவுகளாகவும், குறிஞ்சியின் நிலம் மற்றும் கருப்பொருள்களால் ஆன உவமைகளாகவும் இடம்பெற்று மயங்குகின்றன.

முல்லையின் பாடுபொருளுடன் பாலை மயங்குமிடத்து, கார்கால மழை பெய்யத் தொடங்கிய பாலை நிலமாகவும், தலைவன் வினைமேற் சென்ற நிலமாகவும், தலைவன் வினைமுற்றி வரும் நிலமாகவும் குறிக்கப்படுகிறது.

முல்லையின் பாடுபொருளுடன் மருதத் திணையின் நிலம் மற்றும் கருப்பொருட் புனைவுகள், தலைவன் தலைவியருக்குரிய நிலப்

புனைவாகவும், அற்சிரக் காலத்தின் இயல்பை விளக்கவும், தலைவியின் கூந்தல் சிறப்பை விளக்குதற்குக் கூறப்படும் நிலப் புனைவாகவும் அமைந்து மயங்குகிறது.

முல்லையின் பாடுபொருளுடன் நெய்தல் திணையின் நிலம் மற்றும் கருப்பொருட் புனைவுகள் மயங்குகின்றன. இம்மயக்கம் கார்கால மழை மேகம், நெய்தல் கடலில் நீரை முகந்து கொண்டதாகக் குறிக்கப்படுமிடத்தும், இரவின் மிகுதிப்பாட்டை நெய்தற் பரப்புடன் தொடர்புபடுத்திக் கூறுமிடத்தும் இடம்பெறுகின்றது.

குறிஞ்சித் திணைப் பகுப்பில் காணப்படும் பாடல்களுள் குறிஞ்சியின் உரிப்பொருளுடன் முல்லை, பாலை, மருதம், நெய்தல் எனும் திணைகளுக்குரிய நிலம் மற்றும் கருப்பொருள்கள் மயங்குகின்றன.

குறிஞ்சியின் உரிப்பொருளான புணர்தல் மற்றும் புணர்தல் நிமித்தங்களுடன் முல்லையின் நிலமும் அதன் கருப்பொருள்களும் மயக்கமாகப் புனையப்படுகின்றன. குறிஞ்சியுள் முல்லையின் நிலம், கரு மயக்கமாக இடம்பெறுவதற்குக் குறிஞ்சியைச் சார்ந்த முல்லைப் பகுதிகளின் புனைவும், உவமைகளும், புறச் செய்திகளும் காரணிகளாக அமைகின்றன.

குறிஞ்சியின் பாடுபொருளுடன் பாலையின் நிலமும் கருப்பொருளும் மயங்குமிடத்து, குறிஞ்சி நிலம் வேனிற்கால இயல்பில் கூறப்படுதலும், வரைவிற்கு வந்த மகிழ்வு பாலையில் மழை பெய்த மகிழ்வுடன் கூறப்படுதலும், களவிற்கு வரும் தலைவன் பாலை நிலங்களைக் கடந்து

வருவதாகக் குறிக்கப்படுதலும், உடன்போக்கில் செல்லவிருக்கும் பாலை நிலம் குறிக்கப்படுதலும் காரணிகளாக அமைகின்றன.

குறிஞ்சியின் பாடுபொருளுடன், குறிஞ்சி நிலத்தைச் சார்ந்த மருத நிலப்புனைவும், மருத நிலஞ்சார்ந்த உவமைகளும் மயங்குகின்றன.

குறிஞ்சியின் பாடுபொருளுடன் நெய்தலின் நிலமும் கருப்பொருளும் பின்புலமாகவும், உவமையாகவும் குறிக்கப்பட்டு மயங்குகின்றன.

பாலைத்திணைப் பகுப்பில் பாலை உரியுடன் முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் எனும் திணைகளின் முதல், கரு மயங்குவது அறியப் பெறுகின்றது.

முல்லை நிலத் தலைவன் தலைவியை உடன்போக்கில் கொண்டு செல்லுவதாகப் படைக்கப்படும் பாடலுள் பாலையுள் தலைவன் செல்லவிருக்கும் முல்லை நிலப்புனைவு திணை மயக்கமாக இடம்பெறுகிறது.

குறிஞ்சி நில மக்களின் பாலையொழுக்கம் படைக்கப்படுகிறது. இப்படைப்பு பாலையுள் குறிஞ்சியின் நிலமும் கருப்பொருளும் மயங்கிய திணை மயக்கமாகப் படைக்கப் பெறுகின்றது.

பாலையின் பாடுபொருளுடன் மருதத் திணையின் நிலம் மற்றும் கருப்பொருள்கள் மயங்குமிடத்துத் தலைவியின் மருத நிலப் புனைவு கூறப்படுதலும், மருத நிலஞ்சார்ந்த உவமைகளைக் குறிப்பிடுதலும் காரணங்களாகின்றன.

மருதத்திணைப் பகுப்பில் மருத உரியுடன் முல்லை, குறிஞ்சி, பாலை, நெய்தல் எனும் திணையின் கூறுகள் மயங்குகின்றன.

நெய்தல் நில மக்களின் பாலையொழுக்கமும், நெய்தல் நிலப் புனைவுடனான உவமை விளக்கங்களும் பாலையின் பாடுபொருளுடன் நெய்தல் திணையின் நிலமும் கருப்பொருளும் மயங்குதற்குக் காரணிகளாகின்றன.

மருதப் பாடுபொருளுடன் முல்லைத் திணையின் நிலமும் கருப்பொருளும் மயங்குமிடத்து, தலைவனின் முல்லை நிலப்புனைவு திணை மயக்கமாகக் குறிக்கப் பெறுகின்றது.

மருதத்துள் குறிஞ்சி மயங்குமிடத்து, சூளுரைத்த குறிஞ்சித் தெய்வமும், குறிஞ்சி நிலப் புனைவாகக் குறிக்கப்படுகிறது. மருதத்துள் காணப்படும் ஆற்று நீர் தோன்றிய குறிஞ்சி நிலப்பகுதி சுட்டப்படுகிறது. உவமையின் வழியாகவும் இடம்பெறுகிறது.

மருதத்துள் பாலை மயங்குமிடத்து, தலைவன் கூறும் பொய்யுரையை விளக்கும் விதமாகப் பாலை நிலப் புனைவு இடம்பெறுகிறது.

நெய்தல் நில மக்களின் மருதவொழுக்கமும் மருத நிலப் பகுதியுடன் கூடிய நெய்தல் நிலப்பகுதிகளும் நெய்தல் நிலஞ்சார் உவமைகளும் மருதத்துள் நெய்தல் மயங்குதற்குக் காரணங்களாகின்றன.

நெய்தல் திணைப்பகுப்பில் நெய்தல் உரியுடன் பிற திணையின் நிலம் மற்றும் கருப்பொருட்கள் மயங்குவதைக் காணமுடியவில்லை.

திணைப்பகுப்பில் அத்திணைக்குரிய உரியுடன் பிற திணையின் பொழுதுகள் இடமபெறுதல் பொழுது மயக்கம் எனப் பாகுபாடு செய்யப் பெறும்.

முல்லைத் திணைப் பகுப்பில் முல்லையின் உரிப்பொருளுடன் கூதிர்காலம், வேனிற்காலம், அற்சிரக்காலம் எனும் பொழுதுகளும், வைகறை, விடியல், யாமம் எனும் பொழுதுகளும் திணை மயக்கமாகக் குறிக்கப்பெறுகின்றன.

ஆற்றியிருக்கும் தலைவியின் துயரம் தலைவனின் கால நீட்டிப்பால் கூதிர்காலம் வரையிலும் தொடர்வதாகப் பாடும்போது முல்லையின் பாடுபொருளுடன் கூதிர் காலம் மயங்குகின்றது.

முல்லைத் திணையுள் குறிக்கப்படும் கார்கால மழை பாலைத்திணைக்குரிய பாலை நிலத்துள் வேனிற்கால வெம்மை நீங்கும் பொருட்டுப் பெய்ததாகக் கூறப்படும்போது முல்லையுள் வேனில் மயங்குகிறது. தலைவன் வரவு குறித்த பொழுதாகவும் அப்பொழுதுகண்டு ஆற்றியிருப்பதும், ஆற்றுவிப்பதாகவும் குறிக்கப்பட்டு வேனில் முல்லையுள் மயங்குகின்றது.

தலைவன் வருவதாகக் குறித்த அற்சிரம் என்னும் அக்காலத்தை நோக்கித் தலைவி ஆற்றியிருக்கிறாள் என்றும், அக்காலத்தின் வரவைக் காட்டித் தோழி ஆற்றுவிக்கிறாள் என்றும் கூறப்படும் பாடல்களுள் அற்சிரம் திணை மயக்கமாக முல்லைப் பாடுபொருளுடன் மயங்குகின்றது.

முல்லையுள் வைகறை, விடியல் எனும் மருதத்திணையின் பொழுதுகள் மயங்குமிடத்து முல்லை நிலத்தவர் உழவு செய்யத் தொடங்குதல் கார்கால மழை பெய்தல், அரசன் போரைத் தொடங்குதல், மாலையினைப் போன்று துயரம் செய்தல், மூதாய் குறுகுறு என ஓடி விளையாடல் என்பனவற்றுடன் இயைபுபடுத்தப்பட்டுத் திணை மயக்கமாகக் கூறப்படுகிறது.

முல்லையின் பாடுபொருளுடன் குறிஞ்சித் திணைக்குரிய இரவுப் பொழுது மயக்கமாக இடம்பெறுகிறது. தலைவி இரவுப்பொழுதில் துயருடன் ஆற்றியிருத்தல், தலைவி ஆற்றியிருக்க ஊர் இரவுப் பொழுதின் இயல்புடன் கூறப்படுதல் என்பன முல்லையுள் இரவு மயங்குதற்குரிய வழிகளாக அமைகின்றன.

குறிஞ்சித்திணைக்குரிய பகுப்பில் குறிஞ்சியின் பாடுபொருளுடன் கார்காலம், வேனிற்காலம், வைகறை, விடியல், பகற்பொழுது, எற்பாடு, மாலை எனும் பொழுதுகளும் திணை மயக்கமாக இடம்பெறுகின்றன.

குறிஞ்சியின் பாடுபொருளுடன் கார்காலம் மயங்குமிடத்து களவு கார்காலத்தில் நிகழ்வதாகக் குறிக்கப்படுகிறது. இதனால் தலைவன் கார்கால மழையில் நனைந்து நீர்ப் பரப்புகளைக் கடந்து கார்காலப் பூக்களின் வருடலும் தலைவி களவுப் புணர்வில் கார்கால மலர்களைச் சூடுவதும், தலைவனுக்கு, கார்காலத்தால் வரும் ஏதங் குறித்துத் தோழி வரைவுகடாவுவதும் பாடப்பெறுகின்றன. குறிஞ்சியில் குறிக்கப்பெறும் குறிஞ்சி நிலம் கார்கால இயல்புடன் கூறப்படுமிடத்தும், திணைக்காவலின் இறுதியாகக் கார்காலம் வருவதும், தலைவன் வரைதற்கு கார்காலத்தே

வருவேன் எனக் குறிப்பதும் மகிழ்ச்சி, நறுமணம், மென்மை முதலியவற்றைக் குறிக்குமிடத்தும் கார்காலச் செய்திகள் திணை மயக்கமாகக் கூறப்படுகின்றன.

குறிஞ்சித்திணையின் பாடுபொருளுடன் வேனிற்காலம் மயங்குமிடத்து களவு வேனிற் காலத்துள் நிகழ்வதாகக் குறிக்கப்படுகிறது. வேனிற்கால நிகழ்வுகளும், வேனிற் காலப்பொருட்களும் சுட்டப்படுமிடத்தும் குறிஞ்சியுள் வேனில் திணை மயக்கமாகச் சுட்டப்பெறுகின்றது.

குறிஞ்சித்திணையுள் மருதத்தின் வைகறை விடியல் மயங்குதலைக் காணமுடிகின்றது. குறிஞ்சியுள் வைகறை விடியல் மயங்குமிடத்து களவுக் காலத்தில் இரவில் தலைவன் தந்த பூவைத் தலைவி உதிர்த்துவிட்டு எண்ணெய் தடவிக் கொள்ளும் வைகறையும் தலைவன் வரைவிற்கு வரவேண்டிய வைகறைப் பொழுதும் குறிக்கப்பெறுகிறது. மழை பெய்தல், யானை உணவு உண்ணுதல், மயில் ஆடுதல், மலர்கள் மலருதல் எனும் விடியற் பொழுதும் சுட்டப்பெறுகின்றது.

குறிஞ்சித் திணைப் பாடுபொருளுடன் பகற் பொழுதானது பகற்குறி தொடர்பாக இடம் பெறுவது அறியப்படுகின்றது. பாலைத் திணைப்பகுப்பில் பாலையின் பாடுபொருளுடன் கார்காலம் மயங்குகின்றது. தலைவன் பிரிந்து செல்லக் கருதிய காலம் கார்காலமாகக் குறிக்கப்பெறுகின்றது. இதனால் கார்காலத்தே பிரிய எண்ணினார் எனத் தலைவி வருந்துவதும், 'கார்காலமாதலால் நின்னைப் பிரியேன்' எனத் தலைவன் கூறுதலுமாகிய சூழலில் கார்காலம் மயங்குகின்றது. கார்கால

நிகழ்வுகள் உவமையின் வழியாகக் குறிக்கப்படுமிடத்து பாலையுள் கார்காலம் மயங்குகின்றது.

பொருள்கடைக் கூட்டிய நெஞ்சிற்குத் தலைவன் கூறும் கூற்றில் முன்பு கூதிர்காலத்தில் தலைவி வருந்துவாள் என எண்ணி இடைச்சுரத்தில் வருந்தியது கூறப்படுகின்றது. தலைவன் கூதிர்கால நிலையை எண்ணிச் செலவழுங்குமிடத்தும், கூதிர்கால இயல்பை எடுத்துரைப்பாயாக எனத் தலைவி தோழியிடம் கூறுமிடத்தும் பாலையுள் கூதிர் காலம் இடம் பெறுவதைக் காணமுடிகின்றது.

பாலையுள் வைகறை, விடியல் மயங்குகின்றது. தலைவி உடன்போக்கில் செல்வதற்குச் சிலம்புகளைக் கழற்றி வைக்கும் காலமாகவும், பாலை வழியே செல்லும் தலைமகன் தனது செலவினைத் தொடங்கும் பொழுதாகவும் கூறப்படுகின்றது. பாலை நிலத்தின் கொடுமை வைகறை விடியற் கால இயல்புடன் கூறப்படுமிடத்தம் பாலையுள் வைகறை விடியல் எனும் பொழுதுகள் மயங்குகின்றன.

பாலையுள் மாலை மயங்குமிடத்து உடன் போக்கிற்கு ஏற்ற பொழுதாக மாலை கூறப்படுகின்றது. தலைவியை உடன் போக்கில் கொண்டு செல்லும் தலைவன் மாலையில் தனது ஊரை அடைதல் சுட்டப்பெறுகின்றது. மகட்போக்கிய தாய் மாலையில் துயரடைதல் குறிக்கப்படுகின்றது. தலைவன் பிரிந்தால் மாலை துயர் செய்யும் எனத் தலைவி கூறுகின்றாள். தலைவன் இடைச்சுரத்தில் தலைவி வருந்தும் மாலைப் பொழுதைத் தலைவன் குறிப்பது பாலைப் பாடலுள்

காணமுடிகின்றது. பாலையின் புனைவுகள் மாலைக்கால இயல்புடன் கூறப்படுமிடத்தும் பாலையுள் பாலை மயங்குகின்றது.

பாலையுள் இரவுப்பொழுது மயங்குமிடத்து தலைவன் பிரிந்து சென்ற நிலையில் துணையின்றி வருத்தப்பட வேண்டிய பொழுதாகக் கூறப்படுகின்றது.

மகட்போக்கிய தாய் தனது மகள் இரவில் என்ன செய்தாளோ என்று வருந்துமிடத்தும், பாலைப்புனைவு இரவுப் பொழுதின் இயல்புடன் கூறப்படுமிடத்தும் பாலையுள் இரவு மயங்குகிறது.

மருதப்பகுப்பில் மருதத் திணையின் பாடுபொருளுடன் பகற்பொழுது குறிக்கப்படுகின்றது. பரத்தை தலைவியைச் சந்தித்துப் பேசுதல், தலைவன் பரத்தையுடன் தங்குதல் எனும் நிகழ்வுகள் பகற்பொழுதில் நிகழ்ந்ததாகக் குறிக்கப்பட்டு, மருதத்துள் பகற்பொழுது மயங்குவதும் பகற்பொழுதின் நிகழ்வுகள் குறிக்கப்பட்டு பொழுது மயங்குவதும் காணப்படுகின்றது.

மருதத் திணையின் பாடுபொருளுடன் தலைவன் புனலாடிய மாலைக் காலமும் பரத்தையிடம் இருந்து வந்த தலைவன் தலைவியுடன் இருக்கும் மாலைக் காலமும் மாலைக்கால இயல்புடன் கூறப்படும் நிகழ்வுகளும் மயங்குகின்றன.

மருதத் திணையில் யாமப் பொழுது குறிக்கப்படுமிடத்து பரத்தையொழுக்கத்துடன் இரவுப் பொழுது சுட்டப்படுகின்றது.

பரத்தையிடமிருந்து வரும் தலைவன் இரவில் வருவதாகக் குறிக்கப்படும் இரவுக்கால நிகழ்வுகள் திணைமயக்கமாகக் குறிக்கப்பெறுகின்றன.

நெய்தல் பகுப்பில் காணப்படும் பாடல்களில் நெய்தல் உரிப்பொருளைக் காணமுடியவில்லை. எனவே நெய்தலுள் பொழுது மயங்குதலை உணர இயலவில்லை.

திணைக் கூறுகளுக்கான வரையறைகள் இயற்கை நெறிப் பாடல்களிலிருந்து தோன்றிய போதும், திணைப்பாடல்கள் உலக வழக்கத்தை மட்டும் உடையன அல்ல. திணைப்பாடல்கள் உலக வழக்கும், நாடக வழக்கும் தழுவிய புலனெறி வழக்கில் அமைகின்றன.

திணைக் கூறுகளின் இயைபுகள் திணை உணர்வினைப் புலப்படுத்தி நிற்கின்றன. திணைமயக்கம் படைக்கப்பெற்ற போதும் திணைக் கூறுகளின் இயைபுகள் அவ்வுணர்வுகளைச் சிறப்பித்து அமைவதாகப் படைக்கப்பட்டுள்ளன.

கூதிர், யாமம் என்பன புணர்தல் உணர்வைச் சிறப்பித்தமைவன. இருத்தல் என்ற உரியுடன் பாடப்பெற்ற போதும், 'கூதிர், யாமத்துப் புணர்தலுக்குத் தலைவன் இன்னும் வரவில்லையே' என ஆற்றியிருப்பதாக அமைக்கப்படுகின்றன. இவ்வாறு திணை உணர்வுடன் இயைபுபடும் அமைப்பில் திணைமயக்கங்கள் அமைகின்றன.

திணைமயக்கம் படைக்கப்பெற்ற போதும் திணை உணர்வு போற்றப்பெற்றுள்ளன. திணை உணர்வுகளை காக்கும் பொருட்டே திணைமயக்கம் வரையறை செய்யப்பெற்றுள்ளது. திணை

உணர்வுகளுக்கு முரண்பட்ட நிலையில் திணைமயக்கங்கள் பாடப்பெறவில்லை.

திணை இலக்கிய மரபு திணைமயங்கா அமைப்பையும், திணைமயக்க அமைப்பையும் கண்ணெக் காத்து செம்மொழிப் பண்பாம் நிலைபேற்றுத் தன்மையினைத் தனதெனக் கொண்டு தன்னிகரில்லாத் தனிப்பெருஞ் சிறப்பை எய்தியமை விளங்கும்.

சங்க இலக்கியத்தில் திணைமயக்கம் எனும் இவ்வாய்வினைத் தொடர்ந்து திணைமயக்கம் எனும் கருதுகோள் மேலும் ஆராயத் தகுந்த நிலையில் அமைகின்றது. மேலாய்வு நிலையில் கீழ்வரும் நோக்கு நிலைகள் குறிப்பிடத்தக்கனவாகும்.

1. சங்கப் பாடல்களை அகம், புறம் எனும் திணைப் பகுப்பின்றியும் துறைப் பகுப்பின்றியும் தனித்த நிலையில் ஆராய்ந்து திணை அமைப்பு மற்றும் திணைமயக்க அமைப்பை வெளிப்படுத்துதல்.

2. சங்கப் புலவர்களின் வாழ்வை, சூழல் சார்நிலையிலும், உணர்வுசார் நிலையிலும் கண்டறிந்து அதனடிப்படையில் சங்கப்பாடல்களைத் திணை அமைப்புடனும், திணைமயக்க அமைப்புடனும் நோக்குதல்.

3. திணைக் கூறுகளின் இயைபுகளை மானுடவியல், உளவியல் எனும். அடித்தளத்தில் வகைப்படுத்தி, திணை மற்றும் திணைமயக்கப் பாடல்களின் அமைப்பை ஆராய்தல்.

4. சங்க இலக்கியத்தின் திணை அமைப்பையும், திணைமயக்க அமைப்பையும் வரலாற்று நோக்கில் ஆராய்தல்.

# துணைநூற்பட்டியல்

## முதன்மைச் சான்றாதாரங்கள்

### இலக்கிய நூல்கள்


1. ஆசிரியர் குழு, (ப.ஆ) **குறுந்தொகை,**
எஸ்.ராஜம்,
மர்ரே அண்டு கம்பெனி,
சென்னை,
1957.

2. மேலது **நற்றிணை,**
எஸ்.ராஜம்,
மர்ரே அண்டு கம்பெனி,
சென்னை,
1957.

3. மேலது **ஐங்குறுநூறு,**
எஸ்.ராஜம்,
மர்ரே அண்டு கம்பெனி,
சென்னை,
1957.

4. மேலது **அகநானூறு,**
எஸ்.ராஜம்,
மர்ரே அண்டு கம்பெனி,
சென்னை,
1958.

5. மேலது **கலித்தொகை,**
எஸ்.ராஜம்,
மர்ரே அண்டு கம்பெனி,
சென்னை,
1958.

6. சண்முகம்பிள்ளை. மு., **குறுந்தொகை மூலமும் உரையும்,** தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர். 1994.

7. சாமிநாதையர்.உ.வே. (உ.ஆ) **குறுந்தொகை மூலமும் உரையும்,** கபீர் அச்சுக் கூடம், சென்னை, 1962.

8. சுப்பிரமணியன், பெ. பாலசுப்பிரமணியன், கு.வெ. தட்சிணாமூர்த்தி, அ. (உ.ஆசி.) ***பரிபாடல்,*** நியூ செஞ்சுரி புக்ஹவுஸ் (பி)லிட், 41-பி, சிட்கோ கண்டஸ்டிரியல் எஸ்டேட், அம்பத்தூர், சென்னை, 2004.

9. செயபால், இரா. ***சங்க இலக்கிய அகநானூறு மூலமும் உரையும்,*** புத்தகம் I, புத்தகம் II, நியூ செஞ்சுரி புக்ஹவுஸ் (பி)லிட், 41-பி, சிட்கோ கண்டஸ்டிரியல் எஸ்டேட், அம்பத்தூர், சென்னை, 2004.

10. சோமசுந்தரனார், பொ.வே. **குறுந்தொகை,** கழக வெளியீடு, 1955.

11. தட்சிணாமூர்த்தி, அ. (உ.ஆ) — **சங்க இலக்கியம் ஐங்குறுநூறு மூலமும் உரையும்,**
புத்தகம் I, புத்தகம் II,
நியூ செஞ்சுரி புக்ஹவுஸ் (பி)லிட்,
41-பி, சிட்கோ கண்டஸ்டிரியல் எஸ்டேட், அம்பத்தூர்,
சென்னை,
2004.

12. துரைசாமிப்பிள்ளை.ஔவை.சு. (உ.ஆ) — **ஐங்குறுநூறு,**
முதல் தொகுதி (மருதம்,நெய்தல்),
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்,
அண்ணாமலை நகர்,
1957.

13. மேலது — **ஐங்குறுநூறு,**
இரண்டாம் தொகுதி (குறிஞ்சி,பாலை),
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்,
அண்ணாமலை நகர்,
1957.

14. மேலது — **ஐங்குறுநூறு,**
இரண்டாம் தொகுதி,
(முல்லை),
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்,
சிதம்பரம்,
1957.

15. மேலது
**நற்றிணை மூலமும் விளக்கவுரையும்,**
அருணா பப்ளிகேஷன்ஸ்,
13/1, உஸ்மான் ரோடு,
சென்னை -17,
1966.

16. நச்சினார்க்கினியர் (உ.ஆ)
**கலித்தொகை,**
திரு.சை.சி.நூ.ப.கழகம்,
சென்னை,
1958.

17. நாகராசன், வி.
**சங்க இலக்கியம் குறுந்தொகை மூலமும் உரையும்,**
புத்தகம் I, புத்தகம் II,
நியூ செஞ்சுரி புக்ஹவுஸ் (பி)லிட்,
41-பி, சிட்கோ கண்டஸ்டிரியல் எஸ்டேட், அம்பத்தூர்,
சென்னை,
2004.

18. மேலது
**பத்துப்பாட்டு இரண்டாம் தொகுதி,**
நியூ செஞ்சுரி புக்ஹவுஸ் (பி)லிட்,
41-பி, சிட்கோ கண்டஸ்டிரியல் எஸ்டேட், அம்பத்தூர்,
சென்னை,
2004.

19. பரிமணம், அ.மா.
பாலசுப்பிரமணியன், கு.வெ.
(த.ப.ஆ)

**புறநானூறு**
நியூ செஞ்சுரி புக்ஹவுஸ் (பி)லிட்,
41-பி, சிட்கோ கண்டஸ்டிரியல்
எஸ்டேட், அம்பத்தூர்,
சென்னை,
2004.

20. நாராயணசாமி ஐயர்
(உ.ஆ)

**நற்றிணை நானூறு,**
திரு.சை.சி.நூ.ப.கழகம்,
சென்னை,
1956.

21. பாலசுப்பிரமணியன், கு.வெ.

**சங்க இலக்கியம் நற்றிணை,**
நியூ செஞ்சுரி புக்ஹவுஸ் (பி)லிட்,
41-பி, சிட்கோ கண்டஸ்டிரியல்
எஸ்டேட், அம்பத்தூர்,
சென்னை,
2004.

22. மோகன், இரா.

**பத்துப்பாட்டு முதல் தொகுதி,**
நியூ செஞ்சுரி புக்ஹவுஸ் (பி)லிட்,
41-பி, சிட்கோ கண்டஸ்டிரியல்
எஸ்டேட், அம்பத்தூர்,
சென்னை,
2004.

23. விசுவநாதன், அ.

**சங்க இலக்கியம் கலித்தொகை,**
நியூ செஞ்சுரி புக்ஹவுஸ் (பி)லிட்,
41-பி, சிட்கோ கண்டஸ்டிரியல்
எஸ்டேட், அம்பத்தூர்,
சென்னை,
2004.

24. வேங்கடசாமி நாட்டார், ந.மு. வேங்கடாசலம், ரா (உ.ஆ)
**அகநானூறு,**
(மணிமிடை பவளம்),
திரு.சை.சி.நூ.ப.கழகம்,
சென்னை,
1944.

25. மேலது,
**அகநானூறு,**
(நித்திலக்கோவை),
திரு.சை.சி.நூ.ப.கழகம்,
சென்னை,
1944.

26. மேலது,
**அகநானூறு,**
(களிற்றியானை நிரை),
திரு.சை.சி.நூ.ப.கழகம்,
சென்னை,
1945.

27. வேங்கடராமன், எச்.(ப.ஆ)
**நற்றிணை மூலமும் உரையும்,**
மகாமகோபாத்தியாய டாக்டர்
உ.வே.சாமிநாதையர் நூல்
நிலையம், சென்னை,
1997.

**இலக்கண நூல்கள்**

28. அருணாசலம், மு.
**தொல்காப்பியம் - அகத்திணையியல்,**
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்,
மதுரை,
1995.

29. ஆசிரியர் குழுவினர் (ப.ஆ) **தொல்காப்பியம்,**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,
பிரைவேட் லிமிடெட்,
சென்னை - 600 098,
1981.

30. இளவழகன், கோ., (ப.ஆ) **தொல்காப்பியம் - பொருள்,**
**இளம்பூரணர் I,**
இரா.இளங்குமரனாரின் வாழ்வியல்
விளக்கம்,
தமிழ்மண் பதிப்பகம்,
சென்னை - 17,
2003.

31. குழந்தை புலவர், (உ.ஆ) **தொல்காப்பியம் பொருளதிகாரம்,**
**குழந்தையுரை,**
பாரி நிலையம்,
சென்னை,
1958.

32. சண்முகம், (ப.உ.ஆ) **சுவாமிநாதம்,**
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்,
அண்ணாமலை நகர்,
1975.

33. சாம்பசிவனார் (கு.உ.ஆ) **தொல்காப்பியம் பொருளதிகாரம்**
**பகுதி - 1**
மூலமும் குறிப்புரையும்,
வளவன் வெளியீடு,
மதுரை,
1976.

34. சுப்பிரமணியன், ச.வே.(உ.ஆ) **தொல்காப்பியம் தெளிவுரை,**
மணிவாசகர் பதிப்பகம்,
9/7, சிங்கர் தெரு, பாரிமுனை,
சென்னை - 600 108,
1998.

35. சுந்தரமூர்த்தி, கு., (ப.ஆ) **முத்துவீரியம்,**
கழக வெளியீடு,
சென்னை,
1965.

36. சிவலிங்கனார், ஆ. (ப.ஆ) **தொல்காப்பியம் பொருளதிகாரம், அகத்திணையியல் உரைவளம்,**
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை.

37. மேலது **தொல்காப்பியம் சொல்லதிகாரம் வேற்றுமை மயங்கியல் உரைவளம்,**
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை.

38. சேயொளி (ப.ஆ)., **இலக்கண விளக்கம் - பொருளதிகாரம்,**
திரு.சை.சி.நூ.ப.கழகம்,
1/140, பிரகாசம் சாலை,
சென்னை -1,
1976.

